உ

17-4

ராதே கிருஷ்ணா!




No. 2, சேது பிள்ளை தெரு, போஸ்டல் ஆடிட் காலனி, சாலிக்கிராமம்
சென்னை - 600093.

# மநு தர்ம சாஸ்திரம்




தமிழில்

திருலோக சீதாராம்




பதிப்பாசிரியர்

பாகவத சிரோமணி, பாகவத சூடாமணி,

பாகவத ரத்னம் கோடையிடி

## ஏ.கே. கோபாலன்

தொலைபேசி : 4835055

| | | |
|---|---|---|
| முதற் பதிப்பு | : | 1961 |
| இரண்டாம் பதிப்பு | : | 1989 |
| மூன்றாம் பதிப்பு | : | 1994 |
| நான்காம் பதிப்பு | : | 1999 |




அச்சிட்டோர்

ஆர்.கே.எல். பிரிண்டர்ஸ்

எண். 8, வல்லப அக்ரஹாரம் தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை-600 005.
தொலைபேசி : 8551056

ஏ.கே. கோபாலன்

பப்ளிஷர்,
நெ.2, சேதுப்பிள்ளை தெரு,
போஸ்டல் ஆடிட் காலனி, சாலிக்கிராமம்,
சென்னை - 93.
தொலைபேசி : 4835055

17-4

# அறிமுகம்

இனிய கவிகள் பாடி, எழில் மிக்க உரைநடை ஓவியங்கள் தீட்டும் அன்பர் திருலோக சீதாராம் தெள்ளத் தெளிவான தமிழில் பெயர்த்து எழுதியுள்ள இந்நூலை மகிழ்ச்சியுடன் பதிப்பித்து வெளியிடுகிறோம். அவர்க்கு எமது நன்றி.

தர்ம சாஸ்திரங்களிலே மநு தர்ம சாஸ்திரமே முதன்மையானது. தொன்மையாலும், வேதத்தின் ஒப்புதல் பெற்றமையாலும், இந்தத் தனிச் சிறப்பு அதற்கு அமைந்துள்ளது.

மநு தர்ம சாஸ்திரம் எக்காலத்தில் ஏற்பட்டது? இது பற்றி ஆராய்ந்துள்ள மேலை நாட்டு ஆசிரியர் பலரும், தத்தமக்குக் கிடைத்த ஒரு சில ஆதாரங்களைக் கொண்டு, பலவிதமாகக் குறித்துள்ளனர். ஆயினும், இது வேதங்களோடு ஒப்பத் தொன்மை வாய்ந்தது என்பதில் ஐயமில்லை. வேதங்களின் காலம் எது? சில ஆராய்ச்சியாளர் கிறிஸ்து பிறப்பதற்கு ஆயிரம், இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் அவை ஏற்பட்டிருக்கலாம் என்று கூறுவர். வேதங்களும், மநு தர்ம சாஸ்திரமும், நூல்களாக எழுதப பெறுவதற்கு முன்பு, ஆயிரக் கணக்கான ஆண்டுகளாக மக்களால் வாய்மொழியாகப் பயிலப் பெற்று வந்தவை. அவை ஆரிய இனத்தவரின் அழியாப் பெருங் கருவூலங்கள். ஆரியர் ஆசியாவின் நடுப்பகுதியிலிருந்து கீழ்த்திசை நோக்கிப் புறப்படுவதற்கு முன்பே நாகரிகம் பெற்ற அந்த மக்கட் தொகுதியின ரிடையே நிலவி வந்த இறைநிலை, படைப்பு, தேவர், மக்கள், சராசரங்கள் பற்றிய கொள்கைகள் முதலி

யவையே அந்தத் தெய்விக நூல்களில் அமைந்திருக்க வேண்டும். சிந்து வெளிப் புதைபொருள்களின் ஆராய்ச்சியால் இப்போது பண்டை ஆரிய நாகரிகம் கி.மு. 5000 ஆண்டுகட்கு முன்னரே சிறப்புற்று விளங்கிய பெருமை புலனாகின்றது. எனவே ஆரியரின் வேதங்களும், அறக் கோட்பாடுகளும் சுமார் 7.000 ஆண்டுகட்கு முந்தியவை என்று கொள்ளலாமா என்றால், நம் விழுமிய சாஸ்திரங்களைக் கற்று அவைகளிலேயே திளைத்திருந்த பிளாவட்ஸ்கி அம்மையார் போன்றவர்கள் அதுவும் தவறென்பர்; வேதங்கள், தர்ம சாஸ்திரங்கள் சுமார் 30,000 ஆண்டுகட்கு முற்பட்டவையென்பது அவர்கள் துணிபு.

பிற நாட்டுச் சமய நூல்கள், கதைகள் பலவற்றிலும் பண்டைப் பழங் காலத்திலே கடல் பொங்கி யெழுந்து மாநிலப் பகுதிகளை விழுங்கியது பற்றிய செய்திகள் விரிவாகக் காணப் பெற்ற போதிலும், பிற்காலத்துப் பாரத நாட்டுப் புராணங்களிலும் மகாபாரதத்திலும் அத்தகைய பிரளய வரலாறு இடம் பெற்றிருப்பினும், வேதங்களிலும் மநு தர்ம சாஸ்திரத்திலும் அத்தகைய கடல்கோளைப் பற்றிய செய்தியே யில்லாததால், இந்தச் சாஸ்திரங்கள் மிக மிகத் தொன்மையானவை யென்று *ஜகோல்லியட் என்ற ஆசிரியர் கூறியுள்ளார். பயங்கரமான கடல் கோள் ஒன்றுஏற்பட்டிருந்தால், வேதங்களில் அதைப் பற்றிச் சில கீதங்களாவது இல்லாமற் போகுமா வென்று அவர் வினவியுள்ளார். ஆகவே உலகமெங்கும் பரவி நிற்கும் வரலாறான கடல் கோளுக்கு அவை முந்தியவை யென்று கருத இது முக்கிய ஆதாரமாகக் கொள்ளப்படுகின்றது.

## மநு

ஆதி தர்ம சாஸ்திரமான மநு தர்ம சாஸ்திரத்தை இயற்றிய மநு யார்? 'தர்மம்' என்பதைப் போலவே,

---

* Jacolliot, Bible in India.

'மநு' என்ற பெயரும் மிக மிகப் புராதனமானது. ருக் வேதத்தில் நான்கு மநுக்கள் குறிக்கப் பெற்றுள்ளனர்; பகவத் கீதையும் நால்வரையே கூறுகின்றது. ஆனால் இந்தத் தர்ம சாஸ்திரப்படி மநுக்கள் எழுவர் என்றும், நாம் ஏழாவது மநுவின் காலத்தில் உள்ளோம் என்றும் ஏற்படுகின்றது. மநுவே தர்ம சாஸ்திரம் இயற்றியவர் என்றும், மானிட சமுதாயத்தின் பிதாமகன் என்றும் கூறப்படுகின்றார். இவற்றிலிருந்து அவருடைய தெய்வத் தன்மையை உணரலாகும். பாரத நாட்டில் தொன்று தொட்டு வழங்கி வரும் வரலாற்றுக் கதைகளைக் கூர்ந்து கவனித்தால், 'மநு' ஒரு தனி மனிதர் என்றில்லாமல். அது அறம் வகுக்கும் அண்ணலின் பதவி அல்லது பட்டம் என்று தெரியவரும். பாரத சமுதாயத்தின் வளர்ச்சிக்கு வழி வகுத்து, அவ்வக் காலத்தில் — அதாவது பல மன்வந்தரங்களில்—அச்சமுதாயம் நெறியின் புறம்பாகச் செல்லாது காத்து வந்த தெய்வீக புருடர் யாவருமே மநுக்கள்தாம். இந்தக் கருத்துப்படி, எகிப்து, பாரசீகம், கிரேக்க நாடு, ரோம் ராஜ்யம் முதலியவற்றிலெல்லாம் தர்மசாஸ்திரம் வகுத்தவர்கள் யாவரும் அந்தந்த நாட்டு மநுக்களே யாவர். மனத்தாற் சிந்திப்பவன் மனிதன்; சிந்திப்பவர்களாகிய மக்கட் சமுதாயத்திற்குச் சட்டம் வகுத்தவர் மநு. மன், மனம், மனிதர், மநு என்ற முறையில் பெயரும் மிகப் பொருத்தமாகவே அமைந்திருக்கின்றது. மநுவும் அவர் வழித் தோன்றல்களும் சூட்சும உலகங்களிலிருந்து ஆட்சி புரிந்து வருவதாகப் புராணங்கள் கூறுகின்றன. மக்களின் சூட்சுமமான மனங்களில் அவர்களின் ஆட்சி இன்றும் நடந்து கொண்டு தானிருக்கின்றதல்லவா!

## முதல் நூல்

மநுவின் அறநூல் வெறும் சட்டப் புத்தகமன்று ஆன்மார்த்திக ஞானம், மனோதத்துவம், ஒழுக்கவியல்

உயிரினங்களின் வாழ்வும் வளர்ச்சியும், பொருளியல், அரசியல் ஆகிய பல துறைகளையும் பற்றி வேதங்களில் பலவிடங்களில் பலவாறுகச் சிதறிக் கிடப்பவற்றைத் திட்டமாகவும், நுட்பமாகவும் முறைப்படுத்தித் தொகுத்துக் கூறுவதே மநு தர்ம சாஸ்திரமாகும். இதற்கும் முதல் நூலொன்று இருந்திருக்கிறது. அது லட்சம் சுலோகங்களைக் கொண்ட **'மானவ தர்ம சாஸ்திரம்'.** வாய்மொழியாகப் பயின்று வந்த அப்பெரு நூலிலிருந்து சிதைவுற்று மிஞ்சியதே இப்போதுள்ள மநு தர்ம சாஸ்திரம்.

## இலட்சியம்

மநு தர்ம சாஸ்திரத்தின் லட்சியம் யாது? வேதங்களின் லட்சியம் எதுவோ, எல்லாத் தர்மங்களின் லட்சியமும் எதுவோ, அதுவேதான் இதன் லட்சியமும். ஆறறிவு பெற்ற மக்கட் தொகுதியினர் சமுதாயமாக இணக்கமுற்று, வாழ்ந்து, வளர்ச்சி பெற, வேலிகளிட்டுப் பாதைகளமைக்கப் பட்டிருக்கின்றன. தீவினைகளால் நசித்தலின்றிச் சமுதாய வாழ்வுக்கும் வளர்ச்சிக்கும் விதிகளமைத்திருப்பதுடன், தக்க பருவமடைந்த பின் தனி மனிதர்கள் சமுதாயத்திலிருந்து பிரிந்து, தத்தம் ஆன்மா கடைத்தேற மேற்கொள்வதற்குரிய வழியையும் இது காட்டுகின்றது. எனவே, இந்நூலின் நோக்கம் விடுதலை—பேரின்பம்—முக்தியேயாகும். இது வெறும் சட்டங்களின் குவியலன்று. எந்தப் பரம் பொருளிலிருந்து எல்லாம் கிளைத்தெழுந்து வந்தனவோ, அதிலேயே யாவும் ஒடுங்கப் பெறுதலே முக்தி. அந்தக் குறிக்கோளை இந் நூலில் எந்தப் பக்கம் திருப்பினும் அங்கே காணலாம்.

பிறப்பு இறப்புக்கள், இன்ப துன்பங்கள் யாவற்றையும் தாண்டிப் பேரின்ப நிலை அடைவதை நம்மவர் நான்கு

புருடார்த்தங்களாக வகுத்துள்ளனர். அவை அறம், பொருள், இன்பம், வீடு என்பன. இந்நூல் அறத்தை விளக்குகின்றது, பொருள் செயும் வகையைக் கூறுகின்றது, இன்பம் துய்த்தலை விவரிக்கின்றது, இம் மூன்றையும் விட்டு விடுதலையாகும் வீட்டு வழியையும் காட்டுகின்றது.

## நால் வருணங்கள்

இந்நூல், மக்கட் சமுதாயத்தை நான்கு பிரிவுகளாக—வருணங்களாகக் கொண்டு, அததற்குரிய தர்மங்களை வகுத்துள்ளது. மக்கட் சமுதாயம் என்பது வெறும் மக்களின் கூட்டமன்று; மக்கள், மற்ற உயிர்கள், இயற்கையிலுள்ள பொருள்கள் எல்லாம் பிரிக்க முடியாதபடி உறவு முறைகளுடன் ஒன்று சேர்ந்துள்ளதே சமுதாயம். நன்றாக ஓடிக் கொண்டிருக்கின்ற ஒரு கடிகாரத்தைப் பார்த்தால் இந்த வேற்றுமை தெளிவாகும். கடிகாரம் மணி காட்டுகின்றது. நிமிடம், விநாடிகளையும் காட்டுகின்றது. அதன் உட்புறத்தைத் திறந்து பார்த்தால் பல சக்கரங்களும், விசைகளும் அதனதன் இடத்தில் நின்று இயங்கிக் கொண்டிருப்பதைக் காணலாம். இந்த நிலையிலுள்ளதைத்தான் கடிகாரம் எனலாம். அந்தக் கடிகாரத்தைப் பிரித்து, ஆணிகள், சக்கரங்கள், விசைகள், முட்கள், கண்ணாடி, எண்கள் பொறித்துள்ள வட்டம் எல்லாவற்றையும் கழற்றி, ஓரிடத்தில் குவித்து வைத்தால், அது வெறும் குவியலேயன்றிக் கடிகாரமாகாது. அதே போலச் சமுதாயத்தில் மனிதர்கள் அவரவர்க்குரிய இடங்களில் நின்று, தாமும் இயங்கி, தமக்கு உதவியான மற்றப் பிராணிகளையும் பொருள்களையும் முறையாக இயக்கிக் கொண்டிருந்தால் தான், அவர்களுடைய கூட்டத்தைச் சமுதாயம் என்போம். அவ்வாறின்றி அவர்கள் சிறு சிறு கூட்டங்களாகப்

பிரிந்து, ஒவ்வொரு கூட்டமும் வெவ்வேறு திசையில் இயங்கிக் கொண்டிருந்தால், அவர்களுடைய பெருங் கூட்டம் சமுதாயமாகாது. இது போலவே கண்ணுக்குத் தெரியாமல் காடுகளில் திரியும் காளை மாடுகளும் சமுதாயத்தைச் சேர்ந்தவையல்ல. உழுது, ஊர்ந்து சென்று, உரமளிக்கும் காளைகளே சமுதாய உறுப்புக்கள்; இமயமலை மேலே கிடக்கும் ஒரு கப்பல் சமுதாய சம்பந்தமில்லாதது; அதைக் கடலில் கொண்டு சேர்த்து, மக்கள் பயன்படுத்தத் தொடங்கியதும், அதுவும் ஒரு சமுதாய உறுப்பாகி விடுகின்றது. எனவே, சமுதாயத் தில் ஒவ்வொரு மனிதனும் நிற்க வேண்டிய இடமும், ஆற்ற வேண்டிய பணியும் முறையாக நீடித்திருக்க வேண்டும். திடீரென்று ஒரே சமயத்தில் பல மனிதர்கள் இடம் மாறித் தொழில்களையும் மாற்றிக் கொண்டால், குழப்பமே தோன்றும். இவ்வாறு அடிக்கடி நேர்ந்தால், நாளடைவில் சமுதாயமும் நசித்துவிடும்.

மனிதர்களுக்குரிய இடங்களையும் பணிகளையும் தீர்மானிப்பதற்காக அவர்கள் நால் வருணத்தாராகக் கூறப்பட்டிருக்கின்றனர். மக்களை நான்கு பிரிவினராக மநு பிரித்தார் என்பதில்லை. நான்கு வகையான குணங் கள், கர்மங்கள் அல்லது செயல்களுடையவர்கள், அந்தந்தக் குணங்கள் செயல்களுக்கேற்பத் தனித்தனிப் பெயர்களைப் பெற்றுள்ளனர். மனோதத்துவ அடிப்படை யிலே வருணம் அல்லது ஜாதி அமைந்திருக்கின்றது. மனிதர்க்குரிய குணங்கள் சத்துவ குணம், ரஜோகுணம், தமோ குணம் என மூன்று. இவற்றில் ஒன்றோ சிலவோ அவர்களிடம் முனைப்பாக இருப்பது இயல்பு. சத்துவ குணம் முனைப்பாகவுள்ளவர் பிராம்மணராகவும், ரஜோகுணம் முனைப்பாக வுள்ளவர் க்ஷத்திரியராகவும், தமோ குணம் முனைப்பாக வுள்ளவர் வைசியராகவும் குறிக்கப் பெற்று, அவர்களுக்குரிய கடமைகளும் கூறப் பெற்றுள்ளன. முதலி ரண்டு குணங்கள் தெளிவாகவும் முனைப்பாகவுமின்றி,

பெரும்பாலும் தனித் தமோ குணத்துடனிருப்போர், சிந்திக்கும் ஆற்றலில்லாதவர் ஆகியோர் நான்காவது வருணத்தாராகக் குறிக்கப் பெற்றுள்ளனர். அந்நியர், போரில் தோற்றவர் ஆகியோரும் இந்த இனத்திலேயே சேர்க்கப்பட்டுள்ளனர்.

நான்கு வருணத்தாருக்கும் அவரவர் பண்புக்கேற்ற கடமைகள் விதிக்கப் பெற்றுள்ளன. வேறு கடமைகளுடன், வேதம் ஓதுதலும் ஓதுவித்தலும் பிராம்மணரின் முக்கியமான கடமை. அவர்களே சமுதாய ஞானக் களஞ்சியத்தின் காவலர். பல்வேறு கலைகளைப் பற்றியும் சாஸ்திரங்களைப் பற்றியும் பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளாகச் சமுதாயம் சேர்த்து வைத்துள்ள ஞானத்தை அடுத்த தலைமுறையினருக்குக் கற்பித்தல் அவர்கள் கடன். க்ஷத்திரிய வைசியர்கள் வேத சாஸ்திரங்களைக் கற்கலாமேயன்றிக் கற்பித்தல் கூடாதென்று மநு விதித்துள்ளார். பிற்காலங்களில் இது மாறிப் பல க்ஷத்திரியரே மேதாவிகளாக விளங்கி வேதம் முதலியவற்றை ஓதுவித்திருக்கிறார்கள்; அந்தணர் பலரும் அவர்களிடம் சென்று கற்று வந்திருக்கின்றனர். க்ஷத்திரியர் நாடாள்வதும், நாட்டைக் காப்பதும் கடமைகளாக உடையவர் சமுதாயத்தில் குழப்பமில்லாமல் காப்பதும், வெளிப்பகையை வெல்வதும் அவர்கள் இயற்றி வந்த பணிகள். சமுதாயத்தின் பொருளாதாரத் தேவைகளையெல்லாம் நிறைவு செய்து வந்தவர் வைசியர். மற்றவர்கள் மேற்கூறிய மூவருணத்தாருக்கும் தொண்டு செய்து வந்தனர். சமுதாயத்தில் நான்கு வருணங்களுக்கு மேல் ஐந்தாவது ஒன்று கிடையாதென்று மநு ஐயந்திரிபறக் குறித்துள்ளார்.

நான்காவது வருணத்தார் முதல் மூன்று வருணத்தாரின் அறிவு வரப்பெறாத குழந்தைகளைப் போன்றவர். அவர்கள் சமூகத்திலிருந்து விலக்கப் பெற்றவரல்லர்.

மற்ற மூன்று வருணத்தாருடன் நெருங்கிப் பழகி, பழக்கத்தின் மூலம் அவர்கள் வளர்ச்சியடைவதற்குப் பணி செய்தல் அவர்களுக்கு வழியாகக் கூறப்பட்டுள்ளது. அறிவு, ஆற்றல்களின் வளர்ச்சிக்குத் தக்கபடி அவர்கள் மேல் நிலையடைந்து மற்ற வருணத்தாருடன் கலந்துவிட வாய்ப்பு உண்டு. அவர்கள் சிறுபான்மையோராகவே இருந்திருக்க முடியும். முதல் மூன்று வருணத்தாரைப் பார்க்கினும் நான்காம் வருணத்தார் மிகுதியாக இருந்திருப்பின், சமுதாயமே மிகத் தாழ்ந்த நிலையிலிருந்திருக்க வேண்டும். சரித்திர முறையில் பார்க்கையில், அவ்வாறில்லை யென்றும், பாரத நாட்டின் உன்னத நாகரிகம் உலகிற் பல நாடுகளுக்கும் வழி காட்டியா யிருந்திருக்கின்றதென்றும் தெரியவரும். மொத்தத்தில் நான்காம் வருணத்தவர் ஒருக்காலும் அடிமைகளாகக் கருதப்படவில்லை யென்பதும், அவர்களும் சமுதாய உறுப்பினர்களாகவே யிருந்தன ரென்பதும் குறிப்பிடத் தக்கவை.

இக் காலத்தில் நாம் 'சமத்துவம்' என்று கூறி வரும் முறையில் மநு நான்கு வருணத்தாரிடையிலும் சமத்துவத்தை ஒப்பவில்லை. ஒவ்வொரு வருணத்தாருக்கும் விதித்துள்ள கடமைகளில் வேற்றுமை யிருந்தது போலவே, சமுதாய நிலையிலும் வேற்றுமைகளிருந்தன. நவீன நாகரிகத்தில் நாம் 'ஜனநாயகம்' என்ற கொள்கைப்படி மக்களாட்சியை விரும்புகிறோம். ஆனால், மநு அறிவாளர் ஆட்சியையே விதித்துள்ளார்.

காலப்போக்கிலே வருணங்களுக்குள் பல கலப்புக்கள் ஏற்பட்டு, வெளி நாட்டார் படையெழுச்சிகளாலும் பல மாறுதல்களும் தோன்றியுள்ளன. இக் காலத்தில் வருணங்களின் பெயர்களைக் கூறிக் கொள்வோரே பெரும்பாலரா யிருக்கின்றனரே யன்றி, அவற்றிற்கு விதித்திருக்கிற கடமைகளை நிறைவேற்றி வருவோர் மிகச்

சிலரே யாவர். எனவே, இக்காலத்து நிலையைக் கொண்டு முற்காலத்து வருணங்களை நாம் ஆராய்ந்து பார்க்க இயலாது. சரித்திர காலத்திற்கும் முன்பிருந்தே சமுதாயம் சிதைந்து சரிந்து விடாமலிருப்பதற்கு நால் வருணங்களாக மக்கள் பல்லாயிரம் ஆண்டுகள் கடமைகளை நிறைவேற்றி வந்த வரலாற்றையே நாம் ஆராய வேண்டும். வேதங்களையும், மநு தர்ம சாஸ்திரம் முதலியவற்றையும் பக்தி சிரத்தையோடு பயின்று, பொருள் தெரிந்து, ஆராய்ந்து பார்க்க வேண்டும். இதுவரை நடந்துள்ள மேலை நாட்டுப் பேராசிரியர்களின் ஆராய்ச்சி மேலெழுந்த வாரியாகவே யுள்ளது. சுவாமி **தயானந்த சரஸ்வதி**, மகரிஷி **அரவிந்தர்**, **லோகமான்ய திலகர்** ஆகியோரைப் பின்பற்றி நன்கு தெளிந்து அறிவிக்கத் தகுதியுள்ள பல ஆராய்ச்சியாளர் முன்வந்தால்தான் உலகுக்கு ஓரளவு உண்மை புலனாகும்.

## இடைச் செருகல்கள்

ஆண்-பெண்களின் கூடாவொழுக்கம் பற்றியும், கலப்பு ஜாதிகள் பற்றியும் இந் நூலில் 9, 10-ஆவது அத்தியாயங்களில் கூறப்பட்டுள்ள பெரும்பாலான விஷயங்கள் பிற்காலத்தில் எவர்களாலோ சேர்க்கப்பட்டிருக்கலாமென்று சில ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். ஏனெனில் வருணங்களைப் பற்றியும், ஆசிரமங்கள் பற்றியும், மனித வாழ்வின் இலட்சியம் பற்றியும், பரந்த அன்புடனும், அநுதாபத்துடனும் கூறி வந்த மநுவே பழி வாங்கும் மனோபாவத்துடன் வேறிடங்களில் விதி வகுத்திருக்க முடியாது. கலப்பு ஜாதிகளாகத் தோன்றிய சிலரை ஊருக்கு வெளியே விரட்ட வேண்டுமென்றும், இழி தொழில்களையே செய்யப்பணிக்க வேண்டுமென்றும், இவ்வாறு மேலும் கூறப்பட்டிருக்கும் முறைகள் பலவும் மநுவின் தர்மத்திற்கு ஏற்புடையவையாகக் காணப்

பெறவில்லை. எல்லோரையுமே அந்தணராக்குவதே ஹிந்து தர்மத்தின் அடிப்படையான கொள்கையென்று சுவாமி விவேகானந்தர் உலகறியப் பறைசாற்றியதற்கு இவை முரணாகவுள்ளவை.

## அரசியல்

அரசியலைப் பற்றி மநு மிக விரிவாகக் கூறியுள்ளார். அரசன் தெய்வம்சமாயினும், அவன் தர்மத்திற்கும், மக்களுக்கும் கட்டுப்பட்டவன். காலை முதல் இரவு முடிய அவனுக்குரிய தினசரிக் கடமைகள் விதிக்கப் பெற்றுள்ளன. மந்திரி சபை, அரசாங்க உத்தியோகஸ்தர்கள், நீதிமன்றம், வழக்குகளை முடிவு செய்யும் முறைகள் ஆகிய விஷயங்களைப் பற்றி இந்நூலில் கூறப் பெற்றுள்ள கொள்கைகள் பிற்காலத்தில் பல நாடுகளுக்கும் வழிகாட்டிகளாக அமைந்தவை. மொத்தத்தில் மநுவின் அரசியல் முறை தனி ஆராய்ச்சிக்குரிய பெரிய விஷயமாகும்.

## உலகப் புகழ்

மநு தர்ம சாஸ்திரத்தின் கொள்கைகளும் தத்துவங்களும் முற்காலத்தில் ஆரியர் சென்ற நாடுகளிலெல்லாம் பரவியிருந்தன. ஈரான் எனப்படும் பாரசீக நாட்டிலும், எகிப்திலும், பாலஸ்தீனத்திலும் அவை பரவியதற்கு ஆதாரங்கள் தென்படுகின்றன. பல்லாயிரம் வருடங்களாக இந்தியாவுடன் வர்த்தகத் தொடர்புள்ள கிரேக்க நாட்டிலும் மநு பயிலப் பெற்றிருந்தார். புகழ் பெற்ற கிரேக்க சரித்திராசிரியரான ஹிரோடோட்டஸ் 'நான்கு வகுப்பார்கள்' என்று அடிக்கடி குறிப்பிட்டிருப்பது மநுவின் 'நான்கு வருணத்தா' ராகவே இருத்தல் கூடும். கிரேக்கத் தத்துவ ஞானியான பிளேட்டோவின் 'உரையாடல்கள்' என்ற நூல் பாரத நாட்டு வேதங்கள், உபநிடதங்களைப் போன்ற மெய்ஞ்ஞான ஆராய்ச்சியாக

விளங்குவதை ஸர் வில்லியம் ராம்ஸே* என்ற அறிஞர் சுட்டிக் காட்டியிருக்கிறார். மநு பிராம்மண, க்ஷத்திரிய, வைசியரென்று மக்களைப் பகுத்திருப்பது போலவே, பிளேட்டோவும் வகுத்துக் கூறியுள்ளார். ரோமாபுரி ராஜ்யத்திலும் மநுவுக்குச் செல்வாக்கிருந்ததை அதன் சட்டங்களிலிருந்தே தெரிந்து கொள்ளலாம். கி. பி. 527 முதல் 563 வரை அங்கே ஆண்டு வந்த ஜஸ்டினியன்சக்கரவர்த்திகாலத்திலே உருவாக்கப்பெற்றரோமாபுரிச் சட்டங்களில் மநுவின் விதிகள் பல அடங்கியுள்ளன. திருமணம், தந்தையின் அதிகாரம், சுவீகாரம், ஒப்பந்தம், அடைக்கலப்பொருள், கடன்கள், விற்பனை, கூட்டு ஒப்பந்தங்கள் முதலியவிஷயங்களில் மநுவின் விதிகள் பலவும் ஜஸ்டினியச் சக்கரவர்த்தியின் சட்டங்களில் அப்படியே தூக்கி வைக்கப் பட்டிருக்கின்றன. அந்த ரோமாபுரிச் சட்டங்களை முன் மாதிரிகளாகக் கொண்டே தற்காலத்திலும் மேலை நாடுகளில் சட்டங்கள் இயற்றப் பெறுகின்றன. பர்மா, மலாய், இந்தோனேஷியா முதலிய கீழ்த்திசை நாடுகளின் சட்டங்களிலும் மநு தர்ம சாஸ்திரம் இடம் பெற்றிருக்கின்றது.

இவ்வாறு உலகப் புகழ் பெற்று விளங்கிய மநுதர்ம சாஸ்திரத்தைப் பற்றி ஜெர்மானியத் தத்துவ ஞானியான நீட்ஷே,† "பைபிளை மூடிவிட்டு மநு தர்ம சாஸ்திரத்தைத் திறந்து பாருங்கள்!' என்று கூறியுள்ளார். இது போல் எண்ணற்ற புகழுரைகளைக் காணலாம். ஆயினும் மநு கூறிய தர்மத்தைப்பற்றியும், அது உலக நாடுகளின் சட்டங்களில் எவ்வளவு தூரம் பாதித்துள்ளது என்பது பற்றியும், விருப்பு வெறுப்பில்லாத, விரிவான, திட்டமான ஆராய்ச்சி இனித்தான் வெளிவர வேண்டும்.

10—9—1961 **ஏ.கே.கோபாலன்**

---

*Sir William Ramsay †Nietzsche

# பொருளடக்கம்

அத்தியாயம் பக்கம்

# மநு தர்ம சாஸ்திரம்

## முதல் அத்தியாயம்

# படைப்பும் அதன் பான்மையும்

### தோற்றுவாய்

1. பொறிவாயில் ஐந்தவித்து, விஷய சுகங்களை நாடாமல் மனத்தைத் திருப்பி, பரம் பொருளிடத்தே ஊன்ற நிறுத்திய சுவயம்பு மநுவைத் தேவ ரிஷிகள் சென்றடைந்து அவரைப் போற்றி இவ்வண்ணம் கேட்கலாயினர்.

2. "ஞான நிறைவும், வல்லமையும், செல்வமும், வீறும், திறலும், ஒளியும் பெற்றுத் திகழும் பெருமானே! நால் வருணத்தரும் மற்றோரும் கடைப்பிடிக்கத்தக்க அவரவர் செயல்கள், கடமைகளை எமக்கு உணர்த்துவீராக!

3. எதன் விதிப்படியே வேள்வி போன்ற நற்கருமங்கள் நிகழ்கின்றனவோ,எது யாராலும் இயற்றப் பெறுமல் தானே முகிழ்த்து இயங்குமோ, எதனைத் தர்க்க நியாயங்களைக் கொண்டு விசாரித்து அளவிட முடியாதோ, அத்தகைய வேதத்தின் சாரங்களை முற்றும் உணர்ந்த பெருமான் நீரேயல்லவா?"

4. வரம்பிகந்த வல்லமைகள் வரப்பெற்ற மநுவை, பேரனுபவம் பெற்றுத் திளைக்கும் தேவ ரிஷிகள் இப்படி வினவியபோது, அவர்களைத் தக்கவாறு உபசரித்து, "உங்கள் விருப்பப்படியே ஆகுக" என்று மநு கூறுவார் ஆயினர்.

## இறை புணர்வில் முகிழ்த்த உலகு

கேளீர் முனிபுங்கவர்களே

5. இந்த உலகமானது முன்பொரு சமயம் இப்போ திருப்பதைப் போல் இருந்ததில்லை. இந்தப் படைப்புக்கு முன் ஏற்பட்ட முதல் பேரழிவு (பிரளய) காலத்தில், இருட்டில் மறைந்து கிடக்கும் பொருளைப் போன்று இவ்வுலகமும், ஒளியும், ஒலியும், உருவும் அற்றதாய்ப் படைப்புக்கு ஆதி காரணமான மூலப் பிரகிருதியில் ஒன்றி உறங்கிக் கிடந்தது.

6. இந்த உலகில் ஜீவர்களெல்லாம் தங்கள் வினைப் பயனுக்கேற்ற பிறவியை எடுக்கின்றார்கள். இந்த ஜீவர்களின் பிறவியை நிர்ணயிக்கும் பரம்பொருளோ வினையின் நீங்கி விளங்குபவராய், தாமே தம்மிச்சையின்படி வெளிப்பட வல்லவர். எனவே மேலே சொன்ன முதல் பிரளயத்தின் பின்னர் பரமாத்மாவானவரே தமது இச்சையினால், ஐம்பூத தத்துவமாகவும், ஏனைய இயற்கை நியதிகளாகவும் காரியப்பட்டு பிரளய மூட்டத்தைக் கலைத்து முகிழ்த்தெழுந்தார்.

7. பரம்பொருளின் உண்மை வடிவத்தை உணர்ந்து கூறும் பொருட்டாக நான்மறைகள் நாடி ஏங்குகின்றன. சகல தோற்றங்களையும் உள்ளிருந்து தூண்டி இயக்கும் பெருமான் அவர். பொறி புலன்களினாலே மட்டும் அவரை இனங் கண்டுவிட முடியாது. எனினும் அவர்பால் ஊன்றி நிறுத்திய உள்ளத்தால் அவரை ஒருவாறு உன்னிப் பார்க்கக் கூடும். இத்தகைய மேன்மைகளை உடையவரான பரம்பொருள் தாமே விரும்பிப் படைப்புப் பொருளாக உருப்பெற்று விளங்கினார்

8. தமது இயல்பான பேரருளின் பான்மையினாலே பல்வேறு தோற்றங்களில் வெளிப்பட விரும்பிய பகவான் முதன் முதலில் நீரைத்தான் படைத்தார். அந்த நீரில் படைப்பின் முதல் விதையையும் ஊன்றினார்.

9. தெய்வ சங்கற்பத்தால் ஊன்றப் பெற்ற விதையானது. அவரது திருவுளப்படியே, ஒரு அண்டமாகப் பரிணமித்தது. இந்த அண்டம்தகத்தகாயமான காந்தியை வீசிப் பொன்மயமாக ஒளிர்ந்தது. இந்த அண்டத்தில்தான், சகல ஜீவர்களின் ஆதிப்பாட்டனான பரம்பொருளே தமது இச்சையினால் "பிரம்மா" வடிவமாகவும் தோற்றம் எடுத்தார்.

10. பரமாத்மனுக்கு **நரன்** என்று பெயர். அவனால் முதன் முதலில் படைக்கப்பட்டதனாலே ஜலத்திற்கு **நாரம்** என்று பெயர் வந்தது. படைப்பின் முனைப்பில் காரியப் பட்டு பிரம்மாவாகப் பகவான் தோற்றமுற்று, அந்த நீரில் இயங்கியதனாலே, நீரில் இயங்குவோன் என்னும் பொருள் காரணம் பற்றி **நாராயணன்** என்று பரம் பொருளுக்குப் பெயர் ஏற்பட்டது.

11. படைப்பின் முதல் காரணராய், பொறிபுலன் எல்லைகளுக்குக் கட்டுப்படாதவராய், எல்லாப் பொருள் களினூடும் நின்று இயக்கும் வல்லமையினால், அவரை '**சத்**' என்பார்கள். இந்திரிய அனுபவங்களுக்கு அவர் அகப் படாமல் கரந்து நிற்றலினாலே 'அசத்' என்றும் கூறுவார் கள். இத்தகைய பகவான் தோற்றமும் முடிவும் இல்லாதவராயினும் தன்னில் தானே தோற்றமுற்றெழுந்த தெய்வ புருஷனுக்குப் பிரம்மா என்ற பெயர் உண்டாயிற்று.

12. பொன்னொளி சுடரும் அவ்வண்டத்தில் தோற்ற முற்ற பிரம்மா, பிரம்ம வருஷம் முழுமையும் தவத்தில் இருந்து, தமது கற்பித வலிமையினால் தாம் வீற்றிருக்கும் அவ்வண்டம் இரு கூறுகளாகப் பிளவு கொள்ள வேண்டு மென்று எண்ணினார்.

13. பிரம்ம இச்சையின்படியே பொன்மயமான அவ் வண்டம் இரு கூறுகளாகப் பிளந்தது. அவற்றில் ஒன்றை மேல விண்ணுலகாக்கி, மற்றொன்றை மண்ணுலகாக்கிக் கீழ அமைத்தார். இவற்றின் இடையே எண்டிசை வெளியும், எல்லையில் கடல்களும் சமைத்தார்.

14. பின்னர் மனம் என்ற ஒன்றைப் படைத்தார். இது வடிவில்லாததாயினும், ஞான ஊற்றுகத் திகழும் தன்மையுடையது. இந்த மனத்தையும் பரமான்ம நிலய மான தம்முடைய சங்கற்ப சக்தியிலிருந்தே அவர் உருக் கொளச் செய்தார். இதற்கு முன்பே, தன்னிச்சை என் னும் முனைப்பாகிய அகங்காரத்தையும், 'நான்' எனும் தன் உணர்ச்சியையும் படைத்து வைத்தார்.

15. 'நான்' எனும் உணர்ச்சியும், 'எனது' எனும் முனைப்பும் தோற்று முன்னமே, பரமான்ம இச்சையின் முதல் வெளியீடான ஆன்ம தத்துவத்தையும், முக்குணங் களுடன் கூடி, ஒலி, உரு, தீண்டுதல், சுவை, மணம் எனும் அனுபவங்களைப்பெறும் தன்மையுடையனவாகிய பொறி- புலன் அமைப்பையும் வகுத்து வைத்தார்.

16. படைப்புக்கு ஐம்பெரும் பூத வடிவங்களையும், அவ்வவற்றிற்கு ஏற்ற நுண் தன்மைகளையும், அவற்றின் இயக்கத்திற்கு வேண்டிய தத்துவ அளவுகளையும், மனம் சலித்து நிற்கின்ற அகங்காரத்தையும் வகைப்படுத்திச் சேர்த்துப் பல்வேறு உயிரினங்களையும் உண்டாக்கினுர்.

17. ஐந்து பூதத் தத்துவங்களும் அகங்காரமுமாக ஆறும் கூடி எழுகின்ற யாவும் அப் பரம் பொருளிடத் திருந்தே பல்கி எழுவனவாகும். ஆறுமுகமாய்சம்மேளித்த சக்திகள் உட்புகுந்துறையும் அனைத்தும் சரீர மெனட் படும் (அதாவது ஆறு பொருள் சேர்க்கை).

18. பஞ்ச பூதங்கள் இப்படி நுட்பமான சக்திகளுடன் காரியப்பட்டு நின்றபோது, இந்தக் காரிய உலகின் காரணப் பொருளான மனமோ இன்ப துன்பங்களை நாடிக் கற்பித்துக் கொண்டு அவற்றில் சதா ஊசலாடி அழிவற்று நிற்கிறது.

19. ஐம்பூதச் சேர்க்கையும், பரமான்ம சங்கற்ப மாகியபேரருட் கருணையும்,ஜீவனின் அகங்காரமும் ஆகிய இவ்வேழும் கூடிக் காரியப்பட்ட பின்பு, தோன்றியவாறே

கலந்தும் மறைந்தும் போகின்ற காரிய உலகு இது. இதற்குக் காரணமாக நின்றியக்குவது பரம்பொருளே!

20. ஐம்பெரும் பூதங்கள் ஒன்றிலிருந்து மற்றொன்றாக விரிந்ததுபோலவே, ஒலிமயமான ஆகாயத்திலிருந்து அவ்வொலியை வாயுவும், வாயுவின் ஒலி, தீண்டுதல் இரண்டையும் மூன்றாவதான தேயுவும், தீயினிடமிருந்து ஒலி, தீண்டுதல், ஒளி ஆகியவற்றை நான்காவதான நீரும், பின்னர் ஒலி, தீண்டுதல், ஒளி, சுவை ஆகியவற்றை நீரிலிருந்து பெற்ற மண், மணமும் பெற்று இலங்குவனவாகும். இந்தப் பஞ்ச பூதங்கள் தத்தமக்கே உரிய தனித் தன்மையைப் பெரும் அளவிலும் ஏனையவற்றைக் குறைந்த அளவிலும் ஸ்வீகரித்துக் கொள்கின்றன.

21. அறுதியான வேதங்களில் வகுத்துரைக்கப்பட்டவாறே சகல ஜீவராசிகளுக்கும் அவ்வவற்றிற்கு உரித்தான பெயர்களையும், இயக்கங்களையும், தொழிற்பாட்டையும் நியமித்தருளினார்.

22. பேராற்றல் கொண்டவரான இறைவன், பக்திமான்களான தேவராசிகளைப் படைத்து, அவர்களுக்குத் திவ்விய சக்திகளையும் பரிசுத்தமான உயிரையும் கொடுத்தார். சூட்சும சரீரமுடைய தேவதைகளையும், வேள்விகளையும் சமைத்தார்.

23. வேள்வி முதலான நற்கருமங்களைப் பரிபாலிக்கும் பொருட்டு, ருக், யஜுர், சாமம் ஆகிய வேதங்களை அக்னி, வாயு, சூரியன் இவர்களிடமிருந்து தோற்றுவித்தார்.

24. காலத்தையும், காலக் கணக்குகளையும், தாரகைக் கூட்டத்தையும், கோள்களையும், நதிகளையும், நீர்நிலைகளையும், மலைகளையும், மேடு பள்ளங்களையும் தோற்றுவித்தார்.

25. தம்மால் படைக்கப்படவிருக்கிற சகல படைப்புகளுக்கும் பொருந்தும்படியான, பக்தி, வாக்கு, மகிழ்ச்சி, விருப்பம், குரோதம், இனப் பெருக்கம் ஆகியவற்றையும் உண்டு பண்ணி வைத்தார்.

26. நன்று, தீது இவற்றைத் தெளிவாக்கி, அவற்றின் விளைவுக்கு ஆதாரமான செயல் வேற்றுமைகளையும் வகுத்தருளி, ஜீவர்கள் அவ்வழியே இன்ப துன்ப உணர்ச்சிகளையும், குளிர், சூடு போன்ற துவந்துவங்கள் என்று சொல்லப்படுகிற உடன்பாட்டு எதிர்மறை இரட்டைகளையும் அனுபவிக்கச் செய்தார்.

27. விரைவில் நிலை மாறிப் போவதான நுண்ணிய தன்மைத் துகள்களாலான பஞ்ச மகா பூதங்களைப் பற்பல வேறுபாட்டு அளவைகளில் கலந்து, இந்த உலகைப் பருப்பொருளாகவும், அதனுள் இழையும் பசைப் பொருளாகவும் இலங்கச் செய்தார்.

28. இப்படி இறைவனாலே விதிக்கப்பட்ட நியமனங்களைக் கடந்து விடாமல் ஜீவர்கள் சரீர மெடுக்கும் போதெல்லாம் ஆங்காங்கும் அவ்வவ் விதிமுறையில் தாமே தவறாமல் ஒழுகும் தன்மை யுடையராயினர்.

29. கொடுமை அல்லது எளிமை, கோரம் அல்லது சாந்தம், நேர்மை அல்லது மாற்றம், பொய் அல்லது மெய்ம்மை எதெதற்கு எப்படி இறைவன் பொருந்தும்படியாகத் திருவுளம் பற்றினாரோ, அந்தந்தத் தன்மைகளை அகற்றாமல், பிறவிகள் தோறும் புகுந்து புறப்படும் பான்மை உயிர்களுக்கு இயல்பாயிற்று.

30. பருவ காலங்கள் தவறாமல் ஒன்றை மற்றொன்று தொடர்ந்து செல்வது போன்றே ஒவ்வொரு பிறப்பும் தனக்குரிய செயல்களில் தவறாமல் சென்று பொருந்துகின்றது.

## உயிர்களின் தோற்றம்

31. மனித ராசி பல்கும் பொருட்டாகவே, பிரம்ம, க்ஷத்ரிய, வைசிய, சூத்ர என்ற நால் வருணத்தையும், வேத ஞானம், புவி புரத்தல், செல்வ மீட்டல், ஏவல் புரிதல் என்ற கடப்பாடுகளின் வழியே வ்குத்து வைத்தார்.

இவர்கள் இறைவனுடைய முகம், தோள், தொடை, பாதம் ஆகிய பகுதிகளினின்றும் தோற்றமுற்றனர்.

32. பிரம்ம ஸ்வரூபியாக நின்று படைப்புச் செயலில் விளைந்த பரம்பொருளானவர் தாமே தம்மில் ஆண், பெண் என்றபால் பேதங் கொண்டு தோன்றிக் கலந்த விளைவாகப் பெண் தன்மைத்தாக எடுத்த தோற்றத்திலிருந்து வெளிப்பட்டு விராட் புருஷன் என்ற வடிவு கொண்டு விளங்குவாராயினர்.

33. முனி புங்கவர்களே, பாருங்கள். உங்கள் முன்பு நிற்கின்ற நான், அந்த விராட் புருஷனுடைய தபோ வலிமையினால், அவனே நானாக உருக் கொண்டு எழுந்த தோற்றமேயாகும். இப்படி இரண்டாம் முறையாக வடிவ மாற்றம் கொண்டெழுந்த நானே, உங்கள் முன்னால் இயங்கா நிற்கும் இவ்வுலகுக் கெல்லாம் முதலாமவனாகும்.

34. மனித ராசியை உண்டாக்க வேண்டியே, செயற் கரும் தவம் செய்து புனிதரான பத்துப் பிரஜாபதிகளை முதலில் உண்டாக்கினேன்.

35. மரீசி, அத்திரி, ஆங்கிரஸர், புலஸ்தியர், புலகர் கிருது, பிரசேதசர், வசிஷ்டன், பிருகு, நாரதர் என்னும் பதின்மர் இவர்களே.

36. தேஜஸ்விகளான இந்தப் பிரஜாபதிகள் ஏழு மநுக்களையும், பக்திமான்களான தேவர்களையும், சுவர்க் காதி லோகங்களையும், தபோ வலிமை மிகுந்த மாமுனி வோரையும் தோற்றுவித்தார்கள்.

37. யட்சர்களையும், கொடிய ராட்சசர்களையும், ரத்த வெறி கொண்ட பிராண்டிகளையும், வானசரர்களையும், பைசாசர், அப்சரர், அசுரர் ஆகியோரையும், நாகர் களையும், சர்ப்பங்களையும், கருடர்களையும், சிட்டுப் பறவை களையும், பிதுரர்களையும்,

38. இடி மின்னல்கள், முகில்கள், வானவில்கள், தூமகேதுக்கள், பூமியதிர்ச்சிகள் ஆகிய பயங்கர நாச சக்திகளையும்,

39. கின்னரர், வானரர், மீன்கள், பற்பல பட்சி ஜாலங்கள், பசுக்கள், மான்கள், மனிதர்கள், பயங்கர வன மிருகங்கள், கோரப் பற்களை இரு வரிசையாகப் பெற்ற புலிகளையும்,

40. சிறியதும், நீண்டதுமான ஊர்வன, உலண்டுப் பூச்சி, விளக்கணை பூச்சி, எட்டுக்காற் பூச்சி, ஈ, முகடு, வால் நீண்ட கொசு, பற்பல தாவர ராசிகளையும்,

41. இவ்விதமாக உலகில் காணப்படும் சகல சராசர வஸ்துக்களையும் எனது விருப்பத்தின்படியே பத்துப் பிரஜாபதிகளும் அளவிறந்த தவங்கள் செய்து பெற்ற சக்தியினுல் படைத்தனர்.

42. இப்படிப் படைக்கப்பட்ட உயிரினங்களுக்கெல்லாம் விதிக்கப்பட்ட கடமைகளையும் அவ்வவற்றின் தோற்ற விளக்கங்களுடன் இனி உங்களுக்குக் கூறுகின்றேன்.

43. பசுவும், மானும், கோரப் பற்களை இரு புறமுடைய புலிகளும், அரக்கரும், பைசாசரும், மனிதரும் தோற்றுவதற்கு ஆதாரமாக இருக்கும் கர்ப்பப் பைக்கு சராயுவென்று பெயர்.

44. பறவையினமும், நீர் வாழ்வனவாகிய முதலைகள், ஆமை, மீன்கள், கரையில் உண்டாகும் ஓணுனும், சர்ப்பங்களும் முட்டையிலிருந்து தோன்றுவன.

45. காற்றின் புழுக்கத்திலிருந்து வால் கொசு, எட்டுக்காற் பூச்சி, ஈ, மோட்டுப் பூச்சி ஆகியவையும், வெப்பத்திலிருந்து புழுக்களும், எறும்புகளும் பிறக்கின்றன.

46. தாவரங்கள் வித்திலிருந்தும், தங்கள் கிளைகள் ஊன்றப் பெறுவதனுலும், பூமியிலிருந்து வீறிட்டு மேல்

நோக்கி ஓங்கி எழுகின்றன. இவற்றில் கொடி வகை சிலவும், நெல் போன்ற பயிர்களும் பலன் விளைந்தவுடனே அழிவுறுகின்றன.

47. பூவாமற் காய்க்கும் அத்தி முதலிய மரங்களுக்கு வனஸ்பதி என்று பெயர். பூப்பனவும், பூவின்றிக் கனி தருவனவும் ஆகிய இரு வகையும் மரங்கள் எனப்படுகின்றன.

48. சில செடிகள் கொத்தாகக் கிளம்புவன. சில மிலார்களுடன் தோன்றுவன. புற்கள், கோரைகள், கொடிகள் இவை விதைகளிலிருந்தும், பதியங்களிலிருந்தும் வருகின்றன.

49. தாவரங்களும், மிருக ஜாதிகளும், நானுவிதமான தமோ குணமாகிய இருளால் சூழப்பட்டு, உள்ளுணர்வில் பாவ புண்ணியம், இன்ப துன்பம் ஆகிய நுகர்ச்சிகளும் உடைத்தாய் இருப்பனவேயாகும்.

50. பிரம்ம நிலையிலிருந்து விகசித்து உயிரினங்கள் வெளிப்பட்டு இயங்கிப் பின் அழிந்து போகின்ற தொடர்ந்து செல்லும் உலகப் பிறப்பின் விந்தைகள் இவ்வாறு கூறப்பட்டன.

51. எந்த ஆதி காரண ஸ்தானத்திலிருந்து பிரம்மா தோன்றி, என்னையும், இந்த சிருஷ்டியையும் தோற்றுவித்தாரோ, அதே மூல காரணத்தில் தனது ஒரு பகல் கழிந்தவுடனே சகல சிருஷ்டிகளும் தானுமாகச் சென்று ஒடுங்கி விடுகிறார்.

52. மீண்டும் படைப்புச் சக்தியானது எப்பொழுது விழிப்புற்றுக் காரியப் படுகிறதோ அப்போது மறுபடியும் இவ்வுலகம் வெளிப்பட்டு இயங்கும். எப்போது அது மூலமா சக்தியுடன் ஒன்றிவிடச் சித்தம் கொள்கிறதோ அப்போது இவ்வுலகமும் இலதாகிவிடும்.



53. வினைப் பயனால் சரீர மெடுத்த ஜீவர்கள், படைப்புக் கிறைவனாகிய பிரம்மா உறங்கும்போது, தாங்களும் செயலற்றவர் ஆகின்றனர். மனதும் தனது சலனத்தை நிறுத்தி விடுகிறது.

54. பிரம்மாவின் பகலிரவுகளில் இப்படி நடைபெற்றுக் கொண்டே சென்ற பின்னர், பிரம்மாவின் வயதும் ஒரு முடிவை அடைகின்ற காலம் வரவும், எங்கும் நிறைந்தவரான பரம்பொருள் தம்மால் படைப்புக்கென்றே தோற்றுவிக்கப்பட்ட பிரம்மாவையும், அவன் படைப்பாகிய யாவற்றையும் மீண்டும் தமது உதரத்தே வாங்கிக் கொண்டு யோக நித்திரையில் அமர்கின்றார்.

55. பிறவி யொன்றை எடுத்துக் கொண்ட ஜீவன் தனது சரீரத்துடன் நெடிது நாள் வாழ்ந்து பின்னர் சுவாசிக்கவும் இயங்கவும் கூடாத தேய்வைப் பெறுகின்ற நிலை யொன்றில் தனது பருவுடலை விட்டொழித்து நுண்ணுருவுடன் வெளிப்படுகிறான்.

56. பஞ்ச மகா பூதங்கள்—பஞ்சேந்திரியங்கள்; மனம்—புத்தி; பிறவி வாசனை-வினைத்தொடர்; அறியாமை ஆகிய எண் தொகை கூடியதாக—தாவரமாகவோ ஜங்கமமாகவோ வடிவெடுக்கும்போது ஜீவனுக்குப் பருவுடல் (ஸ்தூல சரீரம்) உண்டாகிறது.

57. தனது விழிப்பால் உலகுயிர் படைத்தும், தனது உறக்கத்தினால் அவற்றை யழித்தும், தான் மட்டும் அழிவின்றிப் பிரம்மா விளங்குகிறார்.

58. அந்தப் பிரம்மாவே தமது விதி நியமங்களை எனக்கு முன்னம் உபதேசித்தார். பின்னர் நான் அதனை மரீசி முதலான பதின்மருக்கும் முறையே அறிவித்தேன்

59. எனது குமாரரான பிருகு இந்தத் தர்ம சாத்திரத்தைச் சற்றும் பிறழாமல் உங்கட்கு உபதேசிக்கக் கடவர்;

ஏனெனில், முறையாக என்னிடம் பிருகு முனிவரே இதனைப் பயின்று கைவரப் பெற்றவராகிருர்.

## தேவ மானிட வகுப்பு

60. மநுவினுல் கட்டளையிடப்பட்டவரான பிருகு முனிவர், மிகுந்த பிரியத்துடன் முனிபுங்கவர்களை நோக்கி, "கேளீர் முனிவர்களே!" என்றழைத்துக் கூறுகின்ருர்:

61. பிரம்மாவினிடமிருந்து தோன்றிய இந்த சுவயம்பு மநுவின் வம்சத்தில் தோன்றியவர்களும் இனி என்னுல் கூறப்படுவோருமாகிய ஆறு மநுக்களும் தத்தம் அவதார அதிகார காலங்களில் மிக்க ஒளி பொருந்தியவர் களாய் இருந்து ஜீவர்களைப் பிறப்பிக்கிருர்கள்.

62. அவ்வறுவரும் சுவாரோசிஷஸ், உத்தமர், தாமசர், ரைவதர், சக்ஷுஸ், தேஜோன்மயரான விஸ்வா வசு என்பவராவர்.

63. அவ்வறுவரும் சுவயம்பு மநுவும் தத்தம் அவதார ஆட்சிக் காலத்தில் பிரஜைகளை உண்டு பண்ணி யும் அவர்களைக் காத்தும் வருகிருர்கள்.

## காலக் கணக்கு

64. இமைகள் 18 கொண்டது ஒரு காஷ்டை
காஷ்டை 30 கொண்டது ஒரு கலை
கலைகள் 30 கொண்டது ஒரு முகூர்த்தம்
முகூர்த்தம் 30 கொண்டது ஒரு இராப்பகல்.

65. இவ்விரவு பகல்களை மானிடர்க்கும், தேவர்க்கும் வகுப்பவன் சூரிய தேவன். இரவு உறக்கத்திற்கும், பகல் வினை புரிவதற்குமாக நிர்ணயம் செய்யப்பட்டவை யாகும்.

66. இரவு பகல் 30 கொண்டதே மானிட வருடத் தின் ஒரு மாதம் எனப்படும். அதில் 15 நாட்கள்

தேய்பிறையாகவும், மற்ற 15 நாட்கள் வளர்பிறையாகவும் ஆகும். இவ்விரு பட்சங்களும் கூடியதான ஒரு மாதம் பிதுர்க்களுக்கு ஒரு இராப் பகல் சேர்ந்த நாள் ஆகும். தேய்பிறைக் காலம் பகலாகவும், வளர்பிறை இரவாகவும் பிதுர்க்களுக்கு அமைகின்றன.

67 இப்படிப் பன்னிரண்டு மானிட கால மாதங்கள் கொண்ட ஒரு வருடம் தேவர்களுக்கு இராப்பகல் சேர்ந்த ஒரு நாள் ஆகும். அதில் உத்திராயணமாகிய தை முதல் ஆனி ஈறுகவுள்ள ஆறு மாதங்கள் தேவ்ர்களின் பகலாகவும், ஆடி முதல் மார்கழி முடியவுள்ள தட்சிணாயனமே இரவாகவும் கொள்ளப்படும். இப்படியே மானிட வருடங்கள் முப்பதும், முப்பது தேவ நாட்கள் கொண்ட மாதமாகவும், அவை பன்னிரண்டு சேர்ந்தது ஒரு தேவ வருடமுமாகும்.

68. இனி பிரம்மனது இராப் பகல்களையும், யுகங்களின் கணக்கையும் முறைப்படி சொல்லக் கேளீர்!

69. தேவ வருடங்கள் நாலாயிரம் கொண்டது கிருத யுகம். கிருத யுகம் மலர்ந்து வரும் வைகறைப் போது மட்டுமே நானூறு தேவவருடங்கள். யுக இறுதி மாலையும் அவ்வாறே. எனவே காலை, மாலையும் கொண்ட கிருத யுகக் காலக் கணக்கு மொத்தம் நாலாயிரத்து எண்ணூறு தேவ வருடங்கள்.

70. ஏனைய மூன்று யுகங்களுக்கும் முறையே வைகறைக்கும் அந்திக்கும் தனித் தனி நூறு வருடங்கள் வீதமும் யுக வாழ்வுக் காலத்தில் ஒரு ஆயிரம் வீதமும் குறைந்து கொண்டே வருகின்றன. இதன்படி திரேதா யுகம் 3600, துவாபர யுகம் 2400, கலியுகம் 1200 தேவ வருடங்கள் என்று கொள்க.

71. இப்படி மொத்தம் நான்கு யுகங்களும் தோன்றி முடிவாகிய பன்னீராயிரம் தேவ வருடங்களும் கொண்ட நெடுங் காலமே தேவர்களின் ஒரு யுகத்திற்கான கணக்கு.

72. இப்படித் தேவர்களின் யுகம் ஒரு ஆயிரம் முடிவடையும்போது, பிரம்மனுக்கு இராப்பகல் கொண்ட ஒரு முழு நாள் கணக்காகும்.

73. ஆயிரம் தேவ யுகங்களைத் தனக்கு ஒரு நாளாகப் பெற்ற பிரம்மனுக்கு, அதில் வரும் பகலே அவன் தொழிற் படும் நேரமாகவும், இரவை அவன் கனவு காணும் நேர மாகவும், காலக் கணக்கை அறிந்தவர் கூறுவார்கள்.

74. பிரம்மாவானவர், தனது இரவின் இறுதியில் விழிப்புற்றுப் பூலோக, புவர் லோக, சுவர் லோகமாகிய இந்தப் பெரிய உலகைப் படைக்க மனத்தில் எண்ணம் உடையவராகிறார்.

75. பிரம்மனுடைய மனோ கற்பிதத்தினால் விளை கின்ற முதல் தோற்றமே ஆகாசமெனப்படும். அதன் இயல்பான தன்மை சப்தம் (ஒலி) எனப்படும்.

76. அந்த ஆகாசத்தினிடமாகத் தோன்றுவது காற்று. அது தூய்மையும், மணமும், வலிமையும் கொண்ட தாய், தீண்டுதல் (ஸ்பரிசம்) என்னும் தன்மையை இயல் பாகக் கொண்டு இயங்கும்.

77. அந்த வாயுவினிடத்திலிருந்து பின்னர் தீ உண்டாகிறது. இருளைப் போக்கவல்ல ஒளியுடன் திகழும் தீ உருவமுடையதாக இலங்குகிறது.

78. நெருப்பிலிருந்து நீர் திரள்கிறது. இதன் இயல்பு சுவை (ரஸம்) உடையது. நீரினிடமாகத் தோன்றுவதே மண். இதன் குணம் (கந்தம்) வாசனை. இதுதான் தினப் பிரளயத்தின் ஆதி சிருஷ்டி.

79. பன்னீராயிரம் தேவ வருடங்கள் கொண்ட தென்று முன் சொல்லப்பட்ட ஒரு தேவ யுகம் எழுபத் தோரு தடவை வரிசையாக வந்து போகுமானால் ஒரு மநுவுக்கு சிருஷ்டிக்கும் பதவிக் காலம் முடிவாகிறதென்று மன்வந்தரம் என்ற சாத்திரம் கூறுகிறது.

80. இவ்வாருக, மனுக்களின் படைப்பதிகாரக் காலங்களான மன்வந்தரங்களையும், படைப்பையும், அழிவையும், அளவிறந்ததாகப் புரிந்து விளையாட்டயர் வார்போலே பிரம்மன் இருக்கிருர்.

81. கிருத யுகத்தில் மெய்ம்மையும் (சத்யம்) அறமும் (தர்மம்) நான்கு கால்களுடன் இருந்தன. இந்தக் கால வெல்லையில் மறத்தால் (அதர்மத்தால்) விளைகின்ற துன்பங்கள் மானிடர்களை நெருங்குவதில்லை.

82. மற்ற யுகங்களில் மானிடர் அவ்வழியில் ஈட்டும் பொருள், கல்வி இவற்றின் காரணமாக மெய்ம்மையும், அறமும் ஒவ்வொரு காலாகக் குறைகின்றன.

83. கிருத யுக மாந்தர் அறமல்லாத வேருென்றை அறிய மாட்டாதவர்களாக வாழ்வதனுலே அவர்கள் எண்ணியவெல்லாம் எய்தப் பெறுகிறவர்களாகவும், தம் மிச்சையாக நானூறு ஆண்டுகள் உயிர் வாழ்பவராகவும் இருக்கின்றனர். மேலும் தவம் முதலான சாதனைகளால் நானூறுக்கு மேற்பட்ட காலமும் சீவித்திருக்க அவர்களால் முடிந்தது. ஏனைய மூன்று யுகங்களிலும் மானிடர் வயதும் முறையே நூருண்டுகள் வீதம் குறைந்து கொண்டே போகிறது.

84. ஜீவர்களின் ஆயுட் கணக்கும், எண்ணியாங்கு எய்தப் பெறும் வல்லமையும், மேன் மக்களின் திருவுள்ளப் பாங்கு தவருது நிறைவேறுதலும் ஆகிய யாவும், யுகங்கள் தோறும், ஏற்ற அளவில் முறையாகப் பலிக்கின்றன.

85. யுகங்கள் கால அளவு படிப்படியாகக் குறைந்து வருவது போன்றே, குறிப்பிட்ட யுகங்களில் மானிடர்க்கு விதிக்கப்பட்ட தர்மங்களும் அந்த அளவில் முறையே குறைக்கப்பட்டிருக்கின்றன.

86. கிருத யுக மாந்தருக்குக் கடுந்தவமும், திரேதா யுகத்தவருக்கு ஆன்ம ஞானமும், துவாபரயுகத்தில் வேள்வி

களும், கலியுகத்தில் தாராளமாகப் பிறர்க்கு வழங்கு தலுமே யுக தர்மங்களாக விதிக்கப் பெற்றவை.

## நால் வருணக் கடமைகள்

87. உலக நியதி நின்று நிலைக்கும் பொருட்டாக நால் வருணத்தாருக்கும் உரிய கடமைகளைத் தனித் தனியே கடவுள் விதித்தார்.

88. அந்தணாளர் வேதம் ஓதியும், ஓதுவித்தும், தியாக வேள்விகள் புரிந்தும், புரிவித்தும், செல்வராயின் பிறர்க்கு ஈந்தும், வறிஞராயின் செல்வரிடம் ஏற்றும் வாழத் தக்கவராயினர்.

89. பிரஜா பரிபாலனம் செய்வது, ஈகை, வேள்விகள் புரிவது, வேத பாராயணம் செய்விப்பது, விஷய சுகங் களில் மனத்தை அலைய விடாமல் உறுதியாக நிற்பது மன்னர் கடமையாகும்.

90. வாணிபர்க்கு ஆநிரைகளைக் காத்தல், தானம் கொடுத்தல், கடலாரம், மலையாரம், கனிப் பொருள், விளை பொருள், தானியங்கள் இவற்றை வியாபாரம் செய்தல், வட்டிக்கு விடுதல், பயிர்த் தொழில் செய்தல் ஆகிய வற்றை விதித்தார்.

91. ஏவலரான மக்கள் மேலே சொன்ன மூவர்க்கும் பொறுமையின்றிப் பணி புரிதல் ஒன்றையே முதன்மை யாகக் கொள்ளக் கடவரென்றும், ஈதல் முதலிய சத்கரு மங்களும் அவர்களுக்கு உண்டென்றும் பணித்தார்.

92. புருஷ தேகம் சுத்தமானது. இடைக்கு மேல் மிகவும் தூய்மையாகும். எனவே பிரம்மாவின் முகம் பெரிதும் தூயது.

93. மிக்க தூயதான முகத்திலிருந்து வெளிப் பட்டமையினாலும், வேதங்களைப் பெற்றிருப்பதனாலும்,

முதலில் தோன்றினமையினுலும், படைக்கப்பட்ட யாவற்றினும் அந்தணன் சிறந்து விளங்குகின்ருன்.

94. சுவயம்புவான பிரம்மா, தேவர்களுக்கு அவி சொரிந்து மகிழ்விக்கவும், பிதுரர்களுக்கு சிராத்தம் செய்யவும் தக்கவனுகப் பிராம்மணனைத் தமது முகத்தினின்றும் முன்னம் படைத்தார்.

95. எவனுடைய மந்திர கோஷங்களாலும், அவிர்ப்பாகத்தாலும் தேவ பிதுரர்கள் திருப்தியை அடைகிருர்களோ அவனிலும் சிறந்த ஜீவர் யார்?

96 படைப்புப் பொருள்களில் உயிருடைய கிருமி கீடங்கள் தமது உயிர் உண்மையினுலே சிறந்தன. அவற்றினும் படிப்படியாக விலங்கு, மானிடர் முதலியோரும், மானிடரில் அந்தணனும் சிறந்து விளங்குகின்றனர்.

97. பிராம்மணப் பிறவி யெடுத்தோரினும், வேத பாரங்கதரான பண்டிதர் சிறப்புடையோர். இவர்களிலும் விதி விலக்குகளைத் தீர்மானிக்க வல்லோர் மேலோர் ஆவர். இவர்களினும் மிக்குயர்ந்தோர், அல்லன விலக்கி, ஆம் என்பனவற்றை மட்டும் ஒழுகுவோரே. சகல ஒழுகுகளிலும் வேண்டுதல் வேண்டாமை யென்ற வேறுபாடின்றிப் பிரம்ம ஞானிகளாக விளங்குவோரே ஆகச் சிறந்தவர்.

98. பிராம்மணப் பிறவி யென்பது உண்மையில் தர்மங்களின் வடிவமாக இருப்பது. தர்ம விளக்கத்தைப் புலப்படுத்தா நின்ற பிராம்மணன் ஞானத்தால் முக்தியடைகிருன்.

99. மாந்தரின் சமய சமூக ஒழுக்கங்களை நன்கு புரந்து, நிலை நிறுத்தும் பொருட்டாகவே ஜீவராசிகள் அனைத்தினும் மேலானதொரு தலைமையை அவன் பெற்றிருக்கின்ருன்.

100. பிறவி மேன்மையினுலும், முகத்திலிருந்து உதித்த தகுதியினுலும், படைப்புலகில் காணப்படா

நின்ற சகலத்தையும் தனது செல்வமாகக் கொள்ளத் தக்கவனாக அவன் விளங்குகின்றான்.

101. எனவே அவன் பிறரிடமிருந்து பெறுகின்ற உணவு, உடை, பொருள் யாவும் அவனுடைமையை அவன் பெறுவதாகவும், ஏனையோர் அவனுடைமையைப் பெற்றுய்வோராயு மிருக்கிறார்கள்.

## நூல் பொருள்

102. பிராம்மணன் மற்றையோர் இவர்களுடைய செயற்கடன் முறைகளை அயோனிஜரும் சுவயம்புவுமான மநு இந்தச் சாத்திரத்தில் அறிக்கையிட்டருளினார்.

103. இது, இந்தச் சாத்திரத்தின் பயனறிய வல்ல பிராம்மணனாலே ஓதத்தக்கது. தனது சீடர்களுக்கு முறைப்படி ஓதுவிக்கத் தக்கது. ஏனையோர் இதனை ஓதுதல் கூடாது.

104. விரத அனுஷ்டானங்களுடன் இதனை ஓதும் பிராம்மணன் மனம், மொழி, மெய்களால் எழும் பாவங்களுக்கு ஒருபோதும் இலக்காக மாட்டான்.

105. இதை ஓதுவோன் ஒருவனேயாயினும் ஏழு தலைமுறைகள் முன் பின்னாகத் தன் சந்ததி புனிதமடையச் செய்கிறான். பூமி முழுவதையும் தானம் பெறுகின்ற தகுதி அவனுக்கு ஏற்படுகிறது.

106. புனிதமானதும், புத்தி, புகழ், ஆயுள், மோக்ஷம் தர வல்லதுமாக இந்தச் சாத்திரம் விளங்குகின்றது.

107. இதில் எல்லாத் தர்மங்களும், செயல்களின் குறை குணப்பான்மைகளும், நால் வருணத்திற்கும் பண்டு தொட்டு இருந்து வந்திருக்கிற ஒழுகுகளும் கூறப்பட்டிருக்கிறது.

108. வேதத்திலும், ஸ்மிருதிகளிலும் விவரிக்கப் பெற்ற ஒழுகுகளே இதில் கூறப் பெறுவதால் தனது நல்லாற்றை விரும்புவோன் இதில் ஈடுபட வேண்டியதாகும்.

109. இவ்விதம் அனைவருக்கும் தலைமையாக விளங்கும் பிராம்மணன் ஒருவன் தனது சீலங்களை விட்டு விலகுவானாயின், அவனுக்கு வேதம் வழங்கும் நற்பதம் கிடைக்காது. நெறி பிசகாமல் ஒழுகும் ஒருவனுக்கே எப்பதமும் குறைவறக் கிடைக்கும்.

110. எல்லையில்லாத காலந்தொட்டு வழக்கத்திலும், ஒழுக்கத்திலும் தர்மங்களை உய்த்துணர்ந்த தபஸ்விகள் எல்லாவற்றிற்கும் ஆதாரமாக ஒழுக்கத்தையே கூறுகிறார்கள்.

111. உலகப் படைப்பு, குருகுலக் கல்வியமைப்பு, பிரம்மசாரிகளின் குருகுல வாசம், அது முடிந்த பின்னர் ஒருவன் நடந்து கொள்ள வேண்டிய கட்டுப்பாடுகள் ஆகியவற்றை இந்தச் சாத்திரம் விளக்குகின்றது.

112. விவாஹ முறைகளைப் பொதுவாகவும், பல்வேறு இல்வாழ்க்கை இன்பங்களையும், யாகாதி கர்மங்களையும் இது விவரிக்கிறது.

113. உயிர் வாழ்வின் தேவைகளையும், அவரவர் தேடிப் பெறுகின்ற மார்க்கங்களையும், இல்லறத்தானுடைய ஒழுக்கங்களையும், கொள்ளத் தக்கதும் தள்ள வேண்டியதுமான உணவு நியமங்களையும், ஜனன மரண சம்பவங்களால் மானிடர்க்கு ஏற்படுகின்ற சரீரத் தீட்டுக்களையும், உலோகப் பாத்திரங்களுக்கு ஏற்படுகின்ற அசுத்திகளையும், அவ்வவற்றிற்கான சுத்தீகரிப்புகளையும்,

114. ஸ்திரீ தர்மங்களையும், வானப்பிரஸ்த நியமங்களையும், பிறவியின் மோக்ஷத்துக்கு உபாயமான துறவொழுக்கங்களையும், ராஜ நீதியையும், வாதப் பிரதிவாதங்களில் காண வேண்டிய துணிபுகளையும்,

115. வழக்குகளில் சான்றுகளைச் சோதித்தறிவதையும், தாம்பத்ய வியவகாரங்களில் தீர்வு காணும் சட்டங்

களையும், தாய பாகத் தகராறுகளை முடிவு செய்வதையும், களவுருடலைத் தடுக்க வேண்டியது பற்றியும், குற்றமிழைத் தோரை ஒறுத்தலையும்,

116. வாணிபர், ஏவலர் இவர்களுக்கான கடமைகள், வருணக் கலப்பால் தோன்றிய பற்பல சாதிகளின் உற்பத்தி விளக்கம், யாவருக்கும் நேரிடக் கூடிய ஆபத்து வேளைகளில் அனுசரிக்க வேண்டிய கடமை, உரிமைகள், பாவங்களிலிருந்து மீட்சியுறுவதற்கான பரிகாரங்கள் இவற்றையும்,

117. பிரபஞ்ச வாழ்வில் ஜீவன் ஒரு தேகத்தை விட்டுப் புதிய சரீரங்கள் பலவற்றை எடுப்பதற்குக் காரணமாக விருக்கும் மேல், இடை, கடை (உத்தம, மத்திம, அதம) என்ற முப் பிரிவுகளான தீவினைகளையும், நற்கருமங்கள் நயந்த நல்லின்பத்தையும், நன்று தீதெனப் பகுத்தறிதலையும்,

118. தொன்று தொட்டு நாட்டில் வழக்கமாக வந்திருப்பனவும், பற்பல தேசங்களில், பற்பல சாதியினரால், பற்பல குடும்பங்களால் அனுசரிக்கப்பட்டு வருவனவுமான கோட்பாடுகளையும், வியாபாரிகள், பாஷண்டிகள் ஆகியோரின் நடைமுறைகளையும் இந்த நீதி நூல் விரிவாக விளக்குவதாகும்.

119. மநுவும், எனது வேண்டுகோளின் மீதே, முதலில் இந்தச் சாத்திரத்தை வெளிப்படுத்தினார். அதனைக் கூட்டிக் குறைக்காமல் அப்படியே உங்களுக்கு இதோ நான் கூறுகிறேன்.

**முதல் அத்தியாயம் முற்றும்**

## இரண்டாம் அத்தியாயம்

# கல்வியும் கடமைகளும்

**தோற்றுவாய் :**

1. வேத முணர்ந்த மேலோர் போற்றுவதும், ஜீவர்கள் மோட்ச சுகத்தைப் பெறுவதற்கு ஏற்ற மார்க்கமாக இருப்பதென்று தர்மவான்கள் மதித்து நடப்பதுமான கடமைகளின் ஏற்பாட்டை அறிந்து கொள்வீர்களாக!

2. யாதாமொரு சுய நன்மையைக் கருதி அறத்தாறு ஒழுகல் என்பது போற்றற் குரியதன்று. எனினும் இச்சையை நீக்குதல் என்பது இவ்வுலகில் காண்டலரிது. வேதங்களை ஓதுதலும் அவற்றில் விதிக்கப்பட்ட நல்லொழுக்கங்களைக் கடைப்பிடித்தலும் ஆன்ம லாபத்தைக் கருதியே நடைபெற்று வருகின்றன.

3. நிச்சயமான பலன்கள் கிடைக்குமென்ற நம்பிக்கையில் விளைந்த ஆவலினாலேயே கருமங்களைப் புரிகின்றனர். வேள்விகளும் இது போன்ற லட்சியத்துடனேயே நடைபெறுகின்றன. விரதங்களும், பிராயச்சித்தங்களும் கூட இப்படித்தான்.

4. இச்சையை வென்றவனுக்கு எவ்விதமான செயல்களும் எந்த நாளிலும் விதிக்கப்பட்டிருக்கவில்லை. எனவே செய்யும் செயல்கள் யாதொன்றாயினும் ஆசையின் விளைவாக அவை தோன்றியதாகும்.

5. யாரொருவன் இச்சையின் காரணமாக இன்றி, பற்றற்றுக் கடமை புரிந்து கொண்டிருப்பானோ, அந்த மேலோன் எதையும் வேண்டாதவனே யாயினும், அவனுக்கு நிச்சயமான மோக்ஷ சாம்ராஜ்யம் உண்டு. அவன் எடுத்துள்ள பிறவியிலேயே வேண்டிய வேண்டியாங்கெய்தும் வல்லமையும் அவனைச் சாரும்.

## நான்கு விதிகள்

6. தர்மங்களுக்கு ஆதாரமாக இருப்பவை வேதமும், ஸ்மிருதிகளும், தொன்று தொட்டு வந்த ஒழுக்க மரபும், கவலையற்ற மன நிறைவுமாகும்.

7. மநுவினால் கட்டளையிடப்பட்ட நீதிகள் அனைத்தும் வேதத்தில் விதிக்கப் பட்டவையே. ஏனெனில் அவர் வேதசாரமுணர்ந்த பிரம்ம ஞானி.

8. வேத சத்யத்தை அடிப்படையாகக் கொண்டெழுந்தவையென்று தனது ஞானத்தினால் உணர்ந்து அவ்வறத்தாறு ஒழுகுவோனே உண்மையான கல்விமான்.

9. சுருதி, ஸ்மிருதிகளில் சொல்லப்படா நின்ற அறங்களை மேற்கொண்டு ஒழுகுவோன் யாரோ, அவனே இம்மையில் புகழையும், மறுமையில் அதீதமான சுகத்தையும் பெறுவான்.

10. வேதமே சுருதி யென்றும், அறத் துணிபுகளே ஸ்மிருதி யென்றும் உணர்க. தார்க்கிக உலகியல் அறிவைக் கொண்டு இவற்றைச் சோதித்தறிய முயல்வது கூடாது. ஏனெனில் இவையின்றி ஜீவர்க்குக் கடமைகள் என்பதே இல்லை.

11. இவ்விரண்டையும் தனது நூலறிவினாலும், தர்க்க வாதத் திறமையினாலும் சோதித்துச் சோதித்து அவமதிப்போன் யாராயினும் அவன் நாஸ்திகனாகவும் சமூகத்திலிருந்து விலக்கப்பட வேண்டியவனாகவும் ஆகிறான்.

12. வேதமும், அறநூலும், மேலோர் கடைப்பிடித்த மரபும், ஆத்ம சந்துஷ்டியுமே தர்ம சாஸ்திர விளக்கங்களாக இருப்பனவென்று அறிந்தோர் தெளிவாகக் கூறுகிறார்கள்.

13. விஷய சுகங்களிலிருந்து தன்னை மீட்டுக் கொள்பவனுக்கே தர்மங்கள் பொருந்துவன. அறத்தாறு இனிய

தென்றறிய ஆவலும் சிரத்தையும் உள்ளோருக்கே தெய்வ ஸ்வரூபமான வேதம் பிரமாணமாக நிற்கிறது.

14. தர்மங்களை வகுப்பதில் சுருதியும் ஸ்மிருதியும் ஒன்றுக்கொன்று முரண்படுகின்ற போதும் கூட, இவ்விரண்டிலும் கூறப்படும் தருமங்களையும் அறிஞர் அங்கீகரித்தே விளக்கம் தருகிறார்கள்.

15. வேதப் பிரமாணமான வாக்குகள் இவை:— சூரியன் உதிக்கும் போதும், உதிக்கு முன்னும், சூரியனே தாரகைகளோ இன்றிவானம்சூன்யமான போதும் யக்ஞம் புரிக—எனவே எல்லாக் காலமும் தக்கதே என்கிறது.

16. ஜனனம் முதல் மரண பரியந்தம் வேதமந்திரங்களால் எவனுடைய வாழ்க்கை முழுமையும் நடத்தி வைக்கப் படுமோ, அந்தப் பிராம்மணன் அல்லாத ஏனையோர் இந்த நீதி நூலை ஓதும் அதிகாரம் பெறவில்லை.

17. சரஸ்வதி, திருஷித்துவதி என்னும் தெய்வ நதிகளுக்கிடையில் பரந்து கிடக்கும் பிரதேசத்தைக் கடவுளார் கைக் கொண்டதனாலே அதனைப் "பிரம்மாவர்த்தம்" என்று கூறப்படும்.

18. காலாந்தரத்திலிருந்து தொடர்ந்து வரும் ஒழுக்க மரபுகளெல்லாம், இவ்விடத்திலிருந்தே தோன்றி நால் வருணத்தவர்க்கும், கலப்பால் தோன்றியவர்க்கும் வழி வழியாகக் கிடைக்கிறது.

19 குருக்ஷேத்ரம், மத்ஸ்யம், பாஞ்சாலம், கன்யாகுப்ஜம், சூரசேனம் இவை யாவும் பிரம்மர்ஷி என்னும் பிரதேசத்தைச் சாரும். இது பிரம்மவர்த்தினின்றும் வேறானது.

20. இந்தப் பிரதேசத்தில் தோன்றும் பிராம்மணனிடத்திலிருந்து சகலரும் தத்தமக்குரிய கடமைகளையறிந்து கொள்ளக் கடவர்.

21. விஞசன நதிக்குக் கிழக்கிலும் பிரயாகைக்கு மேற்கிலும் இமயத்திற்கும் விந்திய பர்வதத்திற்கும் இடைப்பட்டது மத்ய தேசமாகும்.

22. மேலே சொன்ன இரு பர்வதங்களுக்கும் இடைப் பட்டுக் கிழக்கிலும் மேற்கிலும் கடல்கள் வரையுள்ள பிரதேசத்தை மேலோரின் வாசஸ்தலம் என்று பொருள் படுகின்ற ஆர்யாவர்த்தம் என்று கூறப்படும்.

23. கிருஷ்ணசாரமென்னும் மான் தன்னியல்பாய்ச் சஞ்சரித்துக் கொண்டிருக்கிற பூப்பிரதேசமே யாகாதி சத் கருமங்களுக்கு உகந்த இடமாகவும் ஏனைய இடங்கள் அநா கரிகமான மொழி பேசும் மிலேச்சர்களின் பிரதேசமாகும்.

24. முதல் மூன்று வருணத்தரும் மேலே சொன்ன திவ்விய தேசங்களிலும், ஏவலரான மற்ருேர் தங்கள் வாழ்வுக்கு ஏற்ற எந்தப் பிரதேசத்திலும் இருக்கக்கடவர்.

25. இவ்விதமாக, படைப்பின் பான்மையையும், தர்ம சாஸ்திரத் தோற்றத்தையும், திவ்விய தேசங்களை யும் உங்களுக்குக் குறிப்பாகக் கூறப்பட்டது. இனி வருணுசிரம தர்மங்களைக் கேட்பீர்களாக.

## குருகுல வாச விதிகள்

26. வேதத்தால் விதக்கப்பட்ட சத் கர்மானுஷ்டங் களிஞல் கருத் தரித்தல் தொடங்கி இம்மையில் பிறவி யைத் தூய்மையுறச் செய்யவும், மறுமை இன்பத்திற்குப் பாத்திரமாகவும் கடவர்.

27. கர்மாதானம், சீமந்தம், சாதகர்மம், பெயரிடல், அன்னப் பிராசனம், சௌளம், உபநயனம் ஆகிய சடங்கு களிஞல், விலக்கப்பட்ட காலங்களில் ஏற்பட்ட கர்ப்ப தோஷம் உதரவாச தோஷம் ஆகியவை நீங்குகின்றன.

28. வேதம் ஓதுதல், புலால் அகற்றிய நோன்புகள் புரிதல், அவி சொரிந்து தீ வளர்த்தல், தேவ ரிஷி பிதுர்

னுக்குத் தர்ப்பணம் செய்தல், சந்தான உற்பத்தி, பஞ்ச மஹா யுக்ஞங்கள், அக்னிஸ்தோமம் முதலான கருமங்களினல் தெய்வ பதம் சித்திக்கிறது.

29. கொப்பூழ் கொடியறுக்கு முன் ஆண் குழந்தைக்குச் செய்யும் சாத கர்மத்தினுல், மந்திர பூர்வமாக நெய்யும் தேனும் பொன்னில் குழைத்து நாவில்தடவவேண்டும்.

30. கர்ப்ப காரணனுன தந்தையானவன், குழந்தை பிறந்த பத்து அல்லது பன்னிரண்டாவது நாளில் நாமகரணம் செய்யக் கடவன். அல்லது வளர்பிறைப்புண்ணிய தினத்தில் நல்லோரை யொன்றில், நன்மீனுலவும் காலில் செய்யலாம்.

31. நாமகரணத்தினுல், பிராம்மணனுக்கு மங்களமும், க்ஷத்திரியனுக்குப் பலமும், வைஸ்யனுக்குத் தனமும், ஏனையோருக்கு அவர்தம் பணியையும் குறிக்கும் பெயர்களை இட வேண்டியது.

32. பிராம்மணனுடைய பெயர் மேன்மையைக் குறிக்கும் சர்மன், க்ஷத்திரியனுக்குப் பலத்தைக் குறிக்கும் வர்மன், வைசியனுக்கு வளத்தைக் குறிக்கும் பூபதி, நாலாமவனுக்குப் பணிவிடையைக் குறிக்கும் தாசன் என்றிவ்வாறு அவரவர் பெயர்களுடன் பட்டங்கள் வழங்கி வர வேண்டியது.

33. பெண் குழந்தைக்கு மதுரமும், லாலித்யமும், தெளிவு, அழகு, மங்கலம் நிறைந்ததும், நெடில் ஈற்றுயும், வாழ்த்தொலிப்பதாயும் உள்ள பெயரிட வேண்டியது.

34. நான்காம் மாதத்தில் குழந்தையை வீட்டுக்கு வெளியே கொண்டு சென்று சூரியனுக்குக் காட்ட வேண்டியது; ஆரு மாதத்தில் அன்னம் ஊட்ட வேண்டியது. அல்லது குடும்ப வழக்கப்படி மூன்ரு மாதம் தொடங்கி இவ்விரண்டினையும் செய்யலாம்.

35. முதல் மூன்று வகுப்பாருக்கும், பிறந்த வருஷத்திலோ மூன்றும் ஆண்டிலோ முறையாகச் சிகை எடுக்க வேண்டியது.

36. பிராம்மணனுக்கு கர்ப்பத்திலிருந்து எட்டு வயதிலும், க்ஷத்திரியனுக்குப் பதினொன்றிலும், வைசியனுக்குப் பன்னிரண்டிலும், தத்தம் வருணத்திற்குத் தக்கவாறு உபநயனம் செய்விக்க வேண்டும்.

37. பிரம்ம தேஜஸை விழையும் பிராம்மணனுக்கு ஐந்து வயதிலும், வீர்யத்தை விரும்பும் க்ஷத்திரியனுக்கு ஆறு வயதிலும், தனத்தைப் பெருக்கும் வாணிபனுக்கு எட்டு வயதிலும் உபநயனம் ஏற்றதாகும்.

38. காயத்ரி உபதேசத்துடன் கூடிய உபநயனம் காலஹரணம் செய்யத் தக்கதன்று. எத்தாலும் மூன்று குலத்தவர்க்கும் முறையே பதினாறு, இருபத்திரண்டு, இருபத்து நான்கு பிராயங்களைத் தாண்டாமலாவது இரண்டாவது பக்ஷமாக அவசியம்.

39. மேற் சொல்லியவாறு உபநயன சம்ஸ்காரம் பெருதவர் காயத்ரி உபதேசம் பெறக்கூடிய அருகதையிழந்தும் வைதிக காரியங்களினின்று விலக்கப்பட்டவர்கள் என்ற கருத்துப்பட விராத்யர்கள் ஆகின்றனர்.

40. இப்படித் தூய்மை யிழந்தவர்களான இவர்களுக்கு வேதம் ஓதுவித்தல் தகாது. கஷ்டம் வந்துற்றபோதும் இவர்களிடமிருந்து பொன், பெண் யாதொன்றையும் பிராம்மணன் கொள்ளல் ஆகாது.

41. மூவருணத்தவரில் பிரம்மசாரிகள் முறையே கறுப்பு மான், புள்ளிமான், வெள்ளாடு இவற்றின் உரிகளை மேலாடையாகவும், சணப்பனார், பட்டு, செம்மறியாட்டின் ரோமம் இவற்றாலானதை அரையாடையாகவும் தரிக்கக் கடவர்.

42. முஞ்சா புல்லினுலும், வின்னுணைப் போன்ற முறுவற் புல்லினுலும், சணப்ப நாரினுலும், இழையெடுத்துப் பின்னி முறுக்கிய மூவட அரைஞாண்களை மூவருணத்தாரும் முறையே இடுப்பில் தரிக்க வேண்டும்.

43. இம் மூன்றும் கிடைக்காதபோது, அவற்றிற்கு மாற்ருக முறையே தருப்பை, நாணல், சவட்டக்கோரை (குசம், அஸ்மாந்தகம், வஸ்வஜம்) இவற்ருல் தயாரித்த மூன்று அல்லது ஐந்து வட அரை ஞாண்கள் ஒற்றை முடிச்சுடன் கட்டியதாக உபயோகிக்கலாகும்.

44. பிராம்மணனுடைய பூணூல் பஞ்சினுலும், க்ஷத்திரியனுக்குச் சணப்பையினுலும், வைசியனுக்கு வெள்ளாட்டு ரோமத்தாலும் நூலிழைத்து மூவடமாகத் தோளில் அணிய வேண்டியது.

45. பிராம்மணன் வில்வம் அல்லது பலாசம்; க்ஷத்ரியன் ஆல் அல்லது கருங்காலி, வைசியன் இரளி அல்லது அத்தி இவற்றில் யாதாமொன்றைத் தண்டமாக ஏந்த வேண்டியது.

46. இந்தக் கோல்கள் மூவருக்கும் முறையே, கால முதல் தலை நெற்றி நாசி அளவாக அமைவனவாகும்.

47. இத்தண்டங்கள் கோணலின்றி, வடுப்படாதனவாய், பார்வைக்குக் கவர்ச்சிகரமானவையாய், எதிர்ப்படுவோருக்கு அச்சம் ஊட்டுவனவாய், அவ்வவற்றின் பட்டைகளுடன் கூடியனவாய், தீயில் வாட்டி யெடுக்கப்பட்டனவாய்த் திகழ வேண்டியன.

48. தண்டேந்திச் சூரிய நமஸ்காரம் செய்த பின் தீயை வலம் புரிந்து விதிப்படி பிக்ஷை ஏற்கச் செல்ல வேண்டியது.

49. பிராம்மண பிரம்மச்சாரி, "பவதி பிக்ஷாந்தேகி" என்றும், க்ஷத்ரியன் "பிக்ஷாம் பவதி தேகி" என்றும், வைசியன் "தேகி பிக்ஷாம் பவதி" என்றும் கூறிப் பிக்ஷை கேட்கவும்.

50. முதலில் தாயிடமும், பின்னர் அவள் உடன் பிறந்தாளிடமும், மற்றும் தனது சகோதரியிடமும், கடைசியாகத் தன்னிடம் பற்றுடைய எந்தப் பெண்ணிட மாவது அவர்களுடைய அன்னத்தைப் பிக்ஷையேற்கக் கடவன்.

51. இவ்விதிப்படி தனக்கு வேண்டிய அன்னத்தைக் குறைந்தது மூவரிடமிருந்து பெற்றுத் தன் குருவுக்குப் படைத்துப் பின்னர் கிழக்கு நோக்கியிருந்து ஆசமநம் செய்து உட்கொள்ள வேண்டியது.

52. கிழக்கு நோக்கி உண்ணலினால் ஆயுளும், தென்றிசை குறித்தலினால் புகழும், மேற்றிசை கண்டருந்தலால் செல்வமும், வடதிசைப் பார்த்துப் புசிப்பதால் சத்யமும் வந்தடைவன.

53. உணவுண்ணும் முன்னர் கைகால் தூய்மை செய்து, முதலில் ஆசமநம் என்னும் சுத்தீகரிப்புச் செய்து, அன்னத்தைச் சுற்றி நீர் விளாவுதலாகிய பரிசேஷனம் செய்து, பின்னரே உண்ணக் கடவன். உணவருந்திய பின்னரும் கண் காது மூக்கு இவற்றைத் துடைத்து ஆசமநத்தால் நீரால் தூய்மையடைக.

54. உண்ணும் உணவனைத்தும் விஷ்ணு வடிவமாதலால் அதனை நிந்தனை செய்யாது போற்றி மகிழ்வுடன் அதனைப் பார்த்துச் சுவைத்துப் புசிக்கத் தக்கதாகும்.

55. சோற்றைச் சுவைத்து மகிழ்வுடன் உட்கொள்வதனால் துணிவு, வலிமை உண்டாகின்றன. வேண்டா வெறுப்புடன் சாப்பிடுவதனால் இவையழிந்து போகின்றன.

56. புசித்து மிகுந்த மிச்சிலை யாருக்கும் இடலாகாது. அல்லும் பகலும் இரு வேளையன்றிப் புசித்தல் தீது. பெருந்திண்டியும், உட்கொள்ளு மிடையில் எழுந்து சென்று மீண்டும் வந்து மிகுதியை உண்பதும் தக்கனவன்று. மிச்சல் கரங்களை நீரால் தூய்து செய்யாமுன்னம் பிறரைக் கண்டாலும் நன்றன்று.

57. பெருந்தீனியினால் நோவும், ஆயுட் குறைவும், சுவர்க்க சுகங்கள் நஷ்டமும், புண்ணியக் குறைவும், லோக நிந்தனையும் உண்டாகும். எனவே பெருந்தீனியை நீக்குக.

58. கரத்தில் நீரேந்தி ஆசமநம் செய்யத்தக்க பாகங்களை யொட்டி தீர்த்தங்கள், பிரம்மதீர்த்தம், காயதீர்த்தம், தேவ தீர்த்தம், பிதுர் தீர்த்தம் என்று வகைப் படுத்தப் பட்டிருக்கின்றனவற்றில் பிராம்மணன் முதல் மூன்றையே அனுசரிக்க வேண்டும்.

59. பெரு விரலின் நடுக் கணுவைக் கொண்டு பயிலும் நீர்த்தூய்மை பிரம்மதீர்த்தம், சுண்டு விரலின் அடிக்கணுப் பகுதியால் இயற்றுவது காயதீர்த்தம், விரல் நுனிகளால் சொரிதல் தேவ தீர்த்தம், பெருவிரல், சுட்டு விரல்களுக்கிடைப்பட்ட விசாலப் பகுதியில் ஏற்பது பிதுர்த் தீர்த்தம் என்பனவாகும்.

60. ஆசமநம் என்பது நீரானமையும் தூய்மை. கரஸ்தானங்கள் வகுத்துரைக்கப்பட்ட முறைப்படி நீரை மந்திரத்துடன் மூன்று தடவை உள்ளே செலுத்திப் பின்னர் நீரால் வாயை இருதரம் துடைத்து மற்றும் கண் காது மூக்கு தோள் மார்பு தலை இவற்றையும் தொட்டுத் துடைப்பதாகும்.

61. அறத்தாறு அறிந்தவனும், தூய் நடை விழைபவனும் சூடேறாததும் நுரை எழாததுமான தெளி நீரால் அந்தரங்கமாகக் கிழக்கு அல்லது வடக்கு நோக்கியிருந்து ஆசமநம் செய்ய வேண்டியது.

62. ஆசமந ஜலமானது உட்கொள்கையில் பிராம்மணன் தனது மார்பு வரையிலும், க்ஷத்திரியன் கழுத்து வரையிலும், வைசியன் உள்நாக்கு வரையிலும் ஏனையோர் நாவினும் உதட்டினும் சென்று ஜலம் படும்படியாக ஆசமநம் செய்தலே தூய்மை.

63. மேலாடை அல்லது பூணூலை இடது தோளில் தொடங்கி வலது கரத்தின் கீழே துவளப் போடுதல் வலம்

அல்லது உபவீதமென்றும், மாற்றிப் போடுதல் இடம் அல்லது பிராசீன வீதியென்றும், கழுத்தில் மாலையாகப் போட்டுக் கொள்ளல் நிவீதமென்றும் குறிக்கப்படுகின் றன.

64. முக்குலப் பிரம்மசாரிகளும் தரித்துக் கொள் கின்ற மிஞ்சி, மேலாடை, தண்டம், பூணூல் ஆகியவை மாசுபட்ட போதும், சேதமாகி விட்டாலும், அவற்றை நீரிற் புதைத்து விட்டுப் பின்னர் மந்திர பூர்வமாகப் புதியவற்றை ஏற்க வேண்டும்.

65. முறையே இவர்கள் பதினாறு, இருபத்திரண்டு, இருபத்து நான்கு பிராயங்களில் கேசாந்தம் என்னும் முடி யெடுக்க வேண்டியது.

66. இத்தகைய சரீர பரிசுத்த கருமங்கள் அனைத்தும் மந்திர பூர்வமாக இல்லாமல் வெறும் சடங்காக மட்டுமே பெண் குழந்தைகளுக்குச் செய்விக்கத் தக்கதாகும்.

67. பெண்களுக்கு விவாகமே உபநயனமாகும். கணவனுக்குப் பணி புரிந்திருத்தலே அவர்களது குருகுல வாசமெனப்படும். இல்லத்தைக் காத்து நடத்துதலே அவர்களுக்கு சமிதா தானமாகும்.

## கற்றுணர்ந்தடங்கல்

68. சரீர மெடுத்த பின்னர், இரண்டாவது பிறப் பைத் தொடங்கி வைப்பதும் புனித மார்க்கத்தில் அவர் களைக் கொண்டு செலுத்துவதுமான உபநயன விதிகளை இவ்வாறாக மேற்கொண்டு அவரவர் நடந்து கொள்ள வேண்டிய முறைமையினைக் கேளுங்கள்.

69. குரு தனது சீடனுக்கும், தந்தை தனது தனயனுக் கும் உபநயனம் செய்வித்து, முதலில் தூய்மையைக் கற்பித்து, நல்லொழுக்கத்தையும், தீ வளர்த்தலையும், வைகறை நண்பகல் அந்திகளில் செய்ய வேண்டிய வந்த னங்களையும் தெரிவிக்க வேண்டியது.

0. வேதமோதும் மாணவன் முறைப்படி ஆசமநம் செய்து, தூய ஆடையுடன், புலன்களைக் கட்டுப் படுத்தி வடக்கு அல்லது கிழக்கு நோக்கியிருந்து கரங்களைக் கட்டிக் கொண்டு வேதமோதுக.

71. வேத போதனைக்கு முன்பும் இறுதியிலும் குருவை வணங்கி யெழுவதும், போதனையை இரு கரமும் கட்டியமர்ந்து கேட்பதும் பிரம்மாஞ்சலி என்பதாகும்.

72. நெடுங் கிடையாக குருவின் முன் விழுந்து தனது இரு கரங்களையும் நீட்டி மாற்றி வைத்து வலக்கரத்தால் குருவின் வலது பாதமும், இடக்கரத்தால் அவரது இடது பாதமும் தீண்டுமாறு வணங்கி எழ வேண்டியது.

73. உபதேசிக்கும் குரு சற்றும் சோம்பலின்றி, பாடம் துவக்கும்போது "துவங்குக" என்றும், முடிந்த போது "நிறுத்துக" என்றும் தப்பாமற் சொல்ல வேண்டியது.

74. வேத மோதத் துவங்குகையிலும் முடிக்கும் போதும் பிராம்மணன் பிரணவ மந்திரத்தை உச்சரிக்கவும். துவங்கும்போது கூறுவிடின் கற்ற வேதம் மறந்து போவதும் இறுதியிற் சொல்லாவிடின் நினைவிற் பதியாமற் போவதும் ஆகிவிடும்.

75. கிழக்கு நோக்கித் தருப்பைகளைப் பரப்பி, அதன் மேல் அமர்ந்து, இரு கரங்களிலும் பவித்ரம் அணிந்து மூன்று பிராணாயாமம் புரிந்து பின்னரே பிரணவத்தை உச்சரிக்கக் கடவன்.

76. பிரம்மாவினால் முறையே மூன்று வேத சாரங்களான அகார, உகார, மாகாரங்களை ஓம் எனும் பிரணவ உறுப்புக்களாகவும், பூர், புவ, சுவர் (பூமி, ஆகாசம், சுவர்க்கம்) என்னும் புனித உச்சரிப்புகளையும் உண்டாக்கினார்.

77. மேலும் 'தத்' என்று தொடங்கும் காயத்ரியின் மூன்றடிகளையும் அவ்வாறே மூன்று வேதங்களினின்றும் வடித்தெடுத்தார்.

78. பிரணவமும், காயத்ரியும், சந்தியா காலங்களில் ஜெபிப்பதனால் மூன்று வேதங்களையும் ஓதிய பலனை பிராம்மணன் பெறுகிறான்.

79. ஊரைத் தாண்டி ஆற்றங் கரையிலோ வனங் களிலோ ஒரு மாத காலம் தினமும் ஆயிர முறை இதைப் பயிலும் பிராம்மணன் பெரும் பாவங்கள் அனைத்திலிருந் தும் பாம்பின் சட்டை கழன்று வருவது போல் நீங்கப் பெறுகின்றான்.

80. ஜெபம், உபநயனம் இவற்றை மேற்கொள்ளாத வர்களாகின்ற மூவருணத்தாரும் மேலோரால் நிந்திக்கப் படுகிறார்கள்.

81. பிரணவத்தையும் மூன்று வியாகிருதிகளையும் தனது அகத்தே கொண்டிலங்கும் காயத்ரி மோக்ஷ சாதன மாகும்.

82. யாரொருவன் மூன்றாண்டுகள் இடையறாது அன்றாடம் சோம்பலின்றி இதனைப் புரிவானோ அவன் காற் றைப்போன்ற லாகவத்துடன் வேண்டிய உருவெடுத்துப் பறந்து செல்லவும், பிரம்ம சாயுச்யம் பெறவும் வல்லவனா கிறான்.

83. பிரணவமாகிய ஓம் எனும் சொல் பரப்பிரும்ம வடிவமாகவும், மூச்சை யடக்கித் தியானித்திருத்தலின் மேலானதென்றும் கூறப்படுகின்றது. எனவே காயத்ரி யின் மிக்கதான யாதொன்றுமில்லை. அதை உச்சரிப்பவன் சத்யத்தையே வாயாரச் சொல்லுகிறவனாகிறபடியினால் அவனுக்கு மோன சாதனை வேண்டியதில்லை.

84. யக்ஞம் யாகம் ஆகிய சாதனைகள்—அவற்றால் பெறுகின்ற வல்லபங்கள் அழிவுறக் கூடுமாகையால்—

அழிவுள்ள தென்றும், ஓம் என்பதே பரப்பிரும்ம ஸ்வரூப மாகி அழிவற்று விளங்குகையால் "அட்சரம்" (அழிவற்றது) என்றும் வேதம் கூறுகின்றது.

85 பரப்பிரம்மத்தின் நாம உச்சாரணம் வேள்விகளைக் காட்டினும் பன்மடங்கு சிறப்புடைத்து. யார் காதிலும் விழாதவாறு உச்சரிப்பது நூறு மடங்கும், உச்சரிப்பானது மானசீகமாக நிகழ்வது ஆயிர மடங்கும் மேன்மையாகும்.

86. மகாயக்ஞங்கள் ஐந்தில் பிரம்மயக்ஞம் தவிர்த்த நான்கும், காயத்ரி மகிமையில் பதினாறில் ஒரு பங்கும் ஆகா.

87 காயத்ரி ஜெபத்தால் பிராம்மணன் மோக்ஷத்தை நிச்சயம் அடைகிறான். அவன் வேறு வேள்விகளைப் புரிந்தாலும் விட்டாலும் ஒன்றே. ஏனெனில் அவனுக்கு அது கடமையாக இருப்பதில்லை. ஜீவர்களுக்கெல்லாம் நண்பனாக, மித்திரனாக விளங்கி நிற்கிறவன் பரம் பொருளில் ஒன்றி நின்று பிராம்மணன் என்ற நேரிய பெயரைப் பெற்று விளங்குகிறான்

88. பாகன் தனது தேர்ப் பரிகளை வசக்கிச் செலுத்துவதே போன்று சப்தாதி அனுபவங்களின் மூலம் விஷய சுகத்தை நாடியலையும் மனக் குதிரையை அடக்கி வசப்படுத்த அறிவுடையோர் முயல வேண்டும்.

89. இந்திரியங்களைப் பதினொன்றாகப் பெரியோர் வகுத்துரைத்த வாய்மையைக் கேளீர்!

90. செவி, தோல், கண், நாக்கு நான்கினையும் தொடர்ந்து ஐந்தாவதாக மூக்கும், ஆசனம், பல்குறி, கை, கால் இவற்றின் மூலமாக வாயுவுடன் ஐந்தும்,

91. இவை முறையே காது முதல் மூக்கு வரை ஞானேந்திரியம் அதாவது அறிவுப் புலன் ஐந்தாகவும், பின் சொன்ன ஆசனம் தொடங்கி வாய் ஈறாக உள்ள

கர்மேந்திரியம், அதாவது செயலுக்குரிய பொருள்கள் ஐந்தாகவும்.

92. இந்தப் பொறி புலன்கள் பத்தினையும் ஏவி நடத்தும் மனதைப் பதினோராவது இந்திரியம் அல்லது கருவியாகவும் கூறப் படுதலினாலே, மனதை அடக்குவதன் மூலம் பொறிபுலன் இயக்கங்களைக் கட்டுப் படுத்திவிட இயலும்.

93. புலனின்ப நாட்டத்தில் தனது பொறிகளைச் செலுத்துவோன் குற்ற மிழைப்போனாகின்றான். அவற்றை இயங்காது நிறுத்தி உள்ளுக்கு இழுத்துக் கொள்ளுவோன் நிறையின்பத்தை அடைய அருகனாவான்.

94. விருப்பங்கள் நிறைவேறுவதனாலே விருப்பம் அடங்கி விடுவதில்லை. நெய் சொரிந்த தீ மேலும் தாவி எழுவதைப் போன்று விருப்பங்கள் விளைவைத் தரும்போதெல்லாம் மேலும் விருப்பம் மண்டி யெழுவதாகும்.

95. போகங்களை மனிதர் அனுபவிப்பதாகவோ அல்லது விட்டொழிப்பதாகவோ இருக்கலாம். தேட்டையை விடத் தியாகம் செய்து விடுவதே எத்தாலும் மிக்க மேன்மையாகும்.

96. உலக இன்பங்களைத் தெளிந்த ஞானத்தால் தான் அடக்கக் கூடுமே யல்லாமல், அவற்றை விட்டு விலகித் தனித்திருப்பதால் மட்டுமே அவற்றை வென்று விட முடியாது.

97. விஷய சுகங்களில் நாட்டமுடைய மனத்தவன் செய்யும் வேதம் ஓதுதலும், தானமும், தவமும், யக்ஞம் முதலிய அனுஷ்டானங்களும் யாதொரு பயனும்கொடா.

98. எவன் மன விருப்பின்படி ஒன்றைக் கண்டும், கேட்டும், தீண்டியும், சுவைத்தும் முகர்ந்தும், இன்பதுன்ப உணர்ச்சிகளைப் பெறுவதில்லையோ, அவனே புலன்களை வென்றோன் ஆகிறான்.

99. யாதொரு பொறிபுலன் வசமாகாது தன்னிச்சைப்படி இயங்கிடினும் அவ்வழியே இல்லிக்குட நீர்போல் ஞானமானது தப்பி ஓடிவிடும்.

100. எனவே பொறிபுலன்களைக் கட்டுப்படுத்தி, மனதையும் வசப்படுத்திக் கொண்டு, தனது சரீரத்தை வருத்தாமல், இம்மை · மறுமைகளுக்கான நல்லாற்றில் நின்று ஒழுக வேண்டும்.

101. வைகறையில் கதிர் உதயம் வரை நின்றும், மாலை சந்தியில் தாரகைகள் வெளிப்படும் வரை அமர்ந்தும் ஜெபிக்க வேண்டும்.

102. இரவிற் செய்த தீச்செயல் விளைவுகள் வைகறையில் நின்றியற்றுவதனாலும், பகல் தேடிய தீவினைப் பயன்கள், மாலையமர்ந்து புரிவதனாலும் நீங்குகின்றன.

103. யாரொருவன் இவ்விதம் இரு வேளையும் ஜெபிக்கவில்லையோ அவன் பிராம்மண பூஜா காரியங்களுக்குத் தகுதியை இழந்தவனாகிறான்.

104. நீர்நிலைகளின் கரையிலோ, நடமாட்டமில்லாத விடத்திலோ ஒரு வழிப்பட்ட மனத்துடன் தினமும் இயற்றத்தக்க பிரம்ம யக்ஞத்தை முடித்து இறுதியில் காயத்ரியும் ஓதுக.

105. வேதாங்கம் பயில்வதும், நாடோறும் செய்யத்தக்க காயத்ரி ஜெபம், பிரம்ம யக்ஞம், ஔபாசனம், வைசுவ தேவம் இவைகளுக்கு ஏற்காத நாட்கள் ஒன்றுமே இல்லை.

106. காயத்ரி முதலானவை பிரம்ம விஷயமான வேள்வியென்றே மதிக்கப் படுவதால் எந்த நாளிற் செய்யினும் நற்பலனேயாகும்.

107. தூய்மை நிறைந்தவனாய் ஓராண்டு முழுமையும் இந்த வழிபாடுகளைச் செய்வோன் எவனோ அவனுடைய

வழிபாட்டினலேயே அவனுடைய பிதுர்க்களுக்குத் திருப்தியைச் செய்கின்ற பால் தயிர் நெய் ஆகியவை சுரக்கின்றன.

108. வேதமோதித் திரும்பும் குருகுல வாச முழுமையும் சமித்தினல் தீயில் ஓமம் செய்வது, அன்ன பிக்ஷையெடுப்பது, தரையிற் படுப்பது, குரு பணிவிடை செய்வது இவற்றை பிரம்மச்சாரி தவருது செய்திருக்க வேண்டியது.

### மாணவர் யார்?

109. குருமகன், ஒரு சாலை மாணவன், அறிவறிந்தவன் தருமம் தெரிந்தவன், ஆசார சீலன், கிராஹ்ய சக்தியுள்ளவன், கொடையாளி, உறவினன், பங்காளி, பொய் பேசாதவன் ஆகிய பதின்மரும் வேதோபதேசம் செய்விக்கத் தக்கவர்கள்.

110. விரும்பிக் கேளாதவனுக்கு அவன் வேண்டாமல் வேதம் சொல்லப் போகலாகாது. முறைப்படி பயிலமாட்டாதவனுக்கும் அவ்வாறே. தருமங்களை நன்கறிந்தோராயினும் ஊமைகளைப் போன்று சஞ்சரிக்க வேண்டும்.

111. முறை பிசகிக் கற்பிப்பதும், கற்பதும் ஆகியவற்றல் ஒருவனுக்கு ஆயுட் குறைவும் இருவரிடையே பகைமையும் உண்டாகின்றன.

112. எவன் குணம், செல்வம் இவற்றில் வறிஞனே அவனுக்குக் கற்பித்தல் களர் நிலத்தில் வித்திட்டது போலாம்.

113. வேத பாரங்கதன், தனது வித்தையை வீணுக்கு வதைவிட, அத்துடன் அவன் மறைந்தும் போகலாம். அதைத் தகுதி பெற்ரேர்க்கு விற்றுப் பிழைக்க வேண்டியதில்லை.

114. வித்தைக்கு அதி தேவதையானது ஓதுவிக்கும் பிராம்மணனிடம் கூறுவதாவது:—

"நான் உன்னிடம் புதையலாக வந்தமைந்துள்ளேன்; பொறாமை யுள்ளவனிடம் என்னைத் தந்து விடாமல் என்னைப் புரந்தாயானால் உனக்கு மிகுந்த பலனைத் தருவேன்."

115. "எந்த மாணவன் தூயவனாகவும், கடமை தவறாதவனாகவும், வித்தையை ஏற்றுக் கொள்கிறவனாகவும், கவனம் நிறைந்தவனாகவும் இருக்கிறான் என்று அறிந்து அவனுக்கு என்னைக் காட்டுவாயாக."

116. குருவுக்குத் தெரியாமல் அவரிடமிருந்து வித்தையைக் கிரகித்துக் கொள்கிறவன் வேதத்தைத் திருடிக் கொண்டவனாகி நரகத்தில் வீழ்ச்சியுறுவான்.

117. தர்க்கம், வேதம், வேதாந்தம் இவைகளை ஓதுவிக்கிற குருவைச் சந்திக்கும் போதெல்லாம் நமஸ்காரம் செய்ய வேண்டும்.

## வழிபடு முறைகள்

118. இச்சைகளின் போக்கில் அலைபவனும், கண்ட உணவுகளைக் கொள்பவனும், தகாதவர்க்கு ஓதுவிப்பவனுமாக இருக்கிற பிராம்மணன் மூன்று வேதங்களையும் முறையே ஓதியவனாயினும் அவனைவிட இச்சைகளை வென்ற பிராம்மணன் காயத்ரியை மட்டும் அறிந்திருந்த போதிலும் சிறந்தவன்.

119. மேலோர் வீற்[illegible]ம் பீடத்திலும், படுக்கையிலும், சிறியோர் அமரவும், சயனிக்கவும் தக்கவரல்லர். பெரியோர் வரும்போது எழுந்து நின்று வணங்குதலே தக்கது.

120. பெரியோர் வரவின் போது எழாமல் அமர்ந்திருப்பதனால் சிறியோரின் பிராண வாயு ஜீவசக்திகள் அவனை விட்டுப் பிரிந்து வெளியேறிச் செல்ல மேலெழுகின்றன. எழுந்து வணங்குவதனால் அவை தம் நிலையில் ஊன்றுகின்றன.

121. பெரியோரைப் போற்றி வணங்குவோனுக்கு ஆயுள், கல்வி, புகழ், வலிமை இவை நான்கும் பெருகு கின்றன.

122. அப்படி வணங்குவோன் தன்னை அறிமுகப் படுத்தும் பொருட்டு தன் குலம், கால்வழி, பெயர் முதலிய வற்றைத் தொகுத்துக் கூறும் வாசகங்களைச் சொல்லி இன்ன நான் வணங்குகிறேன் என்று அறிவித்துக் கொள்ள வேண்டும்.

123. இப்படி வணங்குகையில் சிறியோர் அறிக்கை யிட்டுக் கொள்ளும் மொழியையோ மரபையோ அறி யாத பெரியோர்களிடம் பெயரை மட்டும் சொல்லி வணங்க வேண்டும்.

124. இப்படி வணங்க, வாசகம் கூறி முடிக்கும்போது 'போ' என்ற ஒலியை இறுதியில் இணைத்துக் கூறுக. ஏனெனில், பெயர்களின் உருவத்தை இந்த உச்சரிப்பே நிறைவு செய்கிறதென்று அறிஞர்கள் கூறுகிறார்கள்.

125. வணங்கியவனை "நீண்ட காலம் வாழ்க" என்ற வாழ்த்துரையை அவனுடைய பெயரின் ஈற்றெழுத்தாகிய அகர நெடிலை மூன்று மாத்திரையாக நீட்டி விளித்து வழங்குதல் பெரியோர் கடன்.

126. அப்படி வாழ்த்துரைக்கத் தெரிந்திராத பெரி யோனுக்கு வணங்க வேண்டியதில்லை. ஏனெனில், அவன் தன்மையினால் தாழ்ந்திருப்பவனே யாகிறான்.

127. வணங்கியவன் அந்தணனாயின் "வைதிக கர்மா னுஷ்டானங்கள் நன்கு நிறைவேறி வருகிறதா?" என்றும், க்ஷத்ரியனாயின், "விழுப்புண் படாமல் வாழ்கிறாயா?" என் றும், வாணிபனாயின் "செல்வவளம் நிறைந்திருக்கிறாயா?" என்றும், ஏனையோராயின், "உடல் நலமா?" என்றும் முறையே பொருள் படுகின்றதான குசலம், அனாமயம், க்ஷேமம், ஆரோக்யம் இவற்றை விசாரிக்க வேண்டும்.

128. யாக தீட்சையில் இருப்பவன் வயதிற் சிறியவனாக இருந்த போதிலும் அவனுடைய பெயரை விளித்துக் கூறலாகாது. **போ** என்றும் **பவான்** என்றும் ஒலிக்கிற மரியாதை விகுதிகளை மட்டுமே கூறி விளிக்க வேண்டும்.

129. பிறன்மனையையும், உறவினளல்லாத மாதினையும், பவதி, சுபகே, பகநி என்ற சொற்களைக் கொண்டு முறையே அக்கா, அம்மா, அம்மணி என்று மரியாதையுடன் அழைக்க வேண்டும்.

130. அம்மான்,சிறிய தந்தை, பெரியப்பா, மாமனார், யாக புரோகிதன், குரு ஆகியோர் வருங்கால் எழுந்து முறைப்படி வணங்க வேண்டும்.

131. சிற்றம்மை, அம்மான் மனைவி, மாமி, அத்தை ஆகியோர் குருபத்தினிக்குச் சமதையானவர். இவர்களைக் குரு பத்தினியைப் போல் போற்ற வேண்டும்.

132. தனது ஜாதியிலேயிருந்து பெண் எடுக்கப்பட்டவளான அண்ணியை நாடோறும் வணங்க வேண்டும். பங்காளி, சம்பந்தி இவர்களின் மனைவிகள் அவர்கள்ஊருக்குப் போய்த் திரும்பும்போது மட்டும் வணங்கவேண்டும்.

133. தந்தையின் மூத்த சகோதரி, தாயுடன் பிறந்த மாதர் இவர்களைத் தாய் போல் மதித்துப் போற்ற வேண்டும். எனினும் தாய் இவர்களிலும் மேலானவள்.

134. ஒரே ஊர்வாசிகளாக இருப்போர், பத்து வயது மூத்தவனோடும், கலைகள் அறிந்த ஐந்து வயது பெரியவனோடும், வேதமறிந்த மூன்று வயது முன் பிறந்தவனோடும் பங்காளியான சற்று முதியவனோடும் நட்புறவு பூணத்தக்கதாகும்.

135. பத்தே வயதுடையவனாயினும் அந்தணன் தந்தைக்குச் சமமாகவும், நூறு வயதாகிய க்ஷத்திரியனைப் பிள்ளையாகவும் மதிக்க வேண்டும்.

136. அறத்தால் ஈட்டிய பொருள், தந்தையின் உடன் பிறந்தார், வயதின் மூப்பு, நல்லொழுக்கம், கல்வி இவ்வைந்தும் மரியாதை பெற ஒருவனுக்குத் தகுதியைத் தருவன. இவை முறையே ஒன்றை ஒன்று விஞ்சியது.

137. மூவருணத்தாரிலும் உள்ளவர்களில் இரண்டு மூன்று தன்மைகளைப் பெற்ற யாரையும், ஒன்றை மாத்திரம் பெற்றோர் பூஜிக்க வேண்டியது. தொண்ணூறு வயது முதிர்ந்த நாலாம் வருணத்தவனை எல்லோருமே பூஜிக்க வேண்டியது.

138. வாகனங்களில் இவர்ந்து வருவோன், தொண்ணூறு வயதின் மூத்தோன், நோயாளி, சுமைதூக்கி வருவோன், மாதர், அனுஷ்டானம் நிறைந்த அந்தணன், மன்னவன், திருமண மாப்பிள்ளை இவர்களுக்கு வழிவிட்டு நிற்க வேண்டும்.

139. இவர்கள் கூட்டமாக வருங்கால், அரசனுக்கும் அந்தணனுக்கும் முதலில் வழி விடுக. அவ்விருவர் மட்டுமே வருவராயின் அந்தணனுக்கே முதலில் வழிவிடுக.

## நல்லாசிரியர்

140. உபநயனம் செய்வித்து, மந்திரங்களையும், வேதத்தையும் ஓதுவிக்கிறவன் யாரோ அவனே ஆசாரியன் ஆகிறான்.

141. இவற்றைப் பொருள் பெற்றுக் கொண்டு செய்விப்பவன் உபாத்யாயன் ஆவான்.

142. கெர்ப்பாதான முதலியவற்றையும் பிழைக்கும் வழியையும் கற்பிப்பவன் குரு.

143. தன்னை வந்து பிறர் விரும்பிக் கேட்டுக்கொண்டதற்கிணங்கி, தீ வளர்த்தலையும், வேள்விகளையும் எவன் செய்விக்கிறானோ அவன் "ரித்விக்" எனப்படுகிறான்.

144. ஒலி குறையாமல் சுருதிமொழிகளை உச்சரிப்பதனுல் பிறருடைய செவிகள் அவற்றை முழுமையும் நுகர்ந்து நிறைவுறச் செய்பவன், தாய் தந்தைக்கு இணையானவன். அவனுக்கு என்றும் இரண்டகம் நினைத்தலாகாது.

145. உபாத்யாயனைவிட ஆசார்யன் பத்து மடங்கும், அவனைவிட தனக்கு உபநயனம் முதலிய சமஸ்காரங்களைச் செய்வித்த தந்தை நூறு மடங்கும், அவனைவிடத் தாய் தனது தாய்மையால் ஆயிரம் மடங்கும் உயர்ந்தவர்.

146. தந்தையைவிட இரண்டாவது பிறப்பாகிய உபநயனம் செய்வித்த ஆசார்யன் உயர்வு. ஏனெனில், இவ்விரண்டாவது பிறப்பு இம்மை மறுமைக்கு ஏற்ற அழியாத் தன்மையுடையது.

147. தாய் தந்தையின் கலப்பால் எடுக்கும் உடற்பிறவி வெறும் விலங்குத் தன்மையுடையதே.

148. பிரம்ம உபதேசத்தால் பெறும் இரண்டாவது பிறப்பே அழிவற்ற, மூப்பற்ற தன்மைகளையும், புண்ணிய லோக வாழ்வும் தருவது.

149. சாத்திர விஷயமாகக் கூடவோ குறையவோ துணை புரிவோன் குருவென்றே அறிய வேண்டும்.

150. இரண்டாவது பிறப்பைத் தருவோனும், வேத நீதிப்படி தனக்கேற்ற அறத்தாற்றினை உணர்த்துவோனும், தன்னிலும் சிறியோனெனினும், அவன் தந்தைக்கு நிகராகிறுன்.

151. மகனுகவும் வித்வானுகவும் இருந்த அங்கீரசன் என்பான் தனது தந்தை முதலிய பிதுர்க்களுக்கு வேதம் கற்பித்தான். அப்பொழுது தனது ஞானத்தினுல் அவர்களைச் சீடர்கள் என்று கொண்டு "பிள்ளைகாள்" என்று விளித்ததே சான்று.

152. அந்தப் பிதுர்க்கள் இதனுல் கோபம் கொண்டு, இப்படி அவன் அழைத்தமை பற்றித் தேவர்களிடம் குறையிரந்தார்கள். தேவ சபையில் அங்கீரசன் விளித்ததே சரியென்று துணிபு கூறி விளக்கினுர்கள்.

153. அறிவிலான் பிள்ளையாகவும் அறிஞன் தந்தையாகவும் கருதப்பட வேண்டும். இதுவே சாத்திர சம்மதமானது. மேலோர் கருத்தும் இதுவேயாகும்.

154. வயது, நரை, பொருள், உறவு முறை இவற்ருல் மட்டுமே ஒருவன் பெரியவனுகான். நம்மிலும் மிக்கறிந்தோனே மூத்தோன் என்று முனிவர்கள் தருமம் வகுத்தனர்.

155. அந்தணர் ஞானத்தாலும், அரசர் வீரத்தாலும்* வாணிபர் தன தான்யத்தாலும், ஏனேயோர் வயதினுலும் மேன்மை பொருந்துகிருர்கள்.

156. நரையினுல் மூத்தவனுயிருப்போனேவிட, வேதப் பொருள் உணர்ந்த வயதிற் சிறியவனே மூத்தோனுவான் என்று தேவர்கள் முடிவு கூறினுர்கள்.

157. மர யானே, தோல் மிருகம், வேதம் ஓதாத அந்தணன் இவர் மூவரும் பெயரளவுக்கேயன்றிப் பயன் பட மாட்டார்கள்.

158. மாதரிடம் பேடியும், பசுவினிடம் பசுவும், பாத்திர மல்லாதவனுக்குக் கொடுத்த பிச்சையும் போன்று வேதமறியாத பிராம்மணனும் பயனற்றவனே.

159. அறம் அறிந்த அந்தணன் நல்லொழுக்கங்களேக் கற்பிக்கும் காலேயில், பிரம்பு போன்றவற்ருல் மாணவரை அதிகம் அடிக்காமல் கற்பிக்க வேண்டும். கொடிய சொற்களேக் கூருமல் தாய்மையின் பரிவுடன் பேச வேண்டியது.

160. மனம், மொழிகளால் பொய் கூருமல், விருப்பு வெறுப்பைக் கொள்ளாமல், தூய்மையுடன் அடங்கி நிற்போன் வேதம் விதித்த மேன்மைகளே அடைவான்.

161. தான் துயருற்ற போதும், பிறர் நோகப் பேசலாகாது. எண்ணத்தாலும் செயலாலும் வஞ்சிக்கலாகாது. தீய மொழிகளைக் கூறினால் பேரின்ப நிலையை அடைய மாட்டான்.

162. தான் பெறுகின்ற போற்றுதலை அந்தணன் நஞ்சைப் போல் கருதி அஞ்சுக. வந்தடையும் சிறுமையை அமுதமாகக் கொள்க.

163. பிறரால் அவமதிக்கப்பட்டபோதும் பாதிக்கப் படாமல் நிற்பவன் சுகமாகத் தூங்கி யெழுவான். தடையின்றி எங்கும் திரிகிறான். அவனை அவமதித்தவனே தானே அழிவுறுகிறான்.

164. இதுவரை நான் கூறிவந்த சம்ஸ்காரங்களினால் தூய்மையுற்றோன் குருவினிடம் உடன்வதிந்து விரைவின்றி வேதத்தை முறையாக ஓதுவானாக.

165. வேதத்தில் கூறுநின்ற பற்பல ஒழுக்கங்களாலும், அன்ன பிட்சை போன்ற நோன்புகளாலும், தூய்மையுற்றவன் வேத வேதாந்தங்களை ஓத வேண்டுவது.

166. தவத்தில் நாட்டமுள்ள இரு பிறப்பாளன் வேதத்தை அத்யயனம் செய்ய வேண்டியது. அதனிற் சிறந்த தவமில்லை.

167. சக்திக்குத்தக, அன்றாடம் நான்கு வேத வாக்கியங்களையேனும் கூறுவோன் தலை முதல் கால்வரை தவம் செய்தவனாகிறான்.

168. வேதத்தை விட்டு, பொருளியல் போன்ற சாத்திரங்களில் முயல்பவன், தனது வாழ்நாளிலேயே தனது குலத்துடன் நாலாவது வருணத்தவனாகி விடுகிறான்.

169. துவிஜனுக்கு முதல் பிறப்பு தாயாலும், இரண்டாவது உபநயனத்தாலும், மூன்றாவது வேள்வி முயல்வதாலும் உண்டாகிறதென்று வேதம் கூறுகிறது.

170. புனிதமான நூல் அணிவதனாலான இரண்டாவது பிறப்பில் ஒருவனுக்குத் தாயாகக் காயத்ரியும் தந்தையாக ஆசார்யனும் விளங்குகிறார்கள்.

171. வேதம் ஓதுவிக்கும் ஆசார்யன் ஒரு தந்தையே யாகிறான். உபநயனம் செய்து கொண்டு வேதம் ஓதாம லிருப்பவன் நற்கிரியைகளுக்கு அருகதை யற்றவன்.

172. உபநயனம் ஆவதற்கு முன்பு இவனும் நாலாம் வருணத்தவனே. எனினும் அக்காலத்தில் தாய் தந்தையர்களுள் பிதுர்க் கர்மம் செய்ய நேரும்போது மட்டும் வேண்டிய மந்திரம் ஓதலாகும்.

173. தீயில் சமித்துட்டுச் செய்யும் ஓமம் முதலிய நோன்புகளும், வேதம் முறையாகப் பயிலலும், ஆகிய பயிற்சிகள் உபநயனம் ஆனபிறகே ஒருவன் செய்யத்தகும்.

174. முன்னர் விதிக்கப்பட்ட முறைப்படி அவரவர் தமக்கேயுரிய உரி, பூணூல், மிஞ்சி, தண்டம், உடை இவற்றை நோன்புகளின்போதும் தரித்திருக்கவேண்டியது.

## குரு பக்தி

175. குருகுல வாசத்தில் புலனடக்கி, மறுமையின்பத் திற்குரிய தவ முயற்சிக்கான பின்வருவனவற்றை நோற்று இருக்க வேண்டும்.

176. வைகறையில் ஆற்று நீராடித் தூய்மையுற்று, தேவருஷி பிதுர்த் தர்ப்பணம் புரிந்து, தனது வழிபாட்டுக் குரிய தெய்வம் துதித்து இரு வேளையும் தீ வளர்க்க வேண்டியது.

177. தேன், புலை, சந்தனம், மலர், இனிப்பு, பெண் தயிர், பால், நெய், மோர், உயிர்க் கொலை

178. எண்ணெய் முழுக்கு, கண்ணுக்கு மையெழுதல், செருப்பு, குடை, காமம், குரோதம், கூத்து, பாட்டு—

179. கவருடல், வம்பளத்தல், பழித்தல், பொய்கூறல், பெண்களை விருப்பமுடன் நோக்கல், பிறருக்கு இரண்டகம் எண்ணுதல், இவ்வனைத்தும் நீக்கத் தக்கவை.

180. பிரம்மசாரி தனியாகப் படுக்க வேண்டும். காம இச்சையினால் வீர்ய விசர்ஜனம் கூடாது. செய்யின் நோன்பு முறிந்துபோம்.

181. காம எண்ணம் இன்றியே கனவொழுக்கு நேருமாயின் வைகறையில் நீராடிச் சூரியனை வணங்கி, "புநகர்" என்ற மந்திரச் சொல்லை மும்முறையிடவும்.

182. நீர், தேவ பூசைக்கான மலர், சாணம், மண், தருப்பை ஆகியவற்றைக் குருவுக்குத் தேடிக் கொடுத்துப் பின் நாடொறும் பிக்ஷையெடுத்து உண்ண வேண்டும்.

183. வேதம், தீ வளர்த்தல், சந்தியாவந்தனம் ஆகிய ஒழுக்கங்களைப் புரியும் இல்வாழ்வான் வீட்டில், பிரம்ம சாரி பிக்ஷை ஏற்க வேண்டியது.

184. குருவின் இல்லத்தும், அவர்தம் குலத்தார் உறவினரிடத்தும் பிக்ஷை ஏற்கலாகாது. வேற்றூர் யாருமில்லா தொழிந்த விடத்தே மட்டும் முறையே, குருவின் உற்றோர், தாயத்தார், பின்னர் குருவினில்லத்தும் பிக்ஷை ஏற்கலாம்.

185. நற்கரும ஒழுக்கங்கள் இயற்றுவோரே இல்லா விடங்களில் ஊர்முழுவதும் மௌனமாகத் திரிந்து, பெரும் பாவிகளல்லாதவர் வீடுகளாகப் பார்த்து அந்தணரிடம் பிக்ஷை ஏற்கவும்.

186. காட்டில் தேடிக் கொணர்ந்த சமித்துக்களைக் கரங்களில் ஏந்தியவாறே வெயிலிலும், இயலாது போனால், இறப்பிலேனும் உலர்த்தவும். அவற்றைக் காலை மாலைகளில் தீயிலிட்டுச் செய்யும் வழிபாடே சமிதாதாரம்.

187. நோயுற்ற காலை, தொடர்ந்து ஏழுநாட்கள், பிட்சையும், சமிதாதாரமும் செய்யா தொழிவோன்

நோன்பை முறித்தவனாவான். அதற்குத் தீர்வாக இதன் பின்னால் பதினோராம் அத்தியாயத்திற் கூறப்படும் அவகீர்ணி நோன்பை நோற்க வேண்டியது.

188. பிக்ஷை ஏற்றன்றிப் பிறருடைய அன்னத்தைப் பிரம்மசாரி உட்கொள்ளலாகாது. பிக்ஷை யெடுத்துப் புசிப்பதே, பிரம்மசாரிக்கு உண்ணா நோன்பாகும்.

189. வேள்வி, தென் புலத்தார் கடன் போன்ற நிகழ்ச்சிகளின்போது ஒருவனால் விருந்துக்கு அழைக்கப் பட்டால், புலால், கள் இவற்றைத் தவிர்த்து, முனிவர் களைப் போன்று தனது நியமப்படி சென்றுண்ணலாம்; இதனால் விரதபங்கம் நேரிடுவதில்லை.

190. இப்படிப் புசிப்பதும் பிரம்மசாரியல்லாத மற்ற வர்க்கு ஏற்றதன்று.

191. வேதம் ஓதுதலிலும், குரு வழிபாட்டிலும், குருவின் கட்டளை யிருந்தாலும் இல்லா விட்டாலும், மாணவர் தானே முயன்றிருக்க வேண்டும்.

192. உடம்பு, வாய், புத்தி, புலன்கள், மனம் இவற்றை அடக்கிக் கூப்பிய கையுடன் குருவின் எதிரே அவர் திருமுகம் பார்த்து நிற்க வேண்டும்.

193. மேலாடைக்கு வெளியே வலக்கரம் தெரிய வேண்டும். அதாவது போர்த்துக் கொள்ளாமல் இருக்க வேண்டும். அமருமாறு குரு பணித்தால், மறைக்க வேண்டிய உறுப்புக்களை ஆடையால் மறைத்து அடக்க மாய் அவர் எதிரே தூயனாய் அமர்ந்திருக்கவும்.

194. குருகுல வாசத்தில் சுவை தேடித் தின்பதும், அலங்காரமாக உடுத்துவதும் கூடாது. வைகறையில் அவர் எழுமுன் தானெழுந்து, இரவில் அவர் உறங்கியபின் உறங்குக.

195. குருவின் கட்டளையை—படுத்து, இருந்து, சாப்பிட்டுக் கொண்டு, நடந்து கொண்டு, கவனக் குறைவாய், இப்படியெல்லாம் இருந்து பெறக் கூடாது. மறுமொழி கூறுதலும் ஆகாது.

196. அவர் அமர்ந்திருக்கையில் தான் நின்றுகொண்டும், அவர் நிற்கும போது அருகில் தான் நின்றும், தன்னை அணுகிவந்து கூறுகையில் தான் எதிர்கொண்டும், அவர்செல்லும்போது பின்தொடர்ந்து ஓடிக்கொண்டும்—

197. வேறு கவனமாக அவர் இருக்கும் போது, எதிரில் நின்றும், தொலைவில் இருக்கும்போது அருகு சென்றும், படுத்துக் கொண்டிருக்கும்போது வணங்கி நின்றும் அவர் தரும் கட்டளையைக் கேட்கவும், விடை பகரவும் செய்க.

198. குருவின் ஆசனம் படுக்கை இவற்றை விடத் தன்னுடையவை தாழ்ந்திருக்க வேண்டும். அவர் பார்வையில் படுமாறு தன் விருப்பப்படி ஆசனத்தில் அமரக் கூடாது.

199. அவரில்லாவிடத்துப் பெயரை உச்சரிக்கவும், உபாத்தியாயர் என்ற மரியாதைச் சொல்லன்றியும் சொல்லற்க. அவரைப் போல நடந்தும், பேசியும், செய்தும் பரிகசிக்கக் கூடாது.

200. குருவைப் பற்றி அபவாதமோ அவரது நடத்தையைப் பற்றிய கண்டனமோ நடைபெறுகின்ற எந்த இடத்திலும் மாணவன் தன் காதுகளை மூடிக் கொள்ளவோ, அல்லது அவ்விடத்தினின்றும் அகன்று விடவோ வேண்டும்.

201. உண்மையாகவே இருந்த போதிலும் குருவின் பிழைகளை எடுத்துக் காட்டி விமரிசிப்பவன் கழுதையாகப் பிறப்பான். பிழைகளை வேண்டுமென்றே கற்பித்துக் காட்டுபவன் நாயாகவும், அவரது உடைமைகளை அனுமதியின்றி அனுபவிப்பவன் புழுவாகவும், பொறுமைப்படுகிறவன் நீண்ட வால்பூச்சியாகவும் தான் பிறவியெடுப்பான்.

202. தான் ஒதுங்கி நின்று கொண்டு பிறனை ஏவிக் குருவுக்குப் பணிவிடை செய்வித்தல் கூடாது. தான் சின முற்றிருக்கும் போதும, மனைவியுடன் குரு தனித்திருக்கும் போதும், அருகு சென்று வணங்கலாகாது. தான் வாகனங்களிலிருந்தால் இறங்கிச் சென்று வணங்க வேண்டும்.

203. எதிர்க் காற்றிலோ, பின்னிருந்து வீசும் காற்று வாக்கிலோ குருவின் முன் அமர்தலாகாது. அவர் கேளா திருக்கையில் எதுவும் வலிய உரைத்தலாகாது.

204. மாடு, குதிரை, பூட்டிய வண்டிகள், ஒட்டகை, உப்பரிகை, படிகள், பலகை, ஓடம் இவற்றில் குருவுடன் ஒருங்கே ஒருவன் அமர்ந்திருக்கலாம்.

205. தனது குருவிற்குக் குருவானவர் எழுந்தருளும் போது அவரையும் குருவாகப் போற்றுகை நன்று. குரு குலத்தில் வசிக்கும்போது தனது தாய் தந்தையர் வரினும் குருவின் அனுமதியின்றி அவர்களை வணங்கக் கூடாது.

206. வித்யா குரு, சடங்குகள் செய்விக்கும் உபாத்தி யாயர், பெரியப்பன், மறத்தினின்றும் தன்னைத் தடுத் தோர், அறத்தை அறிவுறுத்தியோர் இவரை ஆசார்யனைப் போன்றே மதிக்க வேண்டும்.

207. கல்வி, தவம் இவற்றால் மேன்மையுற்றும், தன் வருணத்தில் வந்த மாதினிடமாகப் பிறந்தும், இருக்கிற குரு புத்திரர்கள், அவர்தம் தாயத்தார், இவரிடத்தும் குரு மரியாதை செய்யத் தக்கது.

208. சிறியவன், ஒத்த வயதினன், முன் தனது மாண வனாய் இருந்தவன், இவ்விதம் ஒருவன் இருந்தவனாயினும், வேத முற்றும் ஓதியவனாகவோ, குரு மகனாகவோ அவன் விளங்குவானாயின், தான் யக்ஞங்களைப் புரிந்து கொண்டி ருக்கையில் வருவானாயின் அவனுக்கு குரு மரியாதையே காட்ட வேண்டும்.

209 குருவைப் போல் மதிக்க வேண்டுமென்றாலும், குரு மகனுக்கு உடலைத் தேய்த்தல், எண்ணெய் முழுக்காட்டுதல், அவனது மிச்சிலை உண்ணல், கால் கழுவுதல் இவற்றைச் செய்யற்க

210. குரு பத்தினியானவள் தன் வருணத்தினளாயின் குருவுடன் அவள் எழுந்தருளும்போது, குருவுக்குச் செய்யும் அனைத்து மரியாதைகளையும் அவளுக்குச் செய்யலாம். அவள் வேற்று வருணத்தினளாயின் எழுந்து வணக்கங் கூறுவது மட்டுமே போதுமானது.

211. குரு மனைவிக்கு எண்ணெய் முழுக்காட்டல், உடம்பு தேய்த்தல், தலை கோதி விடுதல் கூடாது.

212. குரு மனைவி வாலையாக இருப்பின், இருபது வயதுடையவனும், குணதோஷப் பகுத்தறிவுடையவனும், அறிஞனுமாயுமிருக்கும் சீடன் அவளை நமஸ்கரிக்கும்போது அவளது கால்களைத் தொடக்கூடாது.

213. தங்கள் அலங்காரத்தில் மனிதரைக் கவரும் தன்மை பெண்களின் இயல்பாகையால் அறிந்தோர் பெண்களிடம் கவனக்குறைவாக நடந்து கொள்ளமாட்டார்கள்.

214. புலன்களை அடக்கியவனாயினும், அறிவிலியாயினும், அவர்களைத் தங்களது தொடர்பால் காமக் குரோத முள்ளவனாகச் செய்வர் மாதர்.

215. தாய், தங்கை, மகள் ஆகியோராயினும், அவர்களுடன் தனித்து ஒன்றியமாகக் கூடாது. ஏனெனில், பொறி புலன்களின் கூட்டமானது தம் வழியே செயற்படுவதில் ஊக்கமுடையன. தெரிந்தவனையும் அவை தம்பால் அடிமைப் படுத்தி விடும.

216. குருவின் மனைவிமாரும் தானும் யௌவன பருவத்தினராக இருப்பின் அவர் கால்களைத் தொடாமலேதான் வணங்க வேண்டும்.

217. ஊரிலிருக்கும் போதும், வெளியூர் சென்று திரும்பிய போதும், என்றும், வயதில் முதிர்ந்த குருவின் மனைவியரைக் காலைத் தொட்டு நமஸ்கரித்தல் கடமையென்று பெரியோர் வகுத்தனர்.

218. மண் வெட்டியால் தோண்ட நீர் ஊற்றெழுவது போன்று, தனது வழிபாட்டாலேயே ஒருவன் குருவினிடமிருந்து வித்தையைப் பெறுகிறுன்.

219. பிரம்மசாரி தலையைச் சடை பின்னிக் கொள்ளவோ, முண்டிதம் ஆக்கிக் கொள்ளவோ செய்யலாம். குடுமி வைத்துச் சடை பின்னிக் கொண்டு மற்ற இடத்தைச் சவரம் பண்ணிக் கொள்ளலாம். இத்தகைய பிரம்ம சாரிகள் கதிர் உதயம், மறைவுகளில் தூங்கக் கூடாது.

220. விரும்பியோ, தன்னை அறியாமலோ, உதயத்தில் தூங்கிஞல், அற்றைப் பகலிலும், மாலையில் தூங்கி விட்டால், அற்றை இரவும்காயத்ரி ஜெபத்துடன் உண்ணு நோன்பிருக்க வேண்டியதே கழுவாய்.

221. அப்படிக் கழுவாயியற்று தொழியின், பெரும் பாவினாகி நரகத்தி லிடர்படக் கடவர்.

222. எனவே இவ்விரண்டு சந்தியிலும் தூங்கி விடாமல் எச்சரிக்கையாக ஆசமநஞ் செய்து நீர் சொரிந்து வணங்கி, தூய இடத்திலமர்ந்து ஜெபித்து சூரிய நமஸ்காரமும் செய்க.

223. நற்செயல்களை மாதரோ, நாலாம் வருணத்தவரோ செய்தாலும், அத்தகைய நற்செய்கைகளையும், தனது மனதுக் கிசைந்த நற்கருமங்களையும் அறத்திற்கு மாருது ஒருவன் மேற்கொள்ளலாம்.

224. விருப்பத்திற்குக் காரணமாக விருக்கும் அறம் பொருளை மேலென்றும், சுகத்திற்குக் காரணமான பொருளும் விருப்பமுமே சிறப்பென்றும், பொருளுக்கும் விருப்புக்கும் காரணமாக விருக்கும் அறமே உயர்வென்றும், அறம் விருப்பு இவற்றை விளைக்கும் பொருளே மேலென்றும், பற்

பலவிதமாகச் சொல்லுகிருர்கள். அறம் பொருள் விருப்பு (காமம்) இவை ஒன்றுக்கொன்று முரண்படாவாறு ஒன்றியிருத்தலே சிறப்பென்று நான் கூறுகின்றேன்.

225. ஞானம் உணர்த்துகின்ற ஆசாரியன் இறைவனுகு மென்றும், பிறவிக்குக் காரணனுயிருக்கும் தந்தை பிரம்மா வென்றும், தன்னைச் சூல் கொண்டு ஈத்த தாய் பூமித் தேவி யென்றும், உடன் பிறந்தோன் தானே யென்றும் கொள்ளத் தக்கவர்.

226. ஆசாரியன், தாய், அண்ணன் இவர்களைத்தான் துன்புற்றிருக்கும் காலத்திலும் அவமதிக்கலாகாது. அதிலும் பிராம்மணன் ஒருக்காலும் செய்யக் கூடாது.

227. மாதா பிதாக்கள், தன்னை ஈன்றெடுத்து, கல்வி பயிற்றும்வரை மேற்கொள்ளும் பாடுகளுக்கு எத்தனை பிறவி யெடுத்தாலும் நன்றிக் கடன் தீர்க்க யாராலும் முடியாது.

228. தாய் தந்தை ஆசார்யன் இவர்களின் விருப்பின்படியே என்றும் நடந்து கொள்ள வேண்டும். அவர்களது மகிழ்ச்சியினுல் மட்டுமே எல்லாத் தவங்களும் பலிக்கும்.

229. அம்மூவரையும் வழிபடுவதே சிறந்த தவமாகும். எனவே எந்த தருமத்தையும் அவர்களனுமதியின்றி மேற் கொள்ளலாகாது.

230. அம்மூவருமே மூவுலகமாகவும், மூன்று வாழ்வொழுக்கங்களாகவும் (ஆசிரமம்), மூவேதங்களாகவும், முத்தீயாகவும் திகழ்கின்றனர்.

231. தகப்பன் கார்ஹஸ் பத்யக்நியாகவும், தாய் தட்சிணுக்நியாகவும், ஆசாரியன் ஆகவநீயாக்நியாகவும், திரோத்கிநியை விடச் சிறந்து விளங்குகின்றனர்.

232. மூவரிடமும் பக்தி யுடையோன் மூவுலகம் வென்று, சூரியாதி தேவர்களைப் போல் ஒளிர்கின்ருன்.

233. தாயிடம் பக்தியால் இம்மை யின்பமும், பிதுர் பக்தியால் மறுமை யின்பமும், ஆசார்ய பக்தியா. பிரம்ம லோகமும் வாய்ப்பன.

234. மூவரும் எவனுலாதரிக்கப் படுவார்களோ அவனுக்கே சகல தர்மங்களும் பலிக்கும். எவனுல் அனுதரவு செய்யப் படுகிருர்களோ அவனியற்றும் அறங்கள் பலன் தருவதில்லை.

235. இம் மூவரும் உயிர் வாழ்கையில் வேறு தர்மங்களில் நாட்டமின்றி அவர்களின் வழிபாடே அன்புடன் பேணத் தக்கது.

236. அவர்களின் பணிவிடைக்கு இடையூறின்றி, அவர்கள் அனுமதியுடன், தனது மறுமை யின்புக் குரிய யாதொரு கடமையும் மேற் கொள்ளலாம் அதை இயற்றிய பின்னர் அவர்களுக்கு அறிவிக்க வேண்டியது.

237. இவர்களின் பணிவிடையே மேலானதென்றும், ஏனைய இரண்டாம் தரமென்றும் கூறப்படுகின்றன.

238. மேலான அறிவை நாலாம் வருணத்தானிடமிருந்தும், மோக்ஷ மார்க்கத்தைச் சண்டாளனிடத்திலிருந்தும், நற்குணப் பெண்மணியைத் தாழ்ந்த குலத்திருந்தும்கூட ஒருவன் கொள்ளலாம்.

239. விஷத்திலிருந்தும் அமுதத்தையும், சிறுவனிடமிருந்தும நல்ல கருத்தையும், பகைவனிடமிருந்தும் நல்லொழுக்கத்தையும், மலத்திலிருந்தும் பொன்னையும் பெறலாம்.

240. மாதர்கள், நவமணிகள், கல்வி, அறம் ஒழுக்கம், நன்மொழி, பற்பல கலைகள் இவற்றை எவ்விடத்திருந்தும் பெற்றுக் கொள்ளலாம்.

241. பிராம்மணனில்லாவிடத்து, க்ஷத்திரிய வைசியரிடமிருந்தும் வேதம் கற்கலாம். அது முடிகிற வரையில் அவர்களைக் குருவாகப் பேண வேண்டும்.

242. மோக்ஷ நாட்டமுள்ள பிரம்மசாரி, க்ஷத்திரிய வைசிய குருவினிடமோ அனுஷ்டானமில்லாத பிராம்மண குருவினிடமோ உடன் வதியக் கூடாது.

243. இல்வாழ்வில் நாட்டமில்லாத பிரம்மசாரி, குருகுல வாசத்தில் விருப்பம் கொண்டால், புலன்களை வென்றவனாய், ஞானியான பிராம்மண குருவுடன் ஆயுள் முழுதும் நைஷ்டிக பிரம்மச்சாரியாய் வாழ்ந்திருக்கலாம்.

244. மரண பரியந்தம் இப்படிக் குருவை வழிபடு வோன் நிரந்தரமான மறுமை யின்பம் அடைகிறான்.

245. வேதம் ஓதுமுன்பு குரு தட்சிணை கொடுக்க லாகாது. வேதம் ஓதி முடிந்து, தான் இல்லறம் புகும் போது குருவின் விருப்பப்படிதட்சிணை கொடுக்கவேண்டும்

246. மண், பொன், பசு, குதிரை, செருப்பு, குடை ஆசனம், தானியம், கறியமுது, ஆடை இவை குரு மகிழ்ந் தேற்கும் தட்சிணைகளாகும்.

247. நைஷ்டிக பிரம்மசாரி தனது குரு இயற்கை யெய்தியபோது, அவரது குணங்களையுடைய குரு மக னிடமோ, அவர்தம் தாயத்தாரிடமோ, தனது உடலுள்ளவரை பணிவிடை புரிந்துவரக் கடவன்.

248. இவர்கள் யாருமில்லா தொழியின், குரு ஓமம் செய்து கொண்டிருந்த அக்னி குண்டத்தின் அருகே அமர்ந்து நாள்தோறும் அவ்வக்னியை சமித்தினாலே ஓமம் செய்து வளர்த்துக் கால முழுதும் கழிக்க வேண்டும்.

249. இதுவரையிற் கூறி வந்த முறையின் வழியே நோற்றிருக்கிற பிரம்மசாரி யானவன் மறுமை யின்பம் பெற்று, மேலும் பிறவியின்றி, முக்தியில் நிலைக்கிறான்.

**இரண்டாவது அத்தியாயம் முற்றிற்று.**

## மூன்றும் அத்தியாயம்

# இல்லறவியல்

### கூடாவுறவு

1. மூன்று வேதங்களிலும் அத்யயனம் செய்யும் மாணவன் ஒருவன் தொடர்ந்து முப்பத்தாறு ஆண்டுகள் குருகுல வாசம் செய்யலாம். அல்லது பாதி காலமோ, நாலிலொரு பங்கு ஆண்டுகளோ, அல்லது வித்தை முழுவதும் பயின்றுகும் வரையிலோ குருகுல வாசம் செய்யலாம்

2. முறை பிறழாத குருகுல வாசம் புரிந்த சீடன் தனது வேதத்தை முதன்மையாகக் கொண்டு, மூன்று வேதங்களையுமோ, இரண்டினையோ, ஒன்றையோபழுதறக் கற்றுத் தேர்ந்த பின் இல்லற வாழ்வை மேற்கொள்ளலாம்.

3. தந்தை அல்லது ஆசார்யனிடமிருந்து முறைப்படி வேதம் ஓதி முடித்தவனை அன்புடன் வரவேற்று உயர்ந்த ஆதனத்தில் இருக்கச் செய்து, சந்தனம் மலர்களால் அவனுக்கலங்கரித்து, கோதான விரதம் செய்வித்து, பஞ்சாமிர்தம் கொடுத்து உபசரிப்பது தந்தை அல்லது ஆசார்யன் கடமை.

4. இப்படிச் செய்யும் சடங்காகிய சமயாவர்த்தனம் பெற்ற பின்னர், தனது தந்தை அல்லது ஆசார்யனுடைய அனுமதியுடன், தன் வருணத்தளான அழகுடைய பெண்ணை மணக்க வேண்டியது.

5. தன் தாயின் ஏழு தலைமுறைகளுக்குட் படாதவளாயும் தன் கோத்தரத்தில் பிறவாதவளாயுமிருக்கிற கன்னியை வைதீக கார்யம், சந்தானம் இவற்றிற்கு உகந்த மனைவியாக ஏற்கலாமென்பது மூவர்ணத்தாருக்கும் பொருந்துவதாகும்.

6. பால் மாடு, வெள்ளாடு, செம்மறியாடு, தனம் தானியம் முதலிய எவ்வகைச் செல்வங்களில் எவ்வளவு மிகுந்த செல்வராயினும் பின் சொல்லப்படும் பத்து வகையான குலத்தினராக விருப்பின் அக்குலத்தில் பெண் எடுக்கலாகாது.

7. சாத கர்ம முதலிய அனுஷ்டானங்களை விட்டவர்கள்—ஆண் சந்ததி யில்லாமல் பெண் குழந்தைகளே ஈன்றோர்—வேத மோதாதவர்—சரீர நீண்ட உரோமங்கள் நிறைந்தவர்—மூல வியாதி யுள்ளோர்—க்ஷய ரோகிகள்—வயிற்று வலிக்காரர்—பெரு வியாதி பீடிக்கப்பட்டோர்—வெண் குட்ட முள்ளோர்—யானைக் காலர்—இவர் குலங்களில் பெண் எடுக்கலாகாது.

8. செம்பட்டைத் தலையினள்—மிகவும் உயரமாக வளர்ந்தவள் - தீராப் பிணியினள்-வழுக்கைத் தலையினள்-உடம்பெல்லாம் மயிருள்ளவள்— கடுஞ் சொல்லினள்-செங்கண்ணி.

9. தாரகை, மரம், ஆறு, ஈனசாதி, மலை, பறவை, பாம்பு, வேலைக்காரன் இவற்றின் பெயருடையவள், பயங்கரமான பெயரினள், இவ்வகைக் கன்னியரையும் மணத்தலாகாது.

10. அழகியும், நற்பெயருடையவளும், அன்னம், பிடி நடையுடையவளும், மெல்லுடல், மென் பற்கள் மென் கூந்தல் உடையவளும், மென் குரலினளுமான பெண்ணை மணக்கலாகும்.

11. சகோதரனுடன் பிறவாமலும், தகப்பன் யாரென்றறியக் கூடாதவளுமான பெண்ணை, அவள் இன்ன கால் வழிப் பிறவியினள் என்று அறிய முடியாதாகையால், அவளிடமாகப் பிறக்கும் பிள்ளை புத்ரிகா புத்ரனாவனென்பதனாலும், அவளை விவாகம் செய்யக் கூடாது. புத்ரிகா புத்ரன் யாதென்பது ஒன்பதாவது அத்தியாயத்திற் காண்க.

## கலப்பு மணம்

12. தனது வருணத்துப் பெண்ணை மணம் புரிவிப்பது நன்று. விரும்பி இரண்டாம் கலியாணம் செய்வதாயின் இனி சொல்லப் போகிற நியதியைக் கைக் கொள்க.

13. நாலாம் வருணத்தர் தமது சாதியிலும், வைசியன் தன் இனம், நாலாம் வருணம் இரண்டிலும், க்ஷத்திரியன் தன் இனம் மற்றும் அடுத்த இரண்டினங் களிலும், அந்தணன் நான்கு வருணங்களிலும் பெண் கொள்ளலாம்.

14. அந்தணனுக்கும் அரசனுக்கும் சொந்த இனத்துப் பெண் கிடைக்காவிடில் மட்டுமே முதல் மணம் நாலாம் வருணத்துப் பெண் கொண்டு செய்யலாம்.

15. தாழ்ந்த சாதியில் மணப்பவர்கள் தன் குலத்தை யும் சந்ததிகளையும் நாலாம் வருணத்தவர் ஆக்குகிறார்கள்.

16. நாலாம் வருணப் பெண்ணை மணப்போன் பதிதன் என்று அத்திரியும், கௌதமரும் சொல்கின்றனர் (இது அந்தணனுக்கு). அரசன் தாழ்ந்த குலப் பெண்ணிட மாகச் சந்தான உற்பத்தி செய்தால் பதிதன்—என்பது சௌனகர் வாக்கு. வைசியனுக்குத் தாழ்ந்த பெண்ணிட மாகப் பிறந்த குழந்தை பதிதன் என்பது பிருகுவின் கூற்று.

17. தாழ்குலத்துப் பெண்ணுடன் ஒரே படுக்கையில் சமமாய்ப் படுக்கும் அந்தணன் நரகம் அடைவான். பிள்ளை யுண்டாக்கினால் பிராம்மணத் தன்மை இழந்து போகும்.

18. எவனுக்குத் தாழ்ந்த ஜாதிப் பெண்ணிடமாகப் பிறந்த பிள்ளை தென்புலக் கடன் ஆற்றுகிறானோ, அவன் தரும் அவிசைத் தேவரும் பிதுரர்களும் தீண்ட மாட்டார் கள். ஆகையால் அவனுக்குச் சுவர்க்கம் ஆகிய நன்மை களும் இல்லை.

19. தாழ்ந்த சாதிப் பெண்ணின் அதர பானமும், அவளது மூச்சுக் காற்று மேலே படுதலும், தனக்கும்,

அவளிடமாகப் பிறந்த குழந்தைக்கும் கழுவாயே இல்லாத பாவங்களாகும்.

### திருமண வகுப்பு

20. இம்மை மறுமைகளில் நன்று தீதுகள் தரவல்ல எண்வகை மணங்களைச் சுருங்கக் கூறுகிறேன்,கேட்பீராக!

21. பிராமம், தெய்வம், ஆருஷம், பிராஜாபத்யம், ஆசுரம், காந்தருவம், இராட்சசம், பைசாசம் ஆகிய எட்டு.

22. விவாகங்களில் உயர்ந்ததும் தாழ்ந்ததும் எவையென்பதையும், எதன் காரணமாகப் பிறந்த பிள்ளை உயர்ந்தவன் அல்லது தாழ்ந்தவன் என்பதையும் மேலும் சொல்லக் கேளீர்

23 பிராம்மணனுக்குப் பிராமம் முதல் காந்தருவம் வரை முறையே ஆறும், க்ஷத்ரியனுக்கு ஆசுரம் முதல் பைசாசம் வரையுள்ள நான்கும், ஏனைய இரு வகுப்பாருக்கும் மேற்சொன்ன நான்கில் ராட்சசம் தவிர்த்த மூன்றும் சரியான விவாகங்களாகும்.

24. எனினும் பிராம்மணனுக்குப் பிராமம் முதல் நான்கும், க்ஷத்ரியனுக்கு ராட்சசமும், மற்ற இருவருக்கும் ஆசுரமும் சிறந்த திருமண முறையாகும்.

25. பிராஜாபத்ய முதல் பைசாசம் முடிய ஐந்தில் மூன்று உயர்வு; பின்னிரண்டும் தாழ்வுஆகையால், ஆசுரம் பைசாசம் இவ்விரண்டும் பிராம்மண க்ஷத்ரியர்களுக்குச் சரியன்று.

26. க்ஷத்ரியனுக்குக் காந்தருவமும் இராட்சதமும் உயர்வாகையினல், இரண்டையுமோ ஒன்றையோ அவன் புரிந்து கொள்ளலாம்.

27. வேத வித்தாகவும். நல்லொழுக்கமுடையவனுகவும் இருக்கும் பிரம்மசாரியை வலியச் சென்றழைத்த

அவனைப் புத்தாடை புனைவித்து, ஆடையணிகளால் அழகு செய்த பெண்ணை அவனுக்குத் தானம் செய்வது பிராம விவாகம்.

28. யக்ஞத் தீயின் முன்னிருந்து நடத்தி வைக்கும் புரோகிதனுக்கு அலங்காரத்துடன் தனது பெண்ணைக் கொடுப்பது தெய்வ மணம்.

29. பெண்ணுக்குப் பரிசம் பெற்றுக் கொண்டு, ஒருவனுக்கு மணம் புரிவிப்பது ஆருஷம்.

30. பிரம்மசாரியை அழைத்துப் பூசித்துப் பெண்ணைத் தரும்போது, "நீவிர் இருவருமாய் அறங்களைப் புரிந்து வாழ்வீர்களாக!" என்று வாழ்த்திக் கொடுத்தல் பிராஜாபத்யம்.

31. பெற்றவன் குறிக்கும் பொருளைக் கொடுத்துப் பெண்ணை வாங்கி அணிகள் பூட்டி மணப்பது ஆசுரம்.

32. ஆண் பெண் இருவரும் தம்மில் மனம் கலந்து தாங்களாகவே கூடிச் சுகித்தல் காந்தருவம்.

33. அவளது உறவினர்களை அடித்தும் கொன்றும் பிளந்தும் ஒரு பெண்ணை அவள் வீட்டிலிருந்து தன்வலிமையாற் கவர்ந்து சென்று மணத்தல் இராட்சசம்.

34. தூக்கத்திலும்,குடிவெறியிலும், பித்தம்கொண்டும் இருக்கும் பெண்ணைக் கலப்பது மிகவும் தாழ்ந்த பைசாச முறை.

35. நீர் வார்த்துக் கரத்தில் கொடுப்பது பிராம்மணனுக் கேற்றது. மற்றோர் அப்படிச் செய்ய வேண்டிய அவசியமில்லை. வாயினால் மந்திரம் சொல்லிச் செய்து கொள்ளலாம்.

36. முனிவர்களே, விவாக முறைகளைக் கேட்டீர்கள். இனி அந்தந்த விவாகங்களினால் பிறக்கும் குழந்தைகளைப் பற்றி மநுவின் குண தோஷங்களைக் கூறுகிறேன்.

37. பிராம விவாகத்தினால் பிறந்த சாதுவான பிள்ளையினால் முன் பத்துத் தலைமுறை பிதுர்க்கள் நரகம் செல்

லாது தப்புவிக்கப்படுவர். பின் சந்ததியிலும் பத்துத் தலை முறை சாதுவான பிள்ளைகளே பிறக்கவும் செய்கிறார்கள்.

38. தெய்வவிவாகத்தினால் பிறக்கின்றவனுடைய முன் பின்னான ஏழு தலைமுறையினரும், ஆருஷ விவாகத்தில் தோன்றிய குழந்தையின் முன்பின்மூன்று தலைமுறைகளும், பிராஜாபத்ய குமாரனின் முன்னாறு பின்னாறு கால்வழியின ரும் கடைத்தேறுவர்.

39. பிராமம் முதலான நான்கினாலும் தோன்று கிற பிள்ளைகளே பிரம்ம தேஜஸ் உள்ளவர்களென்று பெரி யோர் புகழ்கின்றனர்

40. மேலும், கவர்ச்சி யெழில், வலிமை, பண்பு, செல்வம், புகழ், நிறைந்த அனுபவம், அறம் இவை பொருந்தியவராய் நூறாண்டு வாழ்வர்.

41. ஏனைய நான்கு முறை மணத்தாலும் பிறந்தோர், கொலை, பொய், வேத யாக தர்ம நிந்தை இவற்றைப் புரிவோராய் இருப்பர்.

42. உத்தம மணத்தாற் பெறும் பிள்ளைகள் சாதுக்க ளாயும், பழிக்குரிய விவாகத்தாற் பிறக்கும் சந்ததிகள் கெட்ட நடத்தையினராயு மிருப்பராதலால் தாழ்ந்த முறை மணம் கூடாது.

## இல்லறவியல்பு

43. தன் குலத்துப் பெண்ணைக் கரம் பற்றி ஏற்றுக் கொள்வதான பாணிக்கிரஹணமும், ஏனைய பெண்களை மணம் புரிவதில் பின் கூறப்புகும் முறைகளும் ஏற்றவை யாகும்.

44. தனக்கு மேல் இனத்து மகனுக்கு வாழ்க்கைப் படுகையில், க்ஷத்திரியப் பெண் மணமகன் கரத்தேந்திய தண்டத்தையும், வைசியப் பெண் மணமகன் கையினுள்ள சாட்டைக்கயிற்றின் நுனியையும், நாலாம் வருணத்தினள்

மணமகனின் ஆடையையும் பிடித்துக் கொண்டு விவாகம் செய்து கொள்ள வேண்டியது.

45. மணம் புரிந்த பெண்ணிடம் இடையருத அன்புடன் பிறன்மனை நயவாமல், பருவகாலத்தில் அவளுடன் ரமித்திருக்க வேண்டியது. மற்ற காலங்களில் பரஸ்பரம் ஒருவரையொருவர் விரும்பும்போது, விலக்கில்லாதபோது கூடலாம்.

46. மாதவிடாய் நாளிலிருந்து பதினுறு நாட்கள் பெண்களின் பருவ காலம். முதல் நாட்கள் நான்கும் விலக்கப் பட்டவை.

47. இந்நான்குடன் ஏகாதசி, திரியோதசி இவையும் நீங்கலாக மற்ற நாட்கள் பத்தும் கூட்டுறவுக் கேற்றவை.

48. மாத விலக்கிலிருந்து ஆறெட்டுப் பத்து பன்னிரண்டு பதினுலு பதினுறு நாட்களின் இரவுகளில் முயங்குதலால் ஆண் சந்ததியும், ஒற்றைப் படை நாட்களினுல் பெண்ணும் பிறக்கின்றன.

49. சேர்க்கையில் ஆண் பெண்களின் இன்ப ஊற்றின் பெருக்கத்திற்கேற்ப ஆண் அல்லது பெண் குழந்தை பிறக்கும். ஒத்த அளவில் அவை சுரக்குமாயின் பேடியாகவு, ஊற்றே தோன்ரு தொழியின் சூல் ஏற்படாமலும் போகும்.

50. மேற் சொன்ன விலக்கத்தக்க நாட்கள் ஆறையும் நிறைமதி, வெண்மதி நாட்களையும் தவிர்த்த நாட்களில் மனைவியுடன் குலவியிருப்போன் பிரம்மசர்யம் மேற்கொண்டவனுக்குச் சமதையான விரதன் ஆவான்.

51. அறிவிலியான தந்தை, சிறிதெனினும், பொருள் பெற்றுக் கொண்டு தன் பெண்ணைக் கொடுக்கக் கூடாது. பொருள் பெறுவனேல், அது விற்பனை செய்ததாகும்.

52. பெண்ணின் தந்தையோ, கணவனே ஒருத்தியின் சீதனப் பொருளைத் தாங்கள் பயன் படுத்திக் கொண்டால் பெரும் பாவத்தால் அழிவுறுவர்.

53. ஆருட விவாகத்தில், காளை, பசு இவற்றை ஒன்று வீதமோ இரண்டு வீதமோ வாங்கலாம். அப்படிப் பெறுவதும் ஒரு தர்ம காரியத்திற்கேயன்றி, தனது இச்சையின் நிறைவுக்காகப் பெறலாகாது. அப்படி வாங்குவதும் பெண்ணை விற்றதற்கே சமம்.

54. பெண்ணுக்கு ஈடாகப் பணம் வாங்காமல் கொடுப்பது விற்பனையன்று. அப்படிப் பெண்ணை மணம் செய்து கொடுப்போரே அவளிடம் அன்பும் கருணையும் உடையோர்.

55. தந்தை, கணவன், உடன் பிறந்தோர், மைத்துனர் ஆகியோர் ஒரு பெண்ணுக்கு அவள் திருமணத்தில் அவளுக்குத் தக்க பரிசுகள் கொடுத்து மகிழ்வுறச் செய்தல் கடன்.

56. ஆடை அணிகளால் மகிழ்வுற்று விளங்கும் பெண்கள் உள்ள இல்லத்தில் சகல தெய்வங்களும் மகிழ்வுடன் எழுந்தருளும். எந்த வீட்டில் பெண் இப்படிப் போற்றப் படுவதில்லையோ, அங்கு செய்யப்படும் காரியங்கள் பயனற்றுப் போகின்றன.

57. உடன் பிறப்பான பெண்ணொருத்தி உடையும் அணியும் இல்லாது வருத்தமடையச் செய்யும் குலம் நசிக்கிறது. எங்கே அத்தகைய விசனம் பெண்ணுக்கில்லையோ அக்குலம் பெருகி வாழ்கிறது.

58. தன்னை நன்கு காத்து ரட்சிக்காத பிறந்தகத்தை நொந்து ஒரு பெண் எண்ணுவாளாயின் அக்குலத்திற்கு அதுவே சாபத் தீடாகும்.

59. எனவே பிறந்தகத்துத் திருநாட்களில் குலக் கொடியான பெண்களுக்கு ஆடையணி விருந்திவற்றை வழங்கி மகிழ்ச்சியுறச் செய்வது அவசியமாகும்.

60. கணவன் மனைவியர் ஒருவரையொருவர் நன்குணர்ந்து காதலித்துப் பிறர் மீது மனம் நாடாமல் ஒருமித்து வாழும் குடும்பம் எப்பொழுதும் மங்கலம் நிறைந்தது.

61. ஆடையணிகளால் திகழாத மனைவி கணவனுக்கு மகிழ்ச்சி தர மாட்டாள். கணவனுக்கு மகிழ்ச்சி தர வியலாத பெண்ணிடமாகச் சந்ததி யுண்டாக இடம் இல்லாது போகும்.

62. தன்னை மகிழ்ச்சியுறச் செய்யும் பெண்ணிடமே சந்ததி தோன்றும். கணவனால் விரும்பப் படாத பெண் பிறரால் தீண்டப் பெற்று அதனால் அந்தக் குலமே தாழ்ச்சியடையும்.

6 . தகாத மணங்களாலும், குல தர்மமாகக் கூறப் பட்ட சடங்குகளைப் புரியாமையினாலும், வேதம் ஓதாமை யாலும், அந்தணராதி மேலோரைப் போற்றாமையாலும், உயர்ந்த குலமும் தாழ்ந்து போகும்.

64. ஓவியம் பயில்வதாலும், வழக்காடுதலாலும், தாழ்ந்த குலத்துப் பெண்ணை மணந்து சந்ததியடைவதா லும், பசு, குதிரை, வண்டி இவற்றை விற்பனை செய்வ தாலும், மோழி பிடிப்பதாலும், அரசாங்க கோவையிற் புகுவதாலும்,

65. தகுதியற்றோரை முதன்மையாகக் கொண்டு யாகாதி காரியங்களை நிறைவேற்றிக் கொள்வதாலும் தெய்வத்தை யேற்றுக் கொள்ளாமையாலும், மந்திரா னுஷ்டானங்களை மேற்கொள்ளாததாலும் நற்குலம் தாழ்வடையும்.

66. வறிஞராயினும் வாழ்வாங்கு வாழ்வாரே உயர் குலத்தோரென்று மதித்துப் புகழத் தக்கவராகின்றனர்.

## ஐம்பெரு வேள்வி

67. இதுவரை இல்லறமேற்கும் முறைகள் விளக்கப் பட்டன இனி இல்லறத்தானுடைய அன்றாட ஒழுகுகளைக் கூறுவேன். தீயோம்பும் கடமைகளைத் தவறாது நிறை வேற்றி ஐம்பெரு வேள்விகளில் ஒன்றான விருந்தோம்பல் புரிய வேண்டியது.

68. எந்திரம், முறம், அம்மி, துடைப்பம், உரல், உலக்கை, நீர்க்குடம் இவற்றை உபயோகிப்பதால் ஐந்து கொலைக் குற்றங்கள் இல்லத்தானுக்கு வந்தடைகின்றன.

69. இவ்வைந்து பாவங்களையும் போக்கும் பொருட்டாகப் பெரு வேள்விகள் ஐந்து மகரிஷிகளால் கூறப்பட்டன.

70. இவையாவன : (1) வேத மோதுதல்—பிரம்ம யக்ஞம்.
(2) அன்னம் படைத்தோ புனல் வார்த்தோ தென் புலத்தார்க்கு வழிபாடியற்றல் பிதுர் யக்ஞம்.
(3) தீயில் அவி சொரிந்து தேவரை வழிபடல்—தேவ யக்ஞம்.
(4) பலியிடல்—பூத யக்ஞம்.
(5) விருந்தோம்பல்—மானுட யக்ஞம்.

71. இவ்வைம் பெரு வேள்விகளை இயன்றளவில் புரியும் இல்வாழ்வோன் மேற்குறித்த பாவங்களினின்றும் மீட்சி யுறுவான்.

72. தன் வழிபடு கடவுள், விருந்தினர், பணியாள், பெற்றோர், தனதுயிர் இவ்வைந்துக்கும் உணவு முதலியவற்றால் நிறைவு செய்யாதவன் நடைப்பிணம்.

73. இவ்வைம் பெரு வேள்விகளுக்கு, அகுதம், குதம், பிரகுதம், பிராமிய குதம், பிராசிதமென்று வேறு பெயர்களும் மேலோரால் இடப்பட்டிருக்கின்றன.

74. அகுதம் பிரம்ம வேள்வி, குதம் தெய்வ வேள்வி, பிரகுதம் பூத வேள்வி, பிராம்யகுதம் மானுட வேள்வி, பிராசிதம் பிதுர் வேள்வி.

**கடனிறுத்தல்**

75. வறிஞன் விருந்தோம்ப இயலாவிடினும் ஏனைய வற்றையேனும் இடையறுதியற்றுக. தேவ வேள்வியினால் ஸ்தாவர ஜங்கமங்களைக் காக்கிறவனாகிறான்.

76. தேவர்க்காக்கும் அவி சூரியனுக்குச் சென்று, அதனால் மழையுண்டாகி, விளைவுகள் செழிப்பன. அதனால் உயிர்கள் பெருகி வாழ்வனவென்பது வேத வாக்கு.

77. சகல உயிர்களும் பிராண வாயுவினால் வாழ்ந்திருப்பது போன்று, பிரம்மசாரி, வானப்பிரஸ்தன் சன்னியாசி மூவரும் இல்வாழ்வானைச் சார்ந்து வாழ்கின்றனர்.

78. மற்ற மூன்று ஆசிரமங்களையும் பொருந்தியிருப்போர் வேதம் ஓதுவதற்கும், பிக்ஷை ஏற்பதற்கும் ஆதாரமாக விளங்குவதனால் இல்வாழ்க்கை ஏற்புடைத்தாகும்.

79. இம்மை மறுமைப் பேறுகளை விரும்புவோன் இல்லறம் காத்தல் கடன். புலன் கட்டுப்பாடுகளற்றோர் நெறியுடன் இல்லறமாற்றல் அரிது.

80. முனிவர், தென்புலத்தார், தேவர், பூதங்கள், விருந்தினர் இவர்கள் இல்வாழ்வானை நாடித் தங்கள் நிறைவை விரும்புகின்றனர். எனவே, பின்வருமாறு ஒழுகுதல் இல்வாழ்வார் கடன்.

81. வேதம் ஓதுதலால் முனிவரையும், அவி சொரிவதனால் தேவரையும், சிரார்த்தத்தால் தென்புலத்தாரையும், உணவினால் விருந்தினரையும், பலியிடுவதால் பூதங்களையும் திருப்தி செய்விக்கவும்.

82. அன்றாடம் பிதுர்த் திருப்தியைச் சோறு படைத்தோ, புனல் சொரிந்தோ, பால், கிழங்கு, பழம் படைத்தோ இயற்றுக.

83. இத்தகைய பிதுர் வேள்வியிற் படைக்கும் உணவைக் கொண்டு, ஒரு அந்தணனையேனும் உண்பிக்க. பூத

வேள்வியில் யாரையும் உண்பிக்க வேண்டுவதில்லை. பலி மாத்திரம் போடவும்.

84. இப்படிப் படையலை அந்தணர்க்கிடுவதற்காகத் தயாரித்த அன்னத்தைத் தீயில் தேவதைகளை எண்ணி ஓமம் செய்வது மூவருணத்தாரின் ஒழுகு.

85. அக்நி, சந்திரன் இவர்களுக்கு முதலில் தனித்தனியாகவும், பின்னர் ஒன்ருகவும், பின்னர் விஸ்வே தேவர்களான குழுவினர், மருத்துவத் தேவரான தன் வந்திரிக்கும்,

86. குரு, அனுமதி, பிரஜாபதி, ஆகாசவாணி, பூமாதேவி இவர்களுக்கும் யாக்நிக்கும் ஓமம் செய்யவும்.

87. ஓமம் செய்கையில் குறிப்பிட்ட தேவர்களை எண்ணி வழிபட வேண்டியது. பின்னர் கிழக்கில் இந்திரனுக்கும், தெற்கில் யமனுக்கும், மேற்கில் வருணனுக்கும், வடக்கே கோமனுக்கும், அவரவர் பரிவாரங்களுக்கும் சேர்த்து வரிசையாகப் பூமியில் பலிவைக்க வேண்டியது.

88. தேவர்களுக்கு வீட்டு வாசற்படி, ஜல தேவதைகளுக்கு நீர்நிலை, வன தேவதைகளுக்கு உரல் உலக்கைகள் ஒன்றில் இவ்வாறு பலிப்பொருள் வைத்துப் படைக்கவும்.

89. வீட்டின் வட கிழக்கு மூலை அல்லது படுக்கைத் தலைமாட்டில் லட்சுமிக்கும், தென்மேற்கு மூலை அல்லது படுக்கைக் கால்மாட்டில் பத்திரகாளிக்கும், வீட்டு நடுவில் பிரமனுக்கும் வாஸ்து புருஷனுக்கும் படையல் போடவும்.

90. விஸ்வே தேவர், பகல் நடமாடும் பிராணிகள், இரவில் திரியும் உயிர்களுக்கு வீட்டு முற்றத்து வெளியில் போடவும்.

91. பரம் பொருளுக்கு மேன்மாடத் திறந்த வெளியில் அல்லது தனது பின்புறத்தில் பலியிடுக. மிகுந்த சோற்றினைத் தென் முகமாக மண்டியிட்டுப் பலியிடவும்.

92. மேலும் வீட்டுக்காகச் சமைத்த உணவைக் கொஞ்சம் எடுத்து, நாய், பாவி, சண்டாளன், திராப் பிணியாளன், காக்கை, கிருமி இவற்றிற்குச் சுத்தமான பூமியில் மெதுவாக வைக்க வேண்டியதே பூத வேள்வி.

93. இப்படி நாடோறும் சகலருக்கும் திருப்தி செய் விப்போன் ஒளியுடன், நல்லாற்றில் மேலான மோக்ஷம் எய்துகிறான்.

## விருந்தோம்பல்

94. பூத வேள்வி முடித்து விருந்தோம்பி, பிரம்ம சாரி, சந்யாசி இவர்க்கு முகமனும் கூறி, காலலம்பிப் பிக்ஷையிட்டுப் பின்னர் அவர்கள் கையில் நீர் வார்க்க வேண்டும்.

95. நன்கு அலங்கரித்த பசுவைத் தனது ஆசார்யனுக் குக் கொடுப்பதால் வரும் புண்ணியம், பிரம்மசாரி முதலானோர்க்கு விதிப்படி பிட்சையிடுவதால் கிடைக்கும்.

96. மிகுதியான பிட்சையிடச் சக்தியற்றவன் ஒரு கவளமேனும் இட்டு, விடாய் தீர்க்க நீர் தருக. வேத மறிந்தவனுக்குத் தன் வீட்டில் கிடைக்கும் பொருள் எதனையேனும் விதிப்படி பூசித்துத் தருக.

97. வேதமறியாதவனுக்கு, தேவதைகளையும் பிதுர்க் களையும் பற்றித் தெரியாதாகையால் அவனுக்கிடுகின்ற தானம் சாம்பலிற் பெய்த ஆகுதிபோன்று வீணாகிவிடும்.

98. கல்வித் தவம் முயன்ற வேதியர்க்களித்தல் தீயி லிட்டுச் செய்த ஓமம் போல் ஒளிர் விடும். மேலும் இம்மையில் நோய், பகை, ராஜபீடை இவற்றால் உண்டான அச்சத்தினின்றும், மறுமையில் நரகத்தி னின்றும் விடுவிக்கும்.

99. தேடி வந்த விருந்துக்குக் காலுக்கு நீர் கொடுத்து, ஆதனத் திருத்தி, தன் வீட்டில் உள்ள உணவை விருந்தாக்கி உபசரிக்க வேண்டும்.

100. கழனிகளிற் சிந்தியிருக்கும் நெல் மணிகளைப் பொறுக்கியெடுத்து அதைக்கொண்டு பிழைப்பதாயினும், கடுந்தவமே புரிவதாயினும், விருந்தோம்பாதிருப்பின், தேடி வந்தும் உணவு கிடைக்காமல் திரும்புவோனுக்கு, இவன் தேடிய புண்ணியமெல்லாம் போய்ச் சேர்ந்து விடும்.

101. விருந்து வந்த உயிர்க்குச் சோறிட இயலாது போயிடினும், படுக்கை, இருக்கை, தண்ணீர், இன்மொழி யேனும் அறத்தாறொழுகும் இல்வாழ்வினிடம் பஞ்சமா யிராது.

102. அன்றுடம் வராமல் ஒரேவழி நாடி வருவோனே விருந்து. ஓரிரவு வரை அவன் விருந்தினனாக மதிக்கத் தக்கவன்.

103. தன்னைக் காணவரும் உள்ளூர்க்காரனும், தன் மனைவி, வேள்வித் தீ இவற்றைத் தேடிக் காரியமாக வருகின்ற அந்தணனும் அதிதிகளென்று கொள்ளத் தக்கவரல்லர்.

104. சகல வசதிகளுமுடைய இல்வாழ்வான் ஒருவன் பிறன் வீட்டுச் சோற்றை விரும்பி விருந்தாளியாகப் பாவனை செய்து சென்று உபசாரம் பெறுகிறானே, அவன் மறுபிறவியில் மாடாய்ப் பிறந்து தன்னை உபசரித்தவனுக்கு உழைப்பான்.

105. அல்லுணவின் போதும், பின்னரும் வரும் விருந்தை, காலம் தாழ்ந்து விட்டதென்று காரணங் காட்டி, உணவளிக்காமல் அனுப்பக் கூடாது.

106. விருந்தினனுக்கு வழங்காமல் தயிர் பால் நெய் போன்ற நற்பொருளைத் தான்மட்டும் உண்டு களிக்கலாகாது. விருந்தோம்புதலால் பொருளும், புகழும், ஆயுளும் நற்கதியும் கிடைக்கின்றன.

107. ஆதனம், இருக்கவிடம், கட்டில், வழியனுப்புதல், வழிபடல் ஆகிய உபசரணைகளை, மேலோர் தாழ்ந்

தோர், எந்தத் தகுதியினருக்கு அவரவர் நிலைக்கு ஏற்ற தாகச் செய்ய வேண்டியது.

108. சாப்பாட்டு வேளையில் வந்த விருந்துக்கு அன்ன மிட்டு, மேலும் யாரேனும் வரின், அவர்களுக்கு பூதபலி அன்னத்தைப் படைக்காமல் தனது சக்திக் கேற்ற வேறு உணவைப் போடவேண்டியது.

109. தன்னையும் தனது குலப் பெருமையையும் வலியச் சென்று தெரிவித்துக் கொள்வதன் மூலம் தன்னை விருந்தினனாக மதிக்கும்படி பிறரைச் செய்பவன், வாந்தி யெடுத்த சோற்றைத் தின்னும் பூதத்திற்குச் சமமாகிறான்.

110. அரசன் முதலான மூவருணத்தவரும், நண்ப னும், தாயத்தாரும், ஆசார்யனும், அந்தணனுக்கு அதிதி யென்று கொள்ளத் தக்கவரல்லர்.

111. எனினும் க்ஷத்திரியன் விருந்து வந்து விட்டால், அவன் விருப்பப்படி வேண்டிய உணவைத் தயாரித்து, அந்தணனை அதிதிக்குப் படைத்த பின்னர் உண்பிக்கவும்.

112. வைசியரோ, ஏனையோரோ அப்படி வருவரா யின், அந்தணன் தனது பணியாளருடன் சேர்ந்து அவர் களும் உண்ணுமாறு செய்யவும்.

113. நடபினன் போன்ற வேற்றூர் யாரேனும் அன்பு டன் தன்னை நாடி வந்துறுவராயின், சாப்பாட்டு வேளையா னால், அவர்களைத் தன்னுடன் அமர்த்தி உண்பிக்க வேண்டியது.

114. புது மணப்பெண், கன்னிகை, பிணியாளன், சூலி இவர்களை தெய்வ வழிபாட்டின் பின்னர், விருந்தினர் உண்ணு முன்பே தயக்கமின்றி உண்பிக்க வேண்டும்.

115. விருந்தினர்க்கு உணவளிக்காமல் தான் முன்னர் உண்பவன் இறந்தபின் தனதுடலை நாய் கழுகுகள் தின்னு மென்பதை உணர்வதில்லை.

116. அதிதிகள் ஆதியோர் உண்ட பின்னர் எஞ்சி நிற்பதைத் தானும் மனைவியுமாகச் சாப்பிடுக.

117. ஆக்கிய உணவைக், கடவுளுக்கு நிவேதனம் செய்து, தேவர், முனிவர், விருந்தினர் இவர்க்கும் படைத்து மிகுந்ததையே இல்வாழ்வான் உண்ணலாம்.

118. தனக்கு மட்டுமே உணவு சமைத்துக் கொள்கிற வன் பாவத்தையே உண்பவன். தேவர் முதலானவர்க்குப் படைத்துண்பவன் யக்ஞமிச்சிலை உண்டபேறுபெறுகிறான்.

119. அரசன், ரித்விக், அனுஷ்டானமுள்ள அந்தணன், குரு, நட்பினன், மனைவியைப் பெற்றவன், தாயுடன் பிறந் தோன் இவர்கள் ஓராண்டின் பின்னர் மறுமுறை வருவா ராயின், பழம், தயிர், தேன் இவற்றுடன் உபசரிக்கத் தக்கவர்.

120. வேள்வியின் இடையில் அரசனோ, அந்தணனோ எழுந்தருளுவராயின் மது வர்க்கம் (பழம் தயிர் தேன்) கொடுத்து உபசரிக்கப் படுவர். வேள்வி முடிந்து விட்ட பின் வரின் அல்ல.

121. பகலில் மந்திரத்துடன் தானும், இரவில் மந்திர மில்லாமல் மனைவியைக் கொண்டும் படைக்கும் பலிக்கு வைசுவதேவம் என்று பெயர்.

## தென்புலக் கடன்

122. மாதந்தோறும் அமாவாசையன்று பிண்டத்தி னால் பிதுர் வேள்வி செய்தபின் அன்றைய சிரார்த்தம் இயற்ற வேண்டும்.

123. மாதந்தோறும் இப்படிச் செய்கின்ற சிரார்த் தம் அனுவாஹாரியம் எனப்படும்.

124. இதில் புசிக்கத் தக்கோர் தகாதவரையும், எத்தனை பேர் வேண்டுமென்பதும், புசிப்பிக்கத் தக்க அன்னம் எதுவென்றும் கூறுகிறேன்.

125. விஸ்வேதேவர்க்கு இரண்டு பேரும், பிதுர்க்களுக்கு மூன்றுபேரும் இல்லையெனில் இரண்டு ஸ்தானங்களுக்கும் ஒவ்வொருவர் வீதமேனும் இருக்கச் செய்து புசிப்பிக்கவும். மிகுந்த செல்வனாயினும் மேற்சொன்ன கணக்குக்குமேல் எண்ணிக்கையினரைப் புசிப்பிக்க வேண்டியதில்லை.

126. ஏனென்றால் பெருமளவில்தக்க உபசரணை, இடம், பொருள், சீலம், அந்தணர் இவ்வைந்தும் நேரிடாமற் போகலாம் அல்லவா?

127. அமாவாசை சிரார்த்தம் பிரசித்தமானது. இதனால் பிதுரர்களுக்கு மறுமையில் நல்வாழ்வும் தனக்கு சந்ததியும் செல்வமும் கிடைக்கும்.

128. வேத மோதிய பிராம்மணனை சிரார்த்தம், தேவகாரியம் இவற்றில் உண்பிக்கவும். சீலம், கல்வி இவற்றில் உயர்ந்தவனுக் களித்தல் மேலான வலிமை தரும்.

129. தேவ பிதுரர்களை எண்ணி ஒரு அந்தணனைப் புசிப்பித்தால் முழுப் பலனுண்டு. வேத மோதாத பல பிராம்மணரைப் புசிப்பித்தாலும் பலனில்லை.

130. எனவே இத்தகைய நோன்புகளின் முன்பே, தக்கவனைத் தேடிக் கொள்ளவும். அவனே இதற்கேற்றவன். அவன் தன்னூர்க் காரனாயினும் அதிதியே யாவான்.

131. வேத மோதாத அந்தணர் லட்சம் பேரைவிட, வேதமோதிய ஒருவனை வரித்தல் மேன்மை தரும்.

1 2. ஞானத்தால் சிறந்தவனுக்கே தேவபிதுர் காரியங்களில் தானம்கொடுக்கவும். உதிரம்தோய்ந்த கரத்தை உதிரத்தால் அலம்ப முடியாது போன்று, ஞானமிலானுக்குக் கொடுப்பது பயனற்றது; பாவமும் தரும்.

133. தேவ பிதுர்க்களின் பொருட்டியற்றும் சிரார்த்தங்களில் அறிவீனனுக்கு வழங்கிய கவளங்களின் அளவு

எரிகணலேயும், ஈமக்குக் கோளங்களேயும் கொடுத்தவன் வாய்க்குள் உமபடர்கள் திணிப்பார்கள்.

134. அந்தணர் சிலர் தத்துவ ஞானிகளாயுள்ளனர். சிலர் தவமுடையோராவர். சிலர் வேதமும் தவ நிறைவும் பெற்று விளங்குவர். மற்றும் சிலர் வேள்வி முதலான நற்கடன்கள் தவருது இயற்றுகின்றனர்.

135. பிதுர் சிரார்த்தத்தை தத்துவ ஞானிகளுக்கும், தேவபலியை நால்வரில் யாருக்கேனும் கொடுக்கலாம்.

136. வேத மோதாதவனுக்கு வேத பாரங்கதனை பிள்ளேயும், வேதம் சாரங்களுணர்ந்த தந்தைக்கு வேத நுட்பமேது மறியாப் பிள்ளேயும் இருக்கக் கூடும்.

137. இவ்விருவரில் வேதியனுடைய பிள்ளேயே சிறந்தவன். வேத மறியாதவனுடைய பிள்ளேயை அவன் கற்றுணர்ந்த வேத மேன்மைக்காகவே போற்றுக.

138. நண்பன் ஒருவனே சிரார்த்தத்தில் வரிக்கலாகாது. ஏனெனில் நட்புரிமையை வேறு பொருள்களால் மட்டுமே கொள்ளத்தகும். நட்பு, பகை என்ற தொடர்புகள் தனக்கு யாரிடமில்லேயோ அத்தகையவனேயே வரிக்கத் தக்கது.

139. நட்புரிமையை முன்னிட்டு சிரார்த்த காரியங் களில் ஒருவனே அழைத்து அவனே புசிப்பிப்பது, மறுமையில் நல்விளேவுக்கு ஆதாரமாகக் கொள்ளப்படுவதில்லே.

140. அறியாமையால், நண்பனே இப்படி மகிழ்விப் பவன் அந்தக் கீழ்மகன் வானுலகு சென்றும் கீழே விழு கிருன்.

141 மூன்று மேல் வருணத்தினரும், இப்படி நண்பர் களேப் பெரிதும் வரித்துப் பிதுர்க்காரியங்களில் புசிப்பித் துப் போற்றுகை, பைசாச விருந்தென்று கூறப்படும். இப்படிச் செய்யும் தென்புலக்கடன் இருளில் தடுமாறும் குருட்டு மாட்டைப் போல் இம்மையிலேயே பயனின்றித் தடுமாறும்.

142. களர் நிலத்தில் இட்ட விதையைப் போன்று ஞானமில்லானுக் களித்த சிரார்த்தமும் பயனிலதாகும்.

143. ஞானியை முறைப்படி போற்றிக் கொடுத்தல் இம்மை மறுமைகளில் இருவர்க்கும் நன்மை பயப்ப தாகும்.

144. ஞானவானை அந்தணன் கிடைக்காத போது தனக்கு இஷ்டமான ஒரு தெரிந்தவனை வரிக்கலாம். மிக்க ஞானியான ஒருவன் தனக்குப் பகைவனாயின் அவனுக்குக் கொடுத்தது மறுமைக்குப் பயனற்றதாகும்.

145. எனவே, ருக்வேதி, நான் மறை யோதினவன், தனது வேத மேனும் முற்று மோதியவன், வேள்வி புரி வித்தவன், வேதமோதி வெளி வந்தவன் இவர்களை முயன்று வரிக்க வேண்டும்.

146. இத்தகைய புனித அந்தணனைப் போற்றிப் புசிப்பித்தவனால், அவனது ஏழு தலைமுறைப் பிதுர்களும் நிறையுணர்ச்சி பெறுகின்றனர்.

147. இந்த சிரார்த்த விதி முதன்மையாகும். பின் வருவன துணை விதிகளாகப் பெரியோரால் கடைப் பிடிக்கப்பட்டு வருவனவாகும்.

148. தாய்ப்பாட்டன், அம்மான், மருகன், மாமனார், ஆசாரியன், பெண்ணின் வயிற்றிற் பிறந்தோன், மாப் பிள்ளை, சிற்றம்மை, பெரியம்மை இவர்களின் பிள்ளைகள் ஆகிய உறவினர்களும், ரித்விக், சிஷ்யன் இவர்களுமாகப் பத்துப் பேர்களுக்கும் புசிப்பிக்கலாம்.

149. தேவ காரியங்களில் அந்தணரைச் சோதித் தறியக் கூடாது. பிதுர்க் காரியத்தில் வரிக்கப்படும் அந்தணனுடைய பிறவியையும் ஞானத்தையும் கவனித்து அறிந்து கொள்ள வேண்டியது.

### பந்தியில் விலக்கப்பட வேண்டியவர்கள்

150. திருடன், ஐம்பெருங் குற்றங்கள் இயற்றியவன், பேடி, நாத்திகன் இவர்களைத் தேவ பிதுர்க் காரியங்

களுக்கு வரித்துப் பூசித்தலாகாது என்று மநுப் பிரஜாபதி உரைத்திருக்கிறார்.

151. சடாதாரியான பிரம்மசாரி, வேத மோதாதவன், மேகரோகி, சூதன், கிராமப் புரோகிதன் இவர்களை சிரார்த்தத்தில் வரிக்கக் கூடாது.

152. மருத்துவன், அர்ச்சகன், புலைவிற்போன், வணிகன் இவர்களும்,

153. ஊர்ப் பொதுவுக்கும், அரசனுக்கும் ஏவலாளன், கோணிய நகங்களோ, சொத்தைப் பற்களோ உடையவன், குருத்துரோகி, தீ வளர்த்தலை விட்டவன், வட்டியினால் பிழைப்பை நடத்துவோன் இவர்களும்,

154. க்ஷயரோகி, ஆநிரை மேய்த்துப் பிழைப்போன், ஐம்பெரும் வேள்விகள் விலக்கனோன், அந்தணரை வெறுப்போன், அண்ணன் மணம் புரியா முன்னமே மணம் புரிந்து கொண்ட தம்பி, தம்பிக்கு முன்னமே மணம் புரிந்து கொள்ளாத அண்ணன், உறவினர் பலரின் உடைமைகளைக் கொண்டு வாழ்வோன்,

155. கூத்தன், ஒழுக்கம் கெட்ட பிரம்மசாரி, அல்லது சந்யாசி, ஜாதிவிட்டுத் தாழ்ந்த குலத்தில் பெண் எடுத்தவன், விதவையை மணந்து பிறந்த பிள்ளை, ஒற்றைக் கண்ணன், கள்ளி யொருத்தியின் கணவனாக இருப்போன்,

156. கூலிக்கு வேதம் ஓதுவிப்போன், அவனிடம் பயின்றோன், தாழ்ந்த குலத்தானிடம் கலைகள் பயின்றோன், இழிச் சாதியினர்க்குப் பயிற்றுவித்தோன், கொடுஞ் சொல்லன், கணவன் இருந்தபோதோ, இறந்த பிறகோ ஒரு கள்ளியின் வயிற்றில் பிறந்த பிள்ளை,

157. காரணமின்றித் தாய் தந்தை குரு இவர்களைத் தள்ளினவன், பாவிகளுடன் வேத மோதியும், விவாகம் செய்தும் உறவாடியவன் இவர்களும்,

158. வீட்டை எரியூட்டியவன், நஞ்சிட்டவன், வியபசாரி மகன் கையால் உண்பவன், ஆட்டாங் கொடி விற்பவன், மரக்கலம் ஊர்ந்தவன், பாடல் புனேவோன், எண்ணெய் ஆட்டுகிறவன், பொய்ச்சான்று சேகரிப்போன் இவர்களும்,

159. தந்தையுடன் வழக்காடுவோன், சூதர்களை தன் பொருட்டுக் கவருட அமர்த்திக் கொண்டவன், லாகிரிப் பொருள் துய்ப்போன், கர்ம வியாதியஸ்தன், ஐயுறத் தக்கவன், மோசடிக்காரன், அறுசுவைச் சாறுகளைப் பிறர்க்கு விற்பவன் இவர்களும்,

160. வில்—அம்பு இவற்றைச் செய்து கொடுப்பவன், உடன் பிறந்த தமக்கைக்கு மணமாகா முன்னமே அவள் தங்கையை மணந்தவன், நண்பனை வஞ்சித்தவன், சூதாட்ட விடுதி நடத்துவோன், மகனுல் வேத மோது விக்கப்பட்ட தகப்பன்,

161. பெரு வியாதிக்காரன், கண்ட மாலையன், வெண் குட்டன், கோளன், பித்தன், குருடன், வேத தூஷகன், இவர்களும் சிரார்த்தத்தில் விலக்கத் தக்கவர்.

162. யானை, காளை, பரி, ஒட்டை இவற்றைப் பழக்குவோன், சோதிடம் கூறிப் பிழைப்பவன், பறவை பிடித்து வளர்ப்பவன், படைக்கலப் பயிற்சியளிப்பவன்.

163. ஓடும் நீரைக் கால் மாற்றுகிறவன் அல்லது தேக்குபவன், மனையடி சாஸ்திரி, தூதுரைப்பவன், கூலிக்கு மரம் வளர்ப்பவன்,

164. வேட்டை நாய்களை வைத்துப் படைப்பவன், குருவிக்காரன், கன்னியழிப்பவன், பிறர்துயரை விரும்பிச் செய்வோன், இழி தொழில் இயற்றுவோன், சிறிய தெய்வங்களை வழிபடுகிறவன்,

165. குரு வணக்கம் முதலிய நற்கடன் புரியாதவன், அறங்கள் முயலாதவன், அன்றாடம் பிச்சையெடுப்பவன்.

தானே விளைத் துண்பவன், யானைக்காலன், மேலோரால் பழிக்கப் பட்டவன்,

166. எருமை ஆடு இவற்றை வியாபாரம் செய்து பிழைப்போன், அறுதலியை மணப்பவன், கூலிக்குப் பிணம் தூக்கி, இவர்களும் கவனத்துடன் நீக்கத் தக்கவர்.

167 கள்வர் முதல் பிணந்தூக்குவோர் ஈறுனவர்களாயும், இழி செயல் உடையோராயும், நல்லவருடன் அமர்ந்துண்ணத் தகாதவராயும் உள்ள ஈனர்களான இத்தகைய அந்தணர் தேவ பிதுர்க் காரியங்களில் மதித்துப் போற்றுது விலக்கப்பட வேண்டியவர்களாவர்.

168. தீ யுமிழ்ந்த சாம்பலில் அவி சொரியாமையைப் போன்று, வேத மோதாமையினுல் ஒளியவிந்து கிடக்கும் அந்தணனுக்கும் சிரார்த்தம் தரலாகாது.

169. உடன் வைத்து உண்ணத்தகாத மேற் சொன்னவர்க்குக் கொடுப்பின், கொடுத்தவன் மரணத்திற்குப் பின்னர் விளைவதைக் கூறுகின்றேன்.

170. விரதானுஷ்ட மில்லாதவர்கள் பரிவேத்தா ஆகியோர்களால் புசிக்கப் படுவது அரக்கர்களால் கிரகிக்கப்பட்டு விடுகிறது.

171. அண்ணனுக்குத் திருமணம் ஆகா முன்னமே தான் இல்லற மேற்போன் பரிவேத்திர எனப்படுவான். அத் தமையன் பரிவத்தி யாவான்.

172. அத்தகைய அண்ணன், தம்பி, அவன் மனைவி, அவளைப் பெற்றோன், மணம் புரிவித்த புரோகிதன் இவ்வைவரும் நரகமே யடைவர்.

173. அண்ணனுடைய விதவையை முறையாக மணந்தவனாயினும், அவளிடம் காமத்துடன் விளையாடுபவன் "திதி ஷூப்தி" என்றழைக்கப்படுகிறன்.

174. கணவன் இருக்கும்போதே கள்ள நட்பால் ஒருத்திக்குப் பிறந்த பிள்ளை "குண்டன்." கணவன் இறந்த பின் ஒருத்தி பெறும் பிள்ளை "கோளகன்."

175. குண்டனும் கோளகனும் பெறுகின்ற சிரார்த்த தானத்தில், கொடுத்தவனுடைய கொடைப் பலனை யழித்து விடுகின்றனர்.

176. பந்தியிலமரத் தகாதவன், அந்தணாளர் புசிப்பதைப் பார்த்தால், அன்னமிட்டவனுக்குப் பலன் வீணாகி விடுமாகையால், அப்படியவன் பார்க்காமல் செய்ய வேண்டும்.

177. அந்தணர் உண்டிச் சாலையில் குருடன் வந்தால்-தொண்ணூறு பேருக் கன்னமிட்ட பலனையும், ஒற்றைக் கண்ணன் பார்வை பட்டால் - அறுபது பேருக்கிட்ட பலனையும், வெண்குட்டன் காணின் நூறு பேருக்களித்த பலனையும், கரும வியாதியுடையவன் கண்டால் ஆயிரம் பேருக்கு அன்னமிட்ட பலனையும் அழித்து விடுகிறார்கள்.

178. புசித்துக் கொண்டிருக்கும் அந்தணாளரைத் தாழ்ந்த குலத்தானுக்கு வேள்வி புரிவித்தோன் தொடுவானாயின், அவ்வளவு பேருக்கும் அன்னமிட்ட பலன் வீண்.

179. தாழ்ந்த குலத்தானுக்கு வேள்வி புரிவித்துப் பொருளாசையால் தானம் பெறுவோன், வேதமோதிய வேதியனேயானாலும், அவன் தண்ணீரில் விழுந்த சுடாத மட்கலம் போல் அழிவெய்துகிறான்.

80. ஆட்டாங்கொடி விற்போனுக்கு சிரார்த்த போஜனம் கொடுத்தவன், மறு பிறப்பிற் பன்றியாய்ப் பிறந்து மலமுண்பான். மருத்துவனுக் களித்தவன், சீழ், உதிரம் இவற்றை உண்ணும் பிறவியெடுப்பான். அர்ச்சகன், வட்டி லாபத்தாற் பிழைப்பவன் இவர்க்குக் கொடுப்பது யாதொரு பயனும் தராததாகும்.

181. வியாபாரிக்கும், விதவை மறுமணம் கொண்டு பெற்ற பிள்ளைக்கும் கொடுப்பது சாம்பலில் செய்த ஓமம் போல் இம்மையிலும் மறுமையிலும் பயனற்றுப் போகும்.

182. திருடர் முதலான ஈனர்களுக்குக் கொடுப்பான் புழு, உண்ணி, அரக்கர், நாய் முதலான அநேகம் பிறவிகள் பெறுகிறார்கள் என்று பெரியோர் கூறுகின்றனர்.

183. பந்தியில் விலக்கப்பட்டவர்கள் மாசு படுத்திய பந்தியைத் தூய்மை செய்பவர்களான அந்தணர்களைப் பற்றிக் கூறுகிறேன், கேளுங்கள்!

## வரிக்கத் தக்க அந்தணர்

184. நான்மறையும் ஆறங்கமும் முறையாய் ஓதியவரும் அவர்தம் வழித் தோன்றல்களுமே பந்தியில் வரவேற்கத் தக்கவர்.

185 யஜுர் வேதத்தின் பிரதான பகுதியை நன்கு அறிந்தவர், அணையாமல் ஐம்பெருந் தீ வளர்ப்போர், ருக் வேதத்தின் முக்ய பகுதியைப் பிழையறக் கற்றோர், ஆறங்கமும் விரித்துரைக்க வல்லோர், பிராமவிவாகத்துப் பிள்ளை, ஆரணம் அறிந்தோன், இவர்களும் —

186. குருமுகமாய்க் கற்ற மறையின் பொருள் தேர்ந்த மேலோன், வேதப் பொருளுணர்த்தியகுருவுக்கு ஆயிரம் பசுக்களைக் காணிக்கை தந்தவன், நூற்றாண்டு நிறைந்த அந்தணன், இவர்களும் சிரார்த்த பந்தியில் அமர்ந்து அதனைப் புனிதமாக்க வல்லவர்கள்.

187. சிரார்த்த நாளிலோ, முந்தைய நாளிலோ, முன் சொல்லி வந்த தகுதியறிந்து மேலான அந்தணர் மூவர்க்குக் குறையாத வரை முறைப்படி புசித்துத் தான் இயற்றும் சிரார்த்தத்தை நிறைவேற்றித் தருமாறு அவர்களை வரிக்க வேண்டும்.

## சிரார்த்தப் பிராம்மண விரதம்

188. கர்த்தாவும், வரிக்கப்பட்ட பிராம்மணனும், சிரார்த்த நாள்வரை பெண்ணின்பம் விலக்கித் தூய்மை யாய் இருந்து அன்றாட ஜபங்களை மட்டும் செய்து, ஏனைய வேத மோதுதல் போன்றவற்றைத் தவிர்த்திருக்க வேண்டும்.

189. வரிக்கப்பட்ட வுடனேயே, அவன்பால் பிதுர்க் கள் வாயு ரூபமாகக் கலந்து, அவனுட்காரும்போது தாமுட்கார்ந்தும், நடக்கும்போது தாமும் நடந்து கொண்டு மிருக்கிறார்கள். ஆகையால் வரிக்கப்பட்டவன் தூயனாய் இருக்க வேண்டியது.

190. ஒப்புக் கொண்ட பிராம்மணன் தேவ பிதுர்க் காரியங்களுக்குக் குறித்த நாளில் வாராதொழிந்தால், பாவியாய் மறு பிறப்பில் பன்றியாய்ப் பிறப்பான்.

191. வரிக்கப்பட்ட நிலையில் ஒருவன் தாழ்ந்த குலத்துப் பெண்ணைக் கூடினால் தன்னை வரித்தவனுடைய பாவத்தை யடையும் மூடனாகிறான். இதனால் வரித் தவனுக்குப் பாவம் என்றுமில்லை

192. சினமற்றவர்களாயும், உள்ளும் புறமும் தூய்மையுற்றும், நித்திய பிரமச்சரியத்துடனும், சண்டை யற்றவர்களாய்ப் பெருநிலை பொருந்தி வாழ்கின்றவர் களாய்ப் பிதுர்க்கள் விளங்குகின்றபடியினாலே, அவர்களை எண்ணிச் செய்யும் சிரார்த்த கர்த்தாவும், அதில் புசிக்க ஏற்றுக் கொண்டவனும் அப்படியே ஒழுக்கமுடையவர் களாய் விளங்க வேண்டியது.

## பிதுர்க்களின் தோற்றமும் பெயரும்

193. பிதுர்க்களின் உற்பத்தியும், அவர்களை ஒவ் வொரு வருணத்தாரும் பூசிக்கத் தக்க நியமங்களையும் கூறுகின்றேன்.

194. பிரம்மனால் மநுவும், மநுவால் மரீசி முதலான பிரஜாபதிகளும், அவர்களால் பிதுர்க்களும் தோன்றினார்கள்.

195. விராட் புருஷனிடமாகத் தோன்றிய சோமசதர்கள் சாத்யர்களின் பிதுர்க்கள் படைப்புலகிற் கீர்த்தி பெற்ற மரீசி புத்ரர்களான அக்னிஷ்வர்த்தர்கள் தேவர்களின் முன்னோர்.

196. தைத்ய, தானவ, யட்ச, கந்தர்வ, உரக, ராட்சச, கருட, கின்னரர்களின் முன்னோரான பர்ஹிஷத்தர்கள் அத்திரி முனிவரின் புத்திரர்கள்.

197. அந்தண பிதுர்க்கள் சோமபர்—க்ஷத்திரிய பிதுர்க்கள் ஹவிஷ்மத்தர்—வைசிய பிதுர்க்கள் ஆஜ்யபர்—சுகாலிகர் நாலாம் வருணத்தோரின் பிதுர்க்கள்.

198. சோமபர், பிருகுவுக்கும்—ஹவிஷ்மத்தர் ஆங்கீரகருக்கும்—புலஸ்தியருக்கு ஆஜ்யர்களும்—வசிஷ்ட புத்ரர்கள் சுகாலிகளும் ஆவர்.

199. அக்னிதக்தர்—அனக்னிதக்தர்—கவ்யர்—பர்ஹிஷிதர்—அக்னிஷ்வத்தர்—சௌம்யர் — இவ்வனைவரும் பிராம்மண பிதுர்க்களென்றே உணரக் கடவர்.

200. இந்த பிதுர்க் கணங்களின் புத்திர பௌத்திரர்களே இவ்வுலகில் நிறைந்திருக்கின்றனர்.

201. எப்படியென்றால், மரீசி முதலான முனிவர்களிடமாகப் பிதுர்க்களும், அவர்களிடமாகத் தேவாசுரர்களும், அவர்களிடமாகச் சராசரங்களும் முறையே தோற்றமுற்றிருக்கின்றன.

202. வெள்ளி அல்லது வெள்ளி கலந்த பாத்திரத்தில் தண்ணீர் கொடுத்தாலும் பிதுர்த் திருப்தி ஏற்படும்.

203. பிதுர்க்களுக்குச் செய்யும் சிரார்த்தத்தில் ஆரம்பத்தில் தேவர்களுக்கு நிவேதனம் செய்வது ஒரு அங்கமாக

இருக்கிறது. தேவ காரியத்தை விட பிதுர்க் காரியம் முதன்மையாக இருக்கிறது.

204. பிதுர்க்களுக்குக் காப்பளிக்கும் விஸ்வே தேவரை முதலில் ஒரு பிராம்மணனிடம் ஆவாகநம் செய்ய வேண்டியது. இல்லாவிடில் அரக்கர்கள் பிதுர்க் காரியத்தை அழித்து விடுவார்கள்.

205. எனவே முதலில் விஸ்வே தேவர், பின்னர் பிதுர்க்கள், இறுதியில் விஷ்ணு இப்படியே முறையாக ஒவ்வொரு ஸ்தானத்துக்கும் பிராம்மணர்களை வரித்து சிரார்த்தம் செய்ய வேண்டியது. முன்னும் பின்னும் இப்படித் தேவர்களை வரிக்காமல் பிதுர்க்களை மாத்திரம் வரித்து அவர்களுக்கு சிரார்த்தம் செய்பவன் வம்சத்துடன் அழிவுறுகிறான்.

206. சிரார்த்தத்திற்கு ஏற்ற இடம் சுத்தமாயும், தனிமையாகவும், தென்புறம் தாழ்வரையுள்ளதாயும், சாணத்தால் மெழுகியும் இருக்க வேண்டியது.

207. இயல்பாகவே தூய்மையுடைய காடுகளிலும், ஆற்றங்கரையிலும், சந்தடியற்ற இடங்களிலும் இயற்றுவதால் பிதுர்க்கள் த்ருப்தியடைகிறார்கள்.

208. தேர்ந்தெடுக்கப்பட்ட தூய்மையான இடத்தில் வரிக்கப்பட்ட பிராம்மணர் மூவரும், ஸ்நானம் செய்து வந்த பின்னர், தேவர்களுக்குக் கிழக்கு நோக்கியும், பிதுர் ஸ்தானம் வடக்கு முகமாகவும் இருக்குமாறு முறையே ஆதனங்களிட்டு, அவற்றில் தேவர்களுக்கு இரண்டு தருப்பையும், பிதுராசனத்தில் மூன்று தருப்பையும் கொண்டு செய்த புக்கினத்தைப் போட்டு அவற்றின் மேல் பிராம்மணர்களை உட்காரச் செய்யவும்.

209. அமர்த்திய பின்னர் சந்தனம் மலர் இவற்றால் தேவர்களையும் பிதுர் ஸ்தானத்தையும் முறையே பூசிக்கவும்.

210. அவருடைய வலது கரத்தில் பவித்திரம் வைத்து எள்ளுடன் நீரை வார்த்து, அவர்களனுமதியுடன், அவர்கள் முன்னிலையில் தேவர்களைக் குறித்துத் தீ வளர்க்க வேண்டியது.

211. முதலில் அக்னி, சோமன், யமன் இவர்களுக்கு தீயில் அன்னத்தை ஓமம் செய்து பின்னர் பிதுர்க்களுக்கு ஓமம் செய்க.

212. பிரம்மசாரி, மனைவியில்லாத கிரகஸ்தன் இவர்கள் சிரார்த்தம் செய்தால், அங்கு வரிக்கப்பட்டு அமர்ந்திருக்கும் பிராம்மணன் கையில் அன்னத்தை யிடுதலே ஓமம் ஆகும்; ஏனெனில் அந்தணரே அக்னி வடிவினர் என்று வேத மறிந்த முனிவோர் கூறுகின்றனர்.

213. எழுந்தருளுகின்ற வேத பிதுர்க்கள் கோபமற்றவராய், தயையுடையோராய், தொன்மையானவராய், உலக நன்மையை விரும்புவோராய் விளங்குகின்றனர். எனவே அவர்களை தம்மில் ஆவாகனம் செய்து அவ்வடிவமாகவே அமர்ந்திருக்கும் பிராம்மணர்களின் கையில் ஓமம் செய்வது அக்னியிற் செய்ததேயாகும்.

214. ஓமத்தீயின் தென்புறமாகப் பிதுர்க்களைக் குறித்து அன்னத்தைச் சொரிந்து, பிண்டப் பிரதானம் செய்யும் இடத்தில் நுனியைத் தெற்கே வைத்த தருப்பையில் மூன்றிடத்தில் எள்ளும் நீரும் கைமறித்திடவும்.

215. பின்னர் ஓமம் செய்து மிகுந்த அன்னத்தை மூன்று உருண்டைகளாக்கி, முன்பு எள்ளும் நீரும் இறைத்த மூவிடத்திலும், தெற்கு நோக்கி மிகுந்தவாறே அவ்வுருண்டைகளைக் கைமறித்து வைத்துப் பின்னர் அவற்றின்மேல் மீண்டும் எள்ளும் நீரும் சொரிக.

216. பின்னர் எஞ்சி ஒட்டிக் கொண்டிருக்கும் பருக்கைகளை அந்த மூன்று உருண்டைகளின் அருகிலேயே சிதற

வேண்டியது. இது மேலும் முந்தைய மூன்று முன் தலை முறைப் பிதுர்க்களுக்காகும்.

217. பின் வடக்கு நோக்கி ஆசமனம் செய்து, மூன்று தரம் பிராணாயாமம் புரிந்து, தெற்கே திரும்பி ஆறு பருவ காலங்களுக்கும், பிதுர்க்களுக்கும் உரிய மந்திரங் களுடன் வழிபாடியற்றுக.

218. மிகுந்து தொன்னையிலிருக்கும் எள் கலந்த நீரைக் கைமறித்து தனித்தனி மூன்று பிண்டங்களையும் சுற்றி நீர் கீழே தரையில் விழுமாறு செய்க. பின்னர் மூன்று உருண்டைகளிலிருந்தும் கொஞ்சம் தனித்தனியே பருக்கைகளை எடுத்து மோந்து போட்டு விடவேண்டும்.

219. மேலும் அவற்றிற் சிறு பகுதிகள் எடுத்து, பிதுர் ஸ்தானத்தில் வரிக்கப்பட்ட அந்தணரின் உண்கலத்தி லிட்டு அவர் புசிக்குமாறு செய்க.

220 தகப்பனிருக்கும்போது தாய்க்குச் சிரார்த்தம் செய்கையில், பாட்டன், முப்பாட்டன், அவன் தந்தை ஆகிய மூவரையும் ஆவாகனம் செய்யலாம். தன் தகப் பனையே பிராம்மணனாக வரிக்கலாம்.

221. பாட்டனிருக்கத் தந்தை இறந்தால், தந்தை, முப்பாட்டன், அவன் தந்தை ஆகியோரைக் குறித்து சிரார்த்தம் செய்க.

222. அல்லது உயிருடனிருக்கும் பாட்டனை அவனு டைய ஸ்தானத்தில் அமர்த்தி மற்ற ஸ்தானங்களுக்கு வேறு பிராம்மணர்களையும் வரிக்கலாம்.

223. இலையில் இவர்களுக்குப் பிண்ட சேஷத்தைப் பரி மாறும்போது, அவர்கள் கையில் எள்ளும் தண்ணீரும் விட்டு, பிதுர்க்களின் பொருட்டுத் திருப்தியுண்டாகத் தக்க தென்று கூறி உண்பிக்க.

224. தயாரான அன்ன பாத்திரத்தை இரு கைகளாலும் பிதுர்க்களைத் தியானித்து பிராம்மணர் முன் வைக்கவும்.

225. ஒரு கையில் ஏந்தி மறுகையால் மூடாமல் ஒரே கையால் கொண்டு வந்து வைத்தால் அவ்வன்னம் இராக்கதர்க்காகிவிடும்.

226. அன்னம் பரிமாறுமுன்பே, வடை, கறியமுது, தயிர், நெய், தேன் இவற்றைத் தனியாகப் படைக்க வேண்டியது.

227. வடை முதலிய பட்சணம், பாயசம், கிழங்கு, பழம், சுவையுள்ள மாமிசம், மணமுள்ள நீர்—

228. இவற்றை, அவற்றின் சுவைகள் இனியன வென்று கூறியவாறே இலையில் கவனமாக உரிய இடங்களில் படைக்கவும்.

229. இவ்வேளையில் வேற்று நினைவுகளுடன், துயரக் கண்ணீர் சிந்துதல், சினம் கொண்டிருத்தல், பொய்கூறல், சிந்திய பருக்கையை மிதித்தல், இலையில் அன்னத்தைச் சிதறுமாறு படைத்தல் கூடாது.

230. அவசரமாகவும், கண்ணீருடனும் சிரார்த்தம் செய்தால் அதன் பலன் பிரேதங்களுக்காகிவிடும். சினத்துடன் செய்தால் பகைவருக்கும், பொய் கூறிக் கொண்டியற்றினால் நாய்க்கும், பருக்கையைக் காலால் மிதித்துக் கொண்டே படைத்தால் அரக்கரையும், இலையில் சிதறு மாறு போட்டால் பாவிகளையும் சிரார்த்த பலன் போயடைந்துவிடும்.

231. பிராம்மணர் விரும்பும் உணவு வகைகளைப் பொறுமையின்றி விருப்புடன் வழங்குக. அவர்கள் உணவருந்தி முடிக்கும் வரையில் பரம்பொருள் உண்மையைக் கூறு கின்ற நான்மறை யறங்களைப் படிக்க வேண்டியது. இதனால் பிதுர்க்கள் திருப்தியடைவர்.

232. வேதம், அறநூல், நீதிக்கதைகள், இதிகாசங்கள், புராணங்கள், தத்துவங்கள் இவற்றையும் இடையில் ஓதலாம்.

233. மகிழ்வுடன் பரிமாறும் ஒவ்வொன்றையும் மெதுவாகவும், அவற்றின் சுவைகளைக் கூறி உணர்த்தியும் அவர்கள் களிப்புடன் புசிக்குமாறு சிறுகச்சிறுகப் படைக்க வேண்டும்.

234. பெண் வயிற்றில் பேரன் வரின், அவன் பிரம்மசாரியென்றாலும், வீடு முழுதும் எள்ளிறைத்து, நேபாள தேசத்துக் கம்பளியை ஆசனமிட்டுச் சிரார்த்தத்தில் உபசரிக்க வேண்டும்.

235. சிரார்த்தத்தில் பெண் வயிற்றில் பிறந்த பேரன், நேபாளத்துக் கம்பளம், எள் இவை மூன்றும் மேன்மையாகும். ஆசாரம், சினமின்மை, நிதானம் இம் மூன்றும் பிதுர்க்களால் போற்றப்படுபவையாகும்.

236. ஆறிப் போகாமல் படையல் இருக்க வேண்டும் உண்போரும் வாய் பேசாமல் உண்ணவேண்டும். எப்படியிருக்கிற தென்று சிரார்த்தம் கொடுப்போன் கேட்ட போதும் அதில் குறைகளைக் கூறக்கூடாது.

237. சூடு ஆறுத வரையிலும், மௌனமாகவும், குறை சொல்லாமலும் உண்ணும் வரையிலும் பிதுர்க்கள் புசிக்கிறார்கள்.

238. தலையில் துணி போட்டுக் கொண்டோ, காலில் குறடு மாட்டிக்கொண்டோ, தெற்கு நோக்கியோ உண்பவற்றை இராக்கதர் பற்றுவராதலால் இவ்வித மெல்லாம் செய்தல் கூடாது.

239. சண்டாளன், பன்றி, கோழி, நாய், விலக்கான பெண் இவர்கள் அந்தணர் உண்ணும்போது காணமல் காத்திருக்க வேண்டும்.

240. தீ வளர்த்தல், பசு பொன் முதலிய தானம், தெய்வ பூஜை, பிதுர் சிரார்த்தம் இவற்றை மேற் சொன்னவர் காண நேரின் பயனற்றுப்போம்.

241. பன்றியின் மோப்பம், கோழியிறகின் லாடை, நாயின் பார்வை, தாழ்ந்தோர் தீண்டுதல் இவற்ருல் அசுத்தம் ஏற்படும்.

242. நொண்டி, ஒரு கண் பொட்டையன், வேலைக் காரனை தாழ் குலத்தோன், விரல் குறைந்தும் மிகுந்தும் உள்ளவர் இவர்கள் சிரார்த்த நாளில் வீட்டை விட்டு வெளியேற்றத் தக்கவர்.

243. சிரார்த்த பிராம்மணர் புசிக்கும் காலத்தில் வரும் பிரம்மசாரிக்கும், விருந்தாக வரும் அந்தணர்க்கும் சிரார்த்த பிராம்மணர் அனுமதியுடன் உணவு கொடுக்கவும்.

244. சிரார்த்தப் பிராம்மணர்க்குப் பரிமாறியபின், பதார்த்தங்கள் அனைத்திலும் சிறிதெடுத்து ஒரு கவளச் சோற்றுடன் கலந்து, அவர்கள் உண்ட பின்னர் அவர்களுக் கெதிரில் மந்திரப்படி பூமியில் தருப்பையின் மீது வைக்கவும். இதன் பெயர் விகரம்.

245. உண்கலத்தில் மிகுந்ததும், தருப்பையில் இட்ட விகரமும், உபநயனமாகாதிருந்தவர்க்கும், காரணமின்றிச் சுற்றத்தால் கைவிடப்பட்டும், பதிவிரதையாகவும்இறந்த பெண்களுக்கும் திருப்தியைத் தருவனவாகும்.

246. மேற் சொன்ன மிகுதிப் பொருளை குற்றமற்ற தனது வேலைக்காரர்களுக்குப் பகிர்ந்தளிக்க வேண்டியது.

247. இறந்துபோன உடனே செய்யும் காரியங்களில் சபண்டீகரணத்துக்கு முன் ஏகாக சிரார்த்தத்தில் தேவப் பிராம்மண ஸ்தானம் தேவையில்லை. இறந்தவர்க்கான ஸ்தானத்தில் ஒரு பிராம்மணனை வரித்து ஒற்றைப் பிண்டம் போட வேண்டியது.

248. **சபிண்டீகரணம்** ஆனபிறகு அமாவாசை முதலானவற்றில் செய்யும் சிரார்த்தங்களை தேவதா ஸ்தானங்களுடனும் மூன்று பிண்டங்களுடனும் செய்க.

249. சிரார்த்த அன்னத்தில் மிகுந்ததை நாலாம் வருணத்தானுக்கு இடுபவன் கால சூத்ர மென்னும் நரகத்தில் தலைகீழாக விழுகிறான்.

250. சிராத்தப் பிராம்மணன் அன்று தன் மனைவியுடன் கூடினால், அம்மாத முழுவதும், அவனது மலத்தில் பிதுர்க்கள் அமிழ்ந்து கிடப்பார்கள்.

251. விகரம் வைத்த பின்னர், சிரார்த்த உணவு திருப்தியாயிற்றா என்று உண்ட அந்தணரை வினவிப் பின் கையலம்பத் தண்ணீர் கொடுத்து இஷ்டமான இடத்தில் அமருமாறு செய்யவும்.

252. அவர்களும் அப்படியமர்ந்தபின், கர்த்தாவை அவன் செய்த பிதுர்க் காரியம் பற்றி ஆசீர்வதிக்கவும்.

253. ஆசீர்வதிக்கப் பெற்றவன், மிகுந்த அன்னத்தை சிரார்த்தப் பிராம்மணர் அனுமதியுடன் அவர்கள் கட்டளைப்படி விநியோகிக்கக் கடவன்.

254. திருப்தி என்று அறிவிப்பதற்கான சொற்களாவன: **ஏகாகத்தில் ஸ்வரிதம், கோஷ்டியில் சுஸ்ருதம், காத்தீயில் சம்பந்தம், தேவ சிரார்த்தத்தில் ருசிதம்.**

255. அமாவாசை முதலான நாட்களில் பிற்பகல் தருப்பையாசனமிடுதல், பசுவின் சாணத்தால் வீடு மெழுகுதல், எள்ளிறைத்தல், குறைவற உண்பிப்பது, சுவையுடன் சமைப்பது, தூயரான அந்தணரை வரிப்பது இவை மேன்மையாகும்.

256. தருப்பை, மந்திரம், முற்பகல், அவி, இடத் தூய்மை இவை தேவ காரியத்துக் கேற்றவை.

257. அரிசிச் சோறு, பசுவின்பால், சோமரசம், அழு காத புலே, கல்லுப்பு இவை இயல்பாகவே அவியாகும்.

258. பிராம்மணர்களே நோக்கித் தென்முகமாய் நின்று பின் வருமாறு அவர்களிடம் வரம் கேட்க வேண்டும்.

259. ஸ்வாமி, என் குலத்தில் கொடையாளிகள் ஓங்கவும், ஓதுதல் ஓதுவித்தல் வேள்விகளால் மேன்மை யடையவும், சந்ததி வளரவும், வேதப் பொருளிலும், பொருளுணர்ந்த மேலோரிடம் பற்றும் நீங்காதிருத்தலும், கொடை வழங்கத்தக்க குறைவற்ற செல்வமும் நிறையச் செய்வீராக.

260. இவ்வாறு விண்ணப்பித்த பின், முன் வைத்த மூன்று பிண்டங்களிலும், வீற்றிருந்த பிராம்மணர் களிடமும் எழுந்தருளியிருந்த பிதுர்க்களே அவரவர்க்குரிய இடங்களுக்குச் சென்று விடுமாறு கேட்டுக் கொண்டு விட்டு, பிண்டங்களே பசு, பிராம்மணன், அக்னி, தண்ணீர் இவர்களுக்குச் சேர்ப்பித்து விடவும்.

261. இது பிராம்மணர் புசித்த பின்பே செய்யத் தக்கது. நெருப்பிலும் நீரிலும் மட்டுமின்றிப் பறவை களுக்கும் சிலர் போடுகிறுர்கள்.

262. நடுப் பிண்டத்தை, தன் குலத்தில் பிறந்து மூத்த மனேவியாக வந்த பதிவிரதைக்குக் கொடுத்துப் புசிக்கச் செய்யவும்.

263. அதனேச் சாப்பிடுவதால் ஆயுள், புகழ், பக்தி செல்வம், நற்குணம் வாய்ந்த சந்ததி தோன்றும்.

264. பின்னர் கால் கை தூய்மை செய்து கொண்டு, பங்காளிகட்கும், தாய்வழி உறவினர்க்கும் அன்னமிட வேண்டும்.

265. சிராார்த்த பிராம்மணர் சென்ற பின்னர் அவர்களது மிச்சிலே சுத்தம் செய்ய வேண்டியது. பின்னர் வைசுவதேவம், விருந்தோம்பல் நடத்த வேண்டியது.

266. நெடுங் காலமும் முடிவில்லாத காலமும் பிதுர்க்களுக்குத் திருப்தி தரும் சிரார்த்த முறைகளை முழுமையும் சொல்லுகிறேன்.

267. எள், செந்நெல் அரிசி, உளுந்து, நீர், கிழங்கு, கனி இவற்ருல் மனித பிதுர்க்கள் ஒரு மாதம் திருப்தி யடைவர்.

268. மீனுணவால் இரு மாதங்கள்—மான் மாமிசத்தால் மூன்று மாதங்கள்—செம்மறியாட்டுப் புலாலால் நான்கு மாதங்கள் பக்ஷி மாமிசத்தால் ஐந்து மாதங்கள் பிதுர்த் திருப்தியாகும்.

269. வெள்ளாட்டின் மாமிசம் ஆறு மாதம், புள்ளி மான் புலையால் ஏழு மாதம், கறுப்பு மான் மாமிசம் எட்டு மாதம், கலைமான் மாமிசம் ஒன்பது மாதம்.

270. முள்ளம்பன்றி, காட்டெருமைக் கடா இவற்றின் மாமிசத்தால் பத்து மாதம், முயல், ஆமை இவற்ருல் பதினேரு மாதங்கள்.

271. பசுவின் பால், தயிர், நெய் இவற்ருல் ஒருவருடம். இரண்டு காதுகளும் நீரில்பட முங்கிக் குடிக்கின்ற கிழ வெள்ளாட்டுக் கடா மாமிசத்தால் பன்னிரண்டு ஆண்டு களும்.

272. அந்தந்தக் காலத்தில் விளைகின்ற காய்கறிகள், வாளை மீன், கட்க மிருகம், சிவந்த ஆடு, இவற்றின் மாமிசத்தாலும், காட்டில் முளைக்கின்ற செந்நெல் அரிசியினு லும் செய்தால் எல்லையற்ற காலமும் பிதுர்க்கள் சிரார்த் தத்தால் திருப்தியுறுகின்றனர்.

273. மழை காலத்து, புரட்டாசி தேய்பிறை பதிமூன்றும் நாளில் தேனிலும் பாயசத்திலும் சிரார்த்தம் செய்தால் குறைவறத் திருப்தியடைவர்.

274. நம்முடைய வம்சத்தில் நமக்கு இவ்விதம் சிராத்தம் செய்யும் புத்திரன் பிறக்கட்டுமென்று பிதுர்க்கள் விரும்புகிறார்கள்.

275. எதையும் முழு விருப்புடன் சிராத்தம் செய்வதனாலேயே பிதுர்க்களுக்கு முழுத் திருப்தியும் ஏற்படுகிறது.

276. தேய்பிறை தசமி முதல் திதிகளெலாம் நாள் நீங்கலாக அமாவாசை வரையிலும் உள்ள நாட்கள் மாதசிராத்தத்திற்கு ஏற்றன. மற்றவை ஏற்காதவை. கலியுகத்தில் மாமிசம் நீங்கலாகச் செய்ய வேண்டியது என்று அறநூல் விளக்குவோர் திட்டமாகக் கூறியிருக்கின்றனர்.

277. துதியை முதலான இரட்டை நாட்களிலும், பரணி முதலான இரட்டை நட்சத்திரங்களிலும், மகாலய சிராத்தம் செய்பவன் எண்ணியவெல்லாம் எய்துவான். ஒற்றை நாட்கள் நட்சத்திரங்களில் செய்வோன் சந்ததியும் கல்வியும் பொருளும் அடைகிறான்.

278. வளர்பிறையைக் காட்டிலும் தேய்பிறையும், முற்பகலைவிடப் பிற்பகலும் சிராத்தத்திற்கேற்ற காலங்களாம்.

279. பூணூலை இடம்போட்டு, வலது கை மறித்து, செய்கின்ற இந்த விரலில் தருப்பை மோதிரமிட்டுச் சிராத்தம் ஒருவன் காலமெல்லாம் தவறாது செய்யக் கடவன்.

280. இரவு, அந்தி சந்திகள், பகல், முதல் யாமம் இவற்றில் நித்ய சிராத்தம் செய்யக்கூடாது. ஏனெனில் இவை ராக்கதர்களைச் சாரும்.

281. மாதம்தோறும் இவ்விதம் செய்ய வியலாமை நேருமானால், பனிக்காலம், இலையுதிர் காலம், மழைக் காலம் இவற்றில் ஐம்பெரும் வேள்விக்குப் பின் பிதுர் சிராத்தம் வருடத்தில் ஒருமுறையேனும் செய்க.

282. பிதுர் சிராத்தத்தில் செய்யும் ஓமம் வீட்டு நெருப்பில் கூடாது. எனவே பிராம்மணனுடைய கையி

லும் விதிப்படி வளர்த்த தீயிலும் இயற்றுக. மாத சிரார்த்தத்தை அமாவாசையில் மட்டுமே செய்க. இறந்த திதியில் செய்வதற்கு மாத்திரம் இது விலக்கு.

283. சக்தியற்றவன், நீராடி ஜலதர்ப்பணம் செய்தாலும் நித்ய சிரார்த்த பலன் கிடைக்கும்.

284. பிதுர்க்களை வசுதேவதைகளாயும், பாட்டனை ருத்ர தேவதையாகவும், முப்பாட்டனை ஆதித்யதேவதையாகவும் பழமையான வேதம் குறிப்பிடுகிறது; எனவே அவர்களை அந்தந்த தேவதைகளாகக் கொண்டு போற்றுக.

285. எப்போதும் பிதுர் சிரார்த்த மிகுதியாகிய விகசத்தையும் வேள்வியில் மிகுந்ததாகிய அமுதத்தையுமே ஒருவன் புசிக்கவேண்டியது.

286. இதுவரையில் பிதுர்க்காரியம் ஐம்பெரு வேள்வி இவற்றின் முறைகளைச் சொல்லி முடித்தேன்; இனி நால் வருணத்தாரின் வாழ்க்கை வழிகளைக் கூறுகிறேன், கேளுங்கள்.

மூன்றும் அத்தியாயம் முற்றிற்று.

## நான்காம் அத்தியாயம்

# பொருளியலும் தனி மனித ஒழுக்கும்

### அந்தணர் இல்லற ஒழுகு

1. அந்தணன், வாழ்வின் முதற்காலில் பிரம்மசாரீயாய் குருகுலவாசம் புரிந்து இரண்டாங்காலில் முறைப்படி திருமணம் புரிந்து இல்வாழ்வில் பொருந்துக.

2. தனக்கு அபாயம் வந்தாலன்றி, எந்த ஜீவனுக்கும் தன்னால் யாதொரு தீங்கும் நேரிடாவண்ணம் தனது வாழ்வின் தேவைகளை நிறைவேற்றிக் கொள்க.

3. பழிப்புக்கிடமில்லாமல், விதிக்கப்பட்ட தொழில்களினால் மட்டுமே தனது குடும்ப வாழ்வுக்கான பொருளை சரீர உபாதையின்றி விதிப்படி தேடிக்கொள்ள வேண்டும்.

4. ருதம், அம்ருதம், ம்ருதம், பிரம்ருதம், சத்யாந்ருதம் இவ்வைந்துமே அந்தணனுடைய ஜீவனோபாயங்கள்.

5. கழனிகளிலும் சுற்றிலும் சிந்திக்கிடப்பனவும், களைத்துமேட்டில் கதிர்களில் உதிர்வதுமான நெல்மணிகளைப் பொறுக்கிச் சேர்த்தல் **ருதம்**; யாசிக்காமலே கிடைக்கப்பெறுகின்றவை **அம்ருதம்**, யாசித்து பிறரிடமிருந்து பெற்றுக்கொள்வது **ம்ருதம்**; பயிரிட்டு விளைவித்துப் பெறுவது **பிரம்ருதம்**.

6. வாணிபம் செய்து ஈட்டுதல் **சத்யாந்ருதம்**. அந்தணன் இதனாலும் பிழைக்கலாம். தொண்டு புரிந்திருத்தல் நாய்ப் பிழைப்பாதலால் சேவகத் தொழில் "சநவிருத்தி" நீக்கத்தக்கது.

7. அந்தணனை இல்வாழ்வான் மூன்று ஆண்டுகளும் அதற்குமேலும் வேண்டிய தானியத்தைக் களஞ்சியப்படுத்தலாம். இயலாதோர் ஓராண்டுக் கானதையே

னும் சாலி விட்டுக்கொள்க. மூன்று நாளைக்கு மட்டும் சேர்த்துக் கொள்பவனாகவோ தேடிக்கொள்பவனாகவோ இருக்கலாம்.

8. மேற்கூறிய நால்வகையினரிலும் இறுதியில் குறிக்கப்பெற்றாரே மேலானவர்: உடைமைகள் இன்மையால் வேள்வி முதலியவற்றால் மறுமையின்பத்தைப் பெற வேண்டுமென்ற முனைப்பை விடுத்து எப்போதும் இறைவனையே எண்ணுகின்ற வாய்ப்பு இவர்களுக்கே இருக்கிறது.

9. பெரிய குடும்பத்தினன் மேற்சொன்ன ஐவகை முயற்சிகளாலும் தேவைகளை நிறைவேற்றிக் கொள்ளலாம். சற்றுச் சிறுகுடும்பி, வேள்விகள் புரிவித்தல், வேதம் ஓதுவித்தல், கொடை ஏற்றல் ஆகியவற்றால் பிழைப்பை நடத்திக் கொள்ளலாம். மேலும் சிறு குடும்பமுடையோர் முன்னிரண்டினாலும், ஆகச் சிறு குடும்பத்தினர் ஓதுவித்தலினால் மட்டும் ஜீவனோபாயம் காணலாம்.

10. ருத விருத்தியினால் ஜீவிப்போன் ஏழையாகவே இருப்பானாகையால், தீ வளர்த்தல், அமாவாசை, பூர்ணிமை, ஆக்ரயண இஷ்டிகளை மட்டும் இயன்றளவு செய்துவருதல் சாலும்.

11. விகடம் பண்ணியோ, பண்பிழந்த சொற்களைக் கூறியோ, பொய்யுரைத்தோ, இடம்பமாகப் பேசியோ, கோள் சொல்லியோ பிழைப்பது தீது.

12. தான்பெற்ற உணவு, நிதி, சுற்றம், சந்ததி, நட்பு இவற்றுடன் அமைந்து மகிழ்வுடன் வாழ்ந்து மறுமை இன்பம் நாடுக. ஏனெனில் மகிழ்வால் இன்பமும் கவலையால் துன்பமும் நரகும் கிடைக்கின்றன.

13. மேற்குறித்தவாறு நல்வழியில் வாழ்ந்துகொண்டிருக்கும் ஒழுக்கமுள்ள அந்தணன், விண்ணின்பமும், ஆயுளும், புகழும் தரவல்லவையான பின்வரும் விரதங்கள் புரிக.

14. அவனவன் வருணாசிரமத்துக்கு உகந்தவையென்று வேதத்திலும் அறநூல்களிலும் விதிக்கப்பட்ட அன்றாடக் கடமைகளைச் சோம்பரின்றிச் செய்க. அதனால் நற்கதியுண்டு.

15. பாட்டு, கூத்து, தகுதியற்றவனுக்கு வேள்விகள் இயற்றித் தருதல் போன்ற அறமல்லாத செயல்களால் பொருள் ஈட்டுதல் கூடாது. தன்னிடம் பொருள் இருப்பினும், இல்லாவிடினும் பாவிகளிடத்தில் தானம் பெறலாகாது.

16. புலனின்பங்களில் விருப்பம் செலுத்தாமலும், தன் மனைவியினிடத்தும் முறையின்றிக் காமம் கொள்ளாமலும், விஷய சுகங்கள் தன்னைக் கவரும்பொழுதும் அதனால்தான் இழந்துவிடக் கூடிய பேரின்பங்களை எண்ணி மனதை நல்வழி திருப்பியும் வாழக்கடவன்.

17. வேதப்பொருளை நாடும் நன்மனதைக் கலக்கும் செயல்களை ஒதுக்கிவிடவேண்டும். வேறு நன்முறையில் எப்படியேனும் ஜீவித்துக்கொண்டு வேதம் ஓதவேண்டும். அதனால்தான் இவனுக்குப் பயன்கிட்டுவதாகும்.

18. வயது, வேள்விக்கடமைகள், பொருள், குலம் இவற்றிற்குப் பொருத்தமான நடை, பேச்சு, சிந்தனைகளுடன் உலகில் விளங்கவேண்டும்.

19. ஞான நூல்களையும், பொருளியல், அறநூல்களையும், வேத விளக்கங்களையும் அன்றாடம் பயின்றிருக்கவேண்டும்.

20. அவனவன் கல்விமுறையை ஒட்டியே அறிவாற்றல்களும் மெய்ப்பொருள் நாட்டமும் உண்டாகிறது.

21. மூன்றாவது அத்தியாயத்தில் முன்கூறிய ஐம்பெரு வேள்விகளையும் இயன்ற அளவில் தவறாது கொண்டொழுக வேண்டும்.

22. வேள்விகளுக்கு லட்சியமாகத் திகழும் இறையுணர்வை, ஆசைகளை ஒழித்து ஞானமார்க்கத்தில் தம்மைச் செலுத்திய மேலோரே மேற்சொன்ன ஐம்பெரு வேள்விகளையும் இயற்ற வேண்டாதவர்கள்.

23. ஞானங்களைப் பிறர்க்கு உபதேசிப்பதிலும், இறைவன் புகழை வாயாரச் சொல்வதிலும், தங்கள் வாக்கையும், மூச்சை அடக்கித் தியானத்தில் இறை நிலையை நாடுவதனால் தங்கள் பிராணனையும் ஈடுபடுத்தி விடுவதன் மூலம், மூச்சும் பேச்சும் பெரு வேள்வியாக்கிக் கொண்டே மேலோர் பலர் உண்டு.

24. மற்றும் சில பெரியோர் ஞானத்தெளிவில் திளைப்பதன் மூலமே வேள்விகளின் பயனை எளிதில் இயற்றாது பெறுவர்.

25. காலை மாலையும் தீ வளர்க்க வேண்டியது. பக்ஷ நிறைவுகளிலும் இவற்றை விசேஷமாக இயற்றுக.

26. பழைய தானியங்கள் தீர்ந்துவிடுகின்ற கார்த்திகையில் புதிய அறுவடைத் தான்யங்களுக்கான "ஆக்ரயணேஷ்டி"யும், பருவங்களின் முடிவில் "சாதுர்மாசேஷ்டி" யும்—தட்சிணாயன, உத்தராயணப் பிறப்புகளில் "பசுவதேஷ்டி"யும் வருஷ முடிவு, பிறப்பு நாட்களில் "அக்னிஸ்தோமமும்" செய்ய வேண்டும்.

27. நீண்ட ஆயுளை விரும்புவோன், இவ்வாறு செய்யாமல் தானியமோ புலாலோ உண்ணக் கூடாது.

28. இப்படிச் செய்யாமல் உண்பவனுயிரை, அவனுடைய முத்தீயும் உண்டுவிடத் தலைப்படுகின்றன

29. இல்வாழ்வோன் தன்னிடம் வந்துற்ற விருந்தினரைதக்க ஆதனம், உணவு, படுக்கை, தண்ணீர், கிழங்கு, பழம் இவை கிடைக்கப் பெறாமல் வருந்த விடக் கூடாது.

30. தகாதன இயற்றுவோர், பூனையைப் போல் வஞ்சகமுடையோர், வேதத்தை நம்பாதவர், வேதாந்தத்திற்கு மாறான தர்க்கம்புரிவோர், கொக்கைப் போல் மோசக்கருத்துடையோர், இவர்கள் அதிதி பூசையின் போதுவந்த போதிலும் அவர்களை வாயுபசாரம் செய்தல் கூடாது.

31. வேதம் ஓதியவர், விரதானுஷ்டமுடையோர், இவ்விரண்டும் மேற் கொண்டோர் ஆகிய கிரஹஸ்தர்களை தேவ பிதுர்க் காரியங்களிலும் பூசித்து மற்றையோரை நீக்க வேண்டியது.

32. தனது குடும்பத்துக்குத் தீங்கின்றி, பிரம்மசாரி, சந்யாசி இவர்களுக்குப் பிக்ஷையும், பயன் மரங்களுக்கு நீரும் நல்க வேண்டும்.

33. நல்லொழுக்கமுள்ள இல்வாழ்வான், சோற்றுக்கும் உடைக்கும் வறிஞனாய்விடின், அரசன், தன்னைக் கொண்டு வேள்விகள் புரிவித்துக் கொண்டவன், மாணவன் இவர்களிடமிருந்து வேண்டியது பெறுக. இவர்கள் இருக்கும்போது வேற்றாரிடம் செல்லற்க.

34. வித்தையைக் கொண்டும், தானம் பெற்றும் பொருள் தேடாமல் இல்வாழ்வான் பசித்திருக்கக் கூடாது. செல்வமுடைமையின்போது கிழிந்த அழுக்குடைகளை உடுத்தக்கூடாது.

35. உரோமம், நகம், மீசை, தாடி இவற்றை முறைப்படி சவரம் செய்து கொண்டு, நோன்பும் உண்ணுமையும் கூடியவனாய், தூய்மையுடன், அழுக்கற்ற ஆடையுடுத்தி, வேதப் பயிற்சியுடையவனாய், உடல் நலம் தரும் மூலிகைகளை உட்கொண்டு வாழ்ந்திருக்கக் கடவன்.

36. மூங்கிற் கோல், நீர்க்கமண்டலு, பூணூல், தருப்பை, மோதிரம், செவிகளில் பொற்குழைகள் இவை பூணத்தக்கன.

## விலக்கத்தக்க செயல்கள்

37. உதயசூரியன், அஸ்தமன சூரியன், கிரஹண சூரியன், நீரில் சூரிய பிம்பம், உச்சி வேளையில் சூரியன் இவற்றைக் காணலாகாது;

38. கன்றின் தளைக் கயிற்றைத் தாண்டலாகாது; மழையில் ஓடக்கூடாது. நீரில் தன்னிழல் காணலாகாது.

39. வழிப்போக்கில் எதிர்ப்படும் மண்மேடு, பசு, தெய்வம், அந்தணன், நெய்க்குடம், தேன்குடம், நாற்சந்தி, அரசு முதலிய புண்ணிய மரங்கள் இவற்றை வலம் செய்து போகவும்.

40. மிக்க காமியாயினும், மாதவிலக்கான மூன்று நாட்களுக்குள் மனைவியுடன் கூடுதல் தீது. ஒரே படுக்கையிலிருத்தலும் தீது.

41. அப்படிக்கின்றி அவளைக் கூடுவோனுக்கு ஞானம், ஒளி, வலிமை, பார்வை, ஆயுள் இவைகள் குறைந்து போகும்.

42. விதிக்கப்பட்ட நாட்களில் இல்லின்பம் நுகர்வோனுக்கு மேற் சொன்ன மேன்மைகள் பெருகும்.

43. ஒரே பாத்திரத்தில் மனைவியுடன் உண்ணுதல் தகாது. இருமல், கோட்டுவாய், கவனக்குறைவாய் அமர்ந்திருத்தல் ஆகிய நிலைகளில் மனைவியைக் கணவன் பார்க்கலாகாது.

44. கண்ணுக்கு மையெழுதும் போதும், எண்ணெய் நீராடும் காலையும், மேலாடையில்லாத போதும், பிரசவ அறையிலும் பார்க்கலாகாது.

45. ஒற்றை வேட்டியுடன் இல்லறத்தான் உண வருந்தலாகாது. ஆடையின்றி நீராடலாகாது. நடைபாதை, சாம்பர், மாட்டுத் தொழுவம் இவற்றில் மலஜலம் கழித்தலாகாது.

46. உழுநிலம், நீர் நிலை, யாகசாலை, மலை, பாழுங் கோவில், புற்று இவற்றிலும் மலஜலம் கழிக்கக் கூடாது.

47. உயிர்கள் உறைகின்ற நில வெடிப்புக்களிலும் நின்ருே, நடந்தோ, ஆற்றங்கரையிலும், மலையுச்சியிலும் அப்படிச் செய்யலாகாது.

48. வாயு, அக்நி, பிராம்மணன், சூரியன், ஜலம், பசு இவற்றைப் பார்த்தவாறே கழிப்பதும் தவறு.

49. கழிவிடங்களை, வேள்விக்குதவாத கழி, கற்கள், இலைகள் செத்தைகளால் மறைத்தும், மேலாடையைத் தலையில் சுற்றிக் கட்டியும் அமர்ந்திருந்து கழிக்கவும்.

50. பகல், வைகறை, மாலை நேரங்களில் வடக்குமுக மாயிருந்தும் இரவில் தெற்கு நோக்கியிருந்தும் உபாதை களைக் கழிக்கவும்.

51. நிழல், இருள் இவற்ருல் திசையறியாவிடினும், புலி திருடர்களால் அச்சமுண்டான விடத்தும், இஷ்டம் போல் இருந்து உபாதைகளை நீக்கலாம்.

52. அக்னி, சூரியன், சந்திரன், நீர், அந்தணன், பசு, வாயு இவர்களுக்கு எதிர் அமர்ந்து கழித்தலினுல் ஞானம் அழிந்து போகும்.

53. நெருப்பை வாயினுலூதக்கூடாது. பள்ளியறை யிலன்றி மாதரை நிர்வாணமாகக் காணலாகாது. அழுகிய அசுத்த பதார்த்தங்களை நெருப்பில் போடக்கூடாது, நெருப்பில் பாலைக் காய்ச்சக்கூடாது.

54. உயர்ந்த இடத்தில் படுத்துக் கொண்டு கீழே தீயை வைத்திருக்கக் கூடாது. தீயைக் காலால் தாண்ட லாகாது. கால்மாட்டில் வைக்கக்கூடாது. உயிர்ச் சேதம் வருவிக்கலாகாது.

55. அந்தியில் உண்ணவும், வழிநடக்கவும், உறங்க வும் தகாது. பூமியைக் காரணமின்றிக் கீறக்கூடாது. தலை யில் சூடிய மலரைத்தானே எடுத்தெறியலாகாது.

56. நீரில் சிறு நீர், மலம், கோழை, மிச்சில் பட்ட பொருள், உதிரம், நஞ்சு இவற்றைக் கலக்கக் கூடாது.

57. குடியில்லாத வீட்டில் தனித்துறங்கலாகாது. வேதம் செல்வம் இவற்றால் உயர்ந்தோன் உறங்குகையில் எழுப்பலாகாது. மாத விலக்கான பெண்ணுடன் பேசக் கூடாது. அழைக்காமல் வேள்விச் செயல்களில் தானே வலிந்து புகலாகாது.

58. பசு நீரருந்தும் போதும், கன்று பால் குடிக்கும் போதும் இடைப்படலாகாது. மற்றோர்க்கு அதைத் காட்டவும் கூடாது. வானவில்லைக் கண்டால் பிறரை அழைத்துக் காட்டற்க.

59. யாகசாலை, பசுத்தொழுவம், அந்தணன் அருகு, வேதம் பயிலும் நேரம், உணவு வேளை, இவ்விடங்களில் வலது கையை மேலாடைக்கு வெளியே வைத்துக் கொள்ளவும்.

60. அறம் அறிந்தோர் அற்றதும், பிணி பரவியும் உள்ள ஊரில் வசிக்க வேண்டாம். தனி வழி கடத்தலாகாது. நெடுநேரம் மலைவாசம் தீது.

61. நாலாம் வருணத்தோன் அரசனாயிருக்கும் நாட்டிலும், அறம் அறியாதோரும், தீயொழுக்கமுடையோரும் வசிக்கும் கிராமத்திலும், பாவிகள் அருகுறையும் ஊரிலும் வசிக்கக்கூடாது.

62. சத்தில்லாத பிண்ணாக்கு போன்றவற்றைப் புசிக்கக்கூடாது. இரவு பகல்களிலும் சோற்றை மிகுதியாகக் கொள்ளலாகாது. வயிற்றில் பாதி அன்னமும், கால்பங்கு நீரும் கொண்டு மிகுதி கால் பாகம் காற்றுலாவவும் விடவேண்டும். சூரிய உதயம் அஸ்தமனம் இவற்றில் உண்ணக் கூடாது. பகல் உணவு விசேஷமாயிருந்தால் அல்லுணவு அகற்றத் தக்கது.

63. இம்மை மறுமைகளுக் குதவாத செயல்கள் புரியக் கூடாது. இரு கரங்களாலும் அள்ளி நீர் பருகலா காது. உணவுப் பொருளை மடியில் வைத்துப் புசிக்கலா காது. வீண் மகிழ்ச்சி கொள்ளலாகாது.

64. சாஸ்திர விரோதமாய், கூடத்திடவும், பாடவும், தண்ணுமை முதலிய கருவிகளிலிசைத்தலும் கூடாது; தோளைத் தட்டவும், பற்களை மூடிக்கொண்டு இருமுவதும், கழுதை முதலிய பிராணிகளைப் போல் ஒலிப்பதும் தகாது;

65. வெண்கலத்தில் நீரெடுத்துக் காலலம்பக்கூடாது. ஒடிந்த மண்பாண்டத்திலும், மனதுக் கொவ்வாத ஏனத்திலும் உண்ணக் கூடாது.

66. பிறர் உபயோகித்த செருப்பு, உடை, பூணூல், அணிகள், மலர், மாலை, கமண்டலம் இவற்றைத் தானும் அநுபவிக்கலாகாது.

67. பழக்கப் படுத்தப்படாமலும், நோயுற்றும், கொம்பொடிந்தும், குருடாயும், வாலறுந்தும், குளம்பு தேய்ந்தும் போன எருதுகள் பூட்டிய வண்டிகளில் ஏறக்கூடாது;

68. பழக்கப்பட்டவையாயும், விரைந்து செல்வன வாயும், பார்வைக்கு லட்சணமாயும், கண்கவர் வனப் பினவாயும் உள்ள எருதுகளை வண்டியில் பூட்டி அவற்றை அடிக்காமல் ஓட்டிப் போகலாம்.

69. இளவெயில், பிணப்புகை, உடைந்த இருக்கை இவற்றை நீக்குக. நகம் மயிர் இவற்றைத் தானே களைந் தெறியக் உடாது. நகத்தைப் பல்லால் கடித்திழுக்கக் கூடாது.

70. மண் கட்டிகளைக் காரணமின்றிப் போட்டுடைத் தல், புல்லைக் கை நகத்தால் கிள்ளுதல், பயனற்ற செயல் புரிதல், பின் வருந்த நேரும்படியானவற்றைச் செய்தல் இவை கூடாது.

71. மண் கட்டியைச் சும்மா உடைத்தல், நகத்தால் புல்லைக் கிள்ளுதல், பல்லால் நகம் கடித்தல், கோள் உரைத்தல், தூய்மையில்லாமை ஆகியவை அழிவுக்கே வித்தாகும்.

72. எல்லா விஷயத்திலும் தன் கட்சியையே வலியுறுத்திக் கொண்டிருத்தலாகாது. சிகைக்கு வெளியில் தெரியுமாறு மலர் சூடலாகாது. எருதின் மேல் அமர்ந்து செல்லல் கூடாது.

73. வாயில் மூடப்பட்ட ஊர், வீடு இவற்றில் வேறு வழியால் நுழைதல் சரியன்று. இரவில் மரத்தடியில் தங்கலாகாது.

74. சொக்கட்டான் போன்ற விளையாட்டுக்கள் ஒருபோதும் ஆகாது. செருப்பு, நடையன் இவற்றைத்தானே தன் கரத்தாலேந்திச் செல்லக் கூடாது. படுக்கையில் அமர்ந்தவாறும், இடது கையில் சோற்றை வைத்துக் கொண்டும், உட்காரும் பலகையில் இலை போட்டும் உணவருந்தல் தீது.

75. எள்ளில் தயாரித்த எதையும் இரவில் உண்ணற்க. கோவணமின்றித் துயில் புரியலாகாது. உண்டபின் மிச்சில் பட்ட கரங்களைக் கழுவாமல் வெளியே போகலாகாது.

76. கை கால் கழுவிக் கொண்டு அந்த ஈரம் உலரு முன்பே புசிக்கத்தொடங்குக. காலீரம் உலர்ந்த பின்னரே, படுக்கச் செல்க. ஈரக் காலுடன் சாப்பிடுவோனுக்கும் ஆயுள் நீளும்.

77. அடர்ந்த புதரில் நுழையற்க. மலஜலங்களைக் காணற்க. ஆற்றின் குறுக்கே கையால் நீந்திக் கடக்க வேண்டாம்.

78. மயிர், சாம்பர், எலும்பு, ஓட்டாஞ்சல்லி, மண்டையோடு, பஞ்சு, உமி இவற்றில் தெரிந்து பாதம் படுவதும் நிற்பதும் ஆயுளை விரும்புவோன் செய்யக் கூடாது.

79. பாவிகள், புலையர், புழுக்கையர், மூர்க்கர், கர்வி கள், தாழ்ந்த சாதியினர், வலைஞர் இவர்களுடன் மர நிழலில் கூட ஒன்ருக இருக்கக் கூடாது.

80. நாலாம் வருணத்தாருக்கு, பொருளியல் போன்ற இம்மைப் பயன்தரு நூல்கள் கற்பிக்கலாகாது. தனது சிட னல்லாத அவனுக்கு தனது மிச்சிலை வழங்கலாகாது. ஓமம் செய்த மிகுதியையும் அவனுக்குக் கொடுக்கக் கூடாது; அறம், நோன்பு இவற்றை அந்தணன் முன்னிலையின்றி அவனுக்கு உரைத்தல் தகாது.

81. அப்படி ஒரு அந்தணன் உபதேசிப்பானுயின் இரு வரும் அசம் விருதம் என்னும் இருளில் மூழ்குவர்.

82. தலையில் இரண்டு கையும் கொண்டு சொரியக் கூடாது. சாப்பிட்டுக் கைகால் சுத்தம் செய்யாமல், இடது கையால் கூடத் தலையைத் தொட்டுக் கொள்ளக் கூடாது; நோயுற்றிருக்கும்போது தலையை விட்டு உடம்பு மட்டும் குளித்தல் என்பது கூடாது.

83. சினந்து ஒருவன் சிகையைப் பற்றி ஈர்த்தலும், தலையிலடித்தலும் கூடாது. கூடலின்பத்தில் மனைவியின் கூந்தலைப் பற்றுதல் இதற்கு விலக்கு. ஒரே நாளில் தலை முழுகிய பின்னர் எண்ணெய் நீராடக் கூடாது.

84, க்ஷத்திரிய குலத்திற் பிறவாத மன்னன், கசாய்க் காரன், எண்ணெய் ஆட்டுபவன், கள் வியாபாரி, வேசை யின் தூதன் இவர்களிடம் தானம் வாங்கலாகாது.

85. ஒரு எண்ணெயாட்டுவோன் பத்து கசாய்க்கார ருக்கு இணையாவான். அவனினும் பதின்மடங்கு கள் வியா பாரி. அவனினும் பத்துப் பங்கு அதிகம் வேசைத்தூதன், அவனிற் பத்துப் பங்கு அதிகம் மேற்குறித்த மன்னன்.

86. இவ்வரசன் பதினுயிரங் கசாய்க்காரனுக்குச் சமதையாகிறபடியால் இவனிடம் தானம் பெறுவது மிகவும் கொடுமையாகும்.

87. பேராசையும், அறத்தை மதியாமையும், க்ஷத்திரிய குலத்தில் தோன்ருமையும் கொண்ட மன்னனிடம் தானம் பெறுவோன் இருபத்தோரு நரகங்களையும் அடைவான்.

88. தாமிஸிரம்—அந்ததாமிசரம்—மகா ரௌரவம்—ரௌரவம்—நரகம்—கால சூத்ரம்—மகா நரகம்.

89. சஞ்சீவனம்—மஹாவீசி—தபரம்— சம்பிரதாபநம்—சம்ஹாதம்—காகோலம்-குண்டலம்—பூதிமர்த்திகம்

90. லோக சங்கு—மிருஜீஷம்—பந்தா—சால்மலீநதி—அசிபத்ரவனம்—லோகதாரகம் ஆக இருபத்தொன்று.

91. இவற்றை அறிந்து—தரும சாத்திர வேத புராண வித்தைகளைக் கற்றறிந்த அந்தணன் தனது இம்மையின் இன்பங்களுக்காகவோ, மறுமையின் நலன்களுக்காகவோ கூட இவ்வரசனிடம் தானம் பெறுவதில்லை.

## வேதம் ஓதுதல்

92. இரவின் நான்காம் யாமத்தில் விழிப்புற்று அறம், பொருள் இவற்றைத் தேடும் வழியையும் அதனுல் வரும் உடல் உழைப்பையும் எண்ணிப் பின்பு வேதாந்த விசாரணையினுல் பரம்பொருளை உணரத் தொடங்கவும்.

93. பின்னர் எழுந்து, காலைக்கடன் முடித்து, மனதை அலைய விடாமல் சந்தியா வந்தனம் செய்து, ஆற அமர ஜெபம் செய்யவும்.

94. இப்படிச் செய்ததனுலேயே ரிஷிகள் நீண்ட ஆயுளையும், ஞானத்தையும், இம்மை மறுமைகளில் புகழும் தெய்வ ஒளியும் பெற்ருர்கள்.

95. அவரவர் சூத்திரத்திற் கேற்றவாறு, ஆவணி அல்லது புரட்டாசி பௌர்ணமிகளில் பூணூல் அணிந்த நாலரை மாதங்கள் தொடர்ந்து வேதம் ஓதக் கடவன்.

96. தை அல்லது மாசி தேய்பிறை முதல் நாளில் பகற் பதினைந்து நாழிகைக்கு முன்னர் ஊருக்கு வெளியில் "உச்சர்ஜநகர்மம்" என்ற விரதத்தைச் செய்து வேதம் ஓதுதலை முடிக்க வேண்டியது.

97, இப்படிச் செய்தபின் மூன்றுநாள் அல்லது தொண்ணூறு நாழிகை அல்லது ஒரு நாள் ஓதாமல் இருக்கவும்.

98. பின்னர் வளர்பிறையில் மந்திரப் பிரமாணங் களையும் தேய்பிறையில் வேதத்தின் அங்கங்களையும் பரிசுத்தனால் ஓத வேண்டியது.

99. வேதம் ஓதுகையில், எழுத்து —சுரம்-இவற்றைத் தெளிவாக ஓதவேண்டும். நாலாம் வருணத்தான் அருகில் இருக்குங்கால் ஓதலாகாது. வைகறையில் வேதம் ஓதிய களைப்பால் பின்னர் உறங்கலாகாது.

100. வேதம் ஓதக்கூடாத நாளிலும், நிதம் புரியத் தக்க காயத்ரியை விடாமல் ஜெபிக்க வேண்டும். விசேஷ வேத மந்திரங்களை மட்டும் கர்மாதிகள் நிகழும்போது படிக்கலாம்.

101. வேதம் ஓதும் முறையை சீடனும் குருவும் எப்போதும் பின்பற்றுக.

102. மழைக் காலத்தில் காதைக் குடைந்து காற் றடிக்கும்போதும், பகலில் புழுதி யெழுப்பும்போதும் ஓதற்க.

103. மின்னல் இடியுடன் மழை சொரியும்போதும் பெரிதாய் தூமகேது விழும்போதும், அப்போதுதொடங்கி மறுநாள் அதே நேரம்வரை ஓதாமை தக்கதென்று மநு கருதுகிறார்.

104. மின்னல் இடியாகியவை மழைக் காலத்து மாலைக் காலங்களில் ஏற்படினும், மற்ற பருவங்களில் அந்தியில் மேகங்கள் சூழினும் ஓதலாகாது.

105. எந்தக் காலமாயினும், இடி, பூமியதிர்ச்சி, விண்மீன் வீழ்ச்சி ஆகியவை நேருங்கால் தொடங்கி மறு நாள் அதே நேரம் வரை நிறுத்துவதும் அநத்யயனம்.

106. வைகறையில் இடி மின்னல் மட்டுமிருந்து மழை பெய்யாவிடின் அன்று நண்பகல் மட்டும், மாலை நேரிட்டால் ஒருநாள் முழுதும் நிறுத்துக.

107. ஊரில், துர்நாற்றம் எழுந்தால் அது அடங்கும் வரையில் புதிதாய் ஓதுவோரும் ஒப்புவிப்போரும் ஓதாதொழிக.

108. பிணம் கிடக்கும்போதும், பாவிகளருகிலும், அழுகைக் குரல் கேட்பினும், பெருத்த கூட்டத்தின் இடையிலும் ஓதாமை நன்று.

109. நீரிலும், நள்ளிரவிலும், கடன் கழிக்கும்போதும் எச்சிலுடன் இருக்கும்போதும், சிரார்த்தத்திற்குத் தான் அழைக்கப்பட்டிருக்கையிலும் வேத நினைவே கூடாது.

110. நவசிரார்த்தம் வாங்கியபோதும், அரசனுக்கு பிள்ளை பிறந்திருக்கும்போதும், கிரஹணத்திலும் மூன்று நாட்கள் வேதம் ஓதுதல் கூடாது.

111. ஏகாகம் சாப்பிட்டவன், அந்த உணவில் கலந்த எண்ணெய் வாசனை, அன்னம் முதலானவை ஜீரணமாகிற வரையில் ஓதாமை வேண்டும்.

112. சயனித்துக் கொண்டும், கால்களை நீட்டியவாறும், யோகாசனமாய் அமர்ந்தும், புலால் புசித்துவிட்டும், பிறப்பிறப்புச் சடங்குகளில் விருந்துண்டும், வேதம் ஓதலாகாது.

113. பனி மழை பெய்யும்போதும், அம்பெய்யும் ஓசையோ, வீணையொலியோ கேட்கும்போதும், காலை மாலை செவ்வானம் கூடியபோதும், அமாவாசை, பூர்ணிமை சதுர்த்தசி அஷ்டமி நாட்களிலும் வேதம் ஓதாமல் நிறுத்த வேண்டியது.

114. அமாவாசையில் ஓதுதலினால் குருவுக்கும், அஷ்டமி பௌர்ணமிகளில் ஓதினால், ஓதுகின்ற வேதத்திற்கும் அழிவுண்டாகுமாதலால், அவ்விதம் ஓதுதல் நீக்கத் தக்கது.

115. மண்மாரி பெய்கையிலும், திக்குகள் பற்றி யெரிகையிலும், குள்ள நரி, நாய், கழுதை, ஒண்டை ஆகியவை குரலெடுக்கும்போதும், பலபேருடைய இடையில் அமர்ந்திருக்கும்போதும் ஓதத்தகாது.

116. இடுகாட்டின் அருகிலும், கிராம எல்லையோரத்திலும், பசு மேய்ச்சல் காட்டிலும், சம்போகத்தின் போதும், தரித்திருந்த உடைகளைக் களையாமலும், தென்புலத்தார்க் கிட்ட பலி யன்னத்தை உண்டிருக்கும்போதும் ஓதுதல் கூடாது.

117. தென்புலக் கடன்களில் பசு, குதிரை, ஆடை இவற்றைத் தானம் பெற்றபோதும், ஓதக் கூடாது. ஏனெனில் அந்தணனின் கரமே வாயாகவும் மதிக்கத்தக்கது. கைகளால் தானம் பெற்றபோது ஓதுதல் தடுக்கப்பட்டது.

118. ஊரில் கள்வரராலோ, தீயாலோ அபாயம் நேர்ந்தபோதோ வேறு விபரீதங்கள் நேர்ந்தபோதோ மறுநாள் அந்நேரம் வரை ஓதலாகாது.

119. ஆவணி, புரட்டாசிகளில் உபாகர்மம் ஆன பின்பும், தை, மாசி மாதங்களில் உச்சர்ஜனமான பின்பும் மூன்று முழு நாட்கள்—மார்கழி தொடங்கி மூன்று தேய்பிறை அஷ்டமிகள்—சித்திரை, ஆடி ஐப்பசி, தை மாதப் பிறப்புகள் இவற்றில் ஒரு பகலிரவு முழுவதும் விலக்கப் பட வேண்டியது.

120. குதிரை, மரம், யானை, ஓடம், கோவேறு கழுதை, ஒட்டகை, மற்றும் வண்டி முதலிய வாகனங்களில் இவர்ந்து செல்லுங்காலையிலும், களர் நிலத்தில் இருந்தும் ஓதத்தகாது.

121. தர்க்க வாதங்கள், ஆயுதப் போர்கள் நடைபெறும்போதும், படையினருகில் நின்றும், போரினிடையிலும், புசித்த கையுலராமலிருக்கும் போதும், உணவு செரிக்காத காலத்திலும், வாந்தியெடுத்தபோதும், புளியேப்பம் வரும் காலத்திலும், பிறப்பு இறப்புத் தீண்டலிலும் ஓதலாகாது.

122. விருந்தினர் வந்தபோது அவரிடம் அனுமதி பெருமலும், பெருங் காற்றடிக்கும்போதும், காயம் பட்ட போதும், உதிரம் சொரியும்போதும் ஓதலாகாது.

123. சாமவேத கானம் பண்ணும்போது, ருக் யஜுர் வேதங்கள் ஓதக்கூடாது. ஒருமுறை வேத முழுவதும் ஓதி முடிந்தபின்பு மறுமுறை ஓதுதலும், ஆரண வேதம் ஓதிய பிறகும் அன்றைய தினம் மீண்டும் வேதம் ஓதல் தீது.

124. இருக்கு வேதம் தேவர்களையும், யஜுர் வேதம் மானிடரையும், சாமவேதம் பிதுரர்களையும் தேவதைகளாகப் பெற்றுள்ளபடியால் சாமவேத சப்தம் தூய்மைக் குறைவுடையதாகும்.

125. வேதங்களின் தேவதைகளைப் பற்றித் தெரிந்த வித்வான்கள் அன்ருடம் செய்யும் பிரம்மயக்ஞத்தில் மூன்றையும் முறையே ஓதுகிருர்களு. வேத லட்சணங்களை முதலிலும், வேதங்களைப் பின்னரும் ஓதுகிருர்கள்;

126. பசு, தவளை, பூனை, நாய், பாம்பு, ஓணான், எலி இவை குருவுக்கும் சீடனுக்கும் இடையில் புகுந்து ஓடு மானுல் அன்று முழுவதும் நிறுத்த வேண்டியது.

127. வேதம் ஓதாமைக்கு அசுத்தமான இடமும், தனது சரீர அசுத்தமும் காரணங்களென்று கருத வேண்டும்.

## பொது விதிகள்

128. மாத விலக்காகி முழுகி வந்த அன்றும், அமாவாசை, சதுர்த்தசி, அஷ்டமி, பௌர்ணமி நாட்களிலும், அனுஷ்டமானமுள்ள அந்தணன் தனது மனைவியுடன் சேரக்கூடாது.

129. சாப்பிட்ட பிறகு ஸ்நானம் செய்யலாகாது. நோயுற்ற போது முழுகக் கூடாது. பிறப்பு இறப்பு கிரகணம் இவை நேர்ந்தாலன்றி நள்ளிரவில் ஸ்நானம் செய்யக் கூடாது. நாளெல்லாம் இடையில் தரித்திருந்த வேஷ்டியுடனும், பழக்கமில்லாத குளங்கள் முதலிய நீர் நிலைகளிலும் இறங்கி முழுகக் கூடாது.

130. தெய்வச் சிலைகள், தாய், தந்தை, அரசன், விரதங்களை மேற்கொண்டவன், ஆசார்யன், யாக தீட்சையிலிருப்பவன் ஆகியோரின் உருவ நிழல்களைத் தெரிந்து மிதிக்கவும் தாண்டவும் தகாது.

131. நண்பகல், நள்ளிரவுகளிலும், தென்புலக் கடன்களில் புலாலுடன் உண்ட பின்னரும், அந்தி சந்திகளிலும் நாற் சந்திகளிலும் சென்று சும்மா நிற்கக்கூடாது.

132. மஞ்சனமாடிய நீர், சிறுநீர், மலம், உதிரம், கோழை, எச்சில் தம்பலம், வாந்திப் பொருள், இவற்றில் கால் வைக்கக்கூடாது.

133. பகைவன், அவனது மந்திரிகள் முதலிய நண்பர்கள், அல்வழி நடப்பவன், கள்வன், பிறன் மனைவி இவர்களுடன் உறவு கொள்ளக்கூடாது.

134. பிறன் மனையைக் கூடுவதைப்போல் இவ்வுலகில் ஒருவனது வாழ்நாளைக் குறைப்பது வேறில்லை.

135. இளைத்த அரசன், பாம்பு, அந்தணன் இவர்களை ஒருபோதும் அவமதிப்பவன் க்ஷேமத்தை விரும்புகிறவனாக மாட்டான்.

136. ஏனெனில் அம்மூவரும் தங்களுக்கு ஒருசமயம் கிடைக்கும்போது, தங்களை முன்பு அவமதித்தவனை முற்றும் வேரறக் களைந்து விடுவார்கள். எனவே அறிவுள்ளவன், இளைத்துப் போயிருக்கிறார்கள் என்று கருதி அவர்களை ஒரு போதும் அவமதிக்கக் கூடாது.

137. தான் இயற்றிய வியாபாரம் முதலியவற்றால் பெரும் நஷ்டம் உண்டான காரணத்தால், தன்னைத் துரதிருஷ்டசாலி என்று நொந்து ஒருவன் கொள்ளக் கூடாது; சாகுமளவும் பொருள் தேட முனைய வேண்டுமேயன்றி போய் விட்ட செல்வம் அருமையானதென்று எண்ணக் கூடாது.

138. கண்டது, கேட்டது இவற்றை உண்மையாகக் கூறுக. அதைப் பிறர்க்கு இனிமை தருவதாகவும் கூறுக. பிறருக்குத் தீங்கு தருகிற உண்மையையும், பிறருக்கு மகிழ்ச்சி தருவதாயினும் பொய்யையும் பேசக் கூடாது. இதுவே வேதங்கள் கூறும் பழமையான அறம்.

139. அமங்கலமானவற்றையும் மங்கல வழக்காகவே கூறிக் குறிப்பாலுணர்த்த வேண்டும். யாருடனும் வீணுகச் சண்டையிடவும், வாதிடவும் கூடாது.

140. புலரா முன்னமும், அத்தமித்த பின்னரும், நண் பகலிலும், தனிவழியே போதல் கூடாது. அறிமுகமில் லதேவனுடனும், தாழ்ந்த குலத்தானுடனும் வழி நடக்கக் கூடாது.

141. அங்கஹீனர்கள், ஆறு விரல் உடையவர்கள், கல்வியில்லாதவர்கள், முதியோர், குரூபிகள், வறிஞர்கள், ஈனர்கள் இவர்களை அவர்களது குறையைக் குத்திக் காட்டிப் பேசக்கூடாது.

142. சோற்றுக்கையுடன் இருக்கும்போது பசு அந்த ணன் தீ இவர்களை இடது கையாலும் தீண்டக் கூடாது. அசுத்தனுயிருக்கையில் வானத்தில் சூரிய, சந்திரர், நட்சத் திரங்களைப் பார்க்கக்கூடாது.

143. அசுத்தனுயிருக்கும் போது மேற்சொன்ன பசு முதலானவர்களைத் தொட்டுவிட நேர்ந்தால், உடனே தூய்மை செய்து கொண்டு, ஆசமனம் செய்து கொள்ள வேண்டியது.

144. நோயில்லாதபோது, தனது அவயவங்களையும் மயிரையும் மர்ம ஸ்தானங்களையும் தொடக்கூடாது.

145. மனோகரமான நறுமணக் கலவைகள் தரித்து, குருசேவை, அகம் புறம் தூய்மை, புலன் அடக்கம் இவற்

றுடன், ஜெபம் தீ வளர்த்தல் ஆகியவற்றில் சோம்பரின்றி இயங்கியிருக்க வேண்டியது.

146. இப்படி ஒழுகுவோருக்குத் தெய்வ மானிட அபாயம் கிடையாது.

147. சந்தியாவந்தன நேரம் தவிர ஏனைய போதெல்லாம் சோம்பரின்றி வேதம் ஓதுக. அந்தணனுக்கு இதனை உயர்ந்த செயலாகவும், ஏனையவற்றைத் தாழ்ந்தவையாகவும் கூறுகிறார்கள்.

148 வேதமோதுதல், அகம் புறம் தூய்மையுற்றிருத்தல், ஜெப தபங்கள், அஹிம்சை, இவற்றால் முற்பிறவியைப் பற்றிய அறிவும் ஒருவனுக்கு மேலோங்குகிறது.

149. முன்பிறவி யறிவுண்டாவதனால் மேலும் பிறவியறுக்கும் பொருட்டு, மேலும் வேதமே ஓதும் முயற்சியும், அதனால் மோக்ஷமும் உண்டாகிறது.

150. துயரங்களுக்கு மாற்றாக, பௌர்ணமி, அமாவாசைகளில் சாவித்ரி ஹோமம்—சாந்தி ஹோமம் இவற்றையும், மார்கழி மாதத்துத் தேய்பிறை அஷ்டமி நவமிகளில் பிதுர்க்களின் பொருட்டு, அஷ்டகா, அந்வஷ்டகா சிரார்த்தமும் தவறாதியற்ற வேண்டும்.

151. சிறுநீர், மலம் கழித்தல், காலலம்புதல், மனைவியுடன் தனித்திருத்தல் ஆகியவை அனைத்தையும், தனது தீ வளர்ச்சாலை யருகில் செய்யாமல் தொலைவில் புரிக.

152. கடன் கழித்தல், குளித்தல், பல் தேய்த்தல், எண்ணெய் தேய்த்தல், ஒரு கிராமமோ நகரமோ செல்லுதல், இவைகளனைத்தும் பகலுக்கு முன்னமே முடித்துக் கொள்ள வேண்டும்.

153. அமாவாசை, பூர்ணிமை முதலிய விசேஷ நாட்களில், தெய்வச் சிலைகளையும், மேலவனான அந்தணனையும், தனது மன்னனையும், குருவையும் தரிசனம் செய்க.

154. பெரியோர், தாய், தந்தை குரு ஆகியோர் தனது இல்லம் நாடி வந்நால், முறைப்படி வரவேற்று வணக்கம் சொல்லித் தனது இருக்கையை அளித்து அமர்த்தி, அருகிருந்து கைகூப்பி நின்று உபசரித்து, அவர்கள் செல்லுங்கால் பின்தொடர்ந்து வழியனுப்பி வைக்க வேண்டியது.

155. வேதத்திலும், அறநூல்களிலும் கூறப்பட்ட நற்செயல்களையும், வேதம் ஓதுதல் முதலிய கடமைகளையும், பெரியோரை வழிபடுதலையும் தயக்கமின்றிச் செய்க.

156. நல்லொழுக்கத்தால் நீண்ட வயதும், நல்ல சந்ததியும், குறைவற்ற செல்வமும், கிடைக்கின்றன. தீயொழுக்கத்தால் அவ்வாறே தீமை விளையும்.

157. கெட்ட நடத்தையுடையவன், நிந்தனையும் துயரமும், நோயும், அற்ப வயதும் அடைகிறான். ஆகையால் நல்லொழுக்கமே கைக்கொள்க.

158. வேறெந்த மேன்மைகளில்லாவிடினும், ஒழுக்கமும், அன்பும், பொறுமையின்மையும் மட்டுமிருப்பினும் ஒருவன் நூறு வயது வாழ முடியும்.

159. தன்னால் செய்யக்கூடாத சாகச காரியங்களில் ஒருவன் இறங்கக்கூடாது. தன்னாலியன்றவற்றைக் கவனமாய்ச் செய்ய வேண்டியது.

160. பிறரைக் கொண்டு பெற நேர்வது எதுவும் துன்பம். தானே எதையும் செய்து முடிப்பதே இன்பம். எனவே இன்ப துன்பங்களின் குறிப்பு இவையென்று உணர வேண்டியது.

161. எதனைச் செய்தால் மனதுக்கு மட்டற்ற நல்ல மகிழ்ச்சி உண்டாகுமோ, அதனைச் செய்வதும், மற்றவற்றை செய்யா தொழிவதும் நன்று.

162. ஆசார்யன், ஓதுவித்தவன், தாய், தகப்பன், குரு, அந்தணன், பசு, முனிவன் இவர்கள் தனக்கு எதிர் செய்தாலும், தான் அவர்க்கு எதிர் செய்யக்கூடாது.

163. தெய்வத்தை மறுப்பது, வேதம் தெய்வம் இவற்றைப் பழித்தல், பகை, ஆடம்பரம், அகந்தை, சினம், கொடுமை ஆகியவற்றை நீக்க வேண்டியது.

164 படைக் கலங்களை ஓங்கி ஒருவனை அடிக்கிறேனென்று கறுவுதல் கூடாது; அடிக்கவும் கூடாது. மகன், மாணவன், மனைவி ஆகியோர் தவறிழைத்தால் அவர்களைக் கயிற்றாலும் பிரம்பாலும் ஒறுக்கலாம்.

165. அந்தணனேயாயினும், ஒரு அந்தணனை அடிக்கக் கையோங்கினாலும் ஆயுதம் தூக்கினாலும் நூறாண்டுகள் தாமிசிரம் என்னும் நரகத்தில் வீழ்ந்து கிடப்பான்.

166. சினங் கொண்டு, செத்தை முதலியவற்றால் அந்தணனை அடித்தால் இருபத்தோரு பிறவிகள் நாய் முதலிய ஈனப்பிறவி எடுக்க வேண்டும்.

167. போர்க் களத்தில் தன்மீது பொருது நிற்காத அந்தணன் ஒருவனை, அவனுடம்பில் உதிரம் வரத்தக்க காயம் உண்டாக்கினால், அப்படிச் செய்தவன் இறந்தபின் அறியாமையிருளில் உழன்று பற்பல துன்பங்களை அடைவான்.

168. அப்படி இவனால் சிந்தப்பட்ட உதிரம் மண்ணில் விழுந்து எவ்வளவு புழுதியை நனைக்குமோ, அத்தனை ஆண்டுகள் பின்னர் நரகத்தில், அடித்தவனுடைய உதிரத்தை நாய் நரி முதலியவை குடிக்கின்றன.

169. ஆகையால் அறிந்தவன் அந்தணனை அவமானம் செய்வதும், அடிப்பதும், உதிரம் பெருகச் செய்வதும் கூடாது.

170. அறம் தவிர்த்தவனும், பொய்கூறிப் பொருள் ஈட்டுபவனும், கொலை விருப்புடையவனும், இம்மையில் இன்பம் பெறான்.

**ஒழுக்கம், சினம், நேர்மை, வஞ்சம்**

171. முறைப்படி நேர்மையாக நடப்பவன், துன்பம் நேரிட்டபோதும் பிறழக்கூடாது; ஏனெனில் நேர்மை

யற்ற வழிகளால் வருகின்ற இன்பங்கள் விரைவில் அழிந்து போய் விடுவனவேயாகும்.

172. நேர்மையற்ற செயல்களால் உடனே அபாயம் வராவிடினும், நாளடைவில் அச்செயல்கள் பெருகப் பெருக அவற்றின் வலிமை மிகுந்து, ஒன்றாய் வெளிப்பட்டு தீச்செயல் புரிந்தவனைத் தின்றொழித்துவிடும்.

173. தீவினையாளனுக்குத் துன்பம் விளையாவிடினும், அவனுடைய சந்ததிகளுக்கேனும் தீவினையின் பயன் வந்து கவ்வாமல் போகாது.

174. பிறரை வஞ்சித்தல் போன்ற தீவழிகளால் பெருஞ் செல்வம் பெற்று வாழ்கிறவனைப் போல உலகத் தார்க்குக் காணப்படினும், சந்ததமும் பகை வென்று வாகையும் பெறுபவனைப் போல் தோற்றமளித்தாலும், இறுதியில் அவை யாவும் மறைந்து பேருமில்லாமல் அழிந்து போவது உறுதி.

175. உண்மை, அறம், ஒழுக்கம், தூய்மை இவற்றில் எப்போதும் பற்றுக் கொள்ள வேண்டும். மாணவன், மனைவி, ஏவலரும் இவற்றைப் பின்பற்றச் செய்தலும் வேண்டும். வாய், கை. வயிறு இவற்றைக் கட்டவேண்டும். வாயடக்குதல் வாய்மை, கையடக்கம் தீவினை புரியாமை, வயிறடக்கல் கண்டது தின்ன விரும்பாமை.

176. அறவழி வராத பொருளும், இன்பமும், பின் னொரு காலத்தில் தனக்குத் துன்பம் தரும் செயலும், உலகோர் பழிக்கும் நடத்தைகளும், அறவே நீக்கத் தக்கன. களவாடிப் பெறும் பொருளும், வேள்விக் காப்பில் இருக்கும் விரதசாரி வாழ்க்கை நேரத்தில் பெறும் உடலின்பமும் அறவழியல்லாத பொருளும் இன்பமும் ஆகும். குடும்பியாயிருப்போன் தன்னுடைமையனைத்தை யும் தியாகம் செய்தல், பின்னொரு காலத்தில் தனக்குத் துன்பம் தரும் அறச்செயல் ஆகும். புலைப் புசிப்புடன் சிராத்தம் செய்தல் உலகோர் பழிப்புக்குரிய நடத்தை.

177. தனக்குப் பயனற்ற பொருளைக் கவர்தல் வீணாகச் சுற்றித் திரிதல், பிறன் மனையை ஆவலுடன் நோக்குதல், பலர் பழிக்கும் படியாகப் பேசுதல், கோணல் புத்தி, வஞ்சகம் இவற்றில் மனம் நாடாமல் நீக்க வேண்டியது.

178. யாதாமொரு நோன்பைக் கைக்கொள்வதில் தனது குலமரபுக்கும், அறநூல் துணிபுகளுக்கும் மாறு பாடுகள் இருப்பின், குடும்ப மரபினைக் கைக்கொள்வதே நன்று. அதனால் தீங்கு வரமாட்டாது.

179. தனக்கு வேள்விபுரிவித்த "ரித்விக்" தனது புரோகிதன், ஆசாரியன், அம்மான், விருந்தாடி, தன்னையண்டினவர், சிறார், முதியோர், பிணியாளர், மருத்துவன், தாயத்தார் மைத்துனன் முதலிய சம்பந்தி, மருகன் ஆகியோருடனும்,

180. தாய், தந்தை, உடன்பிறந்தாள், மருகி, சகோதரன், பிள்ளை, மனைவி, மகள், ஏவலன் ஆகியோருடனும் இடர்ப்படலாகாது.

181. இப்படி இவர்களுடன் இடர்ப்படாமல் வாழ்பவனுக்கு அறியாமற் செய்கின்ற பாவங்களும் வந்தணுகா. இவர்கள் புரிந்த பிழைகளை மன்னிக்கவும் செய்யும் இல்வாழ்வான் புண்ணிய லோகங்களை அடைவான்.

182. ஆசாரியன் பிரம்ம லோகத்திற்கும், தகப்பன் பிரஜாபதி லோகத்திற்கும், விருந்தினன் இந்திர லோகத்துக்கும், ரித்விக் தேவலோகத்திற்கும் அதிகாரமுடையவர்களாவர்.

183. உடன்பிறந்தாள், மருகி இவர்கள் அப்சர உலகத்திற்கும், மருகன் முதலிய உறன்முறையார் விஸ்வே தேவ லோகத்திற்கும், மைத்துனன் முதலிய சம்பந்திகள் வருண லோகத்திற்கும், தாயும் அம்மானும் பூலோகத்திற்கும் அதிகாரிகள்.

184. சிறியோர். முதியோர், தன்னையடுத்தோர், இவர்கள் வானுலகத்திற்கு அதிகாரமுடையோராவர். அண்ணன் தந்தைக்கு நிகராகவும், பிள்ளையும் மனைவியும் தனது சரீரமாகவும் கருதத்தக்கவர்.

185. வேலைக்காரர் தனது நிழலாகவும், மகள் தனது அன்பின் குறிப்பாகவும் விளங்குகிறார்கள். எனவே, இத் தகையோர் யாராலும் தனக்கு இடர் நேர்ந்தாலும், பொறுத்துக் கொள்ள வேண்டியது. மேற்கூறியவர்களைப் பேணுவதனால் அவ்வவர்க்கு அதிகாரமுடைமையாகக் கூறப்பட்ட உலகங்கள் ஒருவனுக்குக் கிடைக்கின்றன.

186. வேதம், கல்வி இவற்றை உடைமையினால் ஒருவன் தானம் பெறத் தகுதி பெற்றிருந்த போதிலும், ஒருவன் எப்போதுமே தானம் வாங்குவதிலேயே விருப்பம் கொள்ளலாகாது. தானம் வாங்குவதனால், அந்த அளவுக்கு ஒருவன் சம்பாதிக்கும் தெய்வீக ஒளியானது குறைவு படுகிறது.

187. மிகவும் பசியால் அல்லலுற்ற போதிலும், பாத்திரமறியாமல், பயனறியாமல், ஒருவன் தானம் வாங்கலாகாது.

188. பொன், மண், பரி, பசு, சோறு, ஆடை, எள், நெய் இவற்றைக் கல்வியற்றவன் தானம் பெற்றால், உலர்ந்த விறகில் தீப்பற்றித் தீய்தல்போல் அவன் தீய்ந்து போவான். பின்னர் மானிடப் பிறவியும் அவனுக்கு வாய்த்தலரிது.

189. கல்வியறிவில்லாதவன் தானம் பெறும் பொன் அவனது ஆயுளையும், சோறு, மண், பசு இவை அவனுடலை யும், குதிரை கண்ணையும், ஆடை தோலையும், நெய் அவனது ஒளியையும், எள் சந்ததியையும் ஒழித்து விடு கின்றன.

190. கல்வியின்றியும், தவ முயற்சி யில்லாமலும், ஒருவன் தானம் பெற விருப்பம் கொண்டால், கல் தோணி யால் ஆற்றைக் கடக்க முயல்பவனைப் போன்று, தானம் வாங்கிய பொருளுடன், வாங்கியவனும் முழுகிப் போவான்.

191. கல்வியற்றவன் எதையும் தானம் பெற அஞ்சுக. தானம் பெற்றது சிறிதே யெனினும், சேற்றில் சிக்கிய பசுவைப் போல் அல்லல் அடைகின்றான்.

192. பூனையைப் போல் வஞ்சகமும், கொக்கைப் போல் கொலை விருப்பும் கொண்டவனுக்குத் தருமம் அறிந்தவன் துளி நீரும் உதவலாகாது. வேதம் ஓதாதவனுக்குத் தானம் கொடுக்கலாகாது.

193. இம்மூவருக்கும் தான் நியாயமாய்ச் சம்பாதித்த பொருளையும் தானம் கொடுப்பின், கொடுத்தவனுக்கு உடனே துன்பமும், பெற்றோர்க்கு மறுமையில் திங்கும் உண்டாகும்.

194. கல் தோணியால் ஆற்றைக் கடக்க நினைப்பவன் தோணியுடன் முழுகிப் போவது போன்றே மூடனுக்குக் கொடுத்தவன் அம்மூடனுடன் தானும் அழிந்து போகிறான்.

195. தருமத்திற்கென்று சொல்லிப் பொருள் சேர்த்து, நாலு பேர் கவனிக்கும்போது மட்டும் தருமம் செய்வது போலப் பாவனை செய்கிறவன், பிறர் பொருளில் இச்சை கொண்டவன், சூதன், டம்பாச்சாரி, வஞ்சகன், துரோகி, பிறர் புகழ் கேட்கப் பொறாதவன்—

196. கீழ் நோக்குடையவன், கொடியவன், பிறர் நலனைக் கெடுத்துத் தன் நலனைக் காக்கும் சுயநலக்காரன், ஏமாற்றுகிறவன், பொய் அடக்கமுள்ளவன், கொக்குச் சூதன், இவர்களுக்குத் தானம் கொடுக்கலாகாது.

197. பூனை போன்ற வஞ்சகமும், கொக்கைப்போன்ற கொலைக் கருத்துமுடையோர் தாமிசிர மென்னும் நரகில் மூழ்குகிறார்கள்.

198. ஏதோ நற்கருமம் செய்பவனைப் போலப் பிறருக்குப் பாசாங்கு செய்து, அந்தரங்கத்தில் தனது பாவங்களுக்குப் பிராயச்சித்தம் செய்து கொள்ளுவது சரியன்று.

சிறுவர், பெண்கள் போன்றவர்களிடம் தனது பிராயச் சித்தக் காரியம் வெளிப்படாமல் இருக்கும் பொருட்டுத் தான் ஏதோ தர்ம காரியம் செய்வதாகப் பெருமை காட்டக் கூடாது. 'இன்ன பாவத்தைப் போக்கவே இச் செயல் புரிகின்றேன்' என்பதை வெளிப்படையாக அறிவித்தே செய்ய வேண்டும்.

199. கபடமாக இப்படிக் கழுவாய் தேடுவோர் இம்மை,மறுமைகளில் நிந்தையே பெறுவதுடன், அவர்கள் இயற்றும் கழுவாய்ப் பயனும் இராக்கதரைச் சேரும்.

200. இல்வாழ்வான் பிரம்மசாரி போன்று வேடம் பூண்டு பிச்சை யெடுத்தால், பெரும் பாவத்தையும், கோழி முதலிய பறவைப் பிறப்பையும் அடைகிருன்.

201. ஒருவனுல் வெட்டப்பெற்ற தடாகத்தில் ஒருவன் ஸ்நானம் செய்தால், அவனுடைய புண்ணியம் தடாகம் சமைத்தவனைச் சாரும். அவனுடைய பாவம் இவனைச் சாரும். ஓடும் நீர்நிலைகளில்லாவிடத்து, அந்தக் குளத்தி லிருந்து ஐந்து கைம்மண்ணளவு எடுத்துக் கரையில் போட்டுவிட்ட பிறகே அதில் முழுகலாம்.

202. வாகனம், படுக்கை, ஆதனம், கிணறு, தோட்டம், வீடு இவற்றை உடையவன் ஒப்புதலின்றித் துய்ப்பவன், உடையவனுடைய பாவத்தில் கால் பாகத்தை வாங்கிக் கொள்வோனுகிருன்.

203. ஆறு, புனித நதி, குளம், குட்டை, ஓடை, மடு இவற்றில் ஸ்நானம் செய்யலாம்.

204. அறிந்தவன் நல்லொழுக்கங்களை எப்போதும் கடைப்பிடிக்க வேண்டும். அவன் அன்ருடச் சமயச் சடங்குகளைச் சிறிது விட்டு விட்டாலும் பெரிதில்லை. நல்லொழுக்கங்களைச் சிறிது விட்டு விட்டாலும், சமயச் சடங்குகளை முற்றும் விட்டொழித்தாலும், ஒருவன் அழிந்து போவான். யமம் என்று கூறப்படும் ஒழுக்கங்களாவன:—பிரமசரியம், தயை, பொறுமை, தியானம், சத்தியம், நேர்மை, அஹிம்சை, திருடாமை, மகிழ்னு

யிருத்தல், புலனடக்கம் ஆக இவை பத்துமாம். நியமம் எனப்படும் சமயச் சடங்குகளாவன:— ஸ்நானம், மௌனம், உபவாசம், தேவ பூஜை, வேதம் ஓதுதல், கலவியின்மை, குரு பணிவிடை, பரிசுத்தம், சினமின்மை, எச்சரிக்கை ஆக இவை பத்தும்.

205. வேத கோஷங்களில்லாதவேள்வியிலும், பெண்களோ, பேடிகளோ இயற்றும் ஒன்றிலும், அந்தணன் புசித்தல் தகாது.

206. இவர்கள் இயற்றும் வேள்வித் தீயில் சொரியும் நெய் நல்லோர்க்குத் துன்பமும், தேவர்க்கு வெறுப்பும் உண்டாக்குவதால், இவற்றை மறுத்துவிட வேண்டும்.

207. பித்தன், கோபி, பிணியாளன் இவர்களின் விருந்து, ரோமம் புழு கலந்த உணவு, காலால் துவைத்த அன்னம்,

208. கொலை பாதகர் கண்ணெச்சிற் பட்டது, வீட்டு விலக்கானவள் உண்டு மிகுந்தது, காகம், நாய் இவை தீண்டியது,

209. பசு மோந்தது, தர்ம சத்திரத்தில் போட்டது, பிச்சைக்காரர்களைக் கூட்டி வழங்குவது, வேசையின் தானம்,

210. கள்வன், தெருப் பாடகன், வட்டி வாங்குவோன், வேள்விக் காப்பிலிருந்து அப்போதே வந்தவன், உலோபி, விலங்கிடப்பட்டவன், சிறையிருந்தவன் இவர்கள் தரும் அன்னம்,

211. ஐம்பெரும் பாவிகள், பேடி, குடிகேடி, இடம்பக்காரன் இவர்கள் போடும் அன்னம், திரிந்து போன பால், தயிர், பழவமுது, தாழ்ந்தவனுக்கிட்டு மிகுந்தது,

212. மருத்துவன், வேடன், கொடியவன், எச்சிற்பொறுக்கி, கலப்புச் சாதியான், அரசன் இவர்களால் இடப்படும் சோறு, பிள்ளைப் பேற்றினளுக்கு ஆக்கியது, உடனுண்போன் எழுந்து விட்ட பின் பரிமாறப்படுவது, தீட்டுக்காரனுடையது,

213. உபசரித்து உண்பிக்காதது, இறைவனுக்குப் படைக்காதது, வேள்விக்காகவன்றி வெறுமே சமைத்த புலால், கணவனோ மகவோ இல்லாத பெண் தயாரித்தது, பகைவன் இடும் சோறு, பாவியின் படையல், தும்மல் துகள் தெறித்தது,

214. கோள் கூறுவோன், பொய்ச் சான்று பகர்வோன், வேள்வியின் நற்பலனை விலை கூறுவோன், நட்டுவன், தோணிக்காரன், நன்றி கொன்றவன் இவர்கள் தரும் உணவு,

215. கருமான், வலைஞன், கூத்தாடி, பொற்கொல்லன், பிரம்பு வேலை செய்பவன், படைக்கலம் விற்போன் ஆகியோரின் விருந்துணவு,

216. வேட்டை நாய் வளர்ப்போன், கள் விற்போன், சாயக்காரன், காதகன், நடத்தை கெட்டவளின் கணவன் இவர்களது அன்னம்,

217. மனைவியுடன் கூடா வொழுக்க முடையவனை அறிந்து தன்னுடன் வைத்திருப்பவன், பெண்ணுக்கடங்கியவன், சாவுத் தீட்டுடையவன் இவர்கள் கையால் வழங்கப் பெறும் உணவு, மனதுக்குப் பிடிக்காத அன்னம் இவையனைத்தும் உண்ணத் தகாதவை யாகும்.

218. இத்தகைய சோற்றினைப் புசித்தால், அரசனிட்டது உயிரொளியையும், தாழ்ந்தவனிட்டது உண்மையொளியையும், பொற்கொல்லன் படைத்தது வாழ்நாளையும், செருப்புத் தைப்போன் தந்தது புகழையும்,

219. சோறடுவோன் தந்த சோறு சந்ததியையும், அழுக்குத் துணி தோய்ப்பவனுடையது வலிமையையும், பல பேருடன் கூட்டுணும் சோறும், வேசையின் விருந்தும் மறுமையின் நல்வாழ்வையும் கெடுப்பனவாகும்.

220. மருத்துவனிட்ட சோற்றால் சவர் நீரை உண்ட கேடும், குடிகைக்காரியின் உணவு வீர்யத்தை உண்டது போலவும், வட்டியால் பிழைப்போனிடம் வாங்கி உண்டது மலம் தின்றது போலும், படைக்கல வியாபாரி யின் சோறு மிச்சிலைப் போலுமாம்.

221. முறையே ஏனையோரின் உணவைக் கொள்வது தோல், ரோமம், எலும்பு இவற்றை உண்பதற் கொப்பாம் என்று பெரியோர் கூறுகின்றனர்.

222. எனவே அறியாமல் உண்டபோதும், மூன்று நாள் உண்ணு நோன்பு இருக்கவும். தெரிந்து உண்டால், மல, ஜல, வீர்யங்களைச் சுவைத்தது போலாகு மாதலால், மிகவும் கடுமையாக உண்ணு நோன்பிருக்கவும்.

223. வேள்வி முயலாத தாழ்ந்தவனிடம் உண்ணல் தகாது. வேறு பிழைப்பின்றேல், ஓரிரவு கழிப்பதற்குரிய தானியம் மட்டும் பெறுக.

224. உலோபியான அந்தணன், பெருங் கொடை யாளியாயினும் வட்டியில் பிழைப்போன் இவர்கள் தரும் அன்னம் தீமையுடையதென்று தேவர்கள் ஆய்ந்து துணிந்தனர்.

225. அவ்வமயம் தேவர்களிடம் பிரமன் கூறியதா வது:- தேவர்களே, அவ்விரண்டு வகையினர் சோறும் ஒன்றுக்கு ஒன்று இணையல்ல; வேறுபாடுடையனவே. ஏனென்றால் பெருங் கொடையாளி விரும்பிக் கொடுக் கிறான். உலோபி வழங்கும் அன்னமோ உண்மையாக, விருப்பத்துடன் தரப்படுவதன்று. எனவே, விரும்பிக் கொடுக்கும் பெருங் கொடையாளியின் உணவே சிறப்பு.

226. அன்றாடம் புரியும் வேள்வி, நீர்நிலை சமைத்தல் ஆகிய நல்லறங்கள் ஆகியவையும், அறத்தால் ஈட்டிய பொருளைக் கொண்டு இயற்றப் பெறுமேல், அவற்றை இயற்றுவோனுக்கு மறுமையில் அழிவற்ற மேன்மை யுண் டாகும்.

227 தானமோ, மேற்சொன்ன அறங்களோ, மனம் விரும்பி, தக்கார்க்குத் தக்க விடத்தில் செய்யத் தக்கனவாகும்.

228. எனினும், தகாதவனே யானாலும், தன்னை அணுகிச் சோறிடுமாறு இரந்தால், தயக்கமின்றி அவனுக்குச் சோறிடுக. அதனால் விளையக் கூடிய பாவம், தக்கார்க்குச் செய்யும் தானத்தால் நீங்கிப் போகும்.

229. தண்ணீர் வழங்குவோன் பசிதாகம் வருத்தாத மகிழ்வும், உண்டியளித்தவன் அழிவற்ற இன்பத்தையும், எள் வழங்கியவன் விரும்பிய சந்ததியையும், விளக் கேற்றித் தந்தவன் மேலான ஞானக் கண்ணும்,

230. பூதானம் செய்தவன் மண்ணரசும், பொன் கொடையளித்தவன் நீண்ட ஆயுளும், வீடு கொடுத்தவன் நல்ல வீடுகளையும், வெள்ளியை வழங்கியவன் நல்ல அழகையும்,

231. ஆடையளித்தவன் சந்திர லோகமும், பரி வழங்கியவன் அசுவினி தேவருலகையும், காளை கொடுத் தவன் குறைவற்ற செல்வமும், பசுவைத் தந்தவன் சூரிய லோகமும்,

232. ஊர்தி, படுக்கை உதவியவன் நற்குண மனைவி யையும், புகலளித்தவன் பெரும் பொருட் செல்வமும், தானியம் கொடுத்தோன் அழியா நலனையும், மெய்ப் பொருள் உண்மை உணர்த்தியவன் மெய்ந்நிலைப் பெரும் பதமும் பெறுவர்.

233. தண்ணீர், சோறு, பசு, மண், ஆடை, எள், பொன், நெய் இவற்றையெல்லாம்விட மெய்ப்பொருள் உணர்த்துதல் சாலச் சிறந்தது.

234. எனினும், எதனை மனத்திற் கோரி ஒரு தானம் வழங்குகிறானோ, அந்தக் கோரிக்கை நிறைவேறப் பெறுவான்.

235. மரியாதையுடன் தானம் கொடுப்பவனும் பெறுபவனும் ஒருங்கே மறுமை நல்லின்பம் பெறுவர். அதுபோன்றே மெய் விருப்பின்றிச் செய்யப்படும்போது இருவரும் நரகு எய்துவர்.

236. 'கடிய தவம் புரிந்தோ' மென்று செருக்கடையேல். வேள்வி முயன்ற பின் பொய்யுரை பகர்தல் கூடாது. அந்தணரை, அவரால் தொல்லையுற்றபோதும், அவமதித்தல் கூடாது. தான் கொடுத்த கொடையைப் பிறரறியப் பேசக்கூடாது.

237. பொய்மையால் வேள்வியும், செருக்கினால் தவமும், பெரியோரை அவமதிப்பதால் ஆயுளும், பிறரறியப் பேசுவதால் கொடை மேன்மையும் அழிவுறுகின்றன.

238. செல்லெறும்புகள் பெரும் புற்றை எழுப்புவது போன்றே, யாரையும் உறுத்தாமல், சிறுகச் சிறுக, உறுதியுடன், மறுமைக்கான புண்ணியம் தேட வேண்டும்.

239. தந்தை, தாய், பிள்ளை, பெண்டு, பங்காளி இவர்கள் மறுமைக்கு உடன் வர மாட்டார்கள். இயற்றிய நல்லறமே துணை நிற்கும்.

240. தனித்தே பிறந்து, தனித்தே இறக்கும் உயிருக்குத் தனது நல்வினை தீவினைகளே உறுதுணையன்றி, உற்றார் தம் இன்ப துன்பங்களன்று.

241. விறகு, மண்கட்டி போன்றே இறந்தவனை ஏனையோர் விட்டெறிந்து விட்டுச் சென்ற காலையும், வினைப்பயனே உடன் இருந்து உறைவது.

242. எனவே, நரகம் ஆகிய துன்பங்களைத் தாண்டும் நல்வழியே அறமாதலினால், நாடோறும் அறத்தாறு இயங்கி நிற்றல் நன்று.

243. நல்லறமே தேடியும், பாவம் நேரிடின், தக்க கழுவாய் புரிந்தும் ஒழுகும் ஒருவனை நல்லறம் ஒளி பொருந்திய தேகத்துடன் மறுமையில் உய்க்கிறது.

244. குலப் புகழ் விரும்புவோன், வேதம், தவம் இவற்றை முயல்வோருடன், இவற்றிற் சிறந்த குடும்பங்களுடன் சம்பந்தம் கொள்ளவும். தாழ்ந்தோருடன் உறவு கொள்ளல் கூடாது.

245. மெய்க் கல்வியாளருடன் நட்பிருந்தும், தாழ்ந்தவர் கேண்மை விலக்கியும், வாழும் அந்தணனே மேலானவன். அல்லாதான் தாழ்ந்தவனே யாவான்.

246. எண்ணியவாறே இயற்றியும், இன்ப துன்பங்களை இயல்பென ஏற்றும், தீயோர் இணக்கம், பிறரைத் துன்புறுத்தல் இவை விலக்கியும் வாழ்வோன், வேறு தவ முயற்சியின்றியே புலனடக்கமும், கொடையும் கொண்டே வானின் இன்பங்கள் பெறுவான்.

247. கட்டை, தண்ணீர், கிழங்கு, கனி, சோறு, தேன், அண்டினோரைக் காத்தல் ஆகியவை தான் கேளாமலே தனக்கு வாய்க்கும் போது, பாவிகள் அல்லாதாரிடம் இவற்றை ஏற்றுக் கொள்க.

248. நேரிடையாகவோ, ஒருவர் மூலமோ கேளாமலே தன்னை நாடி வந்து கொடுக்கப்படுகிற பொன், பொருள் யாதாயினும், பாவியிடத்திருந்தும் பெறலாமென்று பிரமன் கருதுகிறார்.

249. வலிய வந்த இவற்றை மறுப்போனுடைய படையலைத் தென்புலத்தார் பதினைந்தாண்டுகள் புசிப்பதில்லை. அவன் தரும் அவியை அக்னியும் தீண்டுவதில்லை.

250. நறுமணப் புகைப் பொருள், படுக்கை, வீடு தருப்பை, நீர், மலர், பொன்னணி, தயிர், அவல், மீன், பால், ஊன், காய்கறி இவை வலிய வரின் தள்ளலாகாது.

251. தாய், தந்தை, குரு, ஏவலர் இவர்களைப் பசியின்றிக் காப்பவன், தேவர், விருந்தினர் இவர்களைப் போற்றுவோன், யாரிடமும் தானம் பெறலாமாயினும், அதனால் தன் பிழைப்பை நடத்தக் கூடாது.

252. யாருமற்ற அனாதைகளும், ஒண்டியாக இருப்பவனும் நல்லோரிடம் இரந்து வாழலாம்.

253. விவசாயி, குடும்ப நண்பன், காலி மேய்ப்பவன், தொண்டடிமை, நாவிதன், பிழைப்புக்காக அண்டியவன் இவர்கள் தமக்கு மேலோரிடம் வாங்கிப் புசிக்கலாம்.

254. பிழைப்புக்காக ஒருவனை அண்டுகிறவன், தனது திறமை, இயற்றத் தெரிந்த பணி, தன் விருப்பம் இவற்றை உண்மையாகக் கூறி, உள்ளன்புடன் ஊழியம் செய்திருக்க வேண்டியது.

255. தனது குலத்தை மறைத்துக் கூறுவோன் தன்னைத் தானே வஞ்சிப்பவனாதலால், அவன் கள்வனைக் காட்டிலும் பாவியென்று உலகம் பழிக்கும்.

256. எண்ணங்களும், சொல்லும் வாயில் பிறக்கின்றன. பொய்யுரைப்போன் எண்ணம், சொல் யாவற்றிலும் பொய்மையே கொண்டவன்.

## வாழ்விறுதி

257. தேவ ருஷி பிதுரர்களுக்குரிய கடன் முடித்து, வேதம் படித்து, சந்ததி யடைந்து, அனைத்தையும் பிள்ளையினிடம் ஒப்புவித்து, தான் பற்றற்று வாழ வேண்டியது.

258. மறைவிலிருந்து ஆன்ம லாபம் கருதி நற்சிந்தனைகளில் முயன்றிருக்கவும். தனிமையில் இப்படித் தவமிருப்போன் மேலான இன்பம் பெறுவான்.

259. இல்வாழ்வானாகிய அந்தணனுக்கு விதித்த பழமையான பிழைப்பும், நல் மனப்பாங்கைத் தரும் செயல், கடன்களும் இதுவரை கூறப்பட்டன.

260. இதுகாறும் விளக்கிய ஒழுக்கங்களுடன் விளங்கும் அந்தணன் தனது ஒழுக்கத்தால் பாவமற்றவனென்று பிரம்மலோகத்தில் போற்றப்படுகின்றான்.

**நான்காவது அத்தியாயம் முற்றும்.**

## ஐந்தாவது அத்தியாயம்

# உணவு, சுத்தி, மாதர்

### உண்ணத் தக்கவை, தகாதவை

1. இவ்வாறான இல்லற ஒழுகுகளைக் கேட்டறிந்த முனிவரர், முன்னம் தீயினிடமாகத் தோற்றமுற்ற பிருகு முனிவரைப் பார்த்து உரை செய்யலாயினர்.

2. ஐயங்கள் யாவற்றையும் தெளிவிக்க வல்ல மேலோனே, முறையுடன் வாழ்கின்ற அந்தணர்தம் இல்லற ஒழுகுகளைக் கூறியருளினீர். மறை வல்லார்க்கும் இழி மரண முண்டாகும் காரணம்தான் என்னேயோ?

3. இவ்விதம் வினவப் பெற்றும், இப்பிறவியில் மநு மகனுயு மிருக்கும் அந்தப் பிருகு மகாமுனிவர், "அந்தணரைத் துன்மரணம் வந்து தீண்டுகிற விதத்தை விளக்குவேன்!" என்று கூறுவாராயினர்.

4. மறை யோத்ாமையும், தனது ஒழுகுகளை விடுவதனுலும், இயன்ற காலத்தும்கூட வழிபாடுகளைச்செய்யாமையும், தகாதனவற்றை உண்பதனுலும், இவர்க்குத் துன்மரணம் வருகிறது.

5. முள்ளங்கி, முருங்கை, மரத்திலும் மண்ணிலும் தோன்றும் காளான், கெட்ட இடத்தில் உண்டான காய் கறிகள் இவை இருபிறப்பாளர் உண்ணத் தகாதவை.

6. மரத்தில் இயல்பாகவும், கீறியதனுலும் உண்டாகும் செம்மெழுகு, உள்ளிப் பூண்டு, சீம்பால், அதன் தயிர் இவற்றைக் கவனத்துடன் தவிர்க்க வேண்டும்.

7. தெய்வங்களுக்கன்றி, தனது ஆசைக்குச் செய்த எள்ளோதரை, பாயசம், வடை, மந்திரத்துடன் வேள்விக்குப் பலியிடப்பட்டதல்லாத புலால், தேவதைகளுக்கு நிவேதனம் செய்யாத சோறு, அவிசு,

8. கன்று போட்டுப் பத்து நாட்களாகாத பசு, ஆடு, எருமை இவற்றுடையவும்—ஒட்டை, ஒற்றைக் கொம் புள்ள மிருகங்கள், பொலியும் பருவமுடைய பசு இவற்றி னுடையவும்.

9. செம்மறியாடு, சினைப் பசு, கன்றை யிழந்த பசு, பெண், காட்டெருமை தவிர்த்த ஏனைய மிருகங்கள் இவற்றுடையவுமான பால், புளித்துப் போன பால் இவற்றை முயன்று தள்ள வேண்டியது.

10. புளித்த தயிர், அதன் வெண்ணெய்—நீரால் புளிப்பேறிய கனி, கிழங்கு, மலர் இவற்றின் ஊறுகாய் கள்—இவை உண்ணத் தகாதன.

11. அரிசி, புலால் இவற்றை உண்ணும் பறவை, ஊரில் வாழ்கிற புறு, சாப்பிடத் தகாதவை யென்று வேதத்தால் விதிக்கப் பெற்ற ஒற்றைக் குளம்புடைய பிராணிகள், டிட்டிபம் என்ற பறவை,

12. ஊர்க்குருவி, நீர்க் காக்கை அன்னம், சக்ர வாகம், ஊர்க் கோழி, சாரச பக்ஷி, கயறுவாற் குருவி, நச்சுக் குருவி, கிளி, சாரிகை,

13. மரங்கொத்தி, சராரி, குருட்டு நாரை, காக்கை, விச்சுளி, ராஜாளி, வல்லூறு,

14. கொக்கு, நாரை, அண்டங்காக்கை, வலியன், முதலை, தெருப் பன்றி, பல்வகை மீனினங்கள் இவற்றை நீக்குக.

15. மாமிசம் பலவும் அவ்வவற்றை உண்டதாகவும், மீன் மாமிசம் மட்டும் எல்லா மாமிசங்களையும் உண்டது போலவும் ஆகுமாதலால், மீன் மாமிசம் நீக்கிவிடுக.

16. ஆனால் ஆயிரம் பல்லுடைய பாடிநஸமென்னும் மச்சமும், சிவப்பு நிறமுள்ள மீனும்,வேள்விக்கும், சிரார்த் தத்துக்கும் விதிக்கப்பட்டன. கும்பலாகத் திரியும்

மீனும், சிங்க முக முடையவை, முள் நிறைந்தவை ஆகிய மீன்கள் ஏனைய காலங்களிலும் ஏற்றுக் கொள்ளத் தக்கவை. எனவே நெருக்கடிக் காலத்தில் இவற்றைப் புசிக்கத் தடையில்லை என்பது கருத்து.

17. தனித் துலாவும் பாம்பு முதலியனவும், இனம் தெரிந்து கொள்ள முடியாத பறவை, விலங்குகளும், இவை உண்ணத் தக்கவை யென்று விதிக்கப்பட்ட வர்க்கங்களைச் சேர்ந்தவை யாயினும், தள்ளத் தக்கனவேயாம். ஐந்து நகங்களுடையனவும் அவ்வாறே.

18. முள்ளம் பன்றி, சல்ய மிருகம், உடும்பு, காண்டா மிருகம், ஆமை, முயல் இவை ஐந்து நகங்களுடையன வேனும், இவற்றையும், ஒட்டகம் தவிர்த்த ஒற்றைப் பல்லுள்ள மிருகங்களையும் உண்ணலாம்.

19. காளான், தெருப் பன்றி, வெங்காயம், ஊர்க் கோழி, உள்ளிப்பூண்டு இவற்றைத் தெரிந்தும் உண்ணும் இரு பிறப்பாளன் இழிந்தவனே யாவான்.

20. இவ்வாறையும் அறியாது புசித்து விட்டால், சாந்தபனம் அல்லது சாந்திராயனத்தை அனுசரிக்கவும். இவை தவிர்த்த ஏனைய தடுக்கப்பட்டவற்றைப் புசித்தால், ஒரு தினம் உண்ணாமை வேண்டும். (சாந்தபனம், சாந்திரா யனம் இவற்றைப் பதினோராவது அத்தியாயத்தில் காண்க.)

21. ஆண்டு முழுவதிலும், அறியாமல் தகாததைப் புசித்த குற்றம் நீங்குவதற்காகப் 'பிரஜாபத்யகிருச்ரம்' அனுசரிக்க. அறிந்து புசித்தால், உரிய கழுவாயை உடனுக் குடன் இயற்றுக.

22. புசிக்கத் தக்க பறவை, விலங்குகளையும், வேள் விக்கோ, தாய் தந்தையரின் நன்மைக்கோ ஒருவன் கொல்லலாம். முன்னாளில் அகத்தியர் தமது தாய் தந்தை யரின் பொருட்டு உயிர்வதை செய்திருக்கிறார்.

23. ருஷிகளின் தொன்மையான வேள்விகளில் உண்ணத் தக்க பறவை, விலங்குகள் அவிசாகவே இருந்தனவாதலால் வேள்விகளில் உயிர்வதை புரியலாம்.

24. வேள்வியில் மிகுந்தவற்றையும், எண்ணெயில் பொறித்தெடுத்த உண்ணத் தக்க பதார்த்தங்களையும் ஓரிரவு கழிந்த பின்னரும் உண்ணலாம்.

25. நாட்பட்டதாயினும், எண்ணெய் சம்பந்தப் பட்ட அரிசி, கோதுமை மாவுகளினுல் செய்ததைப் புசிக்கலாம்.

## புலால் உண்ண அநுமதி

26. இருபிறப்பாளர் உண்ணவும் நீக்கவும் தக்கவை இதுவரை கூறியாயிற்று. உண்ணவும் விலக்கவும் தக்க புலால் உணவைப் பற்றி முழுமையும் கூறுவேன்.

27. விதிப்படி வரிக்கப்பட்டும், ஆசார்யனுல் பணிக்கப் பட்டும், இல்லையேல் உயிர் போய்விடும் என்ற நிலையிலும், மந்திர பூர்வமாகக் கொல்லப்பட்ட புலாலை ஒரு பிராம்மணன் உண்ணலாம்.

28. ஏனெனில், பிரமன் படைப்பு முழுமையும் சீவருக்குணவாகப் படைத்தார். ஆகையால், நெல் முதலான தாவரமும், விலங்கு முதலான உயிரினமும் சீவனுக்கு உணவாகவே அமைவன.

29. எப்படியெனிலோ, அசையும் உயிர்களில் மான் போன்றவற்றிற்குப் புல் முதலியனவும், புலி முதலிய கோரைப் பற்களுடையவற்றிற்கு மான் முதலியனவும், கைகளுள்ள மானிடர் முதலானோர்க்குக் கரங்கள் இல்லாத மீன் முதலியனவும், சிங்க முதலிய கொடிய மிருகங்களுக்கு யானை முதலிய அஞ்சும் பண்புடையனவும் ஆகாரமாகும்.

30. எனவே, உரியவற்றை அன்றாடம் கொன்று தின்றாலும் பாவமில்லை. உண்ணத் தக்கனவும் கொல்லத் தக்கனவும் பிரமனுல் படைக்கப் பெற்றிருக்கின்றன அன்றோ?

31. எனினும், யாக மிகுதியான புலால் தேவ காரியம், இச்சையின்படி கொன்று தின்னல் ராட்சச காரியமாகும்.

32 விலைக்கு வாங்கினாலும், தானே தேடிப் பெற்றாலும், பிறன் விரும்பி வழங்கினாலும், புலாலைப் பிதுர்க்களுக்கும், தேவர்க்கும் நிவேதனம் செய்துண்பவன் பழிப்புக்காளாகான்.

33. புலால் உணவின் கேடுகளை நன்கறிந்த இருபிறப்பாளன், தனக்கு அபாயமில்லாத காலத்து, வேள்வி முதலிய காரணமின்றிப் புலாலை யுண்ணல் தகாது. புசிப்பின், மரணத்திற்குப் பின், தன்னால் புசிக்கப்பட்ட அதே பிராணிகளால் புசிக்கப்பட்டும், தற்காத்துக் கொள்ள இயலாதவனாகவும் ஆகிறான்.

34. வேள்வி முதலான காரணமின்றி வெற்றுக்குப் புலால் உண்பவன் அடைகிற பாவம், பொருளாசையில் உயிர்வதை செய்து புலாலை விற்பவனுக்கும்கூடக் கிடையாது.

35. சிரார்த்தத்தில் வரிக்கப்பட்ட அந்தணன், புலால் உண்ணலாகாதென்று எண்ணி மறுத்தால், இருபத்தோரு பிறவிகள் பசுவாய்ப் பிறப்பான்.

36. வேத விதிப்படியில்லாமல், மந்திர பூர்வமாகக் கொல்லப்படாத பசுவை ஒருபோதும் உண்ணலாகாது.

37. எந்த மிருகத்தையாவது கொன்று தின்ன வேண்டுமென்ற விருப்புண்டாயின், நெய் அல்லது மாவினால் அம்மிருகம் போன்ற உருவைச் செய்து உண்ணலாமன்றி, வீணே பசுவைக் கொல்ல மனத்தாலும் நினைக்கக் கூடாது.

38. பசுவை வீணாகக் கொல்பவன், அப்பசுவின் ரோமங்களின் எண்ணிக்கையளவு தடவைகள் பசுவாகப் பிறவியெடுத்துப் பிறரால் கொல்லவும் படுவான்

39. வேள்விக்கென்றே பசுக்கள் பிரமனால் படைக்கப் பட்டன. உலக நன்மையை முன்னிட்டே நடைபெறுவன வான வேள்விகள் செய்யப்படும்போது அது பசுவதை யாகாது.

40 வேள்விக்குப் பயன்படுத்துகின்ற கொடி, பசு, மரம், விலங்கு, பட்சிகள் பின்னர் மேலான கதியை அடை கின்றன.

41. வேள்வியிலும், சிரார்த்தத்திலும் ஒருவர்க்கு உண்பிக்கும்போது மட்டும் உயிர்வதை செய்யலாமன்றி, ஏனைய போது கூடாது என்று மநு கட்டளையிடுகிறார்.

42. வேதப் பொருளுணர்ந்தவன் மேற் சொன்ன நற்கடன்களில் உயிர்வதை செய்கையில் அவ்வுயிர்களுடன் தானும் நற்கதி பெறுவான்.

43. ஆன்ம ஞானம் உணர்ந்த இருபிறப்பாளன், இல் லறத்தானாகவோ, பிரம்மசாரியாகவோ, வானப்பிரஸ்த னாகவோ இருப்பினும், ஆபத்து வேளையிலும் கூட அவன் வேதத்தால் தடுக்கப்பட்ட உயிர் வதைகளைச் செய்யா திருக்கக் கடவன்.

44. சராசரங்களைப் பொறுத்த வரையில் வேதம் விதிக்கும் வதைகளை வதையென்று கருதற்க. ஏனெனில், அறங்களை வகுக்கும் வேதம் வதையை விதிப்பினும், அது நல்லறத்தின்பாற்பட்டதாகவே இருக்க முடியும்.

45. யாதொரு தீங்கிழைக்காத மான் முதலிய வற்றைத் தன் இன்பத்தை எண்ணி வதைப்பவன் இம்மை மறுமைகளில் வாழ்வை அடைவதில்லை.

46. பிராணிகளைக் கட்டிப் போடுதல்—கொல்லுதல் —வருத்துதல் இவை செய்யாதவனே எல்லா உயிர்க்கும் உற்றவனாகவும், எவ்வித இன்பமும் அடைபவனாகவும் இருக்கிறான்.

47. எண்ணம், செயல், விருப்பம் யாவற்றினும் அவ்வாறே அவனுக்கு உண்டாகின்றன.

48. உயிர்வதை ஒருபோது மியற்றாமல், புலால் உண்டாகாது; உயிர்களைக் கொன்றால், பேரின்பம் கிடைக்காது. எனவே, புலால் தவிர்க்க வேண்டியது.

49. ஆண் பெண் கலப்பால் உயிர்கள் உடல் எடுப்பதையும், பிராணிகளைக் கொடுமையாய்க் கட்டி வைக்க வேண்டியிருப்பதையும், வதைக்க வேண்டியிருப்பதையும், சிந்தித்துப் பார்க்கும் எவனுக்கும் எந்தப் பிராணியின் புலாலையும் புசிக்கக் கூடாதென்பது தானே விளங்கும்.

50. முறை பிறழ்ந்து ஒருபிசாசைப் போன்று புலாலையுண்பதைத் தவிர்ப்பவன் உலகில் எல்லா உயிர்க்கும் அன்பனாய் நோயற்று வாழ்வான்.

51. வதைக்கச் சொல்பவன், வதைப்போன், உடலைக் கீறிப் புலால் எடுப்போன், விற்போன், வாங்குவோன், சமைப்போன், படைப்போன், உண்போன் இவர்கள் காதகர் எனப்படுவர்.

52. வேள்விக்கன்றி, பிற உயிர் கொன்றெடுத்த புலையால் தன் ஊன் பெருக்க எண்ணுவோனைவிடப் பாவி வேறு யாரும் இலர்.

53. நூறாண்டுகள், ஆண்டு தோறும் அஸ்வமேதம் செய்வதும், சாயளவும் புலாலைத் தவிர்த்தலும் இணையானவை.

54. புலாலைப் புசிப்பதைத் தவிர்ப்போன் அடையும் நலன், பழம், கிழங்கு. எறும்புகள் சிந்திய தானியம் இவற்றை மட்டும் புசித்து வாழும் முனிவனும் பெறுவதில்லை.

55. இம்மையில் உண்ணும் புலாலே மறுமையில் நம்மை உண்கின்றது. எனவே, புலைப் புசிப்புக்குப் புலையால் புசிக்கப்படுவதே விளைவாகும்.

56. புலை, மது, பெண்ணின்பம் மனித இயற்கையான ஆவற் பொருள்கள் எனினும் இவற்றைத் தவிர்த்தலே மேன்மையாகும்.

## பிறப்பு இறப்புத் தீட்டு

57. இனி சாவுத் தீண்டல், உலோக சுத்தி இவற்றை நால்வருணத்தாருக்கும் உரியன கூறுவேன்.

58. பல் முளைக்கும் போதும், பின்னரும், சௌளம் செய்த பின்பும், குழந்தை இறந்தால், தாயத்தார் அனைவர்க்கும் தீட்டு.

59. இறந்தவனுடைய சம்ஸ்காரங்களையொட்டி, அவனுடைய சபிண்டர்களுக்குப் பத்து, நான்கு, மூன்று, ஒன்று என்ற நாட்கள் தீட்டுண்டு.

60. ஒருவனுக்குத் தான் முதலாக ஏழு தலைமுறைக்குட்பட்ட பங்காளிகள் சபிண்டர் எனப்படுவர். அதற்கு மேற்பட்ட முன் தலைமுறையைச் சேர்ந்த ஒரு கோத்திரப் பங்காளிகள் சோதகர் எனப்படுவர்.

61. இதே போன்று ஒருவன் பிறந்த போதும் தீட்டுண்டு.

62. இவை பங்காளிகள் அனைவர்க்கும் பொது விதி. பிறப்பிறப்புக்களில் ஒருவனுடைய தாய் தந்தையர்க்கு மட்டும் பிறர் தொடக்கூடாத தீட்டு. அதிலும் தாய்க்கு அதிக நாட்கள் வரையும், தந்தைக்குப் பதினோராம் நாள் வரையிலும் தீட்டுண்டு.

63. காமத்தால் வீர்யத்தை விட்டால், ஸ்நானத்தால் தூய்மையுண்டு. பிறல்மனையிடமாக ஒருவனுக்குக் குழந்தை பிறந்தால், மூன்று நாள் தீட்டாகும்.

64. சபிண்டர்கள் பத்து நாட்களிலும், சோதகர் மூன்று நாட்களிலும் தீட்டிலிருந்து நீங்கி விடுகின்றனர்.

65. இறந்து போன குருவுக்கு ஈமக்கடன்செய்வோன் அவரது பங்காளிகளைப் போன்றே தானும் பத்து நாள் தீட்டுக் காக்கவும்.

66. கருவில் சிதறும் சிசுவுக்காக, எத்தனை மாதத்தில் அப்படியாயிற்றோ, அத்தனை மாதத்துக்கு, மாதம் ஒரு நாள் வீதம் அத்தனை நாள் தீட்டு. வீட்டு விலக்கானவள் நான்காம் நாள் முழுகியதும் தூய்மையடைவாள்.

67. சௌளம் செய்யாத குழந்தை இறந்தால், ஒரு நாளும், உபநயன காலத்திற்குள்ளானால், மூன்று நாளும் தீட்டு.

68. இரண்டு வயது நிறையாத குழந்தை இறப்பின், மலர் மஞ்சள் இவற்றால் மூடி ஊருக்கு வெளியில் தூய்மையான இடத்தில் அடக்கம் செய்க. இதற்குப் பால் தெளித்தல் இல்லை.

69 இதனை எரிக்கக் கூடாது. தர்ப்பணமும் செய்யக் கூடாது. காட்டில் விறகை எறிவது போல் துயரின்றிப் புதைத்துவிட்டுப் பங்காளிகள் அனைவரும் மூன்று நாள் தீட்டுக் காக்கவும்.

70. மூன்று ஆண்டுகள் முடியா முன்னமெனில், பெற்றவனோ, பங்காளிகளோ தர்ப்பணம் செய்ய வேண்டியதில்லை. பெயரிட்ட பிறகேனும், பற்கள் முளைத்த பின்னும் எனின், அதன்பால் அன்பினால் தர்ப்பணம் செய்யினும் செய்யலாம், அல்லது விடலாம்.

71. ஒருசாலை மாணவன் இறந்தால் ஒரு நாள் தீட்டு. சோதகர் இறப்பின் அல்லது பிறப்பின், மூன்று நாள் வரை தீட்டு.

72. நிச்சயிக்கப்பட்டுத் திருமணம் முடியாமுன் அப் பெண் இறந்துபட்டால், அவளுக்காக நிச்சயிக்கப் பெற்றி

ருந்தவனும் அவன் பங்காளிகளும் மூன்று நாட்கள் தீட்டுக் காக்கவும். அந்தப் பெண்ணின் தகப்பன், மற்றும் பங்காளி களுக்கும் தீட்டு உண்டு.

73. மூன்று நாட்கள் தீட்டுள்ளோர் அக்காலத்தில் உப்பு, புலால், புணர்ச்சி இவற்றை விலக்குக; நதிகளில் நீராடுக.

74. இவை யாவும் அருகிருப்போரைப் பற்றியேயா கும். தொலைவில் உள்ளவர்களான சபிண்டர்க்கும், சோத கர்க்கும் உரியன கூறுவேன்.

75. தேசாந்திரத்தில், பங்காளிகளின் பிறப் பிறப்புக் களைப் பத்து நாட்களுக்குள் கேட்டு விட்டால், அந்தப் பத்து நாளுடனே தீட்டுப் போகும்.

76. இறப்பைப் பத்து நாட்களுக்குப் பின்னர் கேட் கும் சபிண்டருக்கு மூன்று நாளிலும், ஓராண்டின் பின் கேட்டால், நீராடியதும் தீட்டுப் போகும். பிறப்புச் செய்தியைப் பத்து நாட்களின் பின் கேட்டால், தீட்டே இல்லை.

77. சபிண்டர்கள், இறப்பைப் பத்துநாளைக்குமேலும், பிறப்பைப் பத்து நாளைக்குள்ளும் கேட்டால், கட்டின வேட்டியுடன் முழுகினல் தொடத்தக்கவராகிவிடுவர்.

78. சபிண்டர்களில் பல் முளைக்காத பாலகன் இறந்தாலும், தொலைவிலுள்ள சோதகர் இறப்பைப்பத்து நாட்களுக்குள் கேட்டாலும், உடுத்திய உடையுடன் நீராடியவுடனே தீட்டுப் போகும்.

79. பத்து நாள் பிறப்பு அல்லது இறப்புத் தீட்டுக் காக்கும் இடையில் ஏற்படுகின்ற புதிய தீண்டலும் முன் தீட்டுப் போகும்போதே போய்விடும். பத்து நாள் உள்ள மரணத் தீட்டுடன் இடைப்படும் பிறந்த தீட்டும்போகும். பத்து நாள் பிறந்த தீட்டில், மற்ருெரு பிறப்புத் தீட்டு இடைப்பட்டால் மட்டுமே போகும்.

80. ஆசார்யனுக்கு மூன்று நாளும், அவனது பெண்டு பிள்ளைகட்கு ஒரு நாளும் தீட்டுக்காத்தல் மரியாதை.

81. தன் இல்லத்தில் வந்திருக்கும்போது, ஒரு அந்தணன் இறந்காலும், அம்மான் மரணத்துக்கும் ஒருவன் மூன்று நாள் தீட்டுக் காக்கவும். தனது சீடன், ரித்விக், அம்மான் சேய் முதலிய பந்துக்கள் இறந்தால் தொண்ணூறு நாழிகை தீட்டுண்டு.

82. க்ஷத்திரிய மன்னன் பகலில் இறந்தால் மாலை வரையும், இரவிலானுல் தாரகை மறையும் வரைக்கும் பிரஜைகளுக்குத் தீட்டு. வேதமோதா ஒருவன் தன்னிடம் வந்து இறந்தாலும், ஓதுவித்த குரு இறந்தாலும், ஒரு நாள் தீட்டு.

83. இப்படிக் கூறிய பத்து நாட் தீட்டு பிராமணர்க்கு. இதுவே க்ஷத்திரியர்க்குப் பன்னிரண்டும், வைசியர்க்குப் பதினைந்தும், நாலாம் வருணத்தாருக்கு முப்பது நாளும் ஆகக் கணக்காகும்.

84. தீட்டுக்களை இதற்கு மேல் வளர்த்தக் கூடாது: இந்த நாட்களுக்கு மேல் அன்ருடக் கடமைகளை நிறுத்தக் கூடாது. அன்ருடம் தீவளர்க்கும் ஒருவனுக்குப் பங்காளி இறப்பினும் ஒருநாள் அல்லது மூன்று நாட்களுக்கு மேல் தீட்டில்லை.

## தீட்டுக் காத்தல்

85. சண்டாளன், விலக்காகி யிருப்பவள், பிணம், அதைத் தீண்டியவன் ஆகியோரைத் தீண்டினுல் ஸ்நானம் செய்ததும் தூய்மையாம்.

86. ஸ்நானம் போன்ற காலங்களில் தூய்மையற்ருேரைப் பார்த்தால், உடனே ஆசமநம் செய்து காயத்ரி, சூர்ய மந்திரம், பவமானருக்கு இவற்றை இயன்றவரை ஜபிக்க வேண்டும்.

87. மனித எலும்பைத் தெரிந்து தொட்டால்,பிராம்மணன் ஸ்நானம் செய்ததும் தூய்மை. தெரியாமல் தொட்டால், ஆசமநம் செய்து பசுவைத் தொட்டாலும், சூரியனைப் பார்த்தாலும் கழுவாய்.

88. வேள்விக்கு விரதம் பூண்டவன், தாய் தந்தையர் தவிரப் பங்காளி மரணத்துக்கு, வேள்வி முடிந்த பின் மூன்று நாள் தீட்டிருந்து தர்ப்பணம் செய்க.

89. அன்றுடக் கடமைகளை நீக்கியவர்கள், கலப்புச் சாதியில் பிறந்தவர்கள், வேத நிந்தையுடன் துறவி வேடம் பூண்டவர், நஞ்சருந்தியோ, தூக்கிட்டோ இறந்தவர் இவர்களுக்கும்-

90. வேதத்திற்கு மாறாகத் துறவு பூண்ட பெண்கள், விபசாரிகள், சூல் அழித்தவர்கள், கொண்டவனுக்கிரண்டகம் செய்தவர்கள், கள் அருந்தியவர்கள் இவர்களுக்கும் தர்ப்பணம் செய்ய வேண்டியதில்லை.

91. ஆசார்யன், உபாத்யாயன், தந்தை, தாய், குரு இவர்களிறந்து போனால், அந்தப் பிணங்களைத் தூக்குகிற காரணத்தால் ஒருவனுடைய பிரம்மசரிய விரதத்துக்குப் பங்கம் வராது.

92. இறந்து போனவன் பிராம்மணனாகில், கிழக்குப் பக்கமாகவும், க்ஷத்திரியனை வடக்குப் பக்கமாகவும், வைசியனை மேற்குப் பக்கமாகவும், மற்றவனை ஊருக்குத் தெற்குப் பக்கமாகவும், பிணத்தை எடுத்துச் செல்லவும்.

93. இந்திரத் தன்மை படைத்தவனாதலால் அரசனும், பிரம்ம ஸ்வரூபியாக விளங்குபவனாதலால் பிரம்மசாரியும், வேள்வி முயல்பவனும், தாயத்தார் இறந்தால் தீட்டுக் காக்க வேண்டியதில்லை.

94. மேலான சிங்காதனத்தில் வீற்றிருக்கும் மன்னனுக்கு ஸ்நானம் ஒன்றினாலேயே எல்லாத் தீட்டுக்களும்

போய்விடும். ஏனெனில் உயிர்க்குலத்தையே காத்து உண வளிக்கும் வல்லமை அவன் வீற்றிருக்கையின் வல்லமை யல்லவா?

95. விளையாட்டுச் சண்டை, மின்னலிடி இவற்றாலும், பசு முதலிய உயிர்களுக்காகவும் தம்முயிர் ஈந்தவர்கள், அரசனுக்குத் தீண்டல் உண்டாகாத் தகாதவர்கள் ஆகியோர் இறந்தால், ஸ்நானத்தோடே தீட்டுப்போகும்.

96. சந்திரன், தீ, ஞாயிறு, வாயு, இந்திரன், குபேரன், வருணன், யமன் இந்த எட்டுத் திக்பாலர்களின் வடிவத்தைத் தரித்திருப்பவன் அரசன்.

97. திசைக் காவல் தன்மையுடையவனாதலால் அரசனுக்குத் தீட்டில்லை. ஏனெனில், தீட்டும், தூய்மையும் ஏற்படுவது திசைக் காவல் தேவதைகளாலேயே.

98. க்ஷத்திரிய தருமப்படி போரில் படைக்கலத்தால் இறந்து போகிறவனுக்கு வேள்வியினாலாகும் புண்யலோக வாழ்வு கிடைக்கும். எனவே, அத்துடனேயே தீட்டும் போகிறது.

99. பிராம்மணனுக்குத் தலை முழுக்காலும், க்ஷத்திரியனுக்கு ஊர்தி படைக்கலம் இவற்றைத் தீண்டுதலாலும் வைசியனுக்கு உழக்கோல், தராசு கயிறு இவற்றைத் தொடுவதாலும், மற்றவனுக்கு மூங்கில் குச்சியைத் தொடுவதாலும் சுத்தி ஏற்படுகிறது.

100. முனிவர்களே, இதுவரையில் ஏழ் தலைமுறையினர், அவர்க்கும் முந்தைய வழியினர்க்கான தீட்டைச் சொன்னேன். இனி ஏனையோரின் தீண்டலைச் சொல்லுகிறேன்.

101. தாயாதியல்லாத பிராம்மணனின் பிணத்தையும், தாயுடன் பிறந்தோர் முதலிய உறவினரின் பிணத்தையும் இடுகாட்டுக்குச் சுமந்து செல்வதனால் மூன்று நாள் தீட்டு ஏற்படுகிறது.

102. பிணம் தூக்கியதுடன், அந்த மரணத்தினுல் தீட்டுக்காப்பவனுடைய சோற்றையும் உண்பதனுல், பத்து நாள் தீட்டு வரும். பிணத்தை மட்டும் தூக்கி, அவன் வீட்டில் தங்காமலும், உணவருந்தாமலும் இருப்பின், ஒரே நாள் மட்டும் தீட்டு.

103. யாராயினும் சரி, அப்பிணத்தைத் தொடர்ந்து இடுகாட்டுக்குச் செல்லுங்கால், உடுத்திய ஆடையுடன் நீராடிய பின், நெருப்பைத் தொட்டு, நெய்யுண்ணத் தீட்டு விலகும்.

104 மேல் வருணத்தார் இறந்தால், அவ்வருணத்தார் பின் இருக்கும்போது, தாழ்ந்தோரைக் கொண்டு அந்தப் பிணத்தைத் தூக்கச் செய்யலாகாது. அப்படிச் செய்தால் இறந்தவனுக்கு நல்வாழ்வு மறுமையிலில்லை.

105. ஞானம், தவம், தீ, அவி, மண், மனம், நீர், பெருக்குதல், மெழுகுதல், காற்று, வேள்வி முதலியன, சூரியன், திட்டு காலம் இவை யெல்லாம் மனிதர்க்கு வலிமை தருவன.

106. சுத்திகரிப்பு எவற்றையும்விட, நல்லறத்தால் ஈட்டிய பொருள் திட்டுப்படாத தூய்மை யுடையதாகும். அவ்வாறு பொருளீட்டியவனே தூயன். மண்ணுலும் நீராலும் மட்டுமே ஒருவன் தூயவனல்லன்.

107. கற்ருேர் பொறுமையினுலும். தீவினையாளர் கொடையினுலும், மறைவாகப் பிழை புரிந்தோர் தியானத்தாலும், வேதமோதியவர் தவத்தாலும் தூய்மை யுறுவர்.

108. மாசுபட்ட அவயவம் மண், நீர் இவற்ருலும், ஆறு நீரோட்டத்தாலும், மனத்தால் சோரம் போனவள் மாதவிலக்காலும், அந்தணர் துறவாலும் தூய்மையுறுவர்.

109. உடல் நீராலும் மனம் உண்மையினுலும், ஆன்மா மெய்ப் பொருள் உணர்வாலும், தவ முயற்சியினுலும், புத்தி உண்மையறிவாலும் தூய்மையடையும்.

110. இதுவரை உடல் பற்றிய தீட்டைச் சொன்னேன். இனி, பலவிதப் பொருள்களின் தூய்மைப் பாட்டைக் கூறுகிறேன்.

### பொருள்களின் சுத்தி

111. ஒளியுடைய பொன்கலம், பல்வித மணிகள் இவற்றைச் சாம்பர், நீர், மண் இவற்றால் சுத்தம் செய்யும்படி பெரியோர் கூறுகின்றனர்

112. வேலைப்பாடில்லாத பொன்கலம், வெள்ளிக் கலம், சங்கு, மணி இவை அழுக்கின்றி, நெய் முதலிய பசைப்பிடிப்பின்றி இருந்தால் நீர் விட்டு அலம்பிச் சுத்தம் செய்தால் போதும்.

113. தங்கம், வெள்ளி இவை நீர், தீ இவை சேர்ந்து உருப் பெறுவதால் இவற்றை நீரால் அலம்பி நெருப்பிற் சுட்டால் உயர்ந்த ஒளி உண்டாகிறது.

114. செம்பு, இரும்பு, வெண்கலம், பித்தளை, துராய், ஈயம் இவற்றாலான பாண்டங்களை உப்பு, புளித் தண்ணீர், சாம்பர், சாணம், தெளிநீர் இவற்றால் சுத்தப் படுத்தவும்.

115. நெய், எண்ணெய் இவற்றைக் காகம்முதலியன தீண்டிடின், தருப்பையினால் அவற்றில் ஒரு துளி எடுத்து வெளியில் விட்டுவிட்டால் சுத்தியாம்.

116. படுக்கை அசுத்தமானால், நீரில் தோய்த்தெடுத்தலாலும், மரப் பாத்திரம் சீவப்படுவதனாலும், வேள்விக் கலங்கள் நீரால் கழுவிக் கையால் துடைப்பதனாலும், வீடு பெருக்கி மெழுகுவதனாலும் தூய்மையடைவன.

117. நெய், ஓமம் செய்கிற கருவிகளை வெந்நீராலும், யூபஸ்தம்பம், முறம், பண்டி, உலக்கை, உரல் இவற்றை நீராலும் சுத்தம் செய்யவும்.

118. ஓராள் சுமைக்கதிகமான நெல், துணிமூட்டை இவற்றை நீர் தெளிப்பதனாலும், அந்த அளவுக்குக் குறைந்தவையாயின், நீரில் அலம்புவதனாலும் சுத்தமாம்

119. மான், புலித் தோல்கள், மரவுரி இவற்றை ஆடையைப் போலவும், காய், கிழங்கு, கனி இவற்றைத் தானியத்தைப் போன்றும் சுத்தப்படுத்தவும்.

120. புழுவினால் உண்டாகும் பட்டு வகைகள், பிராணி ரோமங்களால் உண்டான கம்பளங்கள், இவற்றை உழமண்ணாலும், நேபாளத்துக் கம்பளியை வேப்பங் கொட்டையாலும், சால்வையை வில்வப் பழத்தாலும், வெண்பட்டை வெண்கடுகாலும் சுத்தப்படுத்துக.

121. சங்கு, தந்தம், மான் முதலியவற்றின் கொம்பு இவற்றை வெண்கடுகுப் பொடியாலும், பசு மூத்திரம், நீர் இவற்றாலும் சுத்தப்படுத்துக.

122. அசுத்தமான விறகு, புல், வைக்கோல் இவற்றில் நீர் தெளித்தலாலும், வீட்டை விளக்கி மெழுகுவதாலும், மண்பாத்திரங்களை மீண்டும் சூளையிடுவதாலும் சுத்தப்படுத்தவும்.

123. கள், மல மூத்திரம், கோழை, வீர்யம், சவர்நீர், உதிரம் இவற்றால் கெட்ட மண் பாத்திரம் மீண்டும் சூளையிட்டாலும் தூய்மைப்படாது.

124. சண்டாளரால் வீடு தீட்டுப்பட்டால், விளக்கி, மெழுகி, சாணந்தெளித்து, கொஞ்சம் மேல்மண்ணை வெளியேற்றி, பசுவை ஒருநாள் கட்டிவைத்து இவ்வைந்தாலும் தூய்மையாக்குக.

125. பறவை, பசு இவற்றால் மோரப்பட்டும், காலால் இடறியுண்டும், தும்மல், மயிர், புழு இவற்றால் மாசுபட்டும் இருக்கிற சோற்றின் மீது சிறிது மண்ணைக் கிள்ளிப்போட்டால் சுத்தமாகும்.

126. மல ஜலங்களால் தூய்மை யழிந்தவற்றை, அவையும் அவற்றின் வாடையும் போகும்வரை மண்ணில் போட்டு நீரில் அலம்பவும். மண்ணுல் இயற்றும் தூய்மை என்பது நீரும் சேர்ந்து என்றே பொருள்.

127. கண்ணுக்குத் தெரியாமல் கிடந்தது, நீரில் தூய்மை செய்தது, தூய்மையானதென்று அந்தணனுல் அங்கீகரிக்கப்பட்டது இம்மூன்றும் அந்தணர்க்குத் தூய்மை யானதென்று தேவ வாக்கு.

128. மழையால் நிறைந்தும், பசு குடிப்பதனுல் குறைந்து போகாமலும் இருக்கும் நீர் தூய்மையானது. அதுவும் மலஜலம் அதில் கலவாமலும், மணம், நிறம், சுவையுடையதாயும் அது இருக்கத்தக்கது.

129. தேவ பூஜைக்காகக் கட்டிக் கடை பரப்பிய மலர்கள், பிரம்மசாரி எடுத்து வந்த பிக்ஷை இவை எப் போதும் தூயனவென்று சாத்திரம் கூறுகிறது.

130. மாதரின் முகம், காகம் முதலிய பறவைகள் தள்ளிய கனி, மடியூட்டும் கன்றின் வாய், வேட்டை பிடிக்கும் நாய் வாய் இவை இயல்பாகவே தூய்மை யானவை.

131. வேட்டை நாய், புலி, அரக்கர், சண்டாளர், கசாப்புக்காரன், வேடன், கள்ளன் இவர்களால் கொல்லப்பட்ட பிராணிகளின் ஊன் தூய்மையுடைய தென்று மனு கூறியுள்ளார்.

13?. கொப்பூழ்க்கு மேற்பட்ட மனித உறுப்புக்கள் தூயன. அவற்றிற்குக் கீழானவையும் விசர்ஜனங்களும் அசுத்தமானவை.

133. ஈ, நீர்த்துளி, நிழல், பசு, குதிரை, சூரிய ஒளி புழுதி, மண், காற்று, தீ இவை மேலே படுவதால் அசுத்தம் உண்டாவதில்லை.

134. உடலில் தோன்றும் பன்னிரு மலங்களையும், நீர் மண் விதிப்படி அந்தந்த நாற்றம் போம்வரை சுத்தப் படுத்தவும்.

135. வியர்வை, வீர்யம், சவர் நீர், உதிரம், சிறுநீர், மலம், காதுக் குறும்பி, நகம், அழுக்கு, கண்ணீர், பீளை, சுண்டு ஆக உடல் மலங்கள் பன்னிரண்டாகும்.

136. மலஜலம் கழித்த பின்னர் பால் குறியில் நெல்லிக்காயளவு சிறிது மண்ணும் கழிவாயில் மூன்றத்தனை மண்ணும், இடது கைக்குப் பன்மடங்கு மண்ணும், இரண்டு கைகளுக்கும் ஏழு மடங்கும் போட்டுத் தேய்த்து நீரால் அலம்புக.

137. இவ்வாறியற்றல் இல்லறத்தார்க்கே; பிரம்மசாரிகள் இரட்டிப்பும், வானப்பிரஸ்தர் மும்மடங்கும், துறவிகள் நான் மடங்கும் கொள்க.

138. மலஜல உபாதைக்குப் போய்த் தூய்து செய்த பின்னரும், வேதம் ஓதுகையிலும், உண்ணும்போதும் மூன்று தரம் ஆசமநம் செய்து கண் முதலிய பொறிகளைத் துடைக்கவும்.

139. உடல் தூய்மை வேண்டுவோன தண்ணீரை மும்முறை ஆசமநம் செய்து, இரண்டு தடவை வாய் துடைக்கவும். பெண்ணும், நாலாம் வருணத்தானும் ஒரு தடவை துடைக்கவும்.

140. விதிப்படி அந்தணனுக்கு வழிபடும் நாலாம் வருணத்தான் மாதம் ஒரு முறை சவரம் செய்து கொள்ளவும். இவன் வைசியருக்குரியவாறே பிறப்பிறப்புத் தீட்டுக் காத்தலும், மேலோர் உண்டு மிகுந்ததையே உண்ணவும் கடவன்.

141. குடிக்கும்பொழுது மேலே சிந்திய நீர்த்துளி, வாயிற் பட்ட மீசை, இரண்டு பல் வரிசைகளுக்கிடையில்

ஒட்டிக் கொண்டவை இவற்றிற்கு எச்சிலில்லை என்று பெரியோர் சொல்லுவர்.

142. ஒருவன் ஆசமநம் செய்த நீர்த்துளி மற்றவன் முழங்காலின் கீழ்ப்படுமானால், அது தரையில் ஓடும் நீருக் கிணையாதலால் அது தூய்மையைக் கெடுக்காது.

143. மேலே எச்சில் படும்போது, ஒருவன் கையில் யாதாமொரு பொருளை வைத்திருந்தால், அந்தப் பொருளைக் கீழே வைக்காமல் ஆசமனம் செய்தால், அந்தப் பொருளுடன் தானும் சுத்தமாகி விடுகிறான்.

144. உண்ணு முன்னர் வாந்தி யெடுத்தால், தலை முழுகிய பின் உண்ணவும். உண்ட பின்னர் வாந்தி யெடுத்தால், ஆசமனம் செய்யவும். கலவியின் பின்னர் ஒருவன் தலை முழுக வேண்டும்.

145. தூங்கி எழுந்ததும், இறுமிய பின்பும், உண்ட பிறகும், காறி யுமிழ்ந்த பின்னரும், காரணத்துடன் பொய்யுரை யாடிய காலத்தும், நீர் பருகிய போதும், வேதம் ஓதத் தொடங்குகையிலும், தான் தூயனாக இருப்பவனே யாயினும் ஆசமநம் செய்ய வேண்டும்.

146. இதுவரை சகலமான சுத்த முறைகளும், பொருள் தூய்மையும் சகல வருணத்தாருக்கும் கூறப்பட்டன. இனி மாதர்க்குரியன கேளீர்.

## மாதர்க்கு உரியவை

147. எந்தப் பருவத்தினளாயினும், தனது இல்லத்திலே கூட எந்தப் பெண்ணும் தன்னிச்சைப்படி எச்செயலும் இயற்றலாகாது.

148. இளமையில் தகப்பன், பருவத்தில் கணவன், விதவையான பின் மக்கள் இவர்கள் காவலின்றிப் பெண்கள் தம்மிச்சையாக இயங்கலாகாது.

149. தகப்பன், கணவன், மக்கள் இவர்களைத் தவிர்த்துத் தனித்திருக்க விரும்புதல் கூடாது. அப்படித் தனித்திருப்பின், பிறந்தகம் புக்ககமாகிய இரு குலங்களுக்கும் நிந்தை யுண்டாக்குவாள்.

150. வீட்டு வேலையில் திறமும் மகிழ்வும், பொருள்களைப் பேணுதலும், சிக்கனமும் பொருந்தியிருக்கவேண்டும்.

151. தந்தை அல்லது உடன் பிறந்தான், தன்னை மணம் புரிவிப்பவனுடன் வாழ்நாள் முழுதும் அவனுக்குப் பணிவிடை புரிந்திருக்க வேண்டும். அவனுக்குப் பின்னும் கற்புடன் அவனுக்குச் சிரார்த்த முதலிய இயற்றி வர வேண்டும்.

152. திருமணத்தில் சாந்தி ஹோமம், பிராஜாபத்ய ஹோமம் இவை நோன்புகளாகவே இயற்றப்படுவன வன்றி, நிச்சயதார்த்தத்தில் செய்யும் வாக்குத் தானமே கணவனை ஒரு பெண்ணின் தலைவனென்று விதிப்பதாகும்.

153. மலர்ச்சியுற்ற போதும், மற்ற வாழ் நாளிலும் இம்மையில் இதம் தருபவன் விதிப்படி மணந்த கணவன் ஆதலால், அவனை உபசரித்தலால் மறுமையிலும் இன்பம் வந்தெய்தும்.

154. இழி நடத்தை, பரத்தையர் நட்பு, நற்குணமின்மை இவற்றை யுடையவனாயினும், கற்பினளானபெண் தன் கணவனைத் தெய்வமாகப் பேணுக.

155. அன்றுட வேள்விகள் ஐந்தும், உண்ணாமை, நோன்பு முதலியனவும் மாதர்க்குத் தனிப்பட யாதுமிலது. கணவனைப் பேணுதலே அவர்க்கு மறுமை இன்பிற்குரிய நல்லாறு.

156. மறுமை யின்பத்தில் நாட்டமுள்ள பெண்மணி. தன் கணவன் இருப்பினும், இறப்பினும், அவன் கருத்துக்கு மாறு செய்தல் கூடாது;

157. கைம்மையில் காய், கனி, கிழங்கு இவற்றால் சிற்றுணவு கொண்டு காலந் தள்ளலும், மற்றொருவன் பெயரை நாவாற் கூற விரும்பாமையும் வேண்டும்.

158. கைம்மையினள் தன் காலமுள்ளளவும், பொறுமை, தூய்மை, உடற் கலப்பின்மை, கள், புலால் கொள்ளாமை, மேன்மையான கற்பிலக்கணம் இவை பொருந்தக் கடவள்.

159. மாதர் பற்பலர் இளமையிலும், பிரம்மசரியத்திலும் இறந்து வானின்பம் பெற்றனர்; எனவே சந்ததியில்லையென்ற வருத்தம் இவருக்கு வேண்டியதில்லை.

160. கணவனிறந்த பின் பிரம்மசரியம் தவறாத கற்பினள் பிள்ளை யில்லாதிருப்பினும், வாலகில்யர், சநகர் போன்ற பிரம்மசாரிகளைப் போன்றே மோக்ஷமடைவாள்.

161. கணவனிறந்த பின், சொர்க்கத்திற்குப் பிள்ளை வேண்டுமென்ற கருத்துடன் பிறனொருவனுடன் கூடியிருப்பவளுக்கு உலக நிந்தையுண்டு. அவ்வாறு ஈன்ற பிள்ளையினால் சொர்க்கமடையாமலும் போவாள்.

162. கணவனல்லாதவனால் பிறந்த சேயும், அற நூல்களால் ஏற்கத் தக்கவனன்று. அவனைப் பெற்ற தகப்பனுக்கும் பயனில்லை. கற்பரசிகளுக்கு மறுமணம் எங்கும் விதிக்கப் பெறவில்லை.

163. கணவன் தாழ்ந்தவனென்று விடுத்து உயர்ந்தவனைப் பற்றும் ஒருத்தியை நிந்தை வந்தெய்தும். மற்றவனுடன் ஓடிப் போனவளென்று கெட்ட பெயர் வரும்; யாரும் போற்றார்.

164. கள்ள நட்பினால் ஒரு பெண்ணை உலகம் நிந்திப்பதுடன் இறந்த பின் அவள் குள்ள நரியாகவும் பிறந்து வெண் குட்டம் முதலிய வினை நோய்களையும் பெறுவாள்.

165. மனம், சொல், புலன் இவற்றை யடக்கி, நெறி தவறாமல் இருப்பவள், கணவனிருக்கும் லோகத்தையடை வதுடன், கற்பரசி யென்றும் கொண்டாடப்படுவாள்.

166. இப்படி மனம், மொழி, மெய்களால் கற்பரசியாகத் தூய்மையுடன் வாழ்பவள், இம்மையில் புகழும், மறுமையிற் பதிலோகமும் பெறுவாள்.

167. நன்னடையும், ஒத்த குலமும் உடைய மனைவி முன்னம் இறந்து விட்டால், துவி ஜாதியினர் அவளை விதிப்படி எரியூட்டி ஏனைய தென்புலக் கடனும் இறுக்க.

168. இப்படி அவளுக்குக் கடனிறுத்த பின்னர், மற்றொரு பெண்ணை மணந்து தீ வளர்த்தலாகிய நற்கருமங்களை இயற்றி வர வேண்டியது.

169. மனைவி யிழந்தவன் விதிப்படியே மறுமணம் செய்து கொண்டு, அன்றாட ஐம்பெரு வேள்வி முயன்று, தன் வாழ்வின் இரண்டாம் பகுதியை இல்லறத்தாக்கிக் கழிக்க வேண்டியது.

**ஐந்தாம் அத்தியாயம் முற்றும்**

ஆறும் அத்தியாயம்

# வானப்பிரஸ்த தருமம்

### காடுறைதல், ஒழுக்கம், உணவு முதலியன

1. நெறிமொழுகும் துவிஜர்கள் இவ்வாறு இல்லறம் புரிந்து, தூயராய், புலனடக்கிப் பின்னர் வானப்பிரஸ்த ஆசிரமம் அடைந்து தபோவனத்தில் சென்று காலம் கழிக்கக் கடவர்.

2. தன் உடலில் நரையும், தன் பிள்ளை வயிற்றில் பிறக்கும் பிள்ளையையும் பார்க்கின்ற இல்வாழ்வான் அந்த வயதில் வானப்பிரஸ்தம் மேற்கொள்ள வேண்டும்.

3. உலக நடை, இன்பம், ஏவல் அனைத்தும் விட்டு, மனைவியைப் பிள்ளையினிடம் ஒப்புவித்து, அல்லது அவள் விரும்பினால் அவளையும் பின்கொண்டு, வனம் செல்ல வேண்டியது.

4. தான் ஓம்பிவந்த தீயும் அதன் பாத்திரங்களையும் உடன் கொண்டு, ஊரைத் தாண்டி வனம் புகுந்து, புலன் வென்றவனாய் இருக்க வேண்டியது.

5. சாலியன்னம், காய், கருகு, கனி, கிழங்கு இவற்றைக் கொண்டு இல்லறத்தில் குறித்த ஐம்பெரும் வேள்விகளையும் தவறுதியற்றிவர வேண்டியது.

6. மான் தோல் போன்றவை அல்லது மரவுரி தரிக்கவும். காலை மாலை ஸ்நானம் செய்தலும், சடை, மீசை, தாடி, நகம் இவற்றை வளர்த்தலும் வேண்டும்.

7. தான உண்ணக் கிடைப்பதனையே பலி பிக்ஷை இவற்றிற்குத் தன் சக்திக்கேற்ப வழங்குக. தண்ணீர், கிழங்கு, கனி இவற்றால் தன்னை நாடி வருவோரை உபசரிக்கவும்.

8. இடையருத வேத நினைவும், குளிர் கானல் போன்ற நுகர்ச்சிகளைத் தாங்கிக் கொள்வதும், எல்லா உயிர்களுக்கும் நண்பனுக இருப்பதும், பிறர்க்கு ஒன்றைக் கொடுப்பதன்றி இராவதிருத்தலும் அமைந்திருக்க வேண்டியது.

9. மனைவியின்றித் தான் மட்டும் தனித்து வனம் புகினும், தீ வளர்த்தலாகிய கடமைகளை விடாமல் இயன்ற அளவு இயற்றி வர வேண்டியது.

10. நட்சத்ர யாகம், ஆக்ரயணம், சாதுர் மாசியம், உத்தராயணம் இவற்றைப் புலத்திற் சிந்திய நெல்மணி களைப் பொறுக்கிச் சேர்த்து இயற்ற வேண்டியது.

11. இளவேனில், கார் இவற்றில் காட்டில் விளைந்த தூய்தான சம்பா கார் நெல்மணிகளைத் தானுகப் பொறுக் கித் தயாரித்த புரோடாசம் என்ற அடை, உப்பின்றி வறுத்த அரிசியினுல் செய்த சரு என்ற அன்னம் இவற்றை உண்டாக்க வேண்டியது.

12. காட்டில் கிடைத்த அரிசியிற் சமைத்த இவை தேவர்களுக்கு ஓமம் செய்யவும், மிகுதியைத் தான் புசிக்க வும் தக்கவை. வேண்டிய உப்பை உவர் மண்ணிலிருந்து காய்ச்சிக் கொள்ளவும்.

13. மண்ணிலும் நீரிலும் தாமாகவே தோன்றும் மலர், கிழங்கு, காய், கனி, மணிப்புங்கு முதலிய நல்ல பெரு மரங்களின் கனியில் கசிந்த தேன் இவை புசிக்கத் தக்கன.

14. கூட்டுத் தேன், புலால், மண்ணிலும் மரத்திலும் முளைத்த காளான், பூஞ்சக் காளான்களான பூஸ்திரணம், குருகம், அழிஞ்சிற் பழம் இவை நீக்கத் தக்கன.

15. ஆண்டு தோறும் ஐப்பசி மாதத்தில் மிகுந்து விட்ட நெல்லையும், கிழிந்த ஆடை, முன்னுள் தேடி மிகுந்த காய், கிழங்கு, கனி இவற்றையும் அவ்வப்போது விலக்க வேண்டியது.

16. உழுத நிலத்தில் விளைந்த நெல் பயிரிட்டவன் வேண்டாமென்று ஒதுக்கியதாயினும் அதனைக் கொள்ள லாகாது. ஊரில் உழாத புறம்போக்கு நிலத்துப் பயிரை யும், காய், கிழங்கு, பழத்தையும் துன்பம் நேர்ந்த காலத்தும் உண்ணலாகாது.

17. காய் கிழங்கு முதலியவற்றை நெருப்பிற் சமைத்தோ, தாமே பழுத்தபோது கல்லால் அரக்கியோ, பற்களாற் கடித்தோ புசிக்கலாம்.

18. தனக்குதவும் உணவை அன்றாடமோ, மாதம் ஒரு முறையோ, ஆறு மாதத்திற்கோ, ஓராண்டிற்கோ, தேவை யானதைத் தேடி வைத்துக் கொள்ளலாம்.

19. இப்படி இயன்றது சேர்த்து, இரவிலோ, பகலில் நான்காம் யாமத்தோ, ஒருநாள் உண்ணுதிருந்து மறுநாள் மாலையிலோ, மூன்று நாள் உண்ணுமல் நான்காம் நாள் மாலையிலோ வேண்டியது புசிக்கலாம்.

20. அல்லது வளர் தேய் பிறைகளில் சாந்திராயண நோன்பிருக்கலாம். அன்றி, பதினைந்து நாட்களுக்கு ஒரு முறை, காய்ச்சிய கஞ்சியை ஓரிரு வேளைகள் பருகலாம். எப்படியும் புலனிச்சையை அடக்க வேண்டும்.

21. அல்லது தாமே மரத்திற் கனிந்தவற்றாலும், தாமே உதிர்ந்த கந்த மூலங்களாலும், விரதபங்கமின்றி, ஜீவித்திருக்கலாம்.

22. களைப்பு மேலிட்டபோது தூய்மையான தரை யில் படுத்துப் புரளலாம். அல்லது ஆதனத்தில் அமர்ந் திருக்கலாம். உலவி வரலாம். அன்றாடம் மூன்று வேளை கள் நீராடியிருக்க வேண்டும்.

23. தவம் நெறியுடன் ஓங்கும் பொருட்டு, கிரீஷ்ம ருதுவில் பஞ்சாக்நி மத்தியிலும், மழை காலத்தில் மழை

யில் நனைந்து கொண்டும், பனிக் காலத்தில் ஈரத் துணியைப் போர்த்தும் இருந்து தவம் செய்ய வேண்டும்.

24. அன்றாடம் மூவேளைகளும் நீராடி, தேவ ரிஷி பிதுர் தர்ப்பணமும் இயற்றி, பக்ஷ உபவாசம், மாத உபவாசம் இருந்து யாக்கையை ஒடுக்கவும்.

25. இப்படி ஆறு மாதங்களான பின், மூன்று தீயினையும் முடித்துச் சாந்தப்படுத்திய பின், வீடும், தீ வளர்த்தலும் நீத்து, சாக பட்சணத்துடன் மோனம் காத்து வாழலாம்.

26. நல்ல கனிகள் மீது ஆவலும், சீதோஷ்ண விருப்பமும் ஆகிய இச்சைகள் அற்று, காமக் கலவியின்றி, தரையில் சயனித்து, எதிர்ப்படும் மர நிழலில் தன்னை மறந்து தங்கியிருக்க வேண்டும்.

27. காய் கிழங்குகள் கிடைக்காவிடின், வானப்பிரஸ்தரான அந்தணரிடமோ, அவர்களில்லையேல், வனம் புகுந்துறையும் இல்வாழ்வாரிடமோ தன் உயிருக்கு வேண்டியது மட்டும் கேட்டுப் பெற வேண்டியது.

28. இவர்களு மில்லாதபோது, இரண்டு கைகள் நிறையவோ, மரப் பாத்திரம், தொன்னை இவற்றில் எட்டுக் கவளங்களோ, சோறு பெற்றுண்ணலாம்.

29. இந்த நோன்புகளையும் மற்றும் பலவற்றையும் நோற்றிருந்து, நற்கதி யெண்ணி, உபநிடதம் வேதாந்தம் இவற்றால் மெய்ப்பொருளை உள்ளத்தில் பதித்திருக்க வேண்டியது.

30. முனிவன், துறவி, இல்வாழ்வான், பிரம்மசாரி இவர்களால், கல்வி, தவம், உடல் தூய்மை இவற்றை எண்ணி உபநிடதம் முதலிய வேதாந்தங்கள் பயிலப் படுவன.

31. முதுமை எய்தியபோது ஈசான திசையில் உடல் விழுந்துவிடும் வரையில் நீரையும் காற்றையும் பருகியிருந்து பெரும்பதம் எய்தவும் செய்யலாம்.

32. இத்தகையதான மகாமுனி விரதத்தில் யாதா மொன்றினுல் உடலை விடுகிறவன், அச்சமும் துயருமற்று, பிரம்ம லோகத்தில் மேலான இன்பம் துய்ப்பவனுவான்.

## துறவி—துறத்தலும், துறவு நெறியும்

33. அல்லது, காட்டில் வாழ்வின் மூன்றும் நிலையைக் கழித்து, நான்காம் நிலையில் ஆசைகளை வென்று, உலகத் தொடர்பனைத்தும் நீத்துத் துறவியாகி விடலாம்.

34. முறையே பிரம்மசர்யம், இல்லறம், வானப் பிரஸ்தம் இவற்றை உரிய கடன்களுடன் இயற்றிச் சலித்து இறுதியில் அனைத்தும் நீங்கப் பெற்ற துறவினுல் மேலான இன்பம் பெறுவான்.

35. ருஷிகள் பிதுர்களுக்குக் கடன் நேராமல் துறவு கொள்வோன் நரகத்தை யடைவான்.

36. பிறவியினுல் மனிதனுக்குத் தேவ ருஷி பிதுர்க் கடன்கள் வந்தடைகின்றன. வேள்வியால் தேவர்க்கும், சந்ததியால் பிதுர்க்களுக்கும், வேதப் பயிற்சியால் ருஷி களுக்கும் கடன் தீர்க்க வேண்டும். ஒளி வணக்கமாகிய வேள்விகளையும் இயன்ற அளவில் முறைப்படி இயற்றி, மோக்ஷ சாதனமான சந்யாசத்தில் மனம் ஊன்றுக.

37. வேத மோதாமை, சந்ததியின்மை, வேள்வி இயற்றுமை இவற்றுடன் மோக்ஷத்துக்கு முயல்வதால் நரகமே வாய்க்கும்.

38. தனதுடைமைகள் அனைத்தையும் தியாகம் புரி கின்றதான பிராஜாபத்ய வேள்வியை முடித்து, தான் வளர்த்த முத்தீயினையும் தனது உணர்வினில் ஏற்றவாறு இல்லறம் நீத்துத் துறவு மேற்கொள்க.

39. தன்னுல் யாதொரு பிராணிக்கும் அச்ச மேற் படாமல் இல்லறம் நடத்தித் துறவு பேணுவோனுக்கு ஒளி பொருந்திய நல்லுலகங்கள் காத்திருக்கின்றன.

40. எவனைப்பற்றி எவ்வுயிரும் சற்றும் அஞ்சியிருக்க வில்லையோ அவனுக்கு மறுமையில் யாண்டும் அச்சமில்லை.

41. துறவு மேற்கொண்டவன் தூய்மையான கமண்டலம், தண்டு, பவித்ரம் இவற்றுடன், வலிந்து யாரேனும் கொடுத்தாலும், விஷய சுகங்களில் நாட்டமின்றி மோனத்துடன் இருக்க வேண்டியது.

42. துணையின்றித் தனித்திருந்து பிரம்ம நிஷ்டையினால் மோக்ஷத் தகுதி பெற வேண்டும். அத்தகையோனுக்குச் சேர்க்கையினாலோ பிரிவினாலோ சுக துக்கங்கள் வருவதில்லை.

43. தனக்கொரு வீடென்றிராமல், நெருப்பில் சமைத்து உண்பதென்றிராமல், அன்றாடம் பிக்ஷைக்காகக் கிராமத்திற் புகவும். ஒரு பொருளும் விரும்பாமல், நோய்க்கு மருந்து தேடாமல், உறுதியான நினைவுடன், பிரம்ம சிந்தனையுடன், இரவும் பகலும் வனத்தில் இருக்க வேண்டியது.

44. மண் பாண்டம், மரத்தடி வாசம், கந்தை உடுத்தல், தனிமை, நட்பு பகை என்னல் தவிர்த்துச் சம நோக்குடன் காணல் இவை யாவும் மோக்ஷ நாட்டமுடையோனுக்கு உரிய குறிகளாம்.

45. தனது உயிர் வாழ்வு அல்லது மறைவு இவற்றை விரும்பக் கூடாது. ஊதியம் பெறுகிற நாளை எண்ணியிருக்கும் சேவகனைப் போல உடல் வாழ்வு உதிர்ந்து போகும் நாளை எதிர்பார்த்திருக்க வேண்டியது.

46. தரையைப் பார்த்தவாறே தப்படி வைக்க வேண்டும். துணியால் வடிகட்டியே நீர் பருக வேண்டும். மெய்மையே பேச வேண்டும். அந்தராத்மாவுக்கு மகிழ்வு தரும் செயல்களே புரிதல் வேண்டும்.

47. பிறர் கூறும் இழிவைப் பொறுத்தலும், பிறரை இழிவுறுத்தாமையும், பிணியுறுவதும் நிலையற்றதுமான

உடலை முன்னிட்டு யாருடனும் பகைக்காமலும் இருக்க வேண்டும்.

48. தன்னைப் பிறர் சினந்தபோதும், தான் சினத்தலாகாது. வன்சொல் வழங்கப் பெறினும், தான் இன்சொல்லே இயம்புக. ஐம்புலன், மனம், புத்தி இவ்வேழினுலும் அறிந்த உலக நடையினையும், அழிகின்ற அறம், பொருள், இன்பங்களையும் பேசலாகாது.

49. மெய்ப்பொருள் உணர்வினனாய் தண்டம், துறவுடை இவற்றிலும் அதிக விருப்பமின்றி, விஷய சம்பந்த மற்று, தனது உடலால் உழைத்துக் கொண்டே, மோக்ஷ நாட்டத்துடன் உலகில் இயங்கியிருக்கவும்.

50. பூமி சாஸ்திரம், நிமித்த நூல், மருத்துவம், சோதிடம், தர்க்கம் இவற்றைக் கற்பித்து ஊதியம் பெறலாகாது.

51. பிரம்மசாரி, வானப்பிரஸ்தன் இவர்கள் பிக்ஷைக்குக் காத்திருக்கும்போதும், பறவை நாய் இவைசோறுண்டிருக்கும் போதும், அவ்விடத்தில் தானும் பிக்ஷைக்குச் சென்று நிற்றல் கூடாது.

52. முடி, நகம், மீசை இவையகற்றி, தண்டு, கமண்டலம், திரிதண்டம், தருப்பை, காஷாயம் இவற்றைத் தரித்து யாரையும் வருத்தாமல், புலன் வெற்றி கொண்டு எங்கும் நில்லாமல் திரிந்து கொண்டிருக்க வேண்டும்.

53. பொன், வெள்ளி, செம்பு இவை போன்ற பாத்திரங்களைத் தவிர்த்து, மண், மரப் பாண்டங்களை ஓட்டையில்லாதனவாய் வைத்துக் கொள்ள வேண்டும். அவற்றை வேள்விக் கலங்களைப்போல் மண்ணாலும், நீராலும் தூய்மை செய்து கொள்ளவும்.

54. தெங்கின் குடுக்கை, சுரைக் குடுக்கை, மர ஓடு, தொன்னை, மண்பாண்டம், மூங்கில்படி இவையெல்லாம் துறவியின் பாண்டங்கள் என்று மநு கூறியுள்ளார்.

55. ஒரு வேளை பிக்ஷை கொள்ளவும். அதுவும் அளவுடன் இருக்கவும். அதிகம் புசித்தால் சந்யாசியும் காமம் கொள்ள நேரும்.

56 புகை, உலக்கைச் சத்தம், அடுப்பு எரிதல் இவையில்லாமல், விருந்தினர் உண்டான பின்னர், அமைதி பெற்றிருக்கும் இல்லங்களில் சந்யாசி பிக்ஷைக்குப் போகவும்.

57. அகப்படாவிட்டால் கவலையும், பிக்ஷை கிடைத்தால் மகிழ்ச்சியும் கொள்ளாமல், உயிரைக் காத்துக் கொண்டு, அணுவிலும் சிறியதிலும் விருப்பின்றி இருக்க.

58. தன்னைப் போற்றி ஒருவன் பிக்ஷை யிட்டால், அதைத் தடுத்துக் கொள்ள வேண்டும். அதனில்விருப்புற்றால், மோக்ஷ வாயினின்றும் கூடப் பிறவிப் பிணி வந்தெய்தும்.

59. சிறிதே புசிப்பது, தனித்திருத்தல், இன்ப நாட்டமுள்ள புலன்களை நல்லாற்றிற் செலுத்தல் இவை வேண்டும்.

60. புலன் கட்டுப்பாட்டாலும், விருப்பு வெறுப்பை விடுவதாலும், உயிர்வதை செய்யாமையாலும் மோக்ஷத் தகுதி பெறுவான்.

61. புலனடக்க மில்லாதவர், பாவவினைப் பயனாக வரும் பசு முதலிய பிறவிகளையும், நரகவாதனைகளையும், யமவாதனையையும் விளக்கும் சாத்திரங்களைக் காண்க.

62. வேண்டியவரென்று நட்டல், வேண்டாதாரென்று பகைத்தல், முதுமை, நோய் இவற்றால் வரும் துன்பம்—

63 மரணத்தின்போது வரும் அவதிகள், மீண்டும் கருப்பையுட் சேரும் பிறவித் துன்பம், நாய் முதலிய பாவப் பிறவிகளை எடுத்தல் இவற்றை எண்ணிப் பார்க்க வேண்டும்.

64. மறத்தால் வரும் துன்பத்தையும், மெய்ப்பொருள் விளக்கத்தால் பெறும் மாறாத வானின்பத்தையும்-

65. எல்லாவுயிர்களிலும் கரந்து அவ்வவர்க்கும் இன்ப துன்பங்களை நல்கும் பரம்பொருள் திருவருளையும் ஞானக் கண்ணால் பார்க்க வேண்டும்.

66. துறவு வேடங்கள் மட்டுமே ஒருவனைத் துறவியாக்குவதில்லை. வேடங்களின்றியே உயிர்ப் பொதுமையுணர்வுடன் இருப்பதே சாலும்.

67. தண்ணீரைத் தேத்தாங்கொட்டை தெளிவிக்குமேயன்றி, தேத்தாங்கொட்டையின் பெயரைச் சொன்னதனால் மட்டுமே தண்ணீர் தெளிவதில்லையல்லவா?

68. இரவு பகல் எந்நேரமாயினும், தன்னால் சிற்றுயிரும் நோகாவண்ணம் தரையைப் பார்த்து அடி வைக்க வேண்டுமென்பது ஒருவன் சாம்போதும் கடைப்பிடிக்க வேண்டியதாகும்.

69. அப்படித் தன்னையறியாமல் உயிர்க்குஊறுசெய்ய நேர்ந்தபோது, அந்தப் பாவத்தை, ஸ்நானம் செய்துபின் ஆறு பிராணுயாமம் செய்து சந்யாசி போக்கிக் கொள்ளவும்.

70. மூன்று தரம் பிராம்மணன் காயத்ரி செய்தாலும் உயர்ந்த தவத்திற்கிணையாகும்.

71. தீயிட்ட பொன் மாசகன்று ஒளிர்தல்போல, உடற் குறைகள் அனைத்தும் பிராணுயாமத்தாற்போகும்.

72. பிராணுயாமத்தால் பொறி, புலன் பிழைகளையும், மெய்ப்பொருள் அறிவால் வினைப்பயனையும், புலனடக்கத்தால் விஷயக் கவர்ச்சியையும், மெய்ப்பொருள் நாட்டத்தால் காமக் குரோதங்களையும் போக்குக.

73. கற்றறியார் உணரவியலாததான பல் யோனிப் பிறவிகளை ஆன்மா பெறும் உண்மையைத் தியானத்தால் அறிந்து பிரம்ம நிஷ்டை கூடுக.

74. மெய்ப்பொருளைக் கண்டோனை வினைப்பயன் தீண்டா. அதாவது பிறப்பிறப்புத் தொல்லை இல்லை. அந்த மேலான நாட்டமில்லாதவன் பிறவியும் மரணமும் அடைகின்றான்.

75. ஹிம்சை புரியாமல், புலன் இன்பம் நாடாமல், நித்யக் கடன்கள் புரிவதாலும், பற்பல நோன்புகள் நோற்றலாலும் மேலோர் இவ்வுலகில் மோக்ஷத்தை நிலை பெறச் செய்கின்றனர்.

76. என்பெனும் தூணும், நரம்பெனும் நாறும், உதிரம் தோய்ந்த தசையெனும் பூச்சும், தோலெனும் போர்வையும், மல மூத்திரங்களால் கெட்டும்—

77. மூப்பு, துன்பம், பிணி இவை நிலவியும், பசி, தாகம், குளிர், கானல்களால் அச்சுறுத்தப்பட்டும், மிகுதியும் ரஜோ குணம் பொருந்தியும், ஐம்பூத நிலையமாயும், நிலையற்றதாயும் இருக்கிற உடற் கூட்டை ஆன்மா மீண்டும் அடையா வண்ணம் காக்க வேண்டும்.

78. ஆற்றங்கரையின் மரம் ஆற்று நீரால் வீழ்வது போன்று, முன்வினை மூண்டதனை இப்பிறவியின் நல்வினை மாய்த்து முக்தி தரும். ஞான யோகமோ, பறவை மரக்கிளை விட்டுப் பறந்து விடுவது போன்று, விரும்பியபோது பீஷ்மர் முதலானோரைப் போல் ஒருவன் தன் தேகத்தை விடச் செய்யும். இவனுக்கும் பிறவிப் பிணி அணுகுவதில்லை.

79. மெய்ஞ்ஞானி அன்பர்க்குத் தன் நற்பலனையும், அல்லார்க்குத் தன் பாவத்தையும் பகிர்ந்துவிட்டு, தான் அழிவற்ற பிரம்மானந்தம் அடைகிறான்.

80. விஷய சுகங்களைப் பிரம்ம தியானத்தால் நீக்குவோன் இம்மை மறுமைகளிலும் அழிவற்ற இன்பம் எய்துவான்.

81. சம்சார பந்தங்களையும், மானா அவமானங்களையும் நீக்கியவன், ஞானயோகம் அல்லது கர்மயோகத்தாலேயே பிரம்மசாயுஜ்யம் பெறுவான்.

82. மேற் சொன்னவாறு விட்டொழித்தல் பிரம்மத் தியானம் உள்ளவனுக்கே பலன் தருமன்றி, அஃதில்லாதவனுக்கு ஒரு கர்மமும் பலிக்காது.

83. வேதாந்த வாக்யத்தில் விளக்கியிருப்பது போன்று வேள்வி கடந்து, தெய்வதம் கடந்து, ஆன்மாவும் நாண்டியிருப்பதான பிரம்ம சொருபத்தைச் சதா தியானித்தல் சந்யாசியின் வழி.

84. இந்த வேதாந்தம் பொருளறியாமல் ஓதுகின்றவனையும் காப்பாற்றுகிறது. பொருள் அறிந்தவர் பெறும் பயனை விளக்க வேண்டியதில்லை. கைவல்யமோ, மோக்ஷமோ விரும்புவோருக்கு இதுவே கதியாகும்.

85. இவ்விதப் சந்யாசம் பெறும் துவிஜன், பாவமனைத்தும் இம்மையிலேயே நீத்து, மேலான பிரம்ம நிலையை எய்துவான்.

## அந்தணரின் நால்வகை நிலையும் பரஸ்பரத் தொடர்பும்

86. மகாத்மாக்களான துறவிகளின் பொதுவான அறங்களை இதுகாறும் கூறினேன். வேதம் விதித்த வினைகள் புரிந்து, சம்சார பந்தமின்றி வீட்டிலேயே வசிக்கும் துறவியின் அறங்களை இனி விளக்குவேன்.

87. தனித் தனியாகப் பிரம்மசாரி, கிரகஸ்தன், வானப்பிரஸ்தன், சந்யாசி ஆகிய நான்கு ஆசிரமங்களும் கிரகதாசிரமத்தாலேயே உண்டாகின்றன.

88. விதிப்படி அவ்வதன் ஒழுக்கங்களை மேற்கொண்டு நடத்தி வந்தால், இவை நான்கும் தனித்தனியே மோக்ஷம் தர வல்லனவேயாகும்.

89. இந்நான்கு ஆசிரமங்களுக்குள்ளே, வேதம், அற நூல்கள் விதித்தபடி நெறிமுறை ஒழுகும் இல்வாழ்வான், மற்ற மூவர்க்கும் உற்ற துணையாக விளங்குகிறவனாதலினல் அவன் உயர்ந்தவன்.

90. நதி, நதம் இவை கடலை யடைவது போல், ஏனைய மூவரும் பிக்ஷைக்காக இல்வாழ்வானையே நாடி வர வேண்டியவராகின்றனர்.

91. இந்நால்வரும் தங்கள் முயற்சியால் இயற்றி வரத் தக்க பத்து வகை அறங்களும் இவையாகும்.

92. மகிழ்ச்சி, கேடு சூழ்ந்தாரை ஒறுக்காமை, மன வடக்கம், தீவினையாற் பொருளீட்டாமை, பொறிபுலன் வென்றி, நூல் அறிவு, மெய்ப் பொருள் உணர்வு, உண்மை, சினமின்மை ஆகிய பத்துமாம்.

93. இப்பத்தினையும் அறிந்து நடத்துவோர் மேலான மோக்ஷம் புகுவர்.

94. பத்து வித அறங்களும் இயற்றிப் பொறிபுலன் வென்றி கொண்டு விளங்குவோன் ஆகிய இல்வாழ்வான், முக்கடன் முடித்து, வேதாந்தப் பொருளைக் குரு முகமாய்க் கேட்டு, சந்யாசம் செய்து கொள்ள வேண்டும்.

95. இல்லறக் கடமைகள் யாவும் முடித்து, அறியாமல் செய்பிழை நீக்கும் பிராணயாமம் முதலிய நியமங்களால் தூய்மையுற்று, வேதாந்த மோதி, பிள்ளை யிடமே உடையும் பலியும் ஏற்றுச் சுகமே இருக்கலாம். இதுவே இல்லற சந்யாசம் என்னும் துறவு பேதத்தின் வழி.

96. இப்படி எல்லா வினைகளையும் நீங்கி, நற்கதியை நாடி, எதனிலும் பற்றற்றுச் சந்யாசி ஆனவன் பாவங்கள் அகற்றி மேலான பதம் பெறுகிறான்.

97. இதுவரை பிராம்மணர்க்குரிய நால்வகை ஆசிரமங்களையும், அவற்றின் தர்மங்களையும் உங்கட்கு உரைத்து வந்தேன். இனி தூய்தான சுவர்க்கத்தைத் தருகின்ற பட்டத்து அரசர்களான க்ஷத்ரிய தருமங்களைக் கேட்பீர்களாக.

**ஆறும் அத்தியாயம் முற்றும்.**

## ஏழாம் அத்தியாயம்

# அரச நீதி

### மன்னர்தம் மாண்பும் பண்பும்

1. இம்மை மறுமைக்குரிய மன்னர் அறங்களையும், அவர்கள் தோற்றத்தையும் அவர்கள் பெறுவனவற்றை யும் முதலில் முறையே விளக்கக் கேளீர்.

2. வேதம் கட்டளையிட்டிருக்கின்றவாறு உபநயன முதலிய சம்ஸ்காரங்களைக் கொண்ட க்ஷத்திரியனால் இவ் வுலகம் விதிப்படி காப்பாற்றத் தக்கதாகும்.

3. காவலன் இல்லையேல், எளியோர் வலியோரை அஞ்சி அழிந்து போவர். ஆனால், உலகம் அழியா திருக்கும் பொருட்டே இறைவன் மன்னனைப் படைத்தார்.

4. இந்திரன், வாயு, எமன், சூரியன், அக்னி, வருணன், சந்திரன், அளகேசன் ஆகிய திசைக் காவலர் அனைவரின் தன்மைகள் ஒருருவாகத் தோன்றியவனே அரசன்.

5. திசைக் காவலரான தேவர்களின் வடிவினன் ஆத லால் மனிதர்களில் மிக்கொளியுடையவனும் ஆண்டு கொள்ளும் ஆற்றல் மிக்கவனும் அரசன் திகழ்கின்றான்.

6. ஏறிட்டுப் பார்க்கும் எவரையும், அவரது கண்ணை யும், மனத்தையும் காந்தச் செய்வதால், யாரும் அரச னுக்கெதிரே நின்று பார்க்கக் கூடாதவ ராகின்றனர்.

7. தனது மகிமையினால் அவ்வப்போது தீயாகவும், காற்றாகவும், சூரியனாகவும், சந்திரனாகவும், யமனாகவும், குபேரனாகவும், வருணனாகவும், தேவேந்திரனாகவும் இருப்பான்.

8. தெய்வ திக்பாலர்களின் அம்சமாக விளங்குபவ னாதலால், அரசன் வயதிற் சிறியவனாக இருப்பினும், மனிதன் என்ற முறைமையில் அவனை அவமதிக்கலாகாது.

9. அணுகுவோனைத் தீயானது எரித்துவிடும்; அரசனுடைய சினமோ ஒருவனைச் சுற்றம், பொருள் அனைத்துடன் தீய்த்துவிடக் கூடியதாகும்.

10. தன்வலி, இடம், பொருள், ஏவல் இவற்றிற்கேற்றவாறு அறத்தை நிலை நாட்டும் பொருட்டாகவே ஒவ்வொன்றையும் நிறைவேற்றத்தக்க தோற்றம் எடுக்கிறான். வலி குறைந்தபோது அடங்கியும், வலி மிகுந்த போது வீறிட்டும் நிற்பான்.

11. அவன் தயவினால் பொருளும், வெற்றியும் கிடைக்கும். அவன் பகையால் மரணமே நேரும். அத்தகையவன் மிகுந்த ஒளி படைத்தவனல்லவா! எனவே, தனக்குச் செல்வமும், வெற்றியும், வாழ்வும் விரும்புவோன் ஒருக்காலும் அரசனை எதிர்க்கக் கூடாது

12. அறிவின்றி அரசனைப் பகைப்போன் அழிவுறுவான். அரசனும் அவன் அழிவைக் குறிக்கொள்வானே

13. எனவே, ஒன்றைக் கொள்ளவோ, தள்ளவோ பிறக்கும் அரசாணையை ஒருவரும் தடுக்கலாகாது.

14. உயிர்களனைத்தையும் புரக்கும் பொருட்டு, அறத்தின் வடிவமானதும், ஒளி பொருந்தியதுமான செங்கோலைப் பிரமன் படைத்தார்

15. கோலுக்கு அஞ்சி நின்றே சராசரங்கள் இன்பம் துய்ப்பதுடன், தத்தமக்குரிய நெறிகளையும் விடாது ஒழுகுவனவுமாகும்.

16. குற்றவாளியைத் தண்டிப்பதில், இடம், நேரம், திறன், அறிவு இவற்றையெல்லாம் எண்ணிப் பார்த்தே ஏற்றவாறு தண்டிக்க வேண்டும்.

17. தண்டனையினால் அரசனது மேன்மை நிலைபெறுவதால், தண்டனையே **அரசனாகவும்**, எல்லா உயிர்களையும் ஒறுக்கும் வலிமையுள்ளதால், **ஆண்மையுடைய**தாகவும்,

ஒன்றைக் கட்டளையிடவும், அடக்கவும் வல்லதாகை யினால், நான்கு ஆசிரமங்களுக்கும் அரணாகவும் இருக் கிறது.

18. தண்டநீதி நன்கு செலுத்தப்பட்டால், குடிகள் இன்புறுவர். கோல் சாய்ந்தால் யாவையும் அழிவுறும்.

19. எல்லா மக்களையும் ஆணையிடுகிறது, காக் கிறது. மற்றவர் தூங்கும் போதும் அது விழிப்புடன் இருக்கிறது. ஆகவே, அறமே செங்கோல் என்று மேலோர் கூறுகின்றனர்.

20. உரியவர்களைத் தண்டிக்கச் சோம்பினால், சின்ன மீன்களைப் பெரிய மீன் விழுங்குவது போல், வலி யார் எளியார் பொருளைக் கவர்ந்து அவர்களைக் கொன் றும் விடுவர்.

21. தண்டநீதி வழங்கப் பெறாத நாட்டில் வேள்விப் பலியைக் காக்கை முதலியனவை தின்னும். அவிசை, நாய் முதலிய நக்கும். உரியவர்க்கு அவர் தம்பொருள் உடைமை யாகாது. இழிகுலத்தோனும் மேலோனாவான்.

22. தண்டனை உண்டென்றால் மட்டுமே உலகோர் நெறியில் நிற்பர். இயல்பிலேயே அவ்விதம் நடக்க மாட் டார். தண்டனைக்கு அஞ்சியே உலகம் இயங்குகிறது.

23. இறைவனுடைய தண்டனையை அஞ்சியே தேவர், அசுரர், கந்தருவர், அரக்கர், பட்சிகள், பாம்புகள் ஆகிய அனைவரும் உலகுக்கு இதமாக வாழ்கின்றனர்.

24. ராஜ தண்டனை யில்லையெனில், உலகில் சாதி மரியாதை, சாத்திர மரியாதைகளை மக்கள் கடந்து விடுவர். பிறன் மனையை அபகரித்தல், களவாடல், வன் செய்கை இவற்றால் ஒருவரை யொருவர் பொருது நிற்பர்.

25. ராஜ நீதி நிலவும் நாட்டில் கருத்த மேனியும், சிவந்த கண்களுமுடையதும், பாவத்தைப் போக்குவது மான தண்ட நீதியாகிய தெய்வம் சஞ்சரிக்கிறது. ஆத லால் அங்கு மக்கள் துயருறார்.

26. பட்டத்துக்குரிய மரியாதைகளும், உண்மையும், பொய் மெய் பகுத்தறியும் பழக்கமும், அறநூல்களின் அறிவும், அறம், பொருள், இன்பங்களை அறிந்தும் இருக்கின்ற அரசனே இத்தகைய தண்ட நீதிக்கு அதிகார முடையவன்.

27. கோலாட்சியுடைய மன்னன் அறம், பொருள், இன்பப் பேறுகளால் மேன்மையுறுவான். அப்படி ஆளாமல், சிற்றின்பப் பற்றும், சினமும், தீநெறியும் பற்றும் அரசனை அவனது கோலைக்கொண்டே மந்திரி முதலானவர் கொன்று விடுவர்.

28. அமைச்சன், தந்திரி, புரோகிதன் முதலிய துணையும், ஞானமுமில்லாத அரசன் கோலோச்சக் கூடாதவன். கோலுக்குரிய நீதிதேவன் அத்தகைய மன்னனைக் குலத்தோடு அழிப்பான்.

29. பின்னர் கோட்டை, நாடு, உலகம், சராசரம், வானுலக வாசிகளான தேவர், முனிவர் இவர்களையும் அழிப்பான்.

30. தண்ட புருடன், அமைச்சு முதலிய ஆயங்களில்லாமல், மூடனுயும், பேராசைக்காரனுயும், புத்தி, கல்வியில்லாதவனுயும், சிற்றின்ப இச்சை யுடையோனுயும் இருக்கிற அரசன் ஆண்டு கொள்ளக் கூடாதவன்.

31. நேர்மை, வாய்மை, கலைஞானம், நல்லமைச்சு, தத்துவ ஞானம் பொருந்திய அரசனே தண்ட நீதி செலுத்த வல்லோன்

32. தனது குடிமக்களை நெறிப்படி ஆள்பவனுய், பகையைச் செற்று, நட்புரிமை பூண்டோரிடம் வஞ்சமின்றிப் பழகி, மேலோர் இயற்றும் சிறு பிழைகளைப் பொறுப்பவனுய் அரசன் திகழ வேண்டும்.

33. இத்தகைய அரசன் வறுமை யெய்தி, உதிர் நெல்லைப் பொறுக்கி உண்பவனுயினும், நீரில் கலந்த எண்ணெய்போல், அவனது புகழ் யாண்டும் பரவிக் கமழும்.

34. மேன்மைக் குணமும், புலனடக்கமு மற்ற அரசன் புகழ், நீரில் விழுந்த நெய் போல், கீழே சென்று விடும்.

35. தத்தம் நெறி நிற்கும் நால் வருணத்தர், நான்கு ஆசிரமத்தர் இவர்களைக் காக்கும் பொருட்டே அரசன் படைக்கப் பட்டான்.

36. அரசனுடைய பரிவாரங்களையும், அவனுடைய ஆட்சியையும், பல்வேறு கடமைகளையும் முழுதும் இனி உங்கட்கு முறையாகக் கூறப் போகிறேன்.

**மன்னன் கடமை, அரசாங்க அதிகாரிகள், தலைநகரம்**

37. அன்றாடம் வைகறையில் எழுந்து, மூன்று வேதங்களையும் அற நூல்களையும் ஆய்ந்துணர்ந்த அந்தணரை வரவேற்று, அவர்தம் கருத்துப்படி ஆணை செலுத்தி வர வேண்டியது.

38 அதிலும் கல்வி, வயது இவற்றால் முதியராயும், உள்ளும் புறமும் தூய்மையினராயு முள்ளவரை எப்போதும் அரசன் போற்ற வேண்டும். மேலோரைப் போற்றுவோனுக்கு அரக்கராலும் அச்சம் நேரிடாது.

39. தான் நீதிகள் அறிந்தவனாயினும், எதன் தீர்ப்பையும் மேலோரிடம் வணங்கிக் கேட்டறிவது நலம். ஏனெனில்,மேலோரின் துணிபுகள் ஆக்கம் தருவனவாகும்.

40. மேலோர் துணிபின் வழி நீதி வழங்கத் தவறிய மன்னர் பலர் அழிந்தே போயினர். நாடிழந்து கானம் புகுந்த மன்னர் பலர் மேலோர் ஆணைப்படி நடந்து இழந்தவற்றை மீட்டனர்.

41. மேலோரிடம் பணிவிலாத வேனன், நகுஷன், சுதாசன், யவனன், சுமுகன், நிமி ஆகியோர் நாட்டை யிழந்து தாமும் அழிந்து போயினர்.

42. பிருகு, மநுஇவ்விரு பேரரசர்களும் மேலோரிடம் கொண்டிருந்த பணிவன்பினால் நாட்டையும், குபேரன்

அளவிறந்த செல்வத்தையும், விஸ்வாமித்திரன் பிரம்ம தேஜஸையும் பெற்றார்கள்.

43. முறையாய் மூன்று வேதம் கற்றோரிடம் வேதத்தையும், அற நூல் அறிந்தோரிடம் நீதியையும், தர்க்க சாஸ்திரியிடம் விவாத அறிவையும், மொழி வல்லாரிடம் மொழிகளையும் அரசன் கற்க வேண்டியது.

44. இரவு பகல் புலனடக்கம் பெறுவதே மன்னன் வலிமை. அத்தகையோனுக்கே குடிகள் அடங்கி நடப்பர்.

45. இன்பம் போல் தோன்றித் துன்பமே விளைவிக்கும் காமத்தால் பத்து விதத் துயரங்கள் நேரிடுவதாகும். கோபத்தால் எட்டு விதத் துயரங்கள் விளையும். இவையனைத்தையும் அரசன் விலக்க வேண்டும்.

46. காமத்திற் பற்றுள்ள மன்னன் அறம் பொருள் இரண்டையும் இழப்பான். சினம் மிகுந்த அரசன் தன் தேகத்தையே இழந்து போவான்.

47. காமத்தின் விளைவுகள் பத்து:—

வேட்டை, கவறுடல், பகல் துஞ்சல், வம்பாடல், பெண்களுடன் குலவுதல், குடித்தல், இசை, கூத்து, பல்லியம் இவற்றில் மயங்குதல், மனம் போனபடி அலைதல்.

48. சினத்தால் விளையும் துயரங்கள் எட்டு:—

கோள், பொய்த் துணிவு, இரண்டகம், பொறாமை, பிறர் நலம் காணச் சகியாமை, பிறன் பொருள் விழைதல், காரணமின்றி ஒறுத்தல், வசை கூறல்.

49. இவ்விரு வகையாலும் வரும் பதினெட்டுத் தீக்குணங்களுக்கும் காரணமாக மேலோர் கூறும் லோப குணத்தை அரசன் கவனத்துடன் நீக்குக.

50. காமத்தின் விளைவுகளான பத்தில், காதல், கவறுடல், கள்ளுண்டல், வேட்டையாடுதல் இந்நான்கும் மிகுந்த துன்பம் தருவன.

51. சினத்தின் விளைவுகளில் காரணமின்றி அடித்தல், வசை மொழிதல், பிறர் பொருள் கோடல் இம் மூன்றும் பெரும் தீமை தருவன.

52. காமம் சினத்தால் விளையும் இவ்வேழும் முறையே ஒன்றை ஒன்று விஞ்சிய துயரம் தருவன.

53. கவலை, மரணம் இவ்விரண்டில் கவலையே பெருந் துன்பம். கவலையால் இறப்போன் நரகத்தையும், கவலையற்று மரணமடைவோன் சொர்க்கத்தையும் அடைவர்.

54. ஏழெட்டுப் பேர் கொண்ட அமைச்சவை அரசனுக்குத் துணையாக அமைய வேண்டும். அமைச்சர்களாக அமைவோர், பரம்பரையாக மந்திரம் வல்ல குலத்தினராகவும், நீதி நூல், வேதாந்தம், வில்வேதம் இவையறிந்தோராயும், வலிமை யுடையோராயும், நல்ல வம்சத்திற் பிறந்தோராயும் இருக்க வேண்டும்.

55. சாதாரணக் குடும்பத்தையே ஒருவன் தனியாக நடத்துவது இயலாததாயிருக்க, பெரும் பொறுப்புக்களை யுடைய இராச்சிய நிர்வாகத்தைத் தனிப்பட ஒருவன் நிறைவேற்ற முடியுமா?

56. அமைச்சர்களுடன், போர், சமாதானம், சேனைகள், கருவூலம், நாடு, நகரம், பசு, தான்யம், கொடை இவை பற்றியெல்லாம் ஆராய்ந்து கொள்ள வேண்டும்.

57. அமைச்சர்களின் கருத்தைத் தனித்தனியே கேட்டறிந்து, அனைவரும் அங்கீகரித்த செயலைத் தனக்கு மனதிருந்தால் செய்யலாம்.

58. அவர்களில் அந்தணனாக இருக்கும் அமைச்சனிடம், பகைமையைச் சமாதானப்படுத்துவது, எதிர்ப்பது, போரிடுவது, பகைச் சேனையைச் சூழ்ந்து கலைப்பது, தஞ்சம் புகுவது இவை ஆலோசிக்கத் தகும்.

59. அன்றாடம் அவ்வந்தண அமைச்சனிடம் யாவும் கூறி ஆலோசித்துப் பின்னரே ஒன்றைத் தொடங்க வேண்டும்.

60. நாணயம், அறிவு, சிக்கனம், வருவாய் உண்டாக்குதல் இவை கற்றவர்களைப் பொக்கிஷ முதலான பொறுப்புக்களில் நியமிக்க வேண்டும்.

61. செயல்கள் தடையின்றி நடைபெற வேண்டிய அளவுக்கு ஊழியர்களைச் சோம்பரற்றவராகவும், திறமையாளர்களாகவும் தேர்ந்து ஏற்படுத்தவும்,

62. ஊழியர்களில் பலம், திறமை, குடிப்பிறப்பு இவை பொருந்தியோரைப் பொக்கிஷம், தங்கசாலை, நெற்களஞ்சியம் இவற்றின் பொறுப்புகளுக்கு அமர்த்த வேண்டும். அச்சம் உடையோரை அந்தப்புரத்திலும், மடைப்பள்ளியிலும் நியமிக்க வேண்டும்.

63. பல்கலை வல்லோனும், சொற்குறி, கண் இமைத்தல் முதலிய சாடை சிட்டிகை போடுதல் முதலிய செய்கை இவற்றை நுட்பமாகப் பகுத்தறிந்து கொள்வோனையும், பொருளாசை யில்லாதவனையும், சமர்த்தனையும், குடிப்பிறப்புடையவனையும் இருப்பவனைத் தனது தூதனாக நியமித்துக் கொள்ள வேண்டும்.

64. நல்லன்பு, திறமை. பொருளாசை யின்மை. நினைவுத் திறன், இடம் பொருள் அறிவு, உடல் வலிமை, அச்சமின்மை, வடமொழி ஆகிய பல்மொழி பேசும் ஆற்றல் இவ்வனைத்தும் உடையவனான தூதன் தனது மன்னனுக்குப் பெருமை தேடித் தருபவனாவான்.

65. படைக்கலம் ஏந்தும் சைன்யங்களைத் தளபதியைக் கொண்டும், தேச விசாரணை பொக்கிஷம் இவற்றைத் தானேயும், போர் எழுதல், சமாதானம் செய்து கொள்ளல் இவற்றைத் தூதன் மூலமாகவும் நடத்திக் கொள்ள வேண்டும்.

66 பகைவரை நண்பராக்கவும், நண்பரைப் பகைவராக்கவும் லல்லவன் தூதன். வெளி நாடுகளிலும் அவனாலேயே போரும் அமைதியும் ஒருவனுக்கு ஏற்படுகிறது.

67. வேற்றரசனுடைய கருத்து, செயல், அவன் வலிமை, தானையின் மனப்பாங்கு இவற்றைத் தான் மறைந்து நின்று தூதன் சென்றறிய வேண்டும்.

68. எதிரியின் நிலைமையை இவ்வாறு நன்கு அறியும் காலத்துத் தனக்குத் தீங்கு நேரிடாதவாறு தற்காத்துத் திரும்பி வர வேண்டும்.

69. தலைநகரை யொட்டி, பைம்பழனங்கள், நன்செய்கள், வர்த்தகம், மக்கட் பகுதியினர் இவற்றுடன் கூடிச் சோலைகள் உடைய சிறு பாக்கங்களையும் அமைக்க வேண்டும்

70. அரசனுடைய தலைநகரத்தைச் சூழ்ந்திருக்க வேண்டிய காவல் கோட்டைகள் பின்வருமாறு:

பன்னிரண்டு முழ உயரமுள்ள கற்கோட்டை, மிகுந்த ஆழமுள்ள நீர் அகழி, ஒரு யோசனை தூரம் வளைந்திருக்கும் காடு, நால்வகைப் படைகள், ஐந்து யோசனை தூரம் சுற்றிலும் நீரில்லாத மண் பரப்பு மலையரண் இவற்றில் ஏதேனும் ஒன்று

71. அனைத்திலும் மலையரண் உயர்ந்தது. இதனையுடைய அரசன் முயற்சியுடன் இருக்க வேண்டும்.

72. இவ்வரண்களில், ஐந்து யோசனை தூரமென்று சொல்லப்பட்ட மண் பரப்பு மிருகங்களினாலும், கற்கோட்டை பெருச்சாளி முதலியவற்றாலும், நீர் அகழி முதலை முதலியவற்றாலும், காடுகுரங்கு முதலியவற்றாலும் நால்வகைப் படைகள் வீரர்களாலும், மலைக்கோட்டை தேவர்களாலும் நிறைந்திலங்க வேண்டியது.

73. இவ்வரண்களில் வசிக்கும் பிராணிகள் வேட்டை யாடப் படாமலிருந்தால், அவற்றையுடைய அரசன் பகைக்கு அஞ்ச வேண்டியதில்லை.

74. கோட்டையின் மேல் நிற்கும் வில்லாளி ஒருவன் நூறு பேரையும், நூற்றுவர் பதினாயிரவரையும் பொருது நிற்க முடியுமாதலால், அரண்களை அமைத்துக் கொள்ள வேண்டும்.

75. கோட்டைக்குள் படைக் கலங்கள், பொருள், தானியம், குதிரை, யானை, அந்தணர், பொறிஞர், சைத்ரிகர், புல், வைக்கோல், தண்ணீர் நிறைந்திருக்க வேண்டும்.

76. அந்தப்புரம், கொல்லுலை, ஆயுதசாலைகளுடனும் உழலைத்தடி வெளிச்சுவர் உடையதாயும், ஜீவ விருக்ஷங்களை யுடையதாயும், நடை வாவி உடையதாயுமுள்ள அரண்மனையை அமைத்துக் கொள்ள வேண்டும்.

77. அரண்மனையிற் புக்க பின்னர், ஒத்த குலம், எழில், குடிப்பிறப்பு, குணம், மெல்லுடல் இவற்றுடன் கூடிய பெண்ணை மணந்து கொள்ள வேண்டியது.

78. தனக்கென்று புரோகிதனையும், ரித்விக்கையும் நியமித்துக் கொள்ளவும். இவர்கள் முறையே அரசனுக்குப் போர்க் கலை, தீ வளர்த்தல் போன்ற கடன்களைக் கற்பித்தும் நடத்திவைத்தும் வரவேண்டும்.

79. பெரும் காணிக்கைகளுக்குரிய அஸ்வமேத முதலிய வேள்விகளை நடத்தி, அந்தணர்க்கான அறச் சாலைகளை நியமித்துக் கொடை வழங்க வேண்டியது.

80. மாத, வருடாந்திர வரிகளைத் தக்க அமைச்சுத் துறைகளின் மூலம் குடிமக்களிடம் பெற்று, அவர்களுக்குத் தந்தை போல் அன்புடையவனாக இருந்து வர வேண்டும்.

81. யானை, குதிரை, தரைப்படை இவற்றின் தன்மைகளையும், மருத்துவத்தையும் அறிந்துள்ளவர்களை மேற்

பார்வைக்கு நியமித்துக் கொள்ள வேண்டியது. அவர்கள் தங்கள் துறை ஊழியர்களை எச்சரிக்கையுடன் நிர்வகிக்க வேண்டும்.

82. குருகுலவாசம் முடித்து வந்த பிரம்மசாரிகளுக்கு அவர்கள் செலுத்துவதற்குரிய குருதக்ஷிணைக்கும், அவர்களது திருமணத்துக்கும் வேண்டிய பொருள் கொடுத்துப் போற்ற வேண்டும். அப்படிக் கொடுக்கும் பொருள் அரசர்க்கு நற்கதியருளும்.

83. அரசன் பொருளைப் போலவே, அந்தணர்க்களிக்கப் பெற்றவற்றையும் கள்வர் பகைவர் இவர்கள் கொள்ளையிட மாட்டார்கள். அந்தணர்க்கு ஒன்று அளிப்பது அழிவற்ற புதையலாகையால் இதனை அரசன் செய்க.

84. தீயில் சொரிந்த அவி உருகியும் உலர்ந்தும் மறையக் கூடும். அந்தண ஸ்வரூபமான அக்னிக்குத் தருவது அழிவற்று விளங்கும்.

85. க்ஷத்திரியா போன்றார்க்களிக்கும் கொடை விதிக்கப்பட்ட நல்வினைவு மட்டுமே தரும். தான் சிறிதும் அனுஷ்டான மில்லாதவன் என்பதை மறைக்காமல் தெரிவிக்கும் அந்தணனுக் களிப்பது இரட்டிப்புப் பலன் தரும். வேதம் ஓதுகிறவனுக்குக் கொடுப்பது லட்சம் மடங்கு மேலாகும். வேதம் முழுமையும் ஓதியுணர்ந்தவனுக்குக் கொடுக்கும் தானத்தின் பலனுக்கு அளவில்லை.

86. சற்பாத்திரமாக அவன் இருப்பதனாலும், பக்தியுடன் கொடுப்பதனாலும், அக்கொடை சொற்பமாயினும், மறுமையில் பெரும் பலன் தருவதாகும்.

**போர் அறம்: உள்நாட்டு நிர்வாகமும் வரி விதித்தலும்**

87. போருக்கு அழைப்பவன் உயர்ந்தவன், சமானன், தாழ்ந்தோன் என்ற பாகுபாடு நினையாமல், போரை ஏற்று அஞ்சாமல் பொருது நிற்க வேண்டியது மன்னர் கடன்.

88. ஏனெனில், போரிற் புறங்கொடாமை, குடிகளை நேர்மையாகப் புரத்தல், அந்தணரைப் பேணல் இம்மூன்றும் அரசனுக்கு மேலான நலன் தருவன.

89. ஒருவரை ஒருவர் கொல்ல நினைத்துச் செய்யும் போரில் புறங்கொடாமல் பொருது நின்று மாள்வோர் சுவர்க்கம் புகுவர்.

90. படைக்கலன்களை ஒன்றைப் போல் மற்றொன்றை உருமாற்றிக் காட்டவும், சல்லடை அம்புகள், நஞ்சு தோய்ந்த சரங்கள், தீயிற் காய்ச்சியவை இவற்றால் பகைவரைக் கோறலுமாகாது.

91. தேரை விட்டுக் கீழே இறங்கியவன் பேடி. தன்னைத் தஞ்சம் புகுந்தவன், சிகை விரித்தவன், உட்கார்ந்திருப்பவன், கைதொழுதுநிற்பவன் இவர்களைக் கொல்லலாகாது.

92. உறங்குவோன், மகிழ்ச்சியற்றவன், ஆடையில்லாதவன், நிராயுதன், எதிர்த்து நிற்காதவன், சண்டையைப் பார்ப்பவன், பிறனுடன் பொருது நிற்பவன் இவர்களையும் கொல்லக்கூடாது.

93. படைக்கல மொடிந்தவன், பிள்ளை இறந்து சோகமுற்றவன், நைய அடியுண்டு கிடப்பவன், அஞ்சினோன், புறங்கொடுத் தோடுகிறவன் இவர்களை ஒறுக்காமல் விட வேண்டியது மேலோர் விதித்த தர்மமாகும்.

94. புறங்காட்டி யோடிக் கொல்லப் படுகிறவனுக்கு அவனை நியமித்துக் கொண்ட தலைவனுடைய பாவங்களும் வந்து சேருகின்றன.

95. அப்படிப் புறமுதுகிட் டோடியவன் தேடிய புண்ணியங்கள் அவனுடைய எசமானுக்குப் போய்ச் சேருகின்றன.

96. தேர், பரி, கரி, குடை, ஆடை, தானியம், பசு, பெண், படைக்கலம் முதலியனவும், தங்கம், வெள்ளி

தவிர்த்த பாண்டங்களும், அவற்றைப் போரில் வென்ற வனுக்கே உரிமையுடையன வாகின்றன.

97. போரில் வென்ற பொருள்களில், பூமி, தங்கம், வெள்ளி, இரத்தினம் ஆகிய உயர்ந்தவை அரச னுக்குச் சேர வேண்டும் என்பது வேத விதி. வென்றிப் பொருள்களை அரசன் தகுதியறிந்து தனது வீரர்களுக்குப் பகிர்ந்து கொடுக்க வேண்டியது.

98. பழிப்பற்றதும், அனுதியானதுமான தர்மம் இது வரை கூறப்பட்டது இவ்விதம் பகை வெல்லும் அரசர்க் குப் பாவம் நேரிடுவதில்லை.

99. தன்னிடமில்லாத அரும் பொருள்களை மேலும் மேலும் தேடுவதும், தேடியவற்றைக் காத்தும், காத்து வைத்ததைப் பெருக்கியும், பெருகிய பொருளைப் பாத்திர மறிந்து வழங்கியும் வருதல் அரசர் அறம்.

100. இந்நான்கினையும் புருஷார்த்தங்கள் என்றறிந்து அன்றாடம் சோம்பலின்றி நடத்த வேண்டும்.

101. தான் அடைய வேண்டியவற்றைப் போரில் வென்று பெற வேண்டியது. அதனைத் தன் வசம் ஆக்கிக் காப்பாற்றவேண்டியது. அதை வர்த்தகத்தினுல் பெருக்க வேண்டியது. அதையும் நன்கொடைகளில் செலவிட வேண்டியது.

102 நால்வகைப் படைகள் எஞ்ஞான்றும் விழிப்பு டன் இருக்க வேண்டும். தன் விற்றிறமை புகழுடன் விளங் கப் பார்க்க வேண்டும். தனது கருத்தைப் பிறரறியா வண்ணம், பகை வெல்லும் வழியைச் சூழ்ந்தும் இருக்க வேண்டும்

103. நால்வகைப் படைகளும் விழிப்புடனிருக்கும் மன்னனுக்கே குடிமக்கள் அஞ்சி நடப்பர். அதைக் கொண்டே தனது ஆட்சியை நிலவச் செய்ய வேண்டும்.

104. தனது அமைச்சர்களிடம் வஞ்சகமாய் நடவாமலும், பகைப் புலன்களை ஒற்றரால் அறிந்தும் இருக்க வேண்டும்.

105. தன் திட்டங்களைப் பகைவர் அறிய விடக் கூடாது. பகைவன் திட்டங்களைத் தான் அறிந்திருக்க வேண்டும். ஆமை தனது அவயவங்களை மறைத்துக்கொள்வது போன்று, தனது படை வலிமையை மறைத்து, தன் கருத்தையும் வெளிப்படுத்தாமல் இருக்க வேண்டியது.

106. ஓடு நீரில் உறுமீன் வருமளவும் வாடியிருக்கும் கொக்கைப் போன்று, பகை வெல்லும் வழியை நாடி நிற்க வேண்டும். யானையைத் தனது பாய்ச்சலால் கொல்லும் அரிமாவைப் போன்று, வலிமையுள்ள பகையையும் பாய்ந்து சாட வேண்டும். இடையர்கிடையைச் செந்நாய் பிடிப்பது போன்று, கோட்டைக்குள் தற்காத்து நிற்கும் பகைவனைக் கொல்ல வேண்டும். வேட்டையில் வளைக்கப் பட்ட முயல் குதித்தெழும்பிச் செல்வது போன்று, முற்றுகையை உடைத்து வேறிடம் சென்று விடவும் கற்றிருக்க வேண்டும்.

107. இவ்விதம் பகை வெல்வோனுக்கு யார் பகை செய்வார்களோ அவர்களைச் சாம தான பேத தண்டம் என்னும் நால்வகைச் சூழ்ச்சிகளால் வசப்படுத்திக் கொள்ள வேண்டும்.

108. சமாதான பேதங்களால் வயப்படாத பகை வரை மட்டும் தண்டோபாயத்தால் மெதுவாக வசப் படுத்த வேண்டும்.

109. இவ்வுபாயங்களில் சமாதான முறை யாதொரு பொருள் நஷ்டமுமில்லாதது. தண்டோபாயம் வெற்றி யைத் தருவது. எனவே, இவ்விரண்டும் மன்னர்க்கு நாடு முதலிய லாபங்கள் தருவனவென்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள்.

110. களையெடுத்துப் பயிரைக் காத்தல் போலும், தன் நாட்டில் தீயரை விரட்டி நல்லோரைக் காக்க வேண்டும்.

111. நல்லோர் தீயோரென்று பாராமல் எல்லோரையும் துயறுருத்தும் மூடனான மன்னர், நாடும், தனது அரசும் இழந்து, நட்பும், உறவும், சந்ததியும், பெண்டும், தானும் ஒருங்கே அழிந்து போவர்.

112. உடலை வருத்தினால் உயிர் போவது போல, நாட்டை வருத்தினால் அதன் நல்லுயிரான அரசனும் அழிவான்.

113. நாட்டைக் காக்க மேற் சொன்னவாறு இயங்கும் அரசன் வருத்தமின்றி மேலோங்குகிறான்.

114. இரண்டு அல்லது மூன்று அல்லது ஐந்து, அல்லது நூறு கிராமங்களுக்கு ஒரு விசாரணைக்காரரைத் தக்கபடி நியமிக்க வேண்டும். அவர்களைத் தான் மேல் விசாரித்துக் கொள்ள வேண்டும்.

115. ஒவ்வொரு கிராமம், பத்துக் கிராமங்கள், நூறு கிராமங்கள், ஆயிரம் கிராமங்கள் இப்படித் தொகுதிகள் பிரித்துப் படிப்படியாக ஒருவர்க்கு மேல் ஒருவராகத் தலைவர்களை நியமித்து அரசாள வேண்டும்.

116. சொற்பமான திருட்டு முதலான குற்றங்களை அந்தந்தக் கிராமாதிகாரிக்கும், பெரிய குற்றங்களை முறையே பத்துக் கிராமங்களின் அதிகாரிக்கும், அவனால் தீர்வு காண முடியாதவற்றை இருபது கிராமங்களின் தலைவனுக்கும் தெரிவிக்க வேண்டும்.

117. இவ்விதமே அவனால் முடியாததை நூறு கிராமத்து அதிகாரிக்கும், அவனுக்கு மேலே ஆயிரம் கிராமங்களின் அதிபதிக்கும் தெரிவித்துக் கொள்ள வேண்டும்.

118. கிராமாதிபதி அந்தக் கிராமக் குடிகள் மன்னனுக்கு அன்றாடம் இறுக்கும் சோறு, தண்ணீர், விறகு இவற்றைத் தனக்கென்று எடுத்துக் கொள்ளலாம்.

119. பத்துக் கிராமங்களைப் பரிபாலனம் செய்யும் அதிகாரி பெறத்தக்க ஊதியமாவது:—ஏர் ஒன்றுக்கு ஆறு மாடுகள் விடுகோல் உள்ள இரண்டு ஏர்களால் உழப்படுகின்ற அளவு பூமியில் விளையும் தானியம் முழுமையும் அதைப்போல் ஐந்து மடங்கு தானியம் இருபது கிராமங்களின் தலைவன் பெறுக. நூறு கிராமாதிபதி ஒரு நடுத்தரமான கிராமம் முழுவதையும், ஆயிரம் கிராமங்களின் அதிபன் ஒரு பட்டணத்தையும் தங்கள் தங்கள் பிழைப்புக்காகப் பயன்படுத்திக் கொள்ள வேண்டியது.

120. கிராமாதிபதி முதல் ஆயிரம் கிராமத் தலைவன் வரையில் தெரிவித்துக் கொள்ளப்பட்ட முறையீடுகளில் செய்யப்பட்ட தீர்மானங்கள் குடிமக்களுக்கு விரோதமாக இருந்து விட்டால், அரசனிடம் செய்து கொள்ளப்படும் முறையீட்டை, மக்களிடம் வாஞ்சையுள்ள ஒரு அமைச்சன் சோம்பலின்றி உடனே விசாரிக்க வேண்டும்.

121. பட்டணங்கள் தோறும், எல்லாவற்றையும் விசாரிக்கத் தக்க நியாயாதிபதிகளை ஏற்படுத்தி, தாரகை நடுவண் வெள்ளியைப் போல் ஒளியுடன் விளங்கும் உயர்ந்த கோட்டையுள்ள மாளிகையை அவ்வவர்க்கும் கொடுத்து வசிக்கச் செய்ய வேண்டியது.

122. அந்த நீதிபதியும், தனக்குக் கீழ்ப்பட்ட அந்தக் கிராமாதிபதி முதலானவர்களைத் தானுகவே அந்தந்த இடங்களிற் சென்றும், வேவுகாரர்களின் மூலம் மக்களின் கருத்தறிந்தும் விசாரித்து எதனையும் முடிவு செய்ய வேண்டியது.

123. அரசனுடைய உத்தியோகஸ்தர்கள் பெரும்பாலோர் பொருள் ஆசையால் கைக்கூலி பெற்றுக் கொண்டு, மூடத்தனத்தால் மக்களைப் பெரிதும் தொல்லைப் படுத்துகிறார்கள். ஆதலால், அவர்களிடத்தினின்றும் குடிகளைக் காப்பது அரசர் கடன்.

124. லஞ்சம் பெற்றுக் கொண்டு மன்றோரம் சொன்னவர்களின் பொருள் முழுவதையும் மன்னன் பறிமுதல் செய்துகொண்டு, அந்தப் பாவிகளையும் நாட்டை விட்டு வெளியேற்றிவிட வேண்டும்.

125. ஏவல் புரியும் வெள்ளாட்டி வேலைக்காரர்களுக்குத் தக்கபடி மன்னன் அன்றாடம் சம்பளம் ஏற்படுத்த வேண்டும்.

126. கீழ்த்தரச் சிப்பந்திகளுக்கு அன்றாடம் ஒரு பணமும், ஆறு மாதத்திற்கு இரண்டு ஆடைகளும், மாதத்திற்கு ஒரு துரோண* நெல்லும் சம்பளம். மடைப்பள்ளி வேலைக்காரர்களுக்கு நாடோறும் ஆறு பணமும், மாதம் இரண்டு துணியும், ஆறு துரோண நெல்லும் கொடுக்க வேண்டும்.

127. வியாபாரிகளிடத்தில் சரக்குக் கொள்முதல் விற்பனை விலைகளையும், சரக்கு வந்த மார்க்கத்தையும், அதில் அவர்களுக் கேற்படும் உழைப்பையும், ஏற்படும் செலவையும், கிடைக்கின்ற லாபத்தையும் கணக்கிட்டுத் தக்கபடி தீர்வை வாங்க வேண்டும்.

128 தானும் மக்களும் சுகமாகப் பொதுப் பயன் பெறத் தக்கவாறு நன்கு சிந்தித்து அரசன் தீர்வை வாங்க வேண்டும்.

129. இரத்தம், பால், தேன் இவற்றை அட்டை, கன்று, வண்டு ஆகியவை எவ்வாறு சிறுகச் சிறுகச் சேமிக்கின்றனவோ, அவ்வாறே அரசனும் தனக்குக் குடிகள் கொடுக்க வேண்டிய தீர்வையைச் சிறிது சிறிதாக வாங்க வேண்டும்.

130. பொருள், பசு இவற்றின் லாபத்தில் ஐம்பதில் ஒன்றும், நிலத்தன்மையைப் பொறுத்து விளைவில் எட்டு.

---

*எட்டுப் பிடி = கிஞ்சித்; எட்டுக கிஞ்சித் = புஷ்கலம்; நான்கு புஷ்கலம் = ஆடகம்; நான்கு ஆடகம் = ஒரு துரோணம்.

ஆறு அல்லது பன்னிரண்டில் ஒரு பங்கு விதமும் தீர்வை வாங்க வேண்டும்.

131. மரம், கொடி, மாமிசம், தேன், நெய், நறுமணப் பொருள்கள், ரஸம், புஷ்பம், கிழங்கு, பழம் இவைகளிலும்,

132. இலை, கறி, விறகு, தோல், மரவுரி, மட்பாண்டம், இரத்தினம் ஆகியவற்றிலும் லாபத்தில் ஆறில் ஒரு பங்கு தீர்வை பெறுக.

133. எளிய அரசானாலும், வேதம் உணர்ந்த அந்தணனிடம் தீர்வை வாங்கக் கூடாது. அவன் தன் நாட்டில் பசித்திருக்கவும் பார்க்கக் கூடாது.

134. கற்றறிந்த மேலோர் எந்த நாட்டில் பசியினாற் றுன்பம் உறுகின்றனரோ அந்நாட்டின் அரசன் தன் தேசமெல்லாம் பஞ்சத்தால் வாடியழியக் காண்பான்.

135. கற்ற கல்வியையும் நல்லொழுக்கத்தையும் அறிந்து, தக்கபடி அவ்வவர்க்குரிய பிழைப்பை வகுத்துக் கொடுத்து, பிள்ளையைப் பேணும் தந்தையைப் போல, திருடர் முதலான அச்சத்தினின்றும் அவர்களைக் காத்தல் அரசர் கடன்.

136. மன்னரால் நன்கு புரக்கப்படும் அந்தணர் அன்றாடம் இயற்றும் நல்லறங்களால் அந்த நாட்டு மன்னனுக்கு ஆயுள், செல்வம், நாடு இவை பெருகுமடைகின்றன.

137. காய்கறி முதலானவற்றைத் தன் நாட்டில் கொண்டுவந்து விற்றுப் பிழைக்கும் ஏழைகளிடம் ஆண்டுக்கொரு முறை சொற்பப் பொருளைத்தீர்வையாக மன்னன் பெறவும்.

138. இனிப்புப் பண்ட வியாபாரிகள், சிற்பிகள், கொல்லத்துக்காரர், மூட்டைக்காரர்கள் இவர்களிடம் மாதத்துக்கு ஒரு நாள் வேலை வாங்கிக் கொள்வதே அரசன் இவர்களிடம் பெறும் தீர்வை.

139. குடிகளிடம் கருணையினால் இவ்விதம் விதிப்படியான தீர்வைகள் பெறாத மன்னன்தான் துயரமடைவான். அதிகமாக வாங்கினால் குடிகள் துன்பமுறுவர். ஆகையால் இருவருக்கும் கெடுதி நேரிடாமற் செய்து கொள்ள வேண்டியது.

140. ஏற்றவாறெல்லாம் சினம், பாறுமை இவற்றை மன்னன் கொள்ளவேண்டும். அப்படியிருந்தால்தான் மன்னன் குடிகளுக்கு அன்பனாய் இருக்க முடியும்.

141. தானே நேரிடையாக நீதி விசாரணை செய்ய வசதிப் படாதபோது, மன்னன் அறமறிந்து, புலனடக்கி, பொறுமையும், நற்குடிப் பிறப்புமுள்ள அமைச்சனைத் தனது இடத்தில் அமர்த்தி விசாரிக்கும்படி நியமிக்க வேண்டும்.

142. இவ்வாறெல்லாம் வகைப்படுத்தி மன்னன் அரசாண்டு விழிப்புடன் மக்களைக் காக்க வேண்டும்.

143. ஏனெனில், அமைச்சு முதலிய அங்கங்களுடன் அரசாளும் ஒருவனுடைய நாட்டில், மக்கள்—கள்வர் முதலானவர்களால் அஞ்சி வாழ நேரிட்டால்—அவ்வரசன் இருந்தும் இறந்தவனே யாவான்.

144. எல்லா அறங்களையும்விட, மக்களை நன்கு காப்பதே மன்னனின் மேலான அறம். அவன் முறைப்படி தீர்வை வாங்கிக் கொள்வதும் நல்லறமேயாகும்.

145. வைகறை யாமத்தில் மன்னன் துயிலுணர்ந்தும், காலைக்கடன் முடித்தும், ஜெபம், ஹோமம், அந்தணரைப் பேணல் ஆகிய முடித்து, தனது அத்தாணி மண்டபம் செல்ல வேண்டியது.

146. அங்கமர்ந்திருந்து, காண வரும் மக்களுக்குக் காட்சிக்கு எளியனாய், அவர்களுடன் அன்புடன் வார்த்தையாடி யனுப்பிய பின்னர், தனது அமைச்சர்களுடன் நாட்டு நிர்வாகம் குறித்துச் சிந்தித்திருக்க வேண்டியது.

147. மலையுச்சி, மேல்கட்டு, காடு இத்தகைய தனியிடங்களில் பிறர் காணுவண்ணம் இருந்தே ராஜகாரியங்கள் ஆலோசிக்கத் தக்கன.

148. மன்னன் மந்திராலோசனையை மற்றவர் அறியாமலிருந்தால், அவனது பொக்கிஷம் சிறிதாயினும், அவன் ஆளுகைக்குப் பரந்த மண்ணுலகும் அடங்கும்.

149. அறிவிலி, ஊமை, கண்ணிலி, செவிடன், களி, வயோதிகன், பெண், பிணியாளன், மிலேச்சன், ஊனமுடையவன் இவர்கள் மந்திராலோசனையிலிருந்து வெளியேற்றத் தக்கவர்.

150. ஏனெனில், இவர்கள் அனுமதிக்கப்பட்டால், மந்திராலோசனை மர்மங்களை வெளியிடத் துணிவார்கள். பெண்கள் அதிகம் சொல்வார்கள். ஆகையால் இவர்களை விலக்கவும்.

151 பகலோ, இரவோ, பதினைந்து நாழிகையளவில், சிரமம் பாராமல், அறம், பொருள், இன்பம் இவற்றைத் தனது அமைச்சர்களுடன் அல்லது தனித்து ஆராய வேண்டியது மன்னன் ஒழுக்கம்.

152. ஒன்றுக்கொன்று வேறுபட்டுத் தோன்றும் இந்த முப்பேறுகளையும் ஒன்றுறக் கொண்டு நடத்தும் பொருட்டும், ராஜகுமாரியைத் தக்க வரனுக்கு நிச்சயிக்கும் பொருட்டும், ராஜகுமாரனுடைய கல்வியைக் குறித்தும்—

153. சேதி கொண்டு செல்லும் தூதனை ஓரிடத்திற்கு அனுப்புவது குறித்தும், எடுத்த கருமத்தை முடித்தற் பொருட்டும், அந்தப்புர விஷயங்களைப் பற்றியும், வேவுகாரர்களின் நடத்தையைப் பற்றியும்,

154. கப்பம் வாங்குதல், ஊதியங் கொடுத்தல், குற்றமிழைத்த அரசாங்க ஊழியர்களை நீக்குதல், வழக்குகளை விசாரித்தல், அபராதம் விதித்தல், கழுவாய் இயற்றி

வைத்தல், தீர்வை வாங்குதல், நால்வகைப் படைவலிமை, சார்ந்தோர், சேவகர், தனக்காகப் பயிர் பார்க்கிறவன், வியாபாரம் செய்பவன், அந்தப்புரக் காவலாளி, துறவு வேடம் கொண்டவன், நாட்டு நடப்பு, ஒருவரை எதிர்த்தல் கூடும் கூடாது என்னல் ஆகிய இவற்றைப்பற்றியும்—

155. போரில் மத்தியஸ்தன் கருத்து, தன் மீது தண்டெடுத்து வந்தவன் செய்கை, அயலுக்கு அயல் நாட்டு அரசன் நோக்கம், தனது அண்டை நாட்டினன் மனப்பான்மை, நீண்டகாலப் பகைவர்களின் எண்ணம் இவற்றையும் கவனமாக ஆராய வேண்டும்.

156. மத்தியஸ்தன், போரெடுத்து வந்தவன், அண்டை நாட்டான், அதற்கு அயல் நாட்டான் இந்நால் வரும் மேற் சொன்ன எட்டும் ஒரு நாட்டின் ராஜரீகப் பிரச்னைகள்.

157. அமைச்சு, நாடு, கோட்டை, பொக்கிஷம், நாற்படை இவ்வைந்தும் முன்சொன்ன பன்னிரண்டுக்கும் தனித் தனியாக உண்டு. எனவே, அடிப்படைப் பிரச்னைகள் எழுபத்திரண்டு.

158. அயலானையும் அவனைச் சார்ந்தவனையும் தனக்குப் பகையாகவும், அதற்கு அயல் நாட்டினனைத் தனது நண்பனாகவும், அதற்கும் அயலானை மத்தியஸ்தனாகவும் கொள்ள வேண்டியது.

159. இவர்களை நால்வகையான உபாயங்களாலோ அல்லது தண்டத்தினாலோ வசப்படுத்த வேண்டும்.

**போர்முறை : தானை, பகைப் புலன் அறிதல், முற்றுகை, போரிடல் வெற்றி கொள்ளல்**

160. பகைவனுடன் சமாதானம், பொருதல், போரெழல், எழாதிருத்தல், தானையைப் பகிர்தல், வலியவனைச் சார்தல் இவ்வாறும் ஆலோசனைக் குரியன

161. இவ்விதம் அனைத்தையும் நன்கு எண்ணிய பின்னரே தக்கவாறு துணிய வேண்டும்.

162. இவ் வறுவகைப் பிரச்னைகளும் ஒவ்வொன்றும் தம்மில் இருவகைப்படுவனவாகும்.

163. பகைவனுடன் சமாதானம் என்பது, உடனடியான விளைவையும், பின்னொருக்கால் எதிர்பார்க்கும் ஒன்றைக் கருதியுமாகும்.

164. பொருதல் என்பது, தனக்காகவும், தனது நண்பருக்காகவும் என்று இருவகைப்படும்.

165. தண்டெடுத்தல், பகைவன் வலிவிழந்து நின்றபோது தானே தனித்தும், வலி மிகுந்திருந்தபோது துணையுடன் சென்றும், என்று இருவகை.

166. போரைத் தவிர்த்தல் என்பது, தனது படை, பணம் இவை குறைந்துவிட்டபோதும், தனது வலிமையை வேறொரு நண்பனுக்குப் பயன்படுத்த வேண்டிய போதும் ஆகும்.

167. தானையை இரண்டாய்ப் பகிர்தல் என்பது, ஒன்று போருக்கும், மற்றொன்று உள்நாட்டுத் தற்காப்புக்கும் எனவாகும்.

168. வலிமை மிக்க துணை நாடி அடைதல், வந்துற்ற பகையை வெல்லவும், இனிப் பகை வராதிருக்கவும் ஆக இரண்டு.

169. சமாதானம் செய்து கொள்வது, எதிரியிடம் பொருள் பெற்றுக் கொண்டும், எதிரிக்குப் பொருள் கொடுத்தும் என இருவகை.

170. தனது அமைச்சும், பரிசனமும் போரில் நாட்டமும், தினவும் உடையவர்களாகும்போது, தனக்கு நால் வகைப் படையும் நன்கமையப் பெற்றிருந்தால், போரெடுக்கலாம்.

171. தன்வலியும், படைபலமும், திறமுடையதாகவும் ஊக்கமுடையதாகவும் இருக்கும்போது, பகைவன் வலியும், அவன் படைவலியும் தாழ்வுற்றிருப்பதாகத் தெரிந்து அவனுடன் போருக்கு எழலாம்.

172 நாற்படையும், ஊர்தியும் குறைந்த போது, எதிரிக்குக் கப்பம் கொடுத்தோ, நல்ல வார்த்தை சொல்லியோ, போரைத் தவிர்ப்பது நன்று.

173 வந்துற்ற பகைவன் வெல்லக் கூடாத வலிமையுடையவனுகத் தோன்றும் காலத்தில், தனது படையை இரண்டாகப் பிரித்து, ஒன்றைப் போரில் எதிர்த்து நிற்கச் செய்து, மற்றொன்றைக் கோட்டைக் காவலில் வைத்துத் தான் கோட்டை புக வேண்டும்.

174. மாற்றான் வலிக்குத் தான் பணிய நேரிடுமென்று தோன்றுங்காலையில், தன்னைவிட வலியனான மற்ெருரு துணையரசைச் சரண்புக வேண்டும்.

175. தனது பற்பல வலிமைகளும், பகைப் பலமும் தனக்கு எதிராக மூளாமல் தடுப்பவன் எவனே அவனைத் தனது குருவாக உபசரிக்கவேண்டியது.

176 ஒருவனை அடுத்தும் தனது பகை நீங்கப் பெருமல் துயரம் வந்துற்ருல் அல்லாது, எப்போதும் நாடும் சொர்க்கமும் தரத்தக்கதான போரில் பொருது நிற்பதே மன்னர் அறம்.

177. அறம் அறிந்த மன்னன், தனது பகை, நட்பு, மத்யஸ்தன் இவர்கள் தனக்கு மிக்கவராகி விடாதவாறு நால்வகை உபாயங்களாலும் செய்து கொள்வான். பொருளாசையால் நட்பும் தனக்குப் பகையாக மாறக் கூடுமென்பது கவனிக்கத்தக்கது.

178. முன்செய்த செயலால் விளைந்த லாபம், அப்பொழுது இயற்ற வேண்டிய வினை, தான் மேற்கொண்டவற்ருல் விளையக் கூடியவை, வரவு, செலவு இவையனைத்தையும் தீர யோசிக்க வேண்டும்.

179. எவன் பகுத்தறிந்து, நல்லன நாடி, அல்லன நீக்கி, உடன் செய்ய வேண்டியதைச் செய்து, எடுத்ததை முடிக்கும் ஆற்றல் உள்ளவனோ அவனுக்குப் பகை அச்சம் ஏற்படாது.

180. பலபட விளக்க வேண்டியதில்லாமல், பகை, நட்பு, மத்யஸ்தன் இவர்களால் துன்பம் நேரிடாமல் இருக்கும் வழியைத் தேடிக்கொள்ளவேண்டும்.

181. பகைவன் மேல் போரெடுக்க விரும்பும்போது பதட்டமின்றி நன்கு ஆராய்ந்து மேற்சொல்லும் விதிப்படி செய்க.

182. மார்கழி மாதத்தில் போரெடுத்தல் நலம். குறைவற்றவலி மிகுந்து, பகை நாட்டை எதிர்க்க மனமும் இருந்தால், பங்குனி சித்திரையிலும் போரெடுக்கலாம்.

183. ஏனைய மாதங்களிலும், பகைவன் வலி குறைந்திருப்பதனுல் தனக்கு வெற்றி நிச்சயமென்று தெரியும் போதும், போரெடுக்கலாம்.

184. தலைநகரில் தக்க பிரதிநிதியை நால்வகைப் படை வலியுடன் காவலுக்கு வைத்து, பின் தக்க ஊர்திகளுடன், பகை எல்லையில் இருக்கும் காலத்தில் வேண்டிய உணவுப் பொருள்களையும் சேமித்துக் கொண்டு, தனது படைகளையும் தனது ஆணையிற் கொண்டடக்கி, ஒற்றர்களுடன் புறப்பட வேண்டியது.

185. வழியில் மரங்களையும், புதர்களையும் வெட்டி, மேடு பள்ளங்கள் நிரவி, வேவுகாரர்களால் பகை மோப்பம் பிடித்து, நால்வகைப் படைகள், அவற்றின் தளகர்த்தர்கள், ஊழியர்கள் இவ்வாறு பல்வகைப் பரிசனங்களுடன், போர் அறப்படி பகைவன் தலைநகர் நோக்கி மெதுவாகச் செல்ல வேண்டும்.

186. தானறியாமல் தனது பகைவனுடன் தொடர்பு கொள்ளும் தனது நட்பு, முன்னர் தன்னிடமிருந்து

பகைவனைச் சென்றடைந்து, மீண்டும் தன்னிடம் வந்தடைந்த வீரன், இவ்விருவரிடம் மிகுந்த கவனத்துடன் இருக்கவேண்டும் ஏனெனில் இவர்களை வெல்வது கடினம்.

187. பகைவனுடைய நகரை முற்றுகையிடவேண்டிய வகைகள்:- தண்ட வியூகம், சகட வியூகம், வராக வியூகம், மச்ச வியூகம், சூசிகா வியூகம், காருட வியூகம் ஆகியவை.

(1) சேனைத் தலைவனை முன்னும், தளபதி ஒருவனைப் பின்னும் நிறுத்தி, மன்னன் நடுவிலிருந்து, இருபுறமும் யானை, குதிரைகளும், அப்புறம் காலாட் படையும் வகுத்தல் தண்ட வியூகம்.

(2) முன்னே சிறிது சேனையும் பின்னே பெருஞ்சேனையுமாக்கி, நடுவில் இருப்பது சகடவியூகம்.

(3) முன்னும் பின்னும் சொற்பப் படைகளும், இடையில் பெரும் படையும் வகுத்தல் வராக வியூகம்.

(4) மச்ச வியூகமும், காருட வியூகமும் வேறானவை.

(5) சிற்றெறும்புச் சாரைபோல் படைகளை வகுத்தல் காருட வியூகம்.

நாற்றிசையும் எதிர்ப்பு ஏற்படுகையில் தண்ட வியூகமும், பின்புறம் எதிர்ப்பு ஏற்படும்போது சகடவியூகமும், இருபுறமும் எதிர்ப்பு வரும்போது வராக காருட வியூகங்களும், முன்னும் பின்னுமாக எதிர்ப்பு நேரிடுகையில் மச்ச வியூகமும், முன்னே மட்டும் பயம் வரும்போது சூசிகா வியூகமும் கொண்டு எதிர்க்க வேண்டும்.

188. பகைவன் தலைநகரிலிருந்து எந்தத் திசையில் தனக்குப் பெரும் எதிப்பு வருமோ அங்கு அதிகச் சேனையை வைத்து, எப்போதும் பதும வியூகத்தால் எதிர்க்க வேண்டியது.

189. ஆயிரந் தேர், யானை ஆயிரம், குதிரை ஆயிரம், காலாள் ஆயிரம் இவை ஒரு சதுரங்கம். பத்துச் சதுரங்கத் தலைவன் பத்தி. பத்துப் பத்திகளின் தலைவன்

சேனாபதி. பத்துச் சேனாபதிகளுக்கு மேலானவன் தானைத் தலைவன். சேனாபதிகளையும், தானைத் தலைவர்களையும் முற்றுகையிட்ட பட்டணத்தின் நாற்புறமும் அணிவகுத்து நிறுத்தி, அரசன் தனக்கு எதிர்ப்பு வரும் திசையில் முன்னம் எதிர்க்க வேண்டியது.

190. சில படைகளைக் களத்திற்கு வெகு தொலைவில் நிறுத்தி, அச்சமற்றவர்களும், திறமை மிக்கவர்களும், தனக்கு நம்பிக்கை யுடையவர்களுமான சேனாபதிகளை அவற்றிற்கு வைத்து, பேரி, கனக தபபட்டை முதலியன முழங்கும்போது, படைகள் 'மேல் வருக'வென்றும், வேறு வகைப் பல்லிய முழங்குகையில் 'ஓடிவிடுக'வென்றும் குறிப்புச் சொல்லி வைக்க வேண்டும்.

191. வலிமை யில்லாத வீரர்கள் கும்பலாகவும், சூசிகா வச்ர யூகங்களாகவும் இருந்தும், பலமுள்ளவர்கள் தனித்தனியாகவும் நின்று எதிர்க்குமாறு கட்டளையிட வேண்டியது.

192. சம தரையில் பரி, தேர் இவற்றுடனும், நீர் உள்ள இடத்தில் ஓடம் யானைகளில் நின்றும், செடி, புதர் நிறைந்த விடத்தில் அம்புகளாலும், அவையில்லாவிடத்து உலக்கை, கத்தி முதலியவற்றாலும் போரிடவும்.

193. குருக்ஷேத்திரம், மச்சதேசம், பாஞ்சாலம், சூரசேநம் இவ்விடத்தாராகவும், வலிமையும் உருவும் மிக்கவராய், தடித்திராதவராயும் உள்ளவர்களைச் சேனைக்கு முன் நிறுத்தி வைத்துப் போரிடச் செய்யவும்.

194. சேனைக்குப் போர் வெற்றியைக் குறித்து ஊக்கமும், தோல்வியைக் குறித்து நாணமும் வருமாறு வீர மொழிகள் இதமாய் எடுத்தியம்ப வேண்டும். போரிடுவதில் வீரர்க்குள்ள மகிழ்ச்சி, சோர்வு, பகைவன்பால் அவர்கள் கொள்ளும் கருத்து இவற்றை நன்கு அறிய வேண்டும்.

195. போருக்கு வந்துவிட்ட பகைவன் மீளாவண்ணம் அவனைத் தகைய வேண்டும். பகை நாட்டு மக்களைப்

பிடிக்க வேண்டும். புல், நெல், விறகு, தண்ணீர், உணவு முதலியன பகை நாட்டிற்குள் செல்லாமல் தடுக்க வேண்டும்.

196. பகைவனுக்குப் பயன்படும் நீர் நிலைகளைத் தகர்க்க வேண்டும். கோட்டை, உழலை மரம் இவற்றை நாசப்படுத்த வேண்டும். எதிரியின் நாற் படைகளையும் தன்னுடையவையாக்கிக் கொண்டு, இரவில் எதிரியை அவமானம் செய்ய வேண்டியது.

197. தன்னை முன்னம் அவமதித்த மன்னன் வழியிற் பிறந்தவனை அவனது அமைச்சர்களுடன் சேர்த்துவென்றி கொள்ள வேண்டும். அவனால் தனது படைகளுக்குண்டான துன்பத்தை எண்ண வேண்டும். தனது வெற்றிப் பாதையை நம்பி அச்சமின்றிப் போரிட வேண்டும்.

198. நயமாகக் கூறியோ, பொருள் கொடுத்தோ, பிரித்து விட்டோ, எவ்வகையிலேனும் பகை வெல்ல வேண்டுமே யன்றி, போர் ஒன்றையே முதன்மையாகக் கருதலாகாது.

199. வெற்றி தோல்விகள் பொதுவாகையால், வேறு வழிகளில் வெற்றி கிடைக்குமெனில், போரை விலக்க வேண்டும்.

200. இம் மூன்று வழிகளும் பயன்படாதபோது மட்டுமே தண்டெடுத்துச் சென்று பொருத வேண்டும்.

201. இவ்விதம் பகை முடித்துத் தேவரையும், அந்தணரையும் போற்றி, வீரர்களுக்குப் பரிசுகள் வழங்கி இனிப் பகை நாட்டு மக்கள் யாரும் அச்சமின்றி வாழ்க வென்று அறிவிக்க வேண்டும்.

202. பின்னர் வென்ற நாட்டின் குடிகள், அமைச்சர் இவர்களின் உள்ளக்கிடக்கை அறிந்து, பகையரசன் வம்சத்திற் பிறந்த ஒருவனை அந் நாட்டிற்கு முடி சூட்டி, அவனிடம் ஒரு ஒப்பந்தமும் செய்து கொள்ள வேண்டும்.

203. தனக்கு அடங்கி நடப்பதாக அவனிடம் உறுதி மொழியும் பெற்று, மந்திரி முதலிய பரிவாரங்களையும் அவனுக்கு அமைத்துக் கொடுத்து, இரத்தினம், ஆடைகள் முதலியன அவனுக்குப் பரிசளித்து மகிழ்விக்க வேண்டும்.

204. பிறன் விரும்பும் ஒன்றைத் தான் எடுத்துக் கொள்வது அவனுக்கு வருத்தமாயும், விரும்பியதை அளிப்பதால் மகிழ்ச்சியாயும் இருக்குமாதலால், விசேஷ சமயத்தில் தரும் வெகுமதியும் மகிழ்ச்சியே தரும்.

205. முன் செய்த நல்வினை தீவினைப் பயன்கள் தேவர், மானிடர் மூலமாய் மூளும். தேவர் மூலமான வினைவுக்குச் சிந்தித்து ஆவதில்லை. மானிடர் பற்றிச் சிந்திக்க வேண்டும்.

206. இவ்விதம் போரிட வேண்டும்; அல்லது பகைவனுடன் சமாதானம் கொண்டு நட்புரிமை பேண வேண்டும். அவன் மனமொப்பிக் கொடுத்த நாடு, பொருள் இவற்றுடன் அவனது நட்பையும் ஆக மூன்றையும் எண்ணித் திரும்ப வேண்டும்.

207. தான் எதிர்த்த நாட்டுக்குப் பின் உள்ள நாட்டான், அயல் நாட்டான், அவர்களுக்குத் துணை நிற்பவன் இவர்கள் கருத்தை ஒட்டித் தனது எதிர்ப்புக்காளானவன் தன்னுடன் நட்புரிமை கொண்டாலும், கொள்ளாவிட்டாலும், அவனால் கொடுக்கப்படுகின்ற பூமி, பொருள் இவற்றை வழிச்செலவுக்குப் பெற்றுக் கொள்ளவும்.

208. இளைத்தவனாயினும், பின்னர் வலிமையடையக் கூடிய நட்புடன் கூடியிருத்தலைப் போன்று, பொன், மண் இவற்றாலும் ஒரு மன்னனுக்கு மேன்மையில்லை.

209. அறம், செய்ந்நன்றி, மக்கள் அன்பு, தன்பால் நேசம், எடுத்து முடிக்கும் ஆற்றல், பழக இனிமை இவையுடைய நட்பரசன் போற்றத் தக்கவன்.

210. அறமறிந்தவன், நற்குலத்தான், பலசாலி, திறலன், கொடையாளி, நன்றியறிந்தவன், துணிவுடையவன் ஆகிய பகைவனை வெல்லல் அரிதென்று கூறுவர்,

211. சாந்தம், உயர்வு தாழ்வென்ற அறிவு, வலிமை' அருள், பெருங்கொடை இவையே மத்யஸ்தன் இலக்கணம்.

212. வற்கடம் சென்ற காலத்தும் வளம் சுரப்பதாயும், நீர்ப் பாய்ச்சலும், பைங்காலும் உள்ள பூமியைக் கொடுத்தேனும் ஒருவன் தன்னைக் காத்துக் கொள்ள வேண்டும்.

213. ஆபத்துக்காகப் பொருளைப் பேணி, அப்பொருளைச் செலவிட்டேனும் மனைவியைக் காக்க வேண்டும். பொருள், மனை இவற்ருல் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டியது.

214. பொருள், நட்பு, சேனை இவை நாசமடையும் காலத்தில் மனம் கலங்காமல் நன்கு சிந்தித்து நால்வகையானும் தனது சுகத்தை நாட வேண்டும்.

215. தன் வலி, தனது வெற்றி, தனது நால்வகை உபாயம் இவற்றை நன்குணர்ந்து, பொருள் வேண்டி மன்னறப்படி பயின்றிருக்க வேண்டும்.

216. இவ்விதம் அரச காரியங்களை அமைச்சருடன் யோசித்து, படைக்கலப் பயிற்சிகள் செய்து, நண்பகல் உணவுக்காகத் தனது அரண்மனைக்குச் செல்ல வேண்டும்.

## மன்னரின் அன்ருட நியமம்

217. தனது நல்ன் பேணுவோரும், சமயமறிந்தவராயும், யாராலும் கற்பிக்கப்படாதவராயும், நஞ்சூட்ட எண்ணுதவராயும் இருக்கிற ஊழியர்களால் பக்குவம் செய்விக்கப்பட்ட நல்லுணவை, நஞ்சகற்றும் செஞ் சொற்களான மந்திரங்களை உச்சரித்துப் புசிக்க வேண்டியது.

218. உணவிற் கலந்த நஞ்சையும் போக்கத்தக்க மூலிகைகளையும் உணவிற் சேர்த்துக் கொள்ள வேண்டியது. இத்தகைய ஜீவரத்னங்களையும் மறவாமற் கையிற்றரித்திருக்க வேண்டும்.

219. தெரிந்தெடுக்கப்பட்டவராயும், நன்கு தூய்மையாக அலங்கரிக்கப்பட்டவராயும், வேறிடத்தில் நாட்டம் செலுத்தாதவராயும் உள்ள பணிப்பெண்கள், நறுமணப் புகை, விசிறி, சாமரை, நன்னீர் இவற்றால் மன்னன் உண்ணும்போது உபசரிக்க வேண்டும்.

220. இவ்விதம் ஊர்தி, படுக்கை, இருக்கை, உணவு, பானம், பூச்சு மற்றும் அலங்காரங்கள் யாவற்றிலும் மன்னன் விழிப்புடன் விளங்க வேண்டும்.

221. உண்டபின், ஒரு முகூர்த்தம் தனது ஸ்திரீகளுடன் அந்தப்புரத்தில் குலவியிருந்து, பகலின் எட்டாவது பாகத்தில் அணிகளுடன் சபைக்குப் போய், ராஜ காரியம் பார்க்க வேண்டும்.

222. பின்னர், அரச உடையிலேயே, வில் பயிற்சிக் கூடம், வாகனம், அணிகள், ஆயுதம் இவற்றின் சாலைகளைப் போய்ப் பார்வையிட வேண்டும்.

223. மறுபடி மாலையில் சந்தி ஜெபம் செய்து, அரண்மனைக்குள், கத்தியைக் கையில் ஏந்தியவாறே, ரகசியங்களை வந்து கூறும் வேவுகாரர்கள் சேர்த்த செய்திகளை விசாரித்தறிய வேண்டும்.

224. பின்னர் அவர்களுடன் ஒரு விடுதிக்குச் சென்று, ஒவ்வொருவராய் விடைகொடுத்தனுப்பிப் பின் உணவுக்காகப் பணிப் பெண்களுடன் அந்தப்புரம் செல்ல வேண்டும்.

225. அல்லுணவின் பின்னர், கூத்து, இசை, பல்லியம் இவற்றால் மகிழ்வு பெற்று, அந்தப்புரத்திற் றுயின்று, வைகறையில் துயிலுணர வேண்டியது.

226. இவ்விதம் அரச காரியங்களனைத்தையும் தானேயும், தனக்கு உடல் நலமில்லாத போதும், நோயுற்ற போதும், தக்க அமைச்சரைக் கொண்டும் நடத்தி வர வேண்டியது.

ஏழாம் அத்தியாயம் முற்றும்.

## எட்டாம் அத்தியாயம்

# நீதி நெறி, சட்டம்

### குடிவகுப்பு, நீதி மன்றம்

1. வழக்குகளை ஆய்ந்து துணிய விரும்பும் மன்னன், ஆய்ந்துரைக்க வல்ல அமைச்சர், அந்தணரோடும் வணக்க முள்ளவனாய் நீதி மன்றம் செல்க.

2. அடக்கம் நிறைந்த தோற்றத்தையே அணியாகப் பூண்டு, நீதி மன்றத்தில் எழுந்தருளி அல்லது சொற்ப காரியமாயின் நின்றிருந்தவாறே, வலது கையைத் தூக்கி அசைத்தவாறே வழக்கை விசாரிக்க வேண்டும்.

3. பதினெட்டு விதமான வழக்குகளையும், அறநூல் துணிபாலும், ஆன்றோர் கொள்கையாலும். அன்றாடம் தனித்தனியே விசாரிக்க வேண்டும்.

4. வழக்குகள் பதினெட்டாவன :-

கடன் கோடல், அடைக்கலப் பொருள், பிறன் உடைமையை விற்றல், கூடித் தொழில் செய்து பொருளீட்டல், வாக்களித்தபடி வழங்காமை,

5. ஊதியம் கொடாமை, கட்டுப்படி நடவாமை, கொண்டு கொடுப்பவற்றில் பின்னர் விளையும் ஐயம், மாட்டை யுடையானுக்கும் மேய்ப்பவனுக்கும் இடையே வழக்கு,

6. எல்லை வழக்கு, அடித்தல், வசைமொழிதல், களவு, வன்செயல், பிறன்மனை பறித்தல்,

7. மாத ராடவர் கடன், பங்கிட்டுக் கொள்ளல், கவறாடல் இவை பதினெட்டுமாம்.

8. இவ்விதமாகப் பெரும்பான்மை வரும் வழக்குகளைத் தொல்லறத்தின் படி விசாரிக்கவும்.

9. வேறு காரியங்களாலோ, பிணியுற்றபோதோ, தானே நேரில் இருந்து விசாரிக்கக் கூடாதபோது, அவ் வழக்கின் உண்மையைக் கண்டறியும் பொருட்டு, கற்றறிந்த அந்தணனைக் கொண்டு விசாரிக்க வேண்டியது.

10. அவ்வந்தணன் தன்னுடன் மூன்று சபிகர் (ஜூரிகளைப் போன்றவர்)களைக் கொண்டு நீதிமன்றத்திற்குச் சென்று அமர்ந்தோ, நின்றவாறோ, மன்னன் சார்பாகத் தானிருந்து வழக்கை விசாரிக்க வேண்டும். உலவிக் கொண்டே கேட்கக் கூடாது.

11. சபிகர் மூவரும், நியமிக்கப்பட்ட நீதி அந்தணனும் கொண்டதே சபை.

12. நீதிகொல்லப்பட்டுத் தன் முன் கொண்டு வரப் பட்ட அநீதியை விசாரித்து அகற்றாத சபிகர்கள் அவ்விஷயத்தில் பாவிகளாவர்

13. வழக்காட மனிதன் நீதி மன்றம் செல்லா தொழிக. ஒருவேளை சென்றால் மெய்யே கூறுக. தான் அறிந்ததை மறைத்தாலும், அறியாததை அறிந்தது போல் கூறிடினும் குற்றம்.

14. வழக்காளி, எதிர் வழக்காளி இவர்களால் ஒரு வழக்கின் நீதியும், சான்று கூற வந்தவர்களால் உண்மையும் விசாரணையில் துலங்காமற் போனால், அவ்வழக்கில் சபிகர்கள் குற்றவாளிகள் ஆவர்.

15. அறம் சிதைக்கப் பட்டால், அது நம்மைச் சிதைக்கும். அது காக்கப்படுமாயின் நம்மை அது காக்கும். சிதையா நல்லறம் நம்மை அழிக்காது. எனவே என்றும் அறத்தை அழிக்கக் கூடாது என்று நீதிபதி சபிகர்களுக்கு எடுத்துக் கூற வேண்டும்.

16. நன்மைகளைத் தருகின்ற நல்லறம் தெய்வீகமான தாகையால் அது பயன் மரத்திற்குச் சமம் என்று கூறுவர்

அறத்தை அழிப்பவன் விருஷலன் என்று கூறப்படுவான். அதாவது அறங் கொல்வோன் எனப் பொருள். எனவே, அறத்தை அழிக்கக் கூடாது.

17. உடலுடன் உலகத் தொடர்புகள் அழிகின்றன. அறம் ஒன்றே பின்னும் நம்மைத் தொடர்வது. ஆதலால் அறம் ஒன்றே உயிர்க்கு உற்ற துணை.

18. அநீதியாக வழங்கப்படும் தீர்ப்பினால் வரும் பாவத்தில் நாலிலொரு பங்கு வழக்கில் உண்மையான குற்றவாளியையும், ஒரு பங்கு சான்று பகர்ந்தோரையும், மற்றொரு பங்கு சபிகர்களையும், பிறிதொரு பங்கு மன்னனையும் சாரும்.

19. தக்கவன் தண்டிக்கப்படும் வழக்கில் மன்னனுக்கு யாதொரு பாவமுமில்லை. சபிகர்க்குமில்லை. பாவம் செய்தவனை மட்டுமே சாரும்.

20. அனுஷ்டானங்களில்லாத அந்தணன் மன்னன் சார்பாகத் தீர்மானங்களைச் செய்யவும் கூடும். நாலாம் வருணத்தவன் செய்யக் கூடாது.

21. மன்னன் இயற்ற வேண்டிய விசாரணைகள் எந்த நாட்டில் நான்காம் வருணத்தானால் நடைபெறுகின்றதோ, அந்நாடு சேற்றில் அகப்பட்ட பசுவைப்போல், கண்முன்னே துன்பமுறுகின்றது.

22. நாலாம் வருணத்தரும் நாத்திகருமே மிகுந்து, இரு பிறப்பாளர் இல்லாமற் போகின்ற நாடு வறுமை வாய்ப்பட்டு விரைவில் அழிந்து போகும்.

23. நீதிபதி தருமாதனத்தில் அமர்ந்து, உடலைப் போர்த்திக் கொண்டு, திசைப் பாலகர்களை வணங்கிப் பின்னரே வழக்கை விசாரிக்கப் புக வேண்டும்.

24. வழக்கின் சிறுமை, அதிகம், லாப நஷ்டம், தருமம் அதர்மம் இவற்றை நன்கறிந்து வருணக்கிரமமாக விசாரிக்க வேண்டியது.

25. வழக்காளியின் குரல், வதனம், கீழ்ப்பார்வை போன்ற குறிகள், வியர்வை. மயிர்க் கூச்சு, கைதட்டல், கண்ணோட்டம் இவற்றால் அவனுடைய உள்ளப் பாங்கை உய்த்துணர வேண்டும்.

26. ஏனெனில், உருவத்தோற்றம், குறிப்புகள், நடை, செயல், சொல், பார்வை, வாய் இவற்றின் குறி ஆகியவை மனிதர் உள்ளக் கிடக்கையை நன்கு தெரியக் காட்டுவன வாகும்.

**உடைமைகள், புதையல், களவு**

27. தக்க வயதடையாத (பதினாறு வயதுவரை) சிறுவனுடைய பொருளை அவனது குருகுல வாசம் முடியும் வரையிலாவது தக்க வயதடையும் வரையிலா வது மன்னன் காப்பாற்றித் தர வேண்டும்.

28. மலடி, பிள்ளையைப் பறி கொடுத்தவள், நாடோடியாகப் போனவனுடைய கற்பு மனைவி, உற்றார், உறவினர் அற்ற பெண்மணி, விதவை இவர்களின் பொருளையும் அரசனே காக்கவும்.

29. இவ் வபலைகளை வஞ்சித்து அவர்களின் உறவினர் அவர்களின் பொருளை அபகரித்துக் கொண்டு காப்பாற்றா மல் கைவிட்டுவிட்டால், அப்படிச் செய்தவர்களைத் திருடர் களெனக் கொண்டு தண்டித்து, பொருளை உரியவர்க்கு அறமறிந்த அரசன் மீட்டுக் கொடுத்துதவ வேண்டும்.

30. உரியவர் இன்னாரென்று அறியப்படாத பொருள் கள் மன்னனிடம் வந்துற்றால், மூன்றாண்டுகள் வரை உடையவர் வந்து பெற்றுக் கொள்ளாவிடில், பின்னர் அது அரசனுடைமையாகும்.

31. பொருளுக்கு உடைமை கொண்டாடுகிறவன், அப்பொருளின் அடையாளம். மதிப்பு, அது தன்னைவிட்டுக் கைநழுவிப் போன இடம், காரணம் இவற்றை அவனிடம்

கேட்டுத் தக்க விடை பெற்று, உரியவன் என்று ஏற்பட்டால் அவனிடம் அதனைக் கொடுத்து விடலாம்.

32. பொருளைத் தான் தப்பவிட்ட இடம், நேரம், அடையாளம், மதிப்பு ஆகிய கணக்கையும் சரியாகக் கூறு விட்டால், அவனுக்கு அப்பொருளின் தொகைக்கு இணை யான தண்டம் விதிக்கவும்

33. தப்பிப்போன பொருளைக் காத்ததற்காக,உடைய வனுடைய குண குணங்களுக்குத் தக்கபடி, ஆறு, அல்லது பத்து அல்லது பன்னிரண்டில் ஒருபங்கை மன்னன்பிடித்துக் கொண்டு மிகுதியை உடையவனுக்குக் கொடுத்துவிட வேண்டும்.

34. ஒருவன் கைநழுவி விட்ட பொருளை அரசனுடைய ஆட்கள் கண்டெடுத்தால், அதை மன்னன் தன் காவலில் வைத்துப் பாதுகாக்க வேண்டும். அதைக் காவல் புரிபவர் யாரேனும் திருடிக் கொண்டால் அவர்களை யானையின் காலால் இடறச் செய்ய வேண்டும்.

35. புதையல் எடுத்தவன், அப்புதைய்ல் தன்னுடைய தென்று நிலை நாட்டினல், அதிலும் ஆறில் அல்லது பன்னி ரண்டில் ஒரு பங்கு மன்னனுக்கும், மற்றது புதையல் எடுத்தவனுக்கும் சேர வேண்டும்.

36. எடுத்த புதையலைத் தனதென்று பொய்யாக ஒருவன் கொண்டாடுவதாகத் தெரிந்தால், புதையற் பொருளின் மதிப்பில் பதினறில் ஒரு பங்கோ, அவன் ஆஸ்தி மதிப்பில் எட்டில் ஒரு பங்கோ தண்டம் விதிக்க வும்.

37. கற்றறிந்த அந்தணனுக்கு அவனல் முன்னர் வைக்கப்பட்ட புதையல் கிடைத்தால், அவனே முழுமை யும் எடுத்துக் கொள்ளலாம். ஏனெனில், அவன் மேலான வனன்றோ!

38. மன்னனுக்குப் புதையல் கிடைத்தால், பாதியை அந்தணர்க்கு வழங்கி, மிகுதியைத் தனது பொக்கிஷத் திற் சேர்த்துக் கொள்ளலாம்.

39. கல்வி கேள்விகளிற் சிறந்த அந்தணன் அல்லாத ஏனையோர் பூமியிலிருந்து பெறும் இரத்தினம் முதலான புதையலில் பாதியை மன்னனுக்குக் கொடுக்க வேண்டும். ஏனெனில், மன்னன் மண்ணுக் கதிபன் அல்லவா?

40. திருட்டுச் சொத்தைக் கண்டுபிடித்தால், அதனைச் சகல மக்களுக்கும் வருண பேதமின்றிப் பகிர்ந்து கொடுக்காமல், மன்னன் தானே எடுத்துக் கொண்டால், திருட்டுப் பாவம் மன்னனைச் சாரும்.

41. ஜாதி, தருமம், தேச ஒழுக்கம், வியாபாரக்கோட்பாடு, குல வழக்கம் இவற்றையெல்லாம் பொறுத்தே அதற்கு மாறில்லாமல் எதனையும் முடிவு செய்ய வேண்டும்.

42. ஏனெனில், அவரவர் தத்தமக்கு ஏற்பட்ட முறைப்படி விழிப்புடன் ஒழுகுவோர் தொலை நாடுகளிலிருப்பினும் எல்லோர்க்கும் அவர்கள் அன்பர்கள் ஆகின்றனர்.

43. அரசனாயினும், அவனது நியமனம் பெற்ற நீதிபதியாயினும் தாமே ஒரு வழக்கைக் கொண்டு வரவோ, ஒருவர் கொண்டு வந்த வழக்கை விசாரிக்காமல் இருக்கவோ கூடாது.

44. வெட்டுண்ட மிருகம் ஓடிப்போன வழியைச் சிந்திய ரத்தத் துளிகளால் வேடன் அறிவது போன்று, தக்க சான்றுகளின் மூலம் நியாயம் இன்னதென்று மன்னன் கண்டறிய வேண்டும்.

45. உண்மை, பொருள் மதிப்பு, சான்றுகளின் மெய்ம்மை, நாடு, விதிக்கப்படும் தண்டத்தின் நியாய வரம்பு, காலம் இவற்றையெல்லாம் கணித்தறிந்தே, தான் நரகில் விழாவண்ணம், நீதிபதி ஒரு வழக்கின் முடிவுக்கு வர வேண்டும்.

46. நாட்டிலுள்ள ஆன்றோர், அந்தணர் இவர்களால் விதிக்கப்பட்ட நாட்டின் ஒழுக்கம், குலமரபு, இவற்றிற்கு மாறுபடாமல், தான் எதுவும் துணிய வேண்டும்.

## கடன் கோடல்

47. கொடுத்திருந்த கடன் தனக்குச் சேர வேண்டு மென்று ஒருவன் பிரியாது செய்து கொள்ளும்போது, நீதிபதி கடன்காரனை விசாரித்து, அவனிடமிருந்து உரியவனுக்குப் பொருள் கிடைக்குமாறு செய்யவேண்டும்.

48. கொடுத்த கடனை மீட்டுக் கொள்வதற்கு மேற் சொல்லப் போகும் வழிகள் விதிக்கப்படுகின்றன.

49. கடன்காரனுடைய உறவினர் மூலம் நயமாகச் சொல்லியோ, தானே சென்று இதமாகப் பேசியோ, எழுதிக் கொடுத்த சீட்டை ஆதாரமாகக் கொண்டு வழக்கிட்டோ, கடனுக்காதாரமாகப் பூஷணங்களை அடகு பெற்றுக் கொண்டதன் மூலமோ, கடன்காரனுடைய ஆநிரைகளை மடக்கியோ, அவனுடைய வீட்டு வாயிற்படியிற் படுத்துக்கொண்டோ, அவனைத் தன்னிடம் தருவித்து ஒறுத்தோ, கடனை மீட்டுக் கொள்ளலாம்.

50. கொடுத்த பொருளை எவ்விதமேனும் தானே திரும்பப் பெறுவோனை அதற்காக மன்னன் விசாரிக்கக் கூடாது.

51. வாங்கிய கடனை இல்லையென்று நீதி மன்றத்தில் பொய் கூறி ஒருவன் மறுக்கிறான் என்று பத்திரம் சான்று களால் தெளிவு ஏற்பட்டால், அப்பொருளை உடையவனுக்கு வாங்கிக் கொடுப்பதுடன், பொய் கூறி மறுத்தமைக்குத் தக்க தண்டனையும் விதிக்கவும்.

52. கடனைத் திருப்பிச் செலுத்துமாறு நீதிபதி கட்டளையிடுங்கால், அப்படித் தான் யாதொன்றும் கொடுக்க வேண்டியதில்லை என்று எதிர் வழக்காடுகையில், கடன் கொடுத்தவன் பணம் கொடுத்தபோது உடன் இருந்த சான்றினர், அதற்கேற்பட்ட பத்திரம் முதலியவற்றைக் கொண்டு தன் வழக்கை உண்மையென்று நிலை நாட்ட வேண்டும்.

53. கடன் கொடுத்ததை நேரில் இருந்து பார்க்காத ஒரு சாட்சியை எவன் ஒருவன் தன் சார்பில் கொண்டு வந்து நிறுத்துகிருனே, எவன் உண்மையான சாட்சியை மறைக்கிருனோ, எவன் முன்பின் முரண்படப் பேசுகிருனே இவர்களையும்,

54. தானே கொடுத்ததாகக் கூறியும், அதை மாற்றிப் பின்னர் தன் பிள்ளைகள்தாம் கொடுத்தார்கள் என்று திரித்துக் கூறியும், பிறகு ஓடி விடுகிறவன், நீதிபதியின் வினுக்களுக்கு மறுமொழி கூருதவன் இவர்களையும்,

55. சாட்சிகளைத் தனியிடத்தில் அழைத்துச் சென்று சொல்லிக் கொடுப்பவன், குறுக்கு விசாரணைக்குப் பதில் கூருதவன், வழக்கைத் தொடர்ந்துவிட்டுத் தொலை தேசங் களுக்குப் போய்விடுகிறவன் இவர்களையும்,

56. நீதிபதி இடையிட்டுக் கேட்கும்போது விளக்கம் தராதவன், தனக்கு விரோதமான செய்திகளைத் தனக்குச் சாதகமாகத் திரிப்பவன் இவர்களையும்,

57. சாட்சிகள் பெயரை அறிவித்து விட்டுப் பின்னர் நிரூபிக்க வேண்டியபோது அவர்களைக் காட்டாதவனையும் அந்தந்தக் காரணங்களுக்காகவே வழக்கில் தோற்ற வராகத் தீர்மானிக்க வேண்டியது.

58. 'கடன் கொடுத்தேன்' என்று கடனைத் திரும்பப் பெற வழக்கிட்டவன், விசாரணையின்போது சரியான விடை கூருவிடில், பொய் வழக்குத் தொடர்ந்ததற்காகக் காவலோ அபராதமோ விதிக்க வேண்டும். வழக்கிட்ட நாற்பத்தைந்து நாளில் பிரதிவாதி வந்து தனது கட்சியைக் கூறத் தவறினுல், அவன் தோற்றதாகத் தீர்மானிக்க வேண்டியது.

59. கடன் பட்டவன், கடன் தொகையை எவ்வளவு மறைக்கிருனே, கொடுத்தவன் தனக்குவரவேண்டியதாக

எவ்வளவு தொகையைப் பொய்யாகக் கூறுகிறானே, இவ்விருவருக்கும் அவர்கள் பொய்க் கணக்கின் இரட்டிப்புத் தொகையைத் தண்டம் விதிக்க.

### சான்றினர், நடுவர்

60. வாதியால் வழக்குக்கு அழைக்கப்பட்ட பிரதிவாதி தான் கடன் வாங்கவே யில்லை என்று பொய் சொன்னால், மூன்றுக்குக் குறையாத சாட்சிகளைக் கொண்டு நீதி மன்றத்தில் தன் கட்சியை மெய்ப்பிக்க வேண்டியது கடன் கொடுத்தவன் பொறுப்பு.

61. வழக்குகளில் வாதியின் சாட்சிகளைப் பற்றியும், அவர்கள் சாட்சி கூறவேண்டிய முறையையும் இனி கூறப் போகிறேன்.

62. இல்லறத்தாராயும், பிள்ளை குட்டிகள் பெற்றவராயும், அந்நாட்டின் குடிமக்களாயும், நால் வருணங்களில் ஒன்றைச் சேர்ந்தவராயும் இருப்போரே வாதியின் சான்றினராகும் தகுதியுடையோர். ஆபத்தில்லாதபோது சாதாரணமாக இவர்களல்லாத வேறு யாரும் சாட்சிகளாக மதிக்கத் தக்கவரல்லர்.

63. எந்த ஜாதியினராயினும், மெய்ம்மை பேசுகின்றவராயும், சகல தருமங்களையும் அறிந்தவராயும், ஆசை யில்லாதவராயும் உள்ளவரைச் சான்றினராக அழைக்க வேண்டும். மற்றோரை நீக்க வேண்டும்.

64. வழக்குப் பொருளில் சம்பந்தப் பட்டவர்கள், நண்பர்கள், வேலைக்காரர்கள், பகைவர், தீயோர் என்று ப்ரசித்தமுடையவர்கள், பிணியாளர், ஐம்பெரும் பாவிகள் இவர்களைச் சான்றாக அழைக்கக் கூடாது.

65. அரசன், மிட்டாய்க்காரன், நட்டுவன், வேதமோதினவன், மாணுக்கன், துறவி இவர்களையும்,

66. பிறரைச் சார்ந்து வாழ்வோன், பழிப்புடையவன், ஐயுறத் தக்கவன், இழி தொழில் இயற்றுவோன், சிறுபிள்ளை, முதியவன், அடிமை, ஆண்மையற்றோன் இவர்களையும்,

67. கவலையுடையவன், குடியன், பித்தன், பசித்தவன், விடாய் மிக்கவன், களைத்தவன், காமி, பெருஞ்சினத்தன், கள்ளன் இவர்களையும் சான்றினராக அழைத்தலாகாது.

68. பெண்களுக்குப் பெண்ணும், துவிஜருக்குத் துவிஜரும், நாலாம் வருணத்தார்க்கு அதிற் சிறந்தவரும், ஏனையோருக்கு அவரவர் குலத்தினரும் சான்று கூறத் தக்கவர்,

69. வீட்டிற்குள், காட்டினிடையில், மரணத் தறுவாயில் யார் அருகிலிருந்தாலும் அவர்களைச் சான்றாக அழைக்கலாம்.

70. நெருக்கடி நேரத்தில், மேற்சொன்ன முறைப்படியான சான்றுகள் கிடைக்காத போதுமட்டும், பெண், பாலர், முதியோர், சீடன், உறவினர், அடிமை இவர்களைச் சான்றினராகக் கொள்க.

71. உறுதியற்றவரான இளைஞர், முதியோர், பிணியாளர், பித்தர் இவர்களை, அவர்கள் சான்றுரைக்கும் போது காணும் குறிகளால் கண்டறிய வேண்டியது.

72. எல்லாவிதமான துன்புறுத்தும் கொடுஞ் செயல்களிலும், களவிலும், பிறன்மனை பறித்தமையிலும், அடித்தல், வசைமொழிதல் இவற்றிலும் சான்றினரைத் தக்கார் தகாதார் என்று பார்க்காமலே கொள்ளவும்.

73. சான்றுகள் முரண்பட்டால், அதிகம் எது வலியுறுத்தப் படுமோ அதனையே மன்னன் ஏற்க வேண்டும். இரு கட்சிகளின் சான்றுகளும் ஒன்றுக் கொன்று சமனளவிலிருந்தால், குணமுடையோர் கூற்றையும், அவர்களும் தம்மில் மாறுபட்டு நின்றால், அந்தணன் கூற்றையும் ஏற்றுக் கொள்ள வேண்டியது.

74. கண்டது, கேட்டது ஆகியவற்றைத் தாமுணர்ந்தவாறே மெய்ம்மை கூறினால், சான்று கூறினவர் அறம், பொருள் இவற்றால் குறைவடையமாட்டார்கள்.

75. காணாததையும் கேளாததையும் நீதி மன்றத்தில் பிதற்றுவோர் மறுமையில் நரகமே அடைவர்.

76. ஒரு வழக்கில் சான்றினனாக அழைக்கப்படாதவனாயினும், அது பற்றி ஒருவன் யாதானும் பார்த்தோ கேட்டோ இருந்தால், அவ்வுண்மையை நீதிபதி கேட்டால், உண்மையாகத் தான் கண்டு கேட்டதைக் கூற வேண்டும்.

77. ஆசையற்ற ஒருவனைச் சான்றினனாகக் கோரலாம். ஆயினும், பலராயினும் நிலையற்ற மனமுடையோரான மாதரையும், மேற்சொன்ன குறைகளுடையோரையும் கடன் முதலிய வழக்குகளில் சான்றினராக அழைக்கக் கூடாது.

78. சாட்சிகள் இயல்பாகக் கூறுவனவற்றைக் கேட்டு உண்மையறிய வேண்டும். ஒன்றைக் கூறிப் பின் அதற்கு அஞ்சி மாற்றிச் சொல்வதை உண்மையென்று கொள்ளலாகாது.

79 இரு தரப்பார்க்கும் இடையில் சான்றாக வந்தோரை நிறுத்தி, நீதிபதி மேற்சொல்லுமாறு நயமாகக் கேட்க வேண்டும்:

80. ஓய் சான்றினரே, இவ்வழக்கில் உம்மைத் தக்க சான்றினராகக் கோரியிருப்பதால், இவ்விரு தரப்பாரிடை நடைபெற்றதில் நீர் அறிந்ததை உண்மையாகச் சொல்லவும்.

81. உண்மை கூறுவோன் மேன்மையார் உலகமும், இம்மையிற் புகழும் பெறுவான். உண்மையான சொல் பிரமனால் கொண்டாடப் பெற்றது.

82. பொய்ச்சான்று கூறுவோன் நூறு பிறவிகள் வரையில் வருணனுடைய நாகபாசத்தால் கட்டுண்ணப்படுகிறான். ஆகையால் உண்மையையே கூறுக.

83. உண்மையை உரைப்பதால் சான்றினன் தூயவனாகிருன். அறம் வளர்கிறது. எல்லா வருணத்தார் விஷயத்திலும் சான்றினர் உண்மையையே பகர்க.

84 மனிதர்க்கு அவரவர் மனச்சான்றே சான்முக இருக்கிறது. எனவே, உன் உள்ளுணர்வாகிய சான்றை நீ அவமதிக்காதே.

85. செய்யும் பாவத்தை யாரும் காணவில்லை என்று பாவிகள் தங்களைச் சமாதானப் படுத்திக் கொள்கின்றனர். உண்மையில் அவர்களை மேற்சொல்லும் தேவர்களும் அவர்களின் மனச்சான்றும் பார்த்துக் கொண்டேயிருக்கின்றனர்.

86. வான், மண், காற்று, நீர், மனம், சூரியன், சந்திரன், தீ, இயமன், இரவு, அந்தி சந்திகள், அறம் இவர்கள் மனிதரின் எல்லாச் செயலையும் அறிவர்.

87. நீதி மன்றத்தில் பகல் பதினைந்து நாழிகைக்குள்ளாக, தெய்வச்சிலை, அந்தணர் இவர்கள் அருகில், அந்தணர் முதலான சான்றினரைக் கிழக்கு அல்லது வடக்கு நோக்கி நிறுத்தித் தானும் தூயனாய் இருந்து, நீதிபதி சான்றினரைச் சத்தியம் செய்வித்துப் பின் அவர்களை விசாரிக்க வேண்டியது.

88. அந்தணனைச் சொல்லுக வென்றும், க்ஷத்திரியனை உண்மையுரை என்றும், வைசியனைப் பொய் சொன்னால் உன் பசு, விதை, பொன் இவை பலிக்காமல் அழியுமென்றும், மற்றவனைப் பொய் சொன்னால் மறையோனைக் கொன்றது முதலிய பாவங்கள் உன்னைச் சாருமென்றும் கூறி அவர்களைச் சத்தியம் கேட்க வேண்டியது.

89. நட்பை வஞ்சித்தவன், மறையோனைக் கொன்றவன், பெண் கொலை புரிந்தவன், மகவைக் கொன்றவன், செய்ந்நன்றி மறந்தவன் இவர்களடையும் உலகத்தைப் பொய்ச்சான்று கூறுவோனும் சென்றடையக் கடவன்.

90. ஆகையினால், குணமுள்ள சாட்சிகளே, நீங்கள் பொய் கூறினால், பிறந்தபின் இதுவரை இயற்றிய புண்ணிய மனைத்தும் உங்களால் வளர்க்கப்படும் நாய்க்குப் போய்ச் சேரும்.

91. நற்குணமுடைய சாட்சியே, நீ தனியாக இருப்ப தாய் நினைக்கிறாய்; அது சரியன்று. ஏனெனில், உன் செயல்களுக்குச் சான்றாக உன் உள்ளத்தில் இறைவன் வசிக்கிறார்.

92. சூரிய குமாரனான இயமனே உனதுள்ளத்தில் வசிக்கிறார். எதிரிக்கு விரோதமாக நீ பொய்யுரைக்காமல் இருந்தால், கங்கை குருக்ஷேத்திர முதலிய புண்ய யாத் திரை நீ போக வேண்டியதே யில்லை.

93. பொய்ச்சான்று கூறிடின், ஆடையிழந்து, மொட்டையாண்டியாய், கண்ணிழந்து, பசி தாகத்தினால் அல்லலுற்றுத் தன் பகைவனிடமே சென்று பிச்சை கேட்க வேண்டியதாகும்.

94. மேலும் நீதியைக் கண்டறியும் பொருட்டாக வினாவப் பெறுகையில் பொய் கூறும் சான்றினன் பாவி யாய்க் காடாந்தகார நரகத்தில் தலைகீழாய் விழுவான்.

95. சொற்ப லாபத்திற்காகத் தான் காணாததைக் கண்டதாக நீதி மன்றத்தில் பொய் கூறுகிறவன், ஆசை மிகுதியினால் மீனை முள்ளுடன் தின்னும் குருடனைப் போல் துன்புறுவான்.

96. தனது மனச்சாட்சி நடுங்காமல் எவன் மெய்ம்மை கூறுவானோ அவனை விஞ்சியவர் ஒருவர் இருப்ப தாகத் தேவர்கள் கூறவில்லை.

97. ஓய், நற்குணவானான சான்றினரே, எவ்விஷயத் தில் பொய்ச்சான்று கூறுவோன் எவ்வளவு பந்துக்களைக் கொன்ற பாவம் அடைவானோ அந்தக் கணக்கைக் கேளும்.

98. ஓராட்டைக் குறித்த பொய்—ஐந்து உறவினரை யும், ஒரு பசுவைக் குறித்தபொய்—பதின்மரையும், ஒரு பரியைக் குறித்த பொய்—நூற்றுவரையும், ஒரு மனிதனைப் பற்றிய பொய்—ஆயிரம் உற்றாரையும் கொல்லும்.

99. பொன்னைப் பற்றிய பொய்—பிறந்த, பிறக்கப் போகிற சந்ததிகளையும், பூமியைப் பற்றிய பொய்—சகல பிராணிகளையும் கொல்லும். ஆகையால் பூமியைப் பற்றிப் பொய் கூறற்க.

100. மேலும் தடாகம் முதலிய நீர்நிலைகள், பெண்ணுடைமை, புணர்ச்சி,முத்து முதலிய மணிவகை, கற்களின் பேதங்கள் இவ்விஷயங்களிற் சொல்லும் பொய்,பூமியைப் பற்றியது போலவே, உமது சுற்றம் முழுமையும் சுடும்.

101. இந்த விளைவுகளை யெல்லாம் நீ யறிந்து கொண்டு கேட்டதையும் கண்டதையும் விரைவில் உள்ள வாறே சொல் என்று கேட்க வேண்டியது.

102. கால்நடைகளாற் பிழைப்பு நடத்துவோர், வியாபாரிகள், மிட்டாய் விற்போர், சிற்பிகள், பாடகர், ஏவலர், வட்டி வாங்கிப் பிழைப்போர் ஆகிய அந்தணர் களை நாலாம் வருணத்தாராய் மதிக்க வேண்டியது. அவர் களிடம் வாங்கும் பிரமாணமும் அவ்வாறே இருக்க வேண்டியது.

103. பிறனுக்குத் தீங்கு வராமற்காக்கும் பொருட்டு தான் உண்மை யறிந்தவனாயினும், அதனை மாற்றிக் கூறுவோன் சுவர்க்கத்தினின்று நழுவ மாட்டான் என்று தேவர்கள் கூறியதாக மேலோர் உரைக்கின்றனர்.

104. உண்மையைச் சொன்னால் மற்று ஒருவருடைய உயிருக்கிறுதி நேரிடும் போல் இருந்தால், பொய்யே கூறலாம். அப் பொய் மெய்ம்மையினும் மிக்கது.

105. அத்தகைய பொய்க்குக் கழுவாயாக, சரஸ்வதியைக் குறித்து வாக்கை அதிதேவதையாகப் பெற்ற அவிகள் சொரிந்து ஓமம் செய்ய வேண்டியது.

106. அல்லது வருணனை அதிதேவதையாகவுடைய ருக்குகளைச் சொல்லியோ, ஜலத்தை அதிதேவதையாக வுடைய மூன்று ருக்கினாலோ, கூஷ்பாண்டங்களினால் தீயில் ஓமம் செய்ய வேண்டியது.

107. கடன் முதலான வழக்குகளில் எவனால் உண்மை துலங்க வேண்டுமோ அந்தச் சான்றினன் நீதி மன்றத்தில் தான் அழைக்கப்பட்ட நாற்பத்து ஐந்து நாட்களுக்குள் வந்து கூறாவிடில், வாதியின் கடன் முழுவதையும் அவனே செலுத்துவதுடன், அதில் பத்தில் ஒரு பங்கை அபராத மாகவும் மன்னனுக்குச் செலுத்த வேண்டும்.

108. வழக்கில் சான்றுரைத்தவனுக்கு அன்று முதல் ஏழு நாட்களுக்குள் நோய், தீ இவற்றால் அபாயமும் உறவினர் நாசமும் ஏற்பட்டால், அவனை அந்தக் கடன் முழுவதும் கொடுக்குமாறு கட்டளையிட்டு, அபராதமும் விதிக்க வேண்டும்.

109. சான்றினர் இல்லாத வழக்குகளில்வாதி—பிரதி வாதிகளின் உண்மையைப் பின்வரும் சத்தியங்களின் மூலம் அறிக.

110. தேவர்களும், சப்த ரிஷிகளும் கூட வழக்குகளில் சத்தியம் செய்து விடை கூறியிருக்கின்றனர். தனது நூறு பிள்ளைகளையும் உண்டு விட்டதாக வசிஷ்டர் மீது பியவனன் பிள்ளையாகிய சுதாமா வென்னும் மன்னனிடம் விசுவாமித்திரர் பிரியாது செய்தபோது, இல்லையென்று வசிஷ்டரும் சத்தியம் செய்து கூறியிருக்கிறார்.

111. வீணாகவும், அற்பத்திற்காகவும் இம்மாதிரி சத்தியம் செய்யக் கூடாது. அப்படிச் செய்பவன் மறுமை யிலும் அழிகிறான்.

112. அநேகம் பெண்டுகளையுடையவன் அவர்களுடன் தனது புணர்ச்சி பற்றியும், திருமணம் பற்றியும், கால் நடைத் தீவனம் பற்றியும், ஓம சமித்துக்கள் பற்றியும்,

அந்தணரைக் காக்கும் பொருட்டும் பொய்ச் சத்தியம் பண்ணிணுலும் பிழையில்லை.

113. வாதி—பிரதிவாதிகளைப் பிரமாணமாகச் சொல் என்றும், வாகனம், ஆயுதம் இவற்றின் மேல் ஆணையாகச் சொல் என்று க்ஷத்திரியனையும், உன் பசு, தானியம், பொருள் இவற்றின் மேல் ஆணையாகக் கூறென்று வைசியனையும், பொய் சொன்னல் பஞ்ச மகா பாதகங்களை அடைவேளுக என்று கூறும்படி நாலாம் வருணத்தானையும் கூற வைத்துச் சத்தியம் கேட்க வேண்டியது.

114. சத்தியம் செய்பவனை மழுவேந்தவோ, நீரில் மூழ்கவோ, பிள்ளைபெண்டு தலையிலடித்துக் கூறும்படியோ செய்ய வேண்டும்.

115. மழுவேந்தியவான் கை வேகாமலும், ஜலத்தில் அழுந்தியவன் முழுகிப் போகாமலும், பெண்டு பிள்ளை தலையிலடித்துச் சொன்னவனுக்கு உடனே துன்பம் நேரிடாமலும் இருந்தால், அவன் செய்த சத்தியத்தால் அவன் தூயவனென்று அறிய வேண்டும்.

116. முன்னொரு காலத்தில் தன் பின்பிறந்தவனுல் பிராம்மணன் அன்று, நாலாம் வருண ஸ்திரீக்குப் பி... வனென்று வசை கூறப்பட்டபோது, வத்ஸ மகா முனி தீயிற் பாய்ந்தார். அப்போது, தீ அவரது ... உரோமத்தையும் சுடவில்லை.

117. கூறப்பட்டது பொய்ச்சாட்சியென்ப... வழக்குத் தீர்மானம் செய்யப்பட்ட பின்னர் தெரிந்தாலும், அம்முடிவு உடைந்து போகும். அதில் விதித்த தண்டனையும் மாறிப்போகும். விசாரணை முடிந்து தீர்ப்புக் கூறுகிற தருணமாயினும், மறுபடியும் விசாரிக்கவேண்டும்.

118. பொருளாசை, அச்சம், குடிமயக்கம், நட்புரிமை காமம், வெகுளி, அறியாமை, சிறுபிள்ளைத்தனம் இவற்ருல் பொய்ச்சான்று கூறப்படுகிறது.

119. இவற்றில் பொய்ச்சான்று கூறப்படும்போது அவ்வவற்றிற்கிசைந்த தண்டனையை முறையே கூறுகின்றேன்.

120. நால் வருணத்தவரும் பொருளாசையாற் பொய்ச்சான்று கூறுவராயின் ஆயிரம் பணமும், மயக்கத்தாலுரைப்பின் பூர்வ சாகச தண்டமும், அச்சத்தாலுரைப்பின் இரண்டு மத்திம சாகச தண்டமும், நட்புரிமையாலாயின் நான்கு பூர்வ சாகச தண்டமும்,

121. காமத்தாலாயின் பத்து மடங்கு பூர்வ சாகச தண்டம், வெகுளியாலுரைப்பின்—மும்மடங்கு பூர்வ சாகச தண்டம், அறியாமையாலாயின் இருநூறு பணமும் சிறு பிள்ளைத் தன்மையாலுரைப்பின்—நூறு பணமும் தண்டம் விதிக்க. பூர்வ சாகச முறையை முன்னிக் காண்க.

122. உண்மையைக் காக்கவும், பொய்மை தோன்றாமைக்கும், பொய்ச் சான்றுரைப்போர்க்கு இத் தண்டனை விதிகளைப் பெரியோர் வகுத்ததாக மநுவாதி மேலோர் கூறுவர்.

123. க்ஷத்திரியன் முதலான மூவர்ணத்தரையும் அவர்கள் பொய்ச் சான்று கூறியதற்காக அரசன் நாடு கடத்துக அல்லது தண்டிக்க.

**தண்டக் கணக்கும், தண்டனையும்**

124. அந்தணன் தவிர்த்த ஏனையோரை ஒறுக்கத் தக்கவிடம் பத்தென்றும், அந்தணனைச் சாயப்படுத்தாமல் துரத்தி விட வேண்டுமென்றும் மநு கூறியுள்ளார். சிலர் அவனுடைய ஆடையைப் பறித்துக் கொண்டு, அவன் வீட்டை இடித்து விட்டு, அவனையும் ஊரை விட்டு ஓட்ட வேண்டியதென்று அபிப்ராயப்படுகின்றனர்.

125. குறி, வயிறு, நா, கை, கால், கண், மூக்கு, காது, பொருள், உடல் ஆக தண்டிக்கப்படவேண்டிய இடங்கள்

பத்து. எந்த உறுப்பால் குற்ற மிழைக்கப்படுகிறதோ அந்த உறுப்பில் அடிப்பதே தக்க தண்டனை என்பது கருத்து.

126. சாட்சிகளுக்குரிய தண்டனைகளை, குற்றம் முதலாவதா இரண்டாம் தடவையா என்பதையும், பொய்ச் சான்றின் விளைவுகளையும், அவரது திறமையினையும், குற்றமிழைத்த உடலையும், காலத்தையும், தண்ட நீதிகளையும் நன்கு ஆராய்ந்து ஏற்ற தண்டனை விதிக்கவும்.

127. அநீதியாகத் தண்டித்தால், இம்மையில் ஒளியையும், மறுமையில் புகழ் சுவர்க்கம் இரண்டையும் அழிக்கும். ஆதலால், அதனை நீக்க வேண்டியது

128. குற்றமற்றோரைப் பொருளாசையாற் றண்டித்தோ, குற்றவாளிகளைக் கண்ணோட்டத்தால் விட்டொழித்தோ விடுகிற மன்னன், இம்மையில் ஒளி யிழந்தும், மறுமையில் நரகும் உய்ப்பான்.

129. பொய் சொன்னவனை, "இது முதல் தடவையாகத் தவறிழைத்தாய், இனி செய்யாதே!" என்று அறிவுறுத்தி வாயால் மிரட்ட வேண்டும். மேலும் செய்தால், "சீ, துஷ்டா, உன்னைச் சுட வேண்டும்!" என்பன போன்ற வன்மொழி கூற வேண்டும். மூன்றும் தடவையாயின் அபராதமும், மறுபடியும் செய்தால் அடித்தல் காயப் படுத்துதல் போன்ற கடுந் தண்டனையும் விதிக்க வேண்டியது.

130. இவர்கள் இதனாலும் அடங்காவிடில் மேற் சொன்ன நான்கு தண்டனையும் செய்ய வேண்டியது.

131. செலாவணிக்காக ஏற்பட்டிருக்கிற தங்கம், வெள்ளி, செம்பு இவற்றின் அளவைகளை இனி கூறப் போகிறேன்.

132. சிறு மழையின் வழியே நுழையும் சூரிய கிரணத்திலும் நுண்ணியவற்றிற்குத் திரிசரேணு எனப் பெயர்.

133. திரிசரேணு எட்டுக் கொண்டது ஈர். மூன்று ஈர்கள் கொண்டது மன் கடுகு. மூன்று மன் கடுகுகள் கொண்டது வெண் கடுகு.

134. ஆறு வெண் கடுகுகள் கொண்டது ஒரு நடுயவம். மூன்று நடுயவங்கள் கொண்டது ஒரு குன்றி. குன்றி ஐந்து கொண்டது மாடம். பதினாறு மாடங்கள் கொண்டது பொன். இப்பொன் இரண்டரை விராக னெடையாகும்.

135. நாலு பொன் கொண்டது பலம். பத்துப்பலம் ஒரு தரணம். இனி வெள்ளிக் கணக்கு. குன்றி யிரண்டு கொண்டது வெள்ளி மாடம்.

136 வெள்ளி மாடம் பதினாறு கொண்டதுவெள்ளித் தரணம். இதற்குப் புராணம் என்றும் பெயர். தாமிரக் கணக்காவது: பொன் கணக்கிற் கூறிய பலத்தில் நாலில் ஒரு பங்கான செம்புக்குக் காருடிகமென்றும், கருடாபண மென்றும், பணமென்றும் பெயர்களாம்.

137. வெள்ளித் தரணம் பத்துக் கொண்டது ஒரு பலம். அதற்குச் சதமானம் என்று பெயர். பொன்னின் பலம் ஒன்றுக்கு நிஷ்க மென்று பெயர்.

138. பிரதம சாகசம் என்பது இருநூற்று ஐம்பது பணம். மத்திம சாகசம் ஐந்நூறு பணம், உத்தம சாகசம் ஆயிரம் பணம். பிரதம சாகசமும், பூர்வ சாகசமும் ஒன்றேதான்.

**கடன்கள், வட்டி, கொதுவை**

139. கொடுத்தவன் கேட்கும்போது கொடாமல், வழக்கு நீதி மன்றத்திற்கு வந்த பின்னர் கடனை ஏற்றுக் கொண்டால் நூற்றுக்கு ஐந்து பணம், கடனை மறுத்துப் பொய் கூறினால் நூற்றுக்குப் பத்துப் பணம் வீதமும் தண்டம் விதிக்க வேண்டுமென்பது மநுவின் கட்டளை.

140. வட்டியினாற் பிழைப்பவன் பொருள் வளர்ச்சிக் காக நூற்றுக்கு ஒன்றே கால் வட்டியை மாதந்தோறும் வசிட்டன் பணித்தவாறு வாங்க வேண்டியது.

141. ஈடில்லாத கடனுக்கு நூற்றுக்கு இரண்டு வட்டியும் மாதம் தோறும் வாங்கலாம் இதனுற் பிழையில்லை.

142. ஈடில்லாக் கடனுக்கு இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து வட்டிகள் வருண முறையே வாங்கலாம்.

143. விளை நிலத்தை அனுபவிக்குமாறு ஈடு காட்டி வாங்கிய கடனுக்கு ஒன்றே கால் வட்டியும் வாங்கக் கூடாது. கெடு தப்பிப் போனுலும் அந்த நிலத்தை மற்றொருவனுக்குத் தானமாகவோ விலைக்கோ கொடுக்கக் கூடாது.

144. ஈடு வைக்கப்பட்ட ஆடையாபரணங்களை, உடையவன் அனுமதியின்றி அணியக்கூடாது அனுபவித்தால் வட்டியையும் தள்ளி, அனுபவத்தால் ஈட்டுப் பொருளுக்கு ஏற்படும் அழிவைத் தான் ஏற்றுக் கொண்டு, உடையவனுக்கு முதலைக் கொடுத்து மகிழ்வுறச் செய்ய வேண்டும்.

145. ஈடு வைத்த பொருள், அனுபவித்துக் கொண்டிருக்கும்படி ஒருவன் விரும்பிக் கொடுத்து வைத்தது— இவை ஆண்டு அனுபவிப்பதனுல் ஒருக்காலும் அழிவுரு. எவ்வளவு காலம் கடந்த பின்னரும் உடையவன் வேண்டும் போது பெற்றுக் கொள்ளத் தக்கதாகும்.

146. மனமொப்பி அனுபவிக்குமாறு ஒருவன் கொடுத்து வைக்கும் பசு, ஒட்டகம், பழக்கிய குதிரை, எருது முதலியவை அனுபவிக்கிறவன் உடைமையாகி விட மாட்டா.

147. மாற்றுன் பொருளை அவன் விருப்பமில்லாமலே ஒருவன் அனுபவிப்பதை உடையவன் பத்தாண்டுகள்வரை பார்த்தும், தடுக்காமலிருந்து விட்டால், அதன் உடைமை அனுபவித்தவனுக்குப் போய்விடுமே யன்றி அதுவரை முந்தைய உடைமையாளனுக்கு அதில் உரிமை யிராது.

148. பொருளுக்குடையவன் விவேகியாகவும் பதினறு பிராயம் கடந்தவனுயு மிருப்பான். அவன் பொருளை அவனெதிரிலேயே பத்து வருஷம் அனுபவித்துத்

தனக்கு ஒருவன் சொந்தமாக்கிக் கொண்டு விட்டால், பின்னர் அதன் மீது வழக்கிடக் கூடாது.

149. ஈடு வைத்த பொருள், பூமியெல்லை, சிறுபிள்ளை யின் உடைமை, வைத்தனுபவிக்கும்படி கொடுத்தவைத்த பொருள், இவ்வளவு தொகை என்று எண்ணிக் கொடுத்து வைத்தது, மூடிய பெட்டியில் தொகை இவ்வளவு என்று தெரிவிக்காமல் கொடுத்து வைத்தது, பெண்களின் உடைமை, மன்னனுக்குரிமையானது, அந்தணன் ஆஸ்தி இவைகளும் பத்து வருட அனுபோகத்தால் உரிமை கெட்டுப் போகாது.

150. ஒருவனுடைய வீட்டை அடகு பெற்றும், அவன் சம்மதியின்றி அனுபவிக்கிற அறிவிலி, அப்படித் தான் அதனைத் துய்த்ததால் பெற்ற பிழை போக அரைவட்டி வீட்டுக்காரனுக்குத் தள்ளும்படி செய்து கொடுக்க வேண் டும். வலிந்து அதனைப் பயன்படுத்தியிருந்தால் முழுவட்டி யுமே தள்ளிவிட வேண்டும்.

151. வட்டி கூடுதல் எல்லை என்பது முதல் இரட்டிப் பாகும் வரைதான். தானியம், பழம் முதலியன, கம்பள ரோமம், வாகனம் இவற்றைக் கிரயம் கட்டிக் கடனாக ஒருவனுக்குக் கொடுத்திருந்தால், வட்டி கூடுதல் எல்லை கிரயம் கட்டிய தொகைக்கு ஐந்து மடங்காகும்.

152. இரு தரப்பாரும் ஒப்புக் கொண்டதற்கு மேல் அதிக வட்டி ஏற்பட மாட்டாது. வட்டி பேசாமல் கொடுத்த கடனுக்கு உடையவன் வட்டி கேட்கும் வரை யில் வட்டியில்லை. கேட்டும் கொடுக்கா விட்டால், அன்று முதல் ஐந்து வட்டி வரையில் வருண முறைப்படி கொடுத் தாக வேண்டும். இந்த முறைப்படி வாங்காமல் அந்தண னிடத்தும் இரண்டுக்கு மேற்பட்ட வட்டி வாங்குதல் நிந்தைக் குரியதாகும்.

153. கடன் கொடுத்தவன் தனக்குச் சேர வேண்டிய வட்டியை மாதம் தோறும், மூன்று மாதந்தோறும், அல்லது ஆண்டு தோறும் ஒரு தடவை வட்டி செலுத்தத் தக்கதென்று ஏற்பாடு செய்து கொள்ள வேண்டும். வட்டி செலுத்தத் தக்க காலவரை அதற்கு மேலிடக் கூடாது. இப்படி ஒத்துக் கொண்டபடி கொடாத போதிலும் வட்டிக்கு வட்டி வாங்கலாகாது. தரும சாஸ்திரத்தில் விதித்ததைவிட அதிக வட்டியோ முதலுக்கு இரட்டிப்புக்கு மேலான வட்டியோ, காலிக, காயிக, காரிக விருத்திகளையோ பெறக்கூடாது.

154. அசலும் வட்டியும் சேர்ந்துக் கொடுக்க இயலாதவன் முதலாளியின் ஒப்புதலின் மேல் அதுவரை கூடுதல் வட்டியை மட்டும் அவனிடம் செலுத்தி, முதலுக்குப் பத்திரம் புதுப்பித்துக் கொடுக்க வேண்டியது.

155. அப்படி வட்டியும் கொடுக்க இயலாதவன் கூடுதல் முதல் வட்டித் தொகையைக் கணக்கிட்டு அதற்கு வட்டி போட்டுப் புதுப்பத்திரம் எழுதிக் கொடுக்கவும்.

156. வாடகைக்கு வண்டியோட்டுவதற்குப் பேசியவன், குறித்த நாளில் குறித்த இடத்திற் கொண்டு சேர்க்கா விட்டால், பேசிய வாடகை முழுவதையும் இழந்து போவான்.

157. நீர் மேலும் தரை மீதும் நடையறிந்த வியாபாரியின் திட்டப்படிக்கே தூரம் சுமை இவற்றிற்கு ஏற்ற வண்டி வாடகையை அனைவரும் ஏற்றுக் கொள்ள வேண்டும்.

158. பிணை நிற்பவன், கடன் கொடுத்தவன் விரும்பும்போது கடன்காரனை அவன் முன் கொண்டு வரத் தவறினால், பிணையாளனே கடன் முழுவதையும் செலுத்த வேண்டும்.

159. தகப்பன் பிணை நின்றமையால் கொடுக்க நேர்ந்தது, பந்தயம் வைத்த பொருள், சுவருடிப் பட்ட கடன், குடித்ததற்காக நிற்கும் பாக்கி, தண்டம், ஆயத் தீர்வை ஆகிய இவற்றை அவனது பிள்ளை கொடுக்க வேண்டும்

160. தந்தை காட்டிய பிணையைப் பொறுத்துப் பிள்ளைக்குப் பொறுப்பில்லை. ஆனால், தந்தை பிணை நின்றமைக்கு மைந்தர் பொறுப்பாவர்.

161. பிணை நின்றவன் இறந்து விட்டால், உடையவன் தனக்குச் சேர வேண்டிய தொகையைப் பெறுவது எவ்வாறென்றால்:

162. பிணை நின்றவன் காலத்தில் அக்கடனைத் தீர்த்து வைக்காமலோ, கடன்காரனை உரிய காலத்திற்குள் தான் அழைத்து வந்து முதலாளியிடம் ஒப்புவிக்காவிட்டாலோ, சேர வேண்டிய கடன் தொகையைப் பிணை நின்றவனும் அவனது சந்ததியும் தீர்க்க வேண்டும்.

163. குடிவெறி, பிணி, பித்தம், வாலைப் ருவம், கிழத்தனம் உடையோருக்கு, அவர்களின் உடன் பிறந்தார் அல்லது தந்தை இவர்க ளனுமதி யின்றிக் கொடுத்த கடனைப் பற்றி ஏற்படும் வழக்குகள் தள்ளிவிடத் தக்கனவாகும்.

164. தருமத்திற்கும் வழக்கத்திற்கும் விரோதமாக, அவை எழுத்துமூலம் செய்யப்பட்டனவாயினும், ஒப்பந்தங்கள் செல்லுபடியாகமாட்டா.

165. மோசக் கருத்துடன் புகலாக வைத்த ஈடும், கிரயமும், கொடுக்கல் வாங்கல்களும், மற்றும் மோசடிகளும் உண்மை யில்லாதன வாதலின் அவற்றையும் தள்ளிவிட வேண்டியது.

166. ஒரே குடும்பமாக இருந்தபோது, பட்ட கடனைக் கடன் பட்டவன் கொடாம லிறந்தால், சொத்தைப் பங்கிட்டுக் கொண்டபோதிலும், சகோதரர்கள் விகிதாசாரப்படி கடனையும் கொடுக்க வேண்டும்.

167. எஜமானன் ஊரிலோ அன்னிய நாட்டிலோ இருக்கும்போது, எஜமானன் குடும்ப விஷயமாக வேலைக்காரர் வாங்கும் கடனை எஜமானன் கொடுக்க வேண்டும்.

168. கட்டாயப்படுத்தி ஒருவன்மீது சுமத்தப்பட்டது, கட்டாயப் படுத்திப் பிறனிடமிருந்து பெற்றது, அல்லது எழுதி வாங்கப்பட்டது ஆகியவற்றையும் செல்லாவென்று தள்ளிவிட வேண்டும் என்பது மநுவின் வாக்கு.

169. சான்றினர், பிணையினர், நீதிபதி இம்மூவரும், பிறருக்காகத் தமது முயற்சியைச் செலவிடுவோர், அந்தணன், செல்வன், வணிகன், மன்னன் இந்நால்வரும் பிறரால் வளர்ச்சியடைகின்றனர்.

170. மன்னன் தான் ஏழையாயினும் அதிகத் தீர்வை வாங்குவதோ, செல்வனுயிருப்பதனுல் உரிய தீர்வையைச் சிறிது தள்ளுவதோ கூடாது

171. தகாத தீர்வையை வாங்குதலும், தக்கதைத் தண்டாமல் விடுதலும், மன்னனைத் திறமில்லாதவன் என்று பழியேற்கச் செய்யும். அவனுக்கு இம்மை மறுமை நலன்களும் இலவாகும்.

172. நீதமாய்த் தீர்வை வாங்குவதனுலும், வருண முறைப்படி மக்களைப் புரத்தலாலும், மன்னன் திறமுடையோன் என்ற புகழுடன் இம்மை மறுமை நலன்கள் யாவும் எய்தப் பெறுகிறுன்.

173. ஆதலால், வெகுளி புலனின்பம் இவற்றை அடக்கி, இயம தருமனைப் போல் யாரிடத்தும் விருப்பு வெறுப்பில்லாதவனுய், நீதியுடன் யாவருக்கும் பொதுவாக நடப்பது மன்னர் அறம்.

174. பொருளாசையால் அநீதமாக முடிவு செய்யும் அரசன் கேடன். அவனைப் பகைவர்கள் எளிதில் வெல்வர்.

175. விருப்பு வெறுப்பு விடுத்து அறநெறி வழுவாமல் நீதி செலுத்துவோனிடம், கடலை நோக்கிச் சென்றடையும் ஆறுகளைப் போல், மக்கள் சென்றடைந்து தம்மில் ஒன்றி வாழ்கின்றனர்.

176. அரசாங்கத்தில் தனக்குள்ள செல்வாக்கினுல் செருக்குற்று ஒருவன் தன்னிடம் கடன் பட்டோரைத் துன்புறுத்தினுல், கடன் பட்டோன் நீதிபதியிடம் அறிவித்தால், அவனுடைய கடனை வாங்கிக் கொடுத்து, அத்தொகையில் கால்பகுதியை அவனுடைய செருக்கிற்காகத் தண்டம் விதிக்க வேண்டும்.

177. கொடுத்தவனுக்குச் சரியான அல்லது தாழ்ந்த குலத்தவனுன கடன்பட்டோன், பட்ட கடனைத் தீர்க்க வழியில்லாதபோது தன் குலத்திற்கேற்ற தொழில் ஒன்றைக் கடன் கொடுத்தவனுக்குச் செய்து கடனைத் தீர்க்க வேண்டும். கடன் பட்டவன் மேற்குலத்தோனுயின், கிடைத்தபோது சிறுகச் சிறுகவேனும் கடனைத் தீர்க்க வேண்டியது.

178. கடன் கோடல் வழக்குகளில் மனிதர் செயல்களை மேற் சொல்லிவந்த முறைப்படி சான்றினர் முதலிய நம்பிக்கைகளின் பேரால் உறுதிப்படுத்தி மன்னன் முடிவு செய்ய வேண்டும்.

## காப்புப் பொருள்

179. தன் பொருளைக் காப்பாற்றி வைக்குமாறு ஒருவன் கொடுத்து வைக்கத் தக்கவன் யாரென்றுல், ஒழுக்கம், தருமம், சத்தியம், பெருங்குடும்பம், செல்வம், கௌரவம் இவைகளையுடைய ஒருவன்.

180. ஒருவன் கையில் அடைக்கலமாகக் கொடுத்ததை, கொடுத்தது போன்ற அடையாளத்துடன், அதை அப்படியே பெற்றுக் கொள்ள வேண்டியது.

181. அடைக்கலம் வைத்தவன் கேட்கும்போது, வாங்கி வைத்தவன் திரும்பக் கொடாதிருந்தால், உடனே நீதிக்கு அடைக்கலம் வைத்தவன் அறிவிக்க வேண்டும். நீதிபதியும் அவனைத் தனியாக விசாரிக்க வேண்டும்.

182. அடைக்கலம் வைத்ததற்குச் சான்றில்லையானால், குற்றவாளியைப் பரிசோதிக்கும் பொருட்டு நீதிபதி தனது வேவுகாரர்களைக் கொண்டு அவனிடமே பொருளை முத்திரையுடன் அடைக்கலம் வைக்கச் செய்து, அதைத் திருப்பி வாங்கிவரச் செய்து பார்க்க வேண்டும்.

183. இந்தச் சோதனையில் முத்திரை கெடாமல் அவன் திருப்பிக் கொடுத்து விட்டால், வழக்கு விஷயத்திலும் அவன் மோசம் செய்ததில்லையென்று நீதிபதி அறியலாகும்.

184. சோதனைக்கு வைத்ததையும் அவன் மோசம் செய்தால், வழக்கில் கண்ட அடைக்கலத்தையும், சோதனைக்கு வைத்ததையும் அவனிடமிருந்து பறித்து, உரியவர்க்குச் சேர்ப்பித்து, அவனைத் தண்டிக்கவும். இதுவே தரும நிச்சயம்.

185. ஒருவனால் அடைக்கலம் வைக்கப்பட்டது, எண்ணிக் கொடுக்கப்பட்ட தொகை, இரண்டையும் வைத்தவன் இருக்கும்போது அவன் பிள்ளையிடம் கொடுக்கலாகாது. வைத்தவன் இறந்துவிட்டால் மட்டுமே அவன் பிள்ளையை அழைத்து வலியக் கொடுக்கவேண்டும்.

186. இவற்றை வைத்தவன் இறந்த பின் வலியக் கொடுக்கும்போது, அதைப் பெறும் பிள்ளையோ, அரசனோ, 'மற்றும் உன்னிடத்தில் வைத்தவை யனைத்தும் கொண்டுவா!" என்று கேட்டுத் துயருறுத்தக் கூடாது.

187. இன்னமும் அடைக்கலப் பொருள் அவனிடத்தில் இருக்கக் கூடுமென்ற குறிப்புத் தெரிந்தால், அவன் குணத்தைத் தெரிந்து, பிரமாண முதலியன கேட்காமல், நயவுரையாகவே கேட்டுப் பெற வேண்டும்.

188 இவ்விதமே அடைக்கல விஷயங்களை முடிவு செய்ய வேண்டும். வாங்கி வைத்ததை முத்திரை கெடாமல் ஒருவன் திரும்பக் கொடுத்துவிட்டால், மேலும் அவன் மேல் கொள்ளப்படும் ஐயத்தை நீதி மன்றம் ஏற்கக் கூடாது.

189. அடைக்கலம், முத்திரை யிட்டுக் கொடுத்து வைத்தது ஆகியவை வாங்கி வைத்தவனால் எடுத்துக் கொள்ளப் படாமல் களவு போய்விட்டால், ஆற்றில் அடித்துச் செல்லப் பட்டால், தீயில் வெந்து போனால், வாங்கி வைத்தவன் கொடுத்து வைத்தவனுக்குப் பொறுப்பாளி யாக வேண்டியதில்லை.

190. அடைக்கலப் பொருளைப் பறித்தவன், அடைக்கலம் வைக்காமற் கேட்கிறவன் இவர்களின் உண்மையை, நால்வகை உபாயங்களாலும், சத்தியம் கேட்டும், அறிய வேண்டும்.

191. வைக்காமற் கேட்பவனையும், அடைக்கலப் பொருளைப் பறித்துக் கொண்டவனையும், திருடனைப்போல் எண்ணித் தண்டிக்க அல்லது அடைக்கலப் பொருளுக்குச் சமமான அபராதம் வாங்குக.

192. முதல் தடவையான இவ்வகைக் குற்றத்திற்கு மேற்சொன்ன அபராதமும், இரண்டாந் தடவையாயின் தண்டனையும் விதிக்க.

193. ஒருவன் மீது ராஜ கோபம் இருப்பதாகவும், தான் அதிலிருந்து காப்பாற்றுவதாகவும் மாறு பேசி, ஒருவன் பொருளை வஞ்சித்துப் பெற்றால், அவனைச் சுற்றத்துடன் அங்க சேதம் செய்து, யாவரும் தெரியக் கொல்வது மன்னன் கடமை.

194. சாட்சிகளை வைத்துக் கொண்டு அடைக்கலமாகத் தந்த தொகைக் கணக்குப் பிசகானால், சான்றினர் சொல்லும் கணக்குப்படியே, அடைக்கலம் வைத்தவன் பெற்றுக் கொள்ளவேண்டும். இல்லாவிடில் அவனை அரசன் தண்டிக்க வேண்டும்.

195. யாருமறியாமல் அடைக்கலம் வைக்கப்பட்டால், அப்படியே பிறரறியாமல் திருப்பிக் கொடுக்கவும் வேண்டும. ஏனெனில் வாங்கியவாறே கொடுப்பது நீதம்.

196. இப்படி ஒருவர் 'பொருளைக் காப்பதற்காக வாங்கி வைத்தவர்கள் யாதொரு துயருமின்றித் திருப்பிக் கொடுக்குமாறு மட்டுமே மன்னன் செய்ய வேண்டும்.

## பொருள் விற்பனை, கூலி

197. பிறனுடைமையை அவன் உத்தரவின்றிஎடுத்து விற்று விட்டு, அப்படித் தான் செய்தது திருட்டென்று எண்ணுமலும் இருக்கிறவனைச் சாட்சியாகக் கோரக் கூடாது.

198. தன்னுரிமையல்லாத ஒன்றைப் பறித்துக் கொண்டவன், அப்பொருளின் உடையவனுக்கு உறவினனுக இருந்தால், அறுநூறு பணம் தண்டம் விதிக்க வேண்டும். உறவினனல்லாதிருந்தும், ஒருவன் பொருளைத் தான் அபகரித்து விற்று விட்டு, விற்ற விலையையும் உரியவனுடைய பிள்ளைகளிடம் சேர்ப்பிக்காமல் இருப்பானேயாகில், அத்தகையவனைக் கள்வனைப் போலெண்ணித் தண்டிக்க வேண்டும்.

199. தன்னுடைமையல்லாதவற்றை ஒருவன் மற்றவர்க்குத் தானம் செய்ததாகவோ, விற்றதாகவோ, வேறு எவ்வித ஏற்பாடுகள் செய்ததாகவோ ஒரு வழக்கு வருமாயின், அப்படி அநீதியாகச் செய்த எவ்வித ஏற்பாடும், தானமும், கிரயமும் செல்லாதென்று முடிவு செய்ய வேண்டும்.

200. ஒரு பொருள் ஒருவன்பால் வந்தது எவ்விதமென்று நிரூபிக்காமல், அவனுல் அது துய்க்கப்பட்டு வரும் விஷயத்தில், அப்பொருள் உடைமையைப் பற்றிய தீர்மானங்களில் அத்தகைய அனுபோகம் பெரிதன்று. அது அவன்பால் வந்த காரணமே பெரிது.

201. திருட்டுச் சொத்தை நாலு பேரறிய விலைக்கு வாங்கியவன், நியாயமான உரிமையாளன் அப்பொருளைத் தனது உடைமையென்று கண்டுபிடித்துக் கேட்கும்போது, தனக்கு அப்பொருளை விற்றவனை, உடையவன் முன்பு கொண்டுவந்து ஒப்புவித்த பின்னர், பொருளைத் தானே

அனுபவிக்கலாம். ஏனெனில், அவன் அதற்கு நியாயமான விலை தந்து நாலு பேரறியத் திருட்டுச் சொத்தென்று அறியாமலே வாங்கியிருப்பதனால்.

202. திருட்டுச் சொத்தை ஒருவனிடம் விற்றவன், கண் காணாத் தொலைவில் சென்று விட்டாலோ, இறந்து விட்டாலோ, அப்பொருளைக் கிரயத்துக்கு வாங்கினவனை மன்னன் தண்டிக்கக் கூடாது. பொருளுக் குடையவன் அதன் கிரயத் தொகையை அப்படி வாங்கினவனுக்குக் கொடுத்து வேண்டுமானால் அப்பொருளைப் பெற்றுக் கொள்ளலாம்.

203. குங்குமத்தில் செங்கற் பொடியைக் கலப்படம் செய்தும், தாழ்ந்த பொருளை உயர்வாகச் சொல்லியும், எடை குறைத்தும், பொருளை எட்ட வைத்துக் கொண்டும், மறைத்து வைத்தும் விற்பனை செய்யக் கூடாது; செய்தால் பிறனுடைமையைத் திருட்டுத்தனமாக விற்பவனைப் போலவே இவனையும் கருதித் தண்டிக்க வேண்டும்.

204. ஒரு பெண்ணை மணம் செய்து கொடுப்பதாகக் கூறிப் பரிசமும் வாங்கிக் கொண்டு, திருமணத்தின் போது, வேறொரு பெண்ணை மாற்றிக் கொண்டு வந்து காட்டினால், முன் வாங்கிய பரிசத் தொகைக்கே அவ்விரண்டு பெண்களையும் அவ் வரனுக்கு மணம் செய்து கொடுக்க வேண்டுமென்று மநு கூறுகிறார்.

205. பித்தி, குஷ்டரோகி, சோரம் போனவள் ஆகிய குறைகளைத் திருமணத்திற்கு முன்பு அறிவிக்காமல், அப்பெண்ணைக் கொடுத்தால், அப்படிக் கொடுத்தவனைத் தண்டிக்கவும்.

206. வேள்வியை நடத்திக் கொடுக்க ஏற்றுக் கொண்ட ரிதவிக், அதை முடிக்குமுன் நோயுற்றால், அது வரை அவன் நடத்திக் கொடுத்ததற்குரிய தட்சிணையை மற்ற ரித்விக்குகளுடன் கலந்து தீர்மானித்துக் கொடுத்து விட வேண்டும்.

207. சிறிது பொருளைப் பெற்ற பின்னர், தான் ஏற்றுக் கொண்ட வேள்விக் காரியங்களிலிருந்து விலக விரும்பும் ரித்விக் ஒருவன், எஞ்சி நிற்கும் பகுதிக் காரியங்களை, வேறொரு ரித்விக்கைக் கொண்டோ, தனது கூட்டத்தில் ஒருவரைக் கொண்டோ, அதை முடித்துக் கொடுத்து, முழுமையும் தட்சிணையைப் பெற்றுக் கொள்ள வேண்டும்.

208. ஒரு வேள்விக்கு விதிக்கப்பட்ட மொத்தத் தட்சிணையை அதை நடத்தி வைக்கும் ரித்விக்குகள் சேர்ந்தோ, தனித் தனியாகத் தமக்குரியவற்றையோ வாங்கிக் கொள்ளலாம்.

209. சமுதாய தட்சிணையன்றி, விசேஷமாக வேள்வி புரிவோன் தருவனவற்றில், தேரை அத்வர்யுவும், வெண் மாவினைப் பிரம்மாவும், வெண்வாற்பரியை ஓதாவும், வண்டியை உற்காதாவும் முறையே பெறுக.

210. சமுதாய தட்சிணையில் நாற்பத்தெட்டுச் சதவிகிதம் ஓதா முதலிய முதற் குழுவினர் நால்வரும், இருபத்து நான்கு சதவிகிதத்தைப் பிரஸ்தாதாக்களான இரண்டாம் குழுவினர் தமக்கும், பதினாறு சதவிகிதத்தை ஆச்சாவாக் முதலிய மூன்றாம் குழுவினரும், தம்மில் சரிக்குச் சரியாகப் பகிர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும். மிகுந்திருக்கும் பன்னிரண்டு சதவிகிதத்தையும் கிராவா முதலிய நான்காங் கூட்டத்தினர் நால்வரும் சமமாகக் கொள்க. இப்பதினாறு பேரும் ஒரு வேள்வியின் ரித்விக்குகள்.

211. மேற்படி ஊதியம் பெறும் ரித்விக்குகளான இவர்கள் இந்த முறைப்படி தம்மில் பகிர்ந்து கொள்க. மற்றும் கொல்லத்து வேலை முதலிய கூடித் தொழில் செய்வோரும் இவ்விதமே சமமாகப் பகிர்ந்து கொள்க.

212. தரும காரியத்திற்கென்று ஒருவனிடம் ஒரு பொருளை ஒருவன் கேட்டு வாங்கி, அந்தத் தருமத்தைச் செய்யாதிருந்து விட்டால், கொடுத்தவன் தான்

கொடுத்த பொருளை மீட்டும் வாங்கிக் கொண்டு விடலாம். கொடுப்பதாக வாக்கு மட்டும் கொடுத்திருந்தால், அதை நிறைவேற்ற வேண்டியதில்லை.

213. வேள்வி முதலான நற் கருமங்களைப் புரிவதற்கென்று கூறிப் பொருளை ஒருவனிடம் வாங்கினவன், செருக்கினாலோ, பொருளாசையாலோ, அச்செயலைச் செய்யாமலேயே, செய்து முடித்து விட்டதாகப் பொய்யுரைப்பானாகில், அவன் அப்படிச் சேர்த்த பொருளையும் மேற்கொண்டு அபராதத்தையும் அவனிடம் மன்னன் வாங்குக.

214. வாக்குப்படி செய்யாத தருமங்களைப் பற்றி இதுவரை கூறப்பட்டது. இனி கூலி கொடாமையைப் பற்றிக் கூறுகிறேன்.

215. ஒரு வேலையைச் செய்வதாக ஏற்றுக் கொண்டு, தனக்கு நோயில்லாத போதும், அவ்வேலையைச் செய்யாது செருக்குற்றிருப்பானாகில், அவனுக்கு எட்டுக் குன்றிமணிப் பொன் தண்டம் விதிப்பதுடன், அவனுக்கு ஏற்பட்ட கூலியும் இல்லாதொழிவன்.

216. பிணி முதலிய தொல்லையால் காலந் தாழ்ந்தால், அவ் வேலையைப் பின்னர் செய்து முடித்துக் கூலி பெறலாம்.

217. ஏற்றுக் கொண்ட வேலையைத் தானோ, வேறொருவனைக் கொண்டோ முடித்துக் கொடுக்காதவனுக்குச் சிறுதொகையாயினும், ஏற்பட்ட கூலியைக் கொடுக்க வேண்டியதில்லை.

**உடன்பாடு, நம்பிக்கைத் துரோகம், நஷ்டஈடு**

218. இதுவரை கூலி கொடாமை பற்றிச் சொன்னேன். கட்டுப்பாட்டை மீறுவோருக்குரிய தண்டனையை இனிக் கூறப்போகிறேன்.

219. ஒரு நாடு, கிராமம் இவற்றின் வியாபாரி முதலிய கூட்டத்தினரும், அந்தணர் முதலிய குடிமக்களும்

ஒரு தேவாலயம் முதலியன பற்றிச் செய்து கொண்டிருக்கிற ஏற்பாட்டை ஒருவன் மீறினால், அவனை அவ்விடத்திலிருந்தும் அரசன் வெளியேற்ற வேண்டியது.

220. இப்படி மீறி நடப்பவனுடைய குற்றத்துக்குத் தக்கபடி நாலு பொன் அல்லது ஆறு நிஷ்கம் அல்லது நூறு வெள்ளி தண்டம் விதிக்கத் தக்கதாகும்.

221. கிராமம், சாதி, சமுதாயம் ஆகிய கட்டுப்பாடுகளை மீறுகிறவனுக்கும் இவ்வாறே மன்னன் தண்டம் விதிக்க.

222. விற்றது, வாங்கியது பற்றி ஒருவனுக்குப் பத்து நாட்களுக்குள் அப்பொருளில் சந்தேகம் ஏற்பட்டால், கொடுக்கல் வாங்கல் இரண்டையும் மீட்டுக் கொண்டு விடலாம்.

223. பத்து நாளைக்குப் பின், ஒருவன் தான் வாங்கியதைத் திரும்பிப் பெறுமாறு கொடுத்தவனையும், கொடுத்தவன் தான் முன்பு கொடுத்ததைத் திரும்பத் தருமாறு வாங்கியவனையும் வலுக் கட்டாயம் செய்தால், இவர்களுக்கு மன்னன் அறுநூறு பணம் வீதம் தண்டம் போடவும்.

224. குறையுள்ள பெண்ணை, குறை மறைத்து விவாகம் செய்து கொடுத்தால், அப்படிக் கொடுத்தவனுக்கு அரசன் தொண்ணூற்றாறு பணம் தண்டம் விதிக்க.

225. ஒரு பெண்ணை விபசாரி என்று குற்றம் சாட்டி அதை நிலைநாட்டாதவனுக்கு நூறு பணம் தண்டம்.

226. பாணிக்கிரகண முதலிய மந்திரங்கள் கன்னிப் பெண்ணுக்கு மட்டுமேயன்றி, முன்னமே ஒருவனைக் கூடிச் சுகித்தவட்கில்லை. அப்படி அவளை மணந்து கொண்டால் நற்கருமங்களில் அவள் பயன்படமாட்டாள்.

227. பாணிக்கிரகண மந்திரம் சொல்லி மணந்தால் தான் அந்த மனைவி தரும பத்தினியாவாள். அதிலும் தீவலம் செய்யும்போது, மனைவியை ஏழடி நடக்கச் செய்து,

அம்மி மிதிக்கும் மந்திரத்தைக் கணவன் கூறுவதனுல் மனைவியின் மேன்மை துலங்குவதாகும்.

228. செய்த காரியங்களில் கழிவிரக்கம் ஏற்படுமாயின், பத்து நாட்களில் அச்செயலைப் பண்டு போல் மாற்றிக் கொள்ள மன்னன் அனுமதிக்கவும்.

229. மாட்டுக் குடையவன், மேய்ப்பவன், மாடுகள் இவர்கட்குத் தப்பு நேருமாயின், செய்ய வேண்டிய தீர்மானங்களை இனிக் கூறப்போகிறேன்.

230. மேய்ப்பவன் பசுக்களைக் காலையில் மேய்ச்சலுக்கு ஓட்டிச் சென்று மாலையில் உடையவனிடம் சேர்ப்பிக்கும் வரையில் அப்பசுக்களுக்கோ, அவற்ருல் பயிருக்கோ தீங்குநேரிட்டால், மேய்ப்பவன் பொறுப்பாளியாகிருன். முன்பின் நேரிட்டால் உடையவனுக்குப் பொறுப்பாகும்.

231. பாற் கூலிக்காக மேய்ப்பவன் உடையவன் அனுமதியுடன் பத்து மாடுகளுக்கு ஒரு மாட்டைக் கறந்து கொள்வதே உரிய கூலியாகும்.

232. மந்தையிலிருந்து பிரிந்து தவறிப் போகிறதும், புழு முதலியவற்ருல் இறந்தும், செந்நாய் முதலியவற்ருல் அறையப்பட்டும், கவனக் குறைவால் சேதமுற்றும் போகிற பசுவின் நஷ்டத்தை மேய்ப்பவன் உடையவனுக்குக் கொடுக்க வேண்டும்.

233. ஆநிரை மறித்துக் கள்வர் கூட்டமாக வந்து அபகரித்தால், அதனை மேய்ப்பவன் கொடுக்க வேண்டியதில்லை. அப்படிப் பறிபோன இடத்தையும் நேரத்தையும் உடையவனுக்கு உடனே தெரிவித்துவிட வேண்டும்.

234. காடு முதலான இடங்களில் பசுக்கள் தாமாகவே இறந்து பட்டால், அவற்றின் காது, தோல், வால், மயிர், கோரோசனம் இவற்றை அடையாளமாகக் கொண்டு வந்து உடையவனுக்குக் காட்ட வேண்டும்.

235. மேய்ப்பவன் கவனக்குறையால் ஆட்டுக் கிடையைச் செந்நாய் முதலியவை புகுந்து கொன்றால், அக்குற்றம் மேய்ப்பவனைச் சாரும்.

236. கிடை கலைந்து மேயும்போது கொன்றால், அந்தக் குற்றம் மேய்ப்பவனைச் சாராது.

237. கிராமத்தைச் சுற்றிலும் நானூறு முழப் பரப்புக்கு மந்தை வெளி ஏற்படுத்த வேண்டும். அல்லது வலிமையுடையவனால் சுழற்றி விடப்பட்ட மூன்று கோல்முறை வரையிலாவது ஏற்படுத்த வேண்டும். பட்டணமாயின் நான்கு மடங்கு பரப்பு அமைக்க வேண்டும்.

238. அந்த மந்தை வெளிக்குள் வேலி கட்டாமலிருக்கும் பயிரை மாடு மேய விட்டால், மேய்ப்பவனுக்கு மன்னன் தண்டம் விதிக்கக் கூடாது.

239. அவ்விடத்தில் உள்ள பயிருக்கு ஒட்டகக் கண்ணுக்குத் தெரியாமல் வேலிகட்டி, நாய் பன்றி முதலியன நுழையாமல் சந்து பதிய வேண்டும்.

240. பாதை, ஊர் ஓரங்களில் உள்ள பயிர், வேலி கட்டிய பயிர் இவற்றை மாடு மேய்ந்து விட்டால், மேய்ப்பவனுக்கு நூறு பணம் தண்டம். மேய்ப்பவனில்லாவிட்டால், பயிர்க்காரன் அந்த மாட்டைப் பிடித்துக் கட்டவும்.

241. மற்றவிடங்களில் மேய்ந்தால், மேய்ப்பவனுக்கு ஒன்றே கால் பணம் தண்டம். எல்லா விஷயங்களிலும் ஏற்படுகின்ற பயிர் நஷ்டத்தை மேய்ப்பவனோ, மாட்டின் சொந்தக்காரனோ கொடுக்க வேண்டியது.

242. ஈன்று பத்து நாளாகாத பசு, கோயில் மாடு, சூடுபோட்ட பசு, பொலிகாளை, எருது இவை மேய்ந்தால், மேய்ப்பவன் இருப்பினும் இல்லாவிடினும், தண்டம் கிடையாது.

243. பயிரிட்டவன் தானே மாட்டை விட்டுப் பயிரழித்தாலும், தக்க காலத்தில் விதைக்காவிடினும்,

தீர்வையை அவனிடம் பத்துப் பங்கு அதிகமாகவாங்க வேண்டும். உடையவனறியாமல் வேலைக்காரரால் இவ் விதக் குற்றம் ஏற்பட்டால், ஐந்து பங்குத் தண்டத் தீர்வை.

244. நீதியறிந்த மன்னன் உடையவன், மேய்ப்பவன், மாடுகளின் குற்றத்தில் இவ்வாறு தண்டிக்க.

## நிலத் தகராறு

245. இரண்டு கிராமங்களிடையே எல்லைத் தகராறு வந்தால், சேறு தண்ணீர் இல்லாத ஆனிமாதத்தில், கண்ணுக்குத் தெரிகிற வரப்பு முதலிய அடையாளங்களால் இரு தரப்புக்கும் நஷ்டமில்லாமல் எல்லையை மன்னன் வகுக்கவும்.

246. எல்லைக் கோட்டில் ஆல், அரசு, முருங்கை, அத்தி, இலவு, அசோகு, பனை, பாலை மரங்களை அடையாளமாக ஏற்படுத்தவும்.

247. மூங்கிற் கொடி, வன்னிக் கொடி, மேடைகள், கொறுக்கை, நாணல், முட்புதர் இவற்றை எல்லையில் அமைத்தால் எல்லை அழியாமலிருக்கும்.

248. எல்லை நடுவில் குளம், கிணறு, துரவு, கால்வாய், கோயில் இவற்றை அமைக்கவும்.

249. அடிக்கடி மாந்தரிடை ஏற்படும் எல்லைத் தகராறுகளை எண்ணி, மறைவான சில அடையாளங்களையும் மன்னன் ஏற்படுத்த வேண்டும்.

250. கல், என்பு, பசுவின் வால் மயிர், உமி, சாம்பர், மண்டையோடு, காட்டெரு முட்டை, வெந்த செங்கல், கரி, பருமணல்,

251. காலத்தால் பூமியிற் கிடந்தும் அழிந்து படாத தான இவ்வகையைச் சேர்ந்த பஞ்சு முதலியவற்றைக் குடத்திலிட்டு எல்லையில் அடையாளமாகப் புதைக்கவும்.

252. எல்லை வழக்குகளில் இவ்வித அடையாளங்களா லும், முன் னனுபோகத்தாலும், பாய்ச்சலாலும் எல்லையை மன்னன் முடிவு செய்ய வேண்டும்.

253. அகப் புறச் சான்றுகளால் நகராறு தீராவிடில், சாட்சிகளின் சத்திய வசனத்தால் தீர்மானிக்கவும்.

254. இரு தரப்பார், ஊரார், கிராமத் தலைவர் இவர் களின் முன்னிலையில் எல்லையைக் குறித்துச் சாட்சியம் கேட்க வேண்டியது.

255. சாட்சியங்களைக் கொண்டு எல்லையை நிச்சயித்து அந்த ஏற்பாட்டையும் சாட்சியங்களையும் பத்திரத்தில் எழுதி வாங்க வேண்டியது.

256. சிவந்த ஆடை, செம்மலர் மாலையுடன், சாட்சி கள் தங்கள் தலையில் மண்கட்டியை வைத்துக் கொண்டு, "நாங்கள் பொய் சொன்னால் எங்கள் புண்ணியம் உதவா மற் போகட்டும்!" என்று சத்தியம் உரைத்து, உண்மை யைக் கூற வேண்டும்.

257. அவர்கள் மெய்ம்மை கூறினால், தூயவரா கின்றனர். பொய் கூறியதாக ஏற்பட்டால், தனித்தனி யாக இருநூறு பணம் தண்டம் விதிக்க.

258. சான்றினர் இல்லாவிடில், பக்கத்து நான்கு கிராமத்தார் மன்னர் முன்பாகச் சத்தியம் செய்து எல்லை வகுக்க.

259. சான்றினர், பக்கத்துக் கிராமத்தார் இவர் களாலும் முடிவு ஏற்படாவிடின், பரம்பரையாக அருகுள்ள வனவாசிகளைக் கேட்டு அறிய வேண்டியது.

260. வேடர், வலைக்காரரர், இடையர், வலைஞர், வில்லி, பாம்பாட்டி, சிந்திய நெல்லைப் பொறுக்கிப் பிழைப் போர், மற்றும் இவர் போன்றோரைக் கேட்கலாம். அடிக்கடி அக்கிராமத்தின் வழியாய்ப் போகிறவர்களாத லால் எல்லையை அவர்கள் அறிந்திருப்பார்கள்.

261. இவர்களின் அடையாளப்படி இரண்டுகிராமங்களின் நடு வெல்லையை நந்தமாய் அமைக்கவும்.

262. ஒருருக்குள் வயல், கிணறு, குளம், மலர்ச்சோலை, வீடு இவற்றின் எல்லைத் தகராறுகள் வருமாயின், அக்கம் பக்கத்துச் சாட்சிகளின் சத்தியத்தைக் கொண்டு முடிவு செய்யவும். வனவாசிகள் இதற்குதவ மாட்டார்கள்.

263. எல்லை விஷயத்தில் பக்கத்துக் கிராமத்தார் பொய்யுரைத்தால், தனித்தனி அவர்க்கு ஐந்நூறு பணம் தண்டம் விதிக்க.

264. ஒருவனுடைய வயல், தோட்டம், வீடுஇவற்றை அவனை அடித்து மிரட்டி மற்றவன் பறித்துக்கொண்டால், அவனுக்கு ஐந்நூறு பணமும், ஒருவன் அறியாமல் அவனுடைமையைப் பறித்துக் கொண்டவனுக்கு இருநூறு பணமும் தண்டம்.

265. சான்றினரில்லாமல் ஏற்படும் எல்லைத் தகராறுகளில் எல்லையால் மிகவும் பயனடைகிற கிராமத்துக்கு உதவியாக அதைச் செய்க. இது அறநூல் வகுத்த வழி.

## மான நஷ்ட வழக்குகள்

266. எல்லைத் தகராறு விஷயமான நியாயம் இதுவரை கூறப்பட்டது. இனி வன்சொற் கூறுவோனை ஒறுத்தல் கூறப் போகிறேன்.

267. அந்தணனை அநீதமாக வசை மொழியும் க்ஷத்திரியனுக்கு நூறு பணமும், வைசியனுக்கு இருநூறு பணமும் அபராதம் விதித்து, மற்ற வருணத்தானாயின் அவனுக்கு அடிகளையும் தண்டனை யாக்குக.

268. க்ஷத்திரியனை அந்தணன் அநியாயமாகத் திட்டினால் ஐம்பது பணத்தையும், வைசியனைத் திட்டினால், இருபத்தைந்து பணத்தையும், மற்றையோனைத்திட்டினால்

பன்னிரண்டு பணத்தையும் அந்தணனுக்கு அபராதம் போடவும்.

269. துவிஜர்கள் தம்மினத்தாரை ஒருவருக்கொருவர் திட்டிக் கொண்டால் பன்னிரண்டு பணத்தையும், கூசுகின்ற இழிசொற் கூறினால் இருபத்து நான்கு பணமும் தண்டயாக விதிக்க.

270. நாலாம் வருணத்தினன் துவிஜர்களைக்கொடுமையாக வைதால், தாழ்விடமான காலிற் றேன்றிய அவனுடைய நாவை யறுக்க.

271. துவிஜர்களின் குலம் முதலானவற்றைக் கூறி இழித்துரைத்தால் அவன் வாயில் பத்தங்குலமுள்ள எஃகுக் கம்பியைப் பழுக்கக் காய்ச்சி இடுக.

272. அகந்தையினல் அந்தணனை 'இதனைச் செய்' யென்று கட்டளையிடும் நாலாம் வருணத்தினன் வாயிலும் காதிலும் காய்ச்சிய எண்ணெய் இடுக.

273. ஒருவனை விளித்து, "நீ நீதி சாத்திரம் கற்றிராதவன், மேலான நாட்டில் பிறந்தவனுமல்ல, நற்குடிப் பிறப்பும் உனக்கில்லை," என்று இவ்விதமெல்லாம் அநியாயமாக வசை கூறுகிற துவிஜனுக்கு இருநூறு பணம் அபராதம் விதிக்கவும்.

274. ஒரு கண் குருடானவன், கால் நொண்டி, கை முடவன், இவர்களின் அங்கஹீனத்தைக் குறிப்பிட்டு அவமானப்படுத்துகிறவர்களுக்குச் சொற்ப அபராதமான காருடா பணம் தண்டம் விதிக்கவும்.

275. தாய், தந்தை, மனைவி, உடன்பிறந்தான், பிள்ளை, குரு இவர்களுக்கு ஒரு குறைவைக் கூறித் திட்டுகிறவனுக்கும், அல்லது இவர்களை ஒருவர்க்கொருவர் ஆகாமல் கலகம் விளைவிப்பவனுக்கும், குரு வருகையில், அவருக்கு வழி விட்டு ஒதுங்காதவனுக்கும் நூறு பணம் அபராதம் விதிக்கவும்.

276. அந்தணனும் க்ஷத்திரியனும் ஒருவருக்கொருவர் வசை மொழிந்து கொண்டால், அறநெறி வழுவாத மன்னன் அந்த அந்தணனுக்கு இருநூற்றைம்பது பணமும், க்ஷத்திரியனுக்கு ஐந்நூறு பணமும் அபராதம் விதிக்க.

277. வைசியனும் மற்றவனும் இப்படி ஒருவரையொருவர் திட்டிக் கொண்டால், வைசியனுக்கு இருநூற்றைம்பது பணமும், மற்றவனுக்குக் காயமில்லாமல் ஐந்நூறு பணமும் அபராதம் விதிக்க.

278. வசை மொழிதலுக்கு இதுகாறும் தண்டனை கூறப்பட்டது. இனி ஒருவரையொருவர் அடிப்பது பற்றிய தண்டனைகள் கூறுவேன்.

### அடிதடி கலவரம்

279. நாலாமவன் த்விஜர்களை அவர்களின் மீது எந்த இடத்தில் படும்படியேனும், கையினாலாவது, கருவிகளினாலாவது அடிக்கிறானோ, அடிப்பவனுடைய அந்தந்த அவயவங்களைக் குறைப்பதே தண்டனை என்று மநுப்ரஜாபதி கூறியுள்ளார்.

280. சினத்தினால் கையோங்கியோ, தடியெடுத்தோ ஒருவனை அடித்தால், அடித்தவன் கையையும், உதைத்த காலையும் வெட்ட வேண்டியது.

281. அந்தணனுடன் அவனுக்குரிய உயர்ந்த ஆதனத்தில் அகங்கரித்துச் சமதையாக அமர்ந்த நாலாம் வருணத்தனை, அவனது உயிர்க்கு ஊறு நேராத வகையில், இடுப்பிற் சூடு போட்டோ, உட்கார்ந்த உறுப்பிற் சிறிது சேதப் படுத்தியோ, ஊரை விட்டு ஓட்ட வேண்டியது.

282. அகங்காரத்தால் அந்தணனைப் பார்த்துக் காறியுமிழ்ந்தால் உதடுகளையும், அவன் மேற் சிறுநீர் பெய்து அவமானம் செய்தால் அக் குறியையும், மலத்தை மேலே வீசினால் ஆசன பாகத்தையும் சேதப்படுத்த வேண்டியது.

283. குடுமி, தாடி, மீசை, கழுத்து, குறி இவற்றைப் பற்றி இழுத்தால் அவனுடைய கரங்களைத் துண்டிக்க வேண்டியது.

284. யாவரேயாயினும், யாரொருவரையும் சதை புரளும்படியோ, ரத்தம் தெறிக்கும்படியோ அடிப்பவனுக்கு நூறு பணமும், தசை தெறிக்க அடித்தவனுக்கு ஆறு நிஷ்கமும், தண்டமாக விதித்து என்பு நொறுங்கச் செய்தவனை நாட்டைவிட்டு ஓட்டவும்.

285. மரம், கொடி முதலியவற்றை அழிப்பவனுக்கு, அவ்வழியினால் விளைந்த சேதத்திற்கு ஏற்றவாறு ஆயிரம் பணம் வரை தண்டம் விதிக்கவும்.

286. மனிதரையும் பசுவையும் துன்புற வடித்தால், ஏற்றபடி முன் மூன்றாவது சுலோகத்திற் குறித்தவாறு, குறைவாகவேனும், அதிகமாகவேனும், தண்டம் விதிக்கவும்.

287. உடம்பிற் காயம்படவோ, ரத்தம் பெருகவோ அடித்துத் துன்பிழைத்தவனிடத்தில், பாதிக்கப்பட்டவன், குணமடையும் வரையில் அதற்குண்டான மருத்துவம் உணவுச் செலவுகளுக்கு ஈடு வாங்கிக் கொடுத்து, விதிப்படி குற்றவாளியிடம் அபராதமும் வாங்குக.

288. ஒருவனுடைய பொன்னணி, செம்புப் பாத்திரங்கள் முதலிய உடைமைகளை, யாருடையதென்று அறிந்தோ அறியாமலோ, கெட்டுப் போக்குகிறவன், உரியவனுக்கு அப் பொருளையும், மன்னனுக்குத் தண்டமும் கொடுக்க வேண்டும்.

289. ஒருவனுடையனவான தோல் வகைகளும், அவற்றால் செய்த கவச முதலியனவும், மரம், மண் இவற்றால் ஆன பண்டங்களையும், மலர், கிழங்கு, கனி இவற்றையும் கெட்டுப் போக்கினால், உடையவனுக்கு அதன் மதிப்புத் தொகையையும், மன்னனுக்கு அதற்கு ஐந்து பங்கு தண்டமும் கொடுக்க.

290. தேர் முதலிய ஊர்திகள், பாகர், ஊர்தியாளன் இவர்களால் ஏற்படும் பொருள், உயிர்ச் சேதங்களில் பத்து விதி விலக்குகள் தவிர்த்த சந்தர்ப்பங்கள் அனைத்திலும் தண்டனை யுண்டு.

291. விதி விலக்குகள் பத்தும் இவையாகும் :—

மூக்கணாங்கயிறு அறுந்தேனும், நுகத்தடி ஒடிந்தேனும், குடை கவிழ்ந்தும், எதிர் வண்டி வந்து மோதியும், சக்கர அச்சு, பழு இவை ஒடிந்தும்,

292. சீனி, சேணம், வார் அறுந்தும், கடிவாளம் பூட்டாங் கயிறு கழன்றும், சாட்டைக்கோல் ஒடிந்தும், 'வில' கென்று பாகன் உரைத்தும் விலகாமையானும், மனிதர்க்கோ, பொருளுக்கோ, சேதம் நேர்ந்தால், அதற்காகத் தண்டிக்கக் கூடாதென்று மநு கூறுகிறார்.

293. மூடத்தனத்தால் வண்டியைத் திருப்பி,அதனால் பொருள், உயிர்ச் சேதம் ஏற்படுமானல், அத்தகைய திறமிலியை வேலைக்கு வைத்துக் கொண்டதற்காக எஜமானனுக்கு இருநூறு பணம் தண்டம் விதிக்க.

294. தன் பிழையை உணரக்கூடிய சாரதி, தன் செயலால்எஜமானனுக்கு நேர்ந்த இருநூறு பணம் தண்டத்தை அவனே செலுத்தவும். மூடனாக இருந்தால், எஜமான் செலுத்தவும். எஜமானன் கொடுத்தது தவிர்த்து, சாரதியும், அதில் இவர்ந்து சென்றவனும், தனித்தனி நூறு பணம் தண்டம் இறுக்கவும்.

295. எதிரில் வண்டியோ, மாடுகளோ வருவதையறிந்தும், தன் வண்டியை நிறுத்தாமல் ஓட்டி உயிர்ச் சேதம் உண்டாக்குவோனுக்கு யோசியாமல் தண்டம் விதிக்க.

296. பாகனால் மனிதருக்குத் துன்பம் விளைந்தால், ஆயிரம் பணமும், பசு, ஒட்டை, யானை, குதிரை இவற்றிற்குச் சேதம் நேரிடின், ஐந்நூறு பணமும் தண்டம் விதிக்க.

297. பிற பிராணிகளைத் துன்புறுத்தும் மிருகங்களைத் துன்புறுத்திஞல் இரு நூறு பணமும், மான் முதலியவற்றை யும், கிளி, அன்னம், சாரசம் முதலியவற்றையும் துன்புறுத்திஞல் ஐம்பது பணமும் தண்டம் விதிக்க.

298. கழுதை, வெள்ளாடு, செம்மறியாடு இவற்றிற்குத் துன்பம் உண்டாக்கிஞல், ஒரு வெள்ளி மாடம் தண்டம் விதிக்க.

299. மனைவி, பிள்ளை, ஏவலாளன், சீடன், தம்பி இவர்கள் குற்றம் புரிந்தால், கயிறு பிரம்பு இவற்ருல் அடிக்கவும்.

300. உடம்பின் பின்புறம்தான் அடிக்க வேண்டுமே யன்றித் தலையில் அடிக்கக் கூடாது. இதனை மீறிச் செய் வோன் திருட்டுக் குற்றம் புரிந்தோஞகிருன்.

301. குற்றங்களுக்குரிய தண்டனைகளை இதுகாறும் கூறினேன். இனி திருட்டுக் குரியவற்றைக் கூறுகிறேன்.

## களவு

302. கள்வரைக் கண்டறிந்து அடக்குவதில் திறனுள்ள மன்னனுக்குப் புகழும் நாடும் பெருகும்.

303. அச்சத்தைப் போக்கி ஆளும் மன்னன் எஞ் ஞான்றும் போற்றற்குரியவன். ஏனெனில், அச்சந்தவிர்த் தாண்டு கொள்ளலையே தனது பயஞகவுடைய குடியாட்சி யாகிற வேள்வி அவ்வரசனிடம் சதா வளர்கின்றதன்ருே!

304. மக்களை நன்கு புரக்கும் நாட்டில், குடிமக்களின் புண்ணியத்தில் ஆறிலொரு பங்கும், இல்லாவிடில் அவர் களின் தீவினைப் பயனில் ஆறில் ஒரு பங்கும் மன்னனைச் சாரும்.

305. செங்கோல் மன்னன் நாட்டில் நடைபெறு கின்ற வேத மோதுதல், வேள்வி முயலல், கொடை

வழங்கல், தெய்வம் பேணல் இவற்றின் நற்பயனிலும் ஆறிலொரு பங்கு மன்னர்க் குரியதாகின்றது.

306. அறநெறிப்படியே அனைவரையும் காத்தும், தீயோரை ஒறுத்தும் ஆளும் அரசன், லக்ஷம் வராகனைத் தட்சிணையாகக் கொடுத்தியற்றும் புண்ணிய வேள்வியை அன்றாடமும் செய்த நற்பயனுக் குரியவனாகிறான்.

307. விளைபொருள் தீர்வை, ரொக்கத் தீர்வை, ஆயத் தீர்வை, அன்றாடம் பெறுகின்ற கடைத் தீர்வை, தண்டப் பொருள் முதலியவற்றை மட்டும் வாங்கிக் கொண்டு, மக்களைக் காப்பாற்றாமல் இருக்கின்ற மன்னன் விரைவில் இறந்து நரகமும் சேர்வான்.

308. நாட்டை நன்கு புரக்காமல் தீர்வைகளை மட்டும் கறந்துகொள்ளும் மன்னன் தன் நாட்டு மக்களின் பாவங்களை யெல்லாம் தானே அடைகிறான் என்று பெரியோர் கூறுகின்றனர்.

309. அறநூல் கட்டளைகளைப் புறக்கணித்தும், இறையுண்மையை இகழ்ந்தும், வஞ்சகனாகியும், காவற் கடமையைச் செய்யாமல் தீர்வை மட்டும் பெறுகிறவனாயும் இருக்கின்ற மன்னன் பெரும் பள்ளத்தில் வீழ்வான் என்று அறிக.

310. திருடன் முதலான மறச் செயல் புரிவோரைச் சிறையிடல், விலங்கிடல், கைகால் வாங்குதல் ஆகியவற்றால் ஏற்றபடி தண்டித்து அவர்களை அடக்க வேண்டும்.

311. வழக்கில் தோல்வியுற்றதனால் மன்னனைக் காய்வோர் சிறியர், பெரியோர், பிணியாளர் எனினும், அவர்களின் தீ மொழிகளைப் பொறுத்தல் மேன்மையை நாடும் மன்னர் கடன்.

312. துன்பத்தால் நொந்து வசை மொழிவோரைப் பொறுக்கும் மன்னன் வானுலகத்தில் இன்பம் பெறுவான்.

தனது செல்வ, அதிகார மமதையினால் பொறுமையிழப் பானாயின் நரகமே யடைவான்.

313. அந்தணனுடைய பொன்னைக் கவர்ந்தவன் தன் குற்றம் உணரப் பெற்றால், தலைவிரி கோலமாய் மன்ன னிடம் ஓடித் தன்னைத் தண்டிக்குமாறு குறையிரக்க வேண்டும்.

314. அப்படி மன்னன் திருமுன் தன்னை ஒப்புவிக்கும் போது தோளில் உலக்கை அல்லது கருங்காலித் தடி அல்லது இரு முனையும் கூரான கத்தி, இரும்புத் தடி இவற்றில் யாதானு மொன்றை ஏந்திச் செல்ல வேண்டி யது.

315. அரசன் அவனை உயிர் ஒறுத்தாலும், பிழைத்துப் போக விட்டாலும், திருடன் பாவம் போய்விடும். தண்டியாமலே விட்டு விட்டால் திருட்டுப் பாவம் மன்னனையே வந்தடையும்.

316. குழந்தையைக் கொன்றவன் பாவம், அக் கொலைஞனின் சோற்றைத் தின்பவனையும், விபசாரியின் பாவம் அவளைப் பொறுக்கும் கணவனையும், சீடன் பாவம் குருவையும், வேள்வி செய்கிறவன் பாவம் அதை இயற்றி வைக்கும் புரோகிதனையும், கள்வனின் பாவம் அந்நாட்டு மன்னனையும் சாரும்.

317. பாவிகள் மன்னனால் தண்டனை பெற்றால் பாவம் நீங்கிப் பெரியோர்களைப் போல் விண்ணுலகம் அடை கின்றனர்.

318. கிணற்றங் கரையில் விட்ட தாம்புக் கயிறு, குடம் இவற்றைக் களவாடுவோன், தண்ணீர்ப் பந்தலைக் குலைப்போன், இவர்களால் உண்டான நஷ்டத்தை அவர் களிடம் வாங்குவதுடன், ஒரு பொன் மாடம் வீதம் அபராதமும் போடவும்.

319. பத்துக் கும்பத்துக்கு (இருபது துரோணம் அள வுடையது) மேலாகத் தானியம் திருடுகிறவனுக்கு மரண தண்டனையோ, உறுப்புக்களை வெட்டுவதோ, குற்றத்தின்

அளவைப் பொறுத்துச் செய்க. ஒரு துரோணம் முதல் பத்துக் கும்பம் வரையில் திருட்டுக்கு அப்பொருளுக்குப் பதினேரு பங்கு தண்டம் விதித்து, உடையவனுக்குத் திருடு போன பொருளையும் வாங்கிக் கொடுக்க.

320. தராசில் நிறுக்கத்தக்க தங்கம், வெள்ளி,பட்டாடைகளை நூறு பலத்திற்கு மேல் திருடியவனுக்கு மரணம் வரையில் குற்றத்தின் அளவுக்குத் தக்கபடி தண்டிக்கவும்.

321. இவற்றில் ஐம்பது முதல் நூறு பலத்துக்குட்பட்ட பொருளைத் திருடினல் கைகளைக் குறைத்தலே தண்டனை. அதற்குக் குறைந்த திருட்டுக்கு,பொருளின் மதிப்பைவிட பதினேரு பங்கு அதிக அபராதம் வாங்குக.

322. நாற்குலத்து முதித்த ஆடவர், கற்பினரான மாதர், மேலான இரத்தினங்கள் ஆகியோரைக் கடத்திச் செல்வோருக்கு மரண தண்டனை.

323 யானை, எருமை முதலிய பெரிய பிராணிகள், கத்தி ஆயுதம், மருந்து இவற்றைப் பறித்தவனுக்கு, அவனுடைய வறுமையையும், குற்றத்திற்கு அது எவ்வளவு தூரம் காரணமாக இருந்த தென்பதையும் அறிந்து, தக்க தண்டம் விதிக்க.

324. அந்தணர் பசுக்களைக் கொண்டு சென்றவன், சுமை தூக்கும் பொருட்டாக மலட்டுப் பசுக்களுக்கு மூக்குக் குத்தினவன், யாகப் பசுவாகிய எந்தப்பிராணியையும் திருடிக் கொண்டவன் இவர்களுடைய முழங்காலைத் தறிப்பது தண்டனையாகும்.

325. பட்டு நூல், பஞ்சு, கஞ்சா, சாணி, வெல்லம். தயிர், பால், மோர், தண்ணீர், புல் இவற்றைத் திருடியவனுக்கும்,

326. மூங்கில், தோல் இவற்ருல் செய்யப்பட்ட முகக்கும் படி முதலான பாத்திரங்கள், உப்பு, மட்பாண்டம், மண், சாம்பர் இவற்றைப் பறித்தவனுக்கும்,

327. மீன் வகைகள், பறவை யினங்கள், நல்லெண்ணெய், நெய், புலால், தேன், வெண்ணெய், மான் கொம்பு, தோல் வகைகள் இவற்றைக் களவாடியவனுக்கும்,

328. மற்றும் இவை போன்ற பொருட்கள், மது, சோறு, இதர சமைத்த பதார்த்தங்கள் இவற்றை அபகரித்தவனுக்கும், அந்தந்தப் பொருள் மதிப்பின் இரண்டு பங்கு தண்டம் விதிக்கவேண்டும்.

329. மலர், வயலில் விளைந்திருக்கும் தானியம், புதர், மரம், வேலி கட்டப்படாத பெருமரம் இவற்றின் கனிகளையும் திருடியவனுக்கு ஐந்து பொன் குன்றியையேனும், வெள்ளிக் குன்றி ஐந்தினையேனும் தண்டம் விதிக்க.

330. வேலி கடந்து, தானியம், கறி, பழம், களத்து நெல் இவற்றைக் களவு செய்தால், அப்படிச் செய்தவன் உடைமையாளனுக்கு அன்னியனாயின், நூறு பணமும், சம்பந்தப்பட்டவனாயின் ஐம்பது பணமும் தண்டம் விதிக்க.

331. ஒருவன் பொருளை அவன் பார்த்திருக்கும் போதே வலிமையினால் கவர்ந்து கொண்டாலும், ஒருவன் இல்லாத போது திருடிக் கொண்டதையும், திருடியதில்லை என்று சாதிப்பதையும் களவு என்றே கூறியிருக்கிறார்கள். வன்திருட்டுக்கு, வன்செயலுக்குரிய தண்டம் விதிக்க.

332. நுய்ப்பதற்கென்று ஒருவன் தேடி வைத்துள்ள மேற்சொன்ன பட்டு நூல் முதலான செல்வங்களைத் திருடினவனுக்கும், வைதிகாக்னியைத் திருடிக் கொண்டவனுக்கும் இருநூற்றைம்பது பணம் தண்டம். வைதிகாக்னியைத் திருடினவன் உடையவனுடைய நஷ்டத்தையும் கொடுக்க.

333. மனிதரை அடித்த திருடனை, மீட்டும் அவன் அவ்விதம் செய்யாமலிருக்கும் பொருட்டாக, அவன் பிறருடைய எந்த உறுப்பை அடித்தானோ அவனுடைய அதே உறுப்பை வெட்டித் தண்டிக்கவும்.

334. தந்தை, ஆசிரியன், நண்பன், தாய், மனைவி, பிள்ளை, புரோகிதன் இவர்களாயினும், அவரவர்க்குரிய அறங்களைச் செய்யாமல் புறக்கணிப்பராயின், அவர்களைத் தண்டிக்காமல் அரசன் விடக்கூடாது.

335. ஏனையோருக்குக் காருடா பணம் தண்டம் விதிக்கத் தக்கதாகக் கூறப்பட்ட குற்றங்களை மன்னனே செய்வானாகில் அவனுக்கு ஆயிரம் பணம் தண்டம் விதிக்க வேண்டியது.

336. திருட்டின் தன்மையை அறிந்து அவற்றிற்கு விதிக்கப்பட்ட தண்டங்களை, திருடன் நான்காம் வருணத்தனாயின் எண் மடங்காக்கியும், வைசியனுக்குப் பதினாறு மடங்காகவும், க்ஷத்திரியனுக்கு முப்பத்திரண்டு மடங்காகவும் விதிக்கவும்.

337. திருட்டுக் குற்றவாளி அந்தணனாயின் தண்டத்தை அறுபத்து நான்கு மடங்கு அதிகமாக்க வேண்டும். ஏனெனில், திருட்டினால் வரும் குற்றத்தை அந்தணன் நன்கு அறிந்தவனல்லவா?

338. வேலியில்லாத அத்தி, ஆல் முதலியவற்றின் கனிகள், கிழங்கு, சமித்து, புல் இவற்றை அயலான் மண்ணிலிருந்து கேளாமல் எடுத்துக் கொண்டாலும், அதனைத் திருட்டென்று கொள்ளலாகாது என்று மநு கூறியிருப்பதால், அதற்குத் தண்டிக்கக் கூடாது.

339. ஒருவன் பொருளை அவன் விரும்பிக் கொடாமல் தானே எடுத்துக் கொண்டுவிடும் திருடனுக்கு யாகாதி யக்ஞங்களைச் செய்வித்தும், அந்தப் பொருளைத் தட்சிணை யாகப் பெற்றும் கொள்கிற அந்தணனும் அந்தத் திருடனுக்குச் சரியானவன்.

340. பிழைப்புக்கு வழியில்லாதவனாயும், வழிப் போக்கனாயு மிருக்கின்ற துவிஜன் அயலானிடமிருந்து,

இரண்டு கருப்பங்கழிகளையும், இரண்டு கிழங்கையும் அவனைக் கேளாமல் எடுத்துக் கொண்டால், அவனைத் தண்டிக்கக் கூடாது.

341. தொழுவத்து மாடு, குதிரை இவற்றை அவிழ்த்து விடுகிறவன், அவிழ்த்து விடப்பட்டவற்றைப் பிடித்துக் கட்டி வைத்துக் கொள்பவன், வேலைக்காரன் குதிரை, தேர் இவற்றை அபகரிப்பவன் இவர்களுக்கு, அங்கங்களைக் குறைப்பதும், அப்பொருளைப் பறித்தலும் தண்டமாகும்.

342. இவ்வாறு கள்வரைத் தண்டனை செய்யும் மன்னன் இவ்வுலகில் புகழும் மறுமையில் இணையற்ற பேரின்பமும் பெறுகிறான்.

343. எண்ணற்ற செல்வம், குறைவற்ற புகழ் இவற்றை நாடும் அரசன் வன்செயலை ஒறுக்காமல் சற்றும் கண்ணோட்டமாயிருத்தல் கூடாது.

### பலாத்காரம், கலப்படம் கூடாவொழுக்கம்

344. வசை மொழிவோன், திருடன், அடிப்பவன் இவர்களைக் காட்டினும் வன்செயலோன் பெரும் பாவி.

345. வன்செயலைப் பொறுக்கும் மன்னன், தானழிந்து போவதுடன், உலகத்தாரின் பகைக்கும் ஆளாகிறான்.

346. தனக்கு வேண்டியவர்களின் பேச்சைக் கேட்டு, அல்லது பெரும் பொருள் வரவில் இச்சையுற்று, அனைவருக்கும் அச்சம் தரும் வன்செயலை ஒறுக்காமல் விடக் கூடாது.

347. வன்செயலரால் அறம் அழிவுறும்போதும், மன்னனில்லாமையால் நால்வருண மழியும்போதும், முதல் மூவருணத்தாரும் ஆயுதமேந்திக் காக்கலாம்.

348. தனதுயிரைக் காக்கும் பொருட்டும், வேள்விக் காப்பில் இருப்பவனைக் காக்கவும், தனது பொருள் கொள்ளை போகும்போதும், பெண்டிர், அந்தணர் இவரைக்

காப்பாற்றவும் நியாயமாய்த் தரும யுத்தம் செய்து ஒருவனை கொன்றவனுக்கு அதர்மம் வராது.

349. குரு, சிறுவன், வயோதிகன், வேதபாரங்கதன் இவர்கள் ஆயுதமேந்தித் தன்னைக் கொல்ல வருவார்களாயின், தான் ஓடித் தப்பிக்க முடியாத நிலையில், அவர்களை யோசிக்காமல் கொல்ல வேண்டியது.

350. ஒருவன் தன்னைக் கொல்ல வரும்போது, அதனால் சினம் மூண்டு ஒருவன், பத்துப் பேரறியவோ, யாருமறியாமலோ வந்தவனைக் கொன்றால் குற்றமில்லை; அதற்குத் தண்டனை விதிக்கவும் கூடாது.

351. பிறன்மனை விரும்புவோரை, அவர்கட்கு அச்சம் உண்டு பண்ணும் பொருட்டு, உதடு, மூக்கு முதலியன கொய்து அடையாளம் செய்து, அரசன் ஊரைவிட்டு ஓட்டுக.

352. பிறன் மனையைச் சேர்வதால் உலகில் வருணக் கலப்பு உண்டாகிறது. அதனால் தரும காரியங்கள் நடவாமல் உலகில் மழையின்றி நாசமடைகிறது.

353. ஒரு பெண் விஷயத்தில் ஐயுறப் பெற்றவன் மேலும் அவளுடன் தனித்துக் காரணமின்றிப் பேசினால், அவனுக்கு இருநூற்றைம்பது பணம் தண்டம் விதிக்க.

354. அப்படி முன்னர் எப்போதும் ஐயுறப்படாதவன் யாதாமொரு காரியம்பற்றிப் பிறன் மனையுடன் பேசினால், பிழையுமில்லை, தண்டனையுமில்லை.

355. எனினும் அவன் பிறன் மனையாளுடன் 'குளத் தங்கரை, நடமாட்டமில்லாத காடு, தோப்பு, ஆற்றங் கரை இவ்விடங்களில் பேசினால் அவனுக்கு ஆயிரம் பணம் தண்டம் விதிக்க.

356. பிறன் மனைவிக்குச், சந்தனம் முதலிய நறும் பொருள் அனுப்புதல், அவளைக் கட்டியணைத்து விளை

யாடுதல், அவளது ஆடையணிகளைத் தீண்டுதல், ஒரே படுக்கையில் அமர்தல் இவையும்,

357. தொடக்கூடாத அவளது ஸ்தன முதலியவற்றைத் தொடல், தனது மர்ம ஸ்தானத்தை அவள் தொட்டால் அதைப் பொறுத்தல், இருவரும் குறிப்புச் சொல்லிக் கொள்ளல் ஆகியவை இவர்களிடையில் கூட்டுறவுண்டென்பதற்குச் சான்றுகளாகையால் இவ்விதக் குற்றத்திற்கும் ஆயிரம் பணம் தண்டம் விதிக்க.

358. மேல் வருணத்தார் மூவரின் மனைவியையும் ஒருவன் தனது வலிமையாற் கூடினுல் உயிர்போகும்வரை அவனைத் தண்டிக்கவும். எப்படியும் பொருள், பிள்ளை இவற்றை விடவும், மனைவியைப் பிறர் கூடாமற்காத்தலே எவ்வருணத்தார்க்கும் மேலானதாகும்.

359. பிச்சைக்காரன், கட்டியங்காரன், யாகதீக்ஷிதன், யாசகன் இவர்கள் தாங்கள் மேற்கொண்ட காரியத்தை முன்னிட்டுப் பிறன் மனையாளுடன் தடையின்றிப் பேசலாம்.

360. ஒருவன் மனைவியுடன் பேசலாகாது என்று கண்டிக்கப்பட்டவன், மீண்டும் அவ்வாறு பேசினுல், ஒரு பொன் தண்டம் விதிக்க.

361. இவ்விதத் தண்டனைகள், மனைவியைக்கொண்டு பிழைக்கிறவனுயும், தன் மனைவியைப் பிறன் சேரக்கண்டும் பொறுப்பவனுயும், பிறனைத் தன் மனையாளிடம் கொண்டு சேர்ப்பவனுயும் உள்ள வேவுகாரன், கூத்தன், வாணன் இவர்களின் மனைவியைச் சேருவோருக்குக் கிடையாது.

362. எனினும் அவர்களுடன் தகாதவிடத்தில் பேசுவோன், வெள்ளாட்டி, வேலைக்காரி, மற்றவனின் வைப்பு, துறவுப் பெண் இவர்களுடன் பிறர் அறியாமல் மறைவிற் பேசுவோன் இவர்களுக்கு யாதேனும் கொஞ்சம் தண்டனை விதிக்க.

363. சேர்க்கையில் விருப்பமில்லாத தன் குலத்துக் கன்னியை வலிந்து புணர்வோனைக் குறி முதலியவற்றை அறுத்துக் கொல்ல வேண்டும். விரும்பி இணங்கும் ஒருத்தியைச் சேருவோனுக்கு மரண தண்டனை கூடாது.

364. வலிய ஒருத்தி வந்து மேற்குலத்தான் ஒருவனை விரும்பி அடைந்தால், அவளை ஏற்றவனைத் தண்டிக்கக் கூடாது. தாழ்ந்த குலத்தானை அப்படி அடைந்தால் வீட்டிலேயே தண்டித்து அவளை அடக்க வேண்டியது.

365. மேற் குலத்துப் பெண்ணைச் சேர்ந்த ஒருவனுக்கு மரணம் வரை தண்டனை விதிக்க. தன் குலத்துப் பெண்ணை ஒருவன் கலந்து விட்டால், அவள் தந்தையின் விருப்பத்தைப் பெற்று, அவன் கேட்கும் பரியம் கொடுத்து அவளை மணந்து கொள்ள வேண்டியது.

366. தன் குலத்துப் பெண்ணின் மர்ம ஸ்தானத்தில் வலிந்து விரலால் துன்பப்படுத்துவோனுடைய இரண்டு விரல்களை வெட்டி, நூறு பணம் தண்டம் விதிக்க.

367. விரும்பி வந்த தன்குலத்துப் பெண் விஷயத்தில் இப்படி நடந்துகொண்டால், அவன் விரலை அறுக்காமல், இனி யவ்விதம் செய்யாமலிருக்கும் பொருட்டு இருநூறு பணம் தண்டம் மட்டும் விதிக்க.

368. இப்படி ஒரு பெண்ணை மற்றொரு பெண் செய்தால், அப்படிச் செய்தவளுக்கு இருநூறு பணம் தண்டமும், பத்துச் சாட்டையடி தண்டனையும் விதிப்பதுடன், துன்புற்ற பெண்ணுக்கு உரிய பரியத் தொகையை இரண்டு மடங்காக அவள் தந்தைக்குச் செலுத்துமாறும் செய்க

369. இவ்விதம் ஒரு ஸ்திரீ நடந்து கொண்டால், அவளது தலையை மொட்டையடித்து, விரலிரண்டையும் நறுக்கி, கழுதை மேல் ஏற்றி நெடுவீதிகளில் துரத்துக.

370. ஜாதி, குணம் இவற்றால் தான் மிக்குயர்ந்தவளாகச் செருக்குற்று, தன் கணவனை விட்டு மற்றொரு

வனைச் சேரும் பெண்ணை அரசன் பலர் காண நாயை ஏவிக் கடிக்கச் செய்க.

371. பிறன் மனைவியைக் கூடும் ஒருவனைத் தழலேற்றிப் பழுத்த இரும்புப் பலகையில் படுக்கச் செய்து உடல் வேகும் வரை கட்டைகளையும் மேலே போடுமாறு மன்னன் செய்க.

372. ஒருசமயம் இப்படிப் பிறன் மனையைச் சேர்ந்து இன்புற்றவன் தான் தண்டிக்கப்பெற்ற ஓராண்டின் பின்னர் மீண்டும் அவளைக் கூடினால், தண்டனையை இரு மடங்காக்கி விதிக்க. விராத்யை, சண்டாளி இவர்களைச் சேர்ந்தவனுக்கு ஆயிரம் பணம் தண்டம் விதிக்க.

373. பாதுகாவலற்ற துவிஜாதிப் பெண்களைத் தாழ் குலத்தோன் கலந்தால், அவனது மர்ம உறுப்புக்களை அறுக்க வேண்டியது. காவலில் உள்ளவளையானால், அவனுடைய அங்கங்களின் எல்லாப் பாகங்களையும் வெட்டி அவனது பொருள் முழுவதையும் கவர்க.

374. கற்பினளான பிராம்மணப் பெண்ணைக் கூடும் வைசியனுக்கு ஒரு வருடம் காவலும், ஆஸ்திப் பறிமுதலும் தண்டனைகள். இவ்விதம் குற்றமிழைத்தவன் க்ஷத்திரியனாயிருப்பின், ஆயிரம் பணம் தண்டம் விதித்து, கழுதை மூத்திரத்தை விட்டு அவன் தலையை மொட்டையிடுக.

375. கணவன் முதலானவரின் ஆதரவில் காக்கப் பெற்றிராத அந்தணப் பெண்ணை வைசியன் கலந்தால், ஐந்நூறு பணமும், க்ஷத்திரியனுக்கு ஆயிரம் பணமும் அபராதம் விதிக்க.

376. கற்பினளான அந்தணத்தியைப் புணர்ந்த வைசிய க்ஷத்திரியர்களுடைய பொருள் முழுமையும் கவர்ந்து கொண்டு ஊரை விட்டு ஓட்டுக. அல்லது பழுத்த இரும்புப் பலகையில் கிடத்துக.

377. அந்தணன் கற்பினளாகிய தன் குலத்துப் பெண் ஒருத்தியை வலிந்து சுகித்தால், ஆயிரம் பணமும், அவளது விருப்புடன் சுகித்தால் ஐந்நூறு பணமும் தண்டம்.

378. பிராம்மணனுக்குத் தலையை முண்டனம் செய்தல் உயிர்த் தண்டனையாகும். ஏனையோருக்கு உயிர்த் தண்டனையே உண்டு

379. எந்தப் பாவம் செய்தபோதிலும், பிராம்மணனைக் கொல்லாமல், காயமின்றி அவன் பொருளுடன் ஊரை விடுத் துரத்துக.

380. பிரம்மஹத்தியைவிடப் பெரும் பாவம் உலகில் இல்லையாகையால், பிராம்மணனைக் கொல்ல மன்னன் எண்ணவும் கூடாது.

381. கற்புடைய க்ஷத்திரியப் பெண்ணைக் குணவானான வைசியன் புணர்ந்தால், ஐந்நூறு பணமும், கற்பற்ற வைசியப் பெண்ணைப் பலரறியுமாறு க்ஷத்திரியன் சுகித்தால், ஆயிரம் பணமும் தண்டம் விதிக்க.

382. கற்பினளாகிய க்ஷத்திரிய, வைசியப் பெண்ணைச் சுகிக்கும் அந்தணனுக்கும், நாலாம் வருணக் கற்புப் பெண்ணைக் கலந்த க்ஷத்திரிய வைசியருக்கும் ஆயிரம் பணம் தண்டம் விதிக்க.

383. கற்பற்ற க்ஷத்திரியப் பெண்ணுடன் கலந்த வைசியனுக்கு ஐந்நூறு பணமும், க்ஷத்ரியனுக்கு ஐந்நூறு பணமோ, கழுதை மூத்திரத்தைத் தலையில் ஊற்றி முண்டனம் செய்தோ தண்டிக்கவும்.

384. கற்பில்லாத வைசிய க்ஷத்திரியப் பெண்களைப் புணர்ந்த அந்தணனுக்கு ஐந்நூறு பணமும், சண்டாளியைப் புணர்ந்தால் ஆயிரம் பணமும் தண்டம் விதிக்க.

385. திருடன், பிறன்மனை சுகிப்போன், வசைமொழி கூறுவோன், வன் செயலன், அடிப்பவன் இவ்வைவரும்

ஒழிந்த நகரத்தை ஆளும் மன்னனுக்கு இந்திர லோகம் கிடைக்கும்.

## தகாத செயல், நிர்ணய விலைகள், ஏவல் கடமைகள் முதலியன

386. இவ்வைந்து கீழ் மக்களையும் தன் அரசைவிட்டு வெளியேற்றும் அரசன் குலபதியாய் நல்லரச இன்பத்துடன் இம்மையிற் புகழும் எய்துவான்.

387. வேள்வி நடாத்துவிக்க வல்ல ரித்விக்கை நீக்குவோன், புரை தீர்ந்த வேள்வி புரியும் ஒருவனை விட்டொழித்த ரித்விக் இவர்களுக்குத் தனித்தனி ஆயிரம் பணம் தண்டம்.

388. அன்னை, தந்தை, மனைவி, பிள்ளை இவர்கள் மாபெரும் பிழைகள் புரிந்தாலன்றி இவர்களைத் தன்னை விட்டுத் தள்ளலாகாது. அப்படி அவர்களைத் துறப்போனுக்கு அறுநூறு பணம் தண்டம்.

389. தங்கள் வருணாசிரம தர்மங்களைப் பற்றி இருபிறப்பாளரிடையே விவாதம் வருமாயின், சரி, தவறு என்று ஒன்றைத் தானே முடிவு செய்வது மன்னனுக்கு நன்மை தராது.

390 அப்படி வழக்கிடும் இரு தரப்பாரையும் வரவேற்றுப் போற்றி, அவர்களை அமைதி பெறச் செய்து, அந்தணரைக் கொண்டே வழக்கைத் தீர்மானம் செய்விக்க வேண்டியது.

391. திருமணம் போன்ற இருபது பேருக்கதிகமாகக் கூடியிருந்து விருந்துண்டு களிக்கும் திருநாட்களில், பந்தி போஜனத்துக் குரியவர்களான அண்டை அயலாரையும் அழைத்து உண்பிக்காதவனுக்கு ஒரு பொன் மாடம் தண்டம்.

392. வீட்டில் தானியற்றும் நற்காரியங்களில், வேத முற்றும் ஓதியுணர்ந்தவனையும் அழைத்துச் சோறிடாத

வனுக்கு ஒரு பொன் மாடம் தண்டம் போட்டு, இரட்டிப்பாக அவ்விருந்தை வழங்குமாறும் செய்விக்க.

393. கபோதி, அறிவிலி, முடவன், எழுபதின் மேற்பட்ட வயோதிகன், வேத முற்றக் கற்றவனுக்கு உதவி புரிவோன் இவர்களிடத்தில் சற்றேனும் தீர்வை வாங்கக் கூடாது.

394. வேத முற்ற ஓதினவன், துன்புற்றோன், பிணியாளன், சிறுவன், வயோதிகன், ஏழை, மேற்குலத்தோன், கொடையாளி இவர்களை மன்னன் போற்ற வேண்டும்.

395. மேடு பள்ளமில்லாமல் ஒரே மட்டமாய் இருக்கும் இலவம் பலகையில் ஒருவர் துணிகளைத் துவைத்து, அவற்றை வேற்றூர் உபயோகிக்குமாறு இரவில் கொடுக்காமல், ஒருவர் துணியைக் கொண்டு மற்றவர் துணி மூட்டையைக் கட்டாமல், துணிகளை உடையவர்களுக்கு ஒப்படி கொடுக்க வேண்டியது வண்ணான் கடமை. இதனை இவ்விதம் செய்யாதொழியின் மன்னன் தண்டனை செய்க.

396. நெசவுக்குத் தன்னிடம்கொடுக்கப்பட்ட பத்துப் பலம் எடையுள்ள நூலை நெய்து பதினொரு பலமாகத் துணியை எடையிட்டு உரியவரிடம் கொடுக்க வேண்டியது சேடன் பொறுப்பு. தவறிடின் பன்னிரண்டு பணம் தண்டம் விதிக்கப் பெறுவதுடன், உடையவர்க்கு உரிய அளவில் பொருளையும் சேர்ப்பிக்க வேண்டும்.

397. மண்ணில் விளைவனவும், கடலாரமுமாகிய பல விதச் சரக்குகளின் மேன்மை தாழ்வுகளையும், விலைகளையும் நன்கறிந்தவர்களான வர்த்தகர்களை ஆயச் சாவடியில் வர்த்தகம் புரியச் செய்து, அவர்கள் பெறும் இறுதியான கூடுதல் லாபத்தில் இருபதிலொரு பங்கு தீர்வை விதித்து மன்னன் பெறுக.

398. ராஜாங்க வேலைக்குப் பயன்படும் யானை, குதிரைகளையும், ஏற்றுமதி கூடாதென்று தடை செய்யப்

பட்ட இன்றியமையாத சரக்குகளையும், வேற்றுநாட்டுக்கு ஒருவன் கடத்தினால், அப்பொருள் முழுதினையும் அரசன் பறிமுதல் செய்து விட வேண்டும்.

399. ஆயச்சாவடி யிருக்கும் வழியைத் தப்பிக் கள்ள வழியில் செல்லுவோன், அகாலத்தில் வர்த்தகம் செய் வோர், வாங்குவோர், ஆயத் தீர்வையை ஏமாற்றச் சரக் கின் விலை மதிப்பைக் குறைத்துக் கூறுவோர் இவர்களிடம் எண் மடங்கு தண்டத் தீர்வை வாங்கவும்.

400. வியாபாரச் சரக்குகள் வருகின்ற தோற்று வாய், அவை சென்றடையும் சந்தை, கொள்முதல் விலை, விற்பனையாகும் வரையில் உண்டான நாட்களின் வட்டி, போக்குவரத்துச் சத்தம், எடுபிடி கூலி இவற்றை யெல் லாம் கணக்கிட்டு, ஏற்ற விலை யேற்படுத்தி, அவ்வாறே விற்கவும் வாங்கவும் வர்த்தகக் கட்டளைகளை ஏற்படுத்து வது மன்னன் கடமை.

401. அடிக்கடி விலையேறி யிறங்கக்கூடிய சரக்குகளின் விஷயத்தில், ஐந்து நாட்களுக்கு ஒரு தடவையும், சற்று நிலையான விலையுடைய சரக்குகளுக்குப் பதினைந்து நாட் களுக்கு ஒரு தடவையும், வியாபாரிகளின் முன்னிலையில் மன்னன் அவ்வப்போது விலைகளைத் திட்டம் செய்ய வேண்டும்.

402. முகத்தல், நிறுவை போன்ற பற்பல அளவைக் கருவிகளுக்கு மன்னன் தனது உத்யோகஸ்தர்களைக் கொண்டு ராஜாங்க முத்திரை போடுவிப்பதும், அவை சரி யாக இருக்கின்றனவா என்பதை ஆறு மாதங்களுக் கொரு முறை சோதித்தறிவதும், அவை சரியாக இல்லையென்றால் தண்டனை விதிப்பதும் வேண்டும்.

403. வெறும் வண்டிக்கு ஒரு பணம், சுமை தூக்கு வோனுக்கு அரைப்பணம், பாரம் இழுக்கிற மாடு முதலிய பிராணிகளுக்கும், பெண்களுக்கும் கால் பணம், மூட்டை

யில்லாதவர்களுக்கு அரைக்காற் பணம் இவையே தோணிக்காரன் வாங்கிக் கொள்ள வேண்டிய கட்டணம்.

404. சரக்கின் பெறுமானத்திற்குத் தக, பார வண்டிகளுக்கும், வெறும் கோணி போன்றவை கொண்டு செல்லும் வண்டிகளுக்கும் அவற்றின் சுமைக்கு ஏற்றபடியும், ஏழைகளுக்குக் கொஞ்சமாகவும் ஓடக்காரன் கட்டணம் பெறுக.

405. பக்கத்துள்ள நிலப் பரப்பின் தன்மை, நீரின் தொலைவழி, பருவ காலம் இவற்றையெல்லாம் அனுசரித்துத் தோணிக்காரன் கட்டணம் வகுத்துக் கொள்ளவும். இது ஓடும் ஆற்றின் கடத்தலுக்கு மட்டுமே; பாய் விரித்துச் செல்லும் கடல் கடத்தலுக்குத் தேவைப்படும் முயற்சிக்குத் தக்கவாறு கட்டண ஏற்பாடு செய்து கொள்ள வேண்டும்.

406. இரண்டு மாதச் சூலி, துறவி, காடுறைந்து வாழ்வோன், பிரம்மசாரி, அந்தணன் இவர்களிடத்தில் தோணிக்காரன் சத்தம் வாங்கக் கூடாது

407. படகு வலிப்போனின் கவனக் குறைவால், படகில் ஏற்றிய பொருள் சேதமுற்றால், அந்தச் சேதத்தைத் தண்டு வலிப்போர் அனைவரும் விகிதப்படி உடையவனுக்கு ஈடு செய்யவும்.

408. இவ்வித நஷ்ட ஈடு, மனிதரின் தவறுகளால் ஏற்படும் சேதங்களைப் பற்றியே யன்றி, தெய்வச் செயலால் ஏற்படும் தொல்லைகளுக்குத் தோணிக்காரனைத் தொல்லைப்படுத்தக் கூடாது.

409. வர்த்தகம், வட்டிக்குக் கடன் கொடுத்தல், விவசாயம் செய்தல், ஆநிரை காத்தல் இவற்றை வைசியருக்கும், துவிஜர்களின் ஏவலுக்கு நாலாம் வருணத்தாரையும், மன்னன் ஏற்படுத்தி, இவற்றைச் செய்யா தொழிவோரைத் தண்டிக்கவும்.

410. வாழ்வில் முன்னேற வியலாத வறுமையுற்றுச் செல்வ மிகுந்த அந்தணனை வந்தடையும் க்ஷத்திரிய வைசியர்களை, அவ்வந்தணன் தனது ஊழியத்துக்கு நியமித்துக் கொள்ளாமல், அவர்கள் வர்த்தகமோ, வேறு தொழிலோ புரிந்து தங்கள் பிழைப்பை நடத்திக் கொள்ளுமாறு அவர்களுக்குத் துணை புரிய வேண்டும்.

411. உபநயன முதலிய சமஸ்காரங்களுடையவரா யும், தொழில் செய்து பிழைப்பதில் நாட்டமில்லாதவரா யும் உள்ள துவிஜர்களை, தனது செல்வப் பாங்கினாலும், லோப குணத்தாலும், ஏவல் கொள்கின்ற பிராம்மண னுக்கு அரசன் அறு நூறு பணம் தண்டம் விதிக்க.

412. அந்தணர் ஏவலுக்கென்றே யுள்ள நாலாம் வருணத்தானிடம், கூலி கொடுத்தோ, கொடுக்காமலோ, அந்தணன் வேலை வாங்கலாம்.

413. எஜமானன் அவனை நீக்கினாலும், அவன் மீதி யிருக்கும் வேலைக்கடமை நாலாம் வருணத்தவனை விட்டு நீங்குவதில்லை. ஏனெனில் இம்மை மறுமைக்கு ஆருக இருக்கும் பிறவிக் கடமையாகிய ஏவலை யாரே மறுப்பர்? எனவே மறுமை இன்பம் நாடியும் இம்மையில் அந்தண ரிடம் பணிபுரிய வெண்டியது.

414. போரில் சிறை பிடிக்கப்பட்டவன், பக்தியினால் தொண்டு பூண்டவன், தனது பரத்தையினிடமாகப் பிறந்தவன், விலை கொள்ளப்பட்ட அடிமை, தானமாகப் பிறனால் வழங்கப்பட்ட பணியாளன், பரம்பரையாகத் தனது குலமே ஒரு குடும்பத்திற்குத் தொண்டு பூண்டவன், குற்றத்திற்குக் கழுவாயாக வேலை செய்து வருபவன் எனத் தொழிலாளர் எழு வகையாவர்.

415. மனைவி, ஏவல் புரிபவன், பிள்ளை இவர்களுக்கு ஒருவனுடைய பொருளில் உரிமையில்லை இவர்களால் ஈட்டப்படும் பொருளும் தலைவனுக்கே உரிமை

யுடையதாகும். அதாவது அவ்விதம் அவர்கள் ஈட்டிய பொருளைத் தருமத்திற்காகச் செலவு செய்யவும் தலைவன் அனுமதி வேண்டும்.

416. அந்தணன் மேற்சொன்ன எழுவகைத் தொழிலாளரிடமிருந்தும் பொருளை வலிந்து கொள்ளலாம். எனவே, அப்பொருளில் இவர்களுக்கு எப்போதுமே அதிகாரமில்லை.

417. வைசியனையும், நாலாம் வருணத்தானையும் தன்தன் தொழிலைச் செய்யுமாறு மன்னன் கட்டளையிடுக. இல்லையெனில், வேலையற்ற இவர்கள் உலகையே அழித்து விடுவார்கள்.

418. அமைச்சன், புரோகிதன் இவர்களைக் கொண்டு இம்மை மறுமைகளுக் குதவுவதான உலகியல், வைதிகக் காரியங்களையும், குதிரை முதலிய ஊர்திகள், வரவு செலவு, இருப்பு, இரத்தினசாலை, தங்கசாலை, கருவூலம் ஆகியவற்றையும் தினமும் மன்னன் பார்க்க வேண்டும்.

419. இவ்வாறாக இதுவரையில் கூறிய எல்லா விவகாரங்களையும் தீர்மானிக்கிற மன்னன், பாவத்தினின்றும் நீங்கியவனாய், சுவர்க்க முதலிய மேலான நற்பதம் எய்துகிறான்.

எட்டாவது அத்தியாயம் முற்றும்.

## ஒன்பதாம் அத்தியாயம்

# ஆண், பெண்களின் அறம்

### திருமணம், மகப்பேறு

1. தீயொழுக்கமின்றி முறையாக ஒருவரை ஒருவர் சார்ந்து வாழும் ஆடவரும் மாதரும், அவ்வாறு இணைந்து வாழுங் காலத்தும், பிரிந்திருக்குங் காலையும், அவ்வவர் நடத்த வேண்டிய தொன்மையான நல்லறங்களை இனி நவில்வேன்.

2. கணவன் முதலிய காவலர், அல்லும் பகலும் மாதரை அனுதரவாகச் செய்யாது தங்கள் காவலில் ஏற்றுக் கொள்ளவேண்டும். பெண்கள் கெடுமனமுடையவ ராயினும் அவர்களைத் தங்கள்பால் சார்ந்திருக்கச் செய்க.

3. இளமையில் தந்தையினுலும், பருவ காலத்தில் கணவனுலும், முதுமையில் மைந்தராலும் காக்கப்பட வேண்டியவர் ஆதலால், மாதர் எஞ்ஞான்றும் தம்மிச்சை யாக இருக்கக் கூடாதவராவர்.

4. பருவ மெய்துமுன் தன் பெண்ணைத் தக்கார் ஒரு வருக்கு மணமுடித்துக் கொடாத தந்தையும், பருவ மடைந்த மனைவியைக் கூடிச் சுகிக்காது அவளைத் தனிமை யில் விடும் கணவனும், கணவனை யிழந்தவளான தனது தாயைப் போற்றிக் காக்காத பிள்ளையும் நிந்தைக்குரியர்.

5. சற்றும் கூடாவொழுக்கம் மாதரைச் சாராது காக்க வேண்டும். இன்றெனில் மாதரின் பிறந்த குலமும், அவர் புகுந்த குலமும் அழிவுறக் காரணமாவர்.

6. எவ்வருணத்தாராயினும் மனைவியைக் காப்பதே மேலான கடமை என்பதை யறிந்து, தாங்கள் செயலற்ற வர்களான போதும் மனைவியைக் காப்பதில் முயற் குன்றாமல் இருக்க வேண்டும்.

7. மனைவியைப் போற்றிக் காப்போன், தன் சந்ததி, நல் ஒழுக்கம், தன் குலம், தனது ஆன்மா, தனது நற்கருமங்கள் இவற்றையும் முயற்சியுடன் இயற்றுவோனே யாகின்றான்.

8. மனையாளின் கருவில் கணவன் தானே தனது வீர்ய வடிவமாகச் சென்று சூல் இருந்தும், பின்னவள் வயிற்றில் பிள்ளையாகப் பிறவி பெற்று வந்தும் குலமோங்க வாழ்வதனால், பெண்ணுக்கு ஜாயை என்ற பெயரும் உண்டாயிற்று.

9. பெண்ணொருத்தி எவ்வித ஆடவருக்குச் சூல் கொள்கின்றாளோ, அவ்விதமே குழந்தையைப் பெறுகின்றாள். ஆதலால் தூய்தான சந்ததி அவளிடம் தோன்றும் பொருட்டுக் கூடாவொழுக்கமின்றி அவளைக் காப்பாற்றுக.

10. என்றாலும், தங்கள் சாமர்த்தியத்தினால் மட்டுமே பெண்களைக் கூடாவொழுக்கத்தினின்றும் ஆடவர் யாரும் காப்பாற்றிவிட முடியாது. எனவே மேற்சொல்லும் வழிகளை ஆடவர் பின்பற்றுக.

11. வீட்டிற்கு வேண்டிய பாத்திரம் முதலியவற்றைத் தேடிப் பெறுவதற்காக, பொருளை அவள்பால் கொடுத்தும், அதனைக் காப்பாற்றி வைத்து வேண்டிய போது அதனைச் செலவிடும்படி செய்தும், தட்டுமுட்டுச் சாமான்களைச் சுத்தமாக வைத்துக் கொள்ளச் செய்தும், வீட்டைத் துப்புரவாக்கி வைத்தல், தேவ பூசைக்கான ஏற்பாடுகளைச் செய்தல், அடுக்களைப் பொறுப்பு, பாத்திரம், படுக்கை முதலியவற்றைச் சரியாகக் கவனித்துக் கொள்ளல் போன்ற இன்றியமையாத இல்லத்துக் காரியங்களை மனைவிக்குக் கற்பித்து, அவற்றை அவளைக் கொண்டு செய்வித்தல் போன்றவற்றாலும் அவளது மனம் வேறிடம் செல்லாமற் காக்க.

12. தமது நிறை தாமே காத்தல் மாதர்தம் கடன்; அதுவே அவர்களுக்கு நல்ல காப்பாகும். அஃதின்றி,

வலிய, காவலரை வைத்து வீட்டுக்குள்ளே பூட்டிவைத்தல் பயன் தராது.

13. கள்ளுண்ணல், தீயோர் உறவு, கணவனை விட்டுத் தனிவழி வேற்றூர் செல்லல், அங்கு மிங்கும் சும்மா போதல், கண்ட இடத்தில் துயிலல், அயலகத் தமர்தல் இவ்வாறும் மாதர்க்குப் பழி தருவன.

14. ஆடவரின் அழகினையும் வயதையும் பாராட்டா மல் அவர்தம் ஆண்மையை மட்டுமே பொருட்படுத்தி மாதர் ஆடவர்பால் மனம் பற்றிக் கலப்பர்.

15. நிறை பிறழ்தலும், நிலையில் மனமும், நண் பின்மையும் மாதர்தம் இயல்பாவதால், கணவனால் நன்கு போற்றிப் புரக்கப்படும் போதும், அவர்கள் கணவனின் காவலை விரும்புவதில்லை.

16. இவ்வித இயல்புகள் மாதர்க்குப் பிறப்புடன் வருவதாகையால், மாதர் ஒழுக்கம் கேடுறுமற் பேணும் முயற்சியில் ஆடவர் கவனமாக இருக்க வேண்டியது.

17. படுக்கை, ஆதனம், அழகு செய்தல், காமம், சினம், பொய், துரோகம் என்னும் இவற்றை மாதரின் பொருட்டே மநு படைத்தார்.

18. மாதர்க்குப் பிறவியைத் தூய்தாக்கும் சம்ஸ் காரங்கள் மந்திர பூர்வமாகச் செய்வித்தல் யாதுமின்று. இவர்களுக்கு வெள்ளையுள்ளமும் இல்லை. பாவம் நீக்கும் மந்திர உபதேசமும் கிடையாது. எனவே பொய்யைப் போல் மாசு வடிவினராக மாதர் இயன்றிருக்கின்றனர்.

19. பெரும்பாலும் மாதர் கற்பிலார் என்றே பெரிதும் பல நூல்களிலும் கூறப்பட்டிருக்கிறது. இதற்குக் கழுவா யாகக் கூறப்படுவனவற்றையும் கேட்பீராக.

20. தன் தாய் மனத்தால் கற்பிழந்தாள் என்றறிந்து ஒருவன் அதற்குக் கழுவாய் இயற்றுங்கால், "என்




அன்னை நிறை யிழந்து அயலான் இல்லம் சென்று அவனைக் கண்டு ம[illegible]த்தால் இச்சையுற்றிருந்தால், [illegible] அவளது உடலில் இளகிய பெண்மை முதலத்தை என் தந்தை தனது வீர்யத்தால் வென்று தூய்மையாக்கக் கடவன்!'' என்று பிரார்த்திக்கிறான். இதிலிருந்தே மாதர் மனவியல்பு விளங்குகின்றது.

21. இந்தக் கழுவாய் மனத்தால் விளைந்த மாசு நீங்கும் பொருட்டே. அதுவும் அத்தகைய தாய் வயிற்றிற் பிறந்தமைக்காக மைந்தன் தனது பிறப்பின் தூய்மையை நாடியேயன்றி, அவளுக்கன்று.

22. ஓடிச் சென்று அடையும் கடலின் இயல்பை எய்தும் ஆற்றைப் போல், தனது கணவனின் இயல்பினையே அவன்பால் இணையும் மாதும் அடைகின்றனள்.

23. சான்றாக வசிஷ்டரை மணந்த அக்ஷமாலையும், மந்தபால முனியின் மனைவியான சாரங்கியும் தாழ்குலப் பெண்களாக இருந்தபோதிலும், தங்கள் கணவரான அம் முனிவர்களின் மேன்மையான தன்மையை அவர்களும் பெற்று, போற்றத்தக்கவர் ஆயினர்.

24. மற்றும் சத்யவதி போன்ற ஈனகுலப் பெண்களும், மேலோரான கணவரைப் பெற்றதனாலும், தங்கள் கற்புத் திறனாலும் கணவரின் மேன்மையினாலும் தாங்களும் இவ்வுலகில் மேன்மையுற்றார்கள்.

25. இதுகாறும், மாதர் ஆடவரின் உலகியல் ஒழுக்கம் கூறப்பெற்றது. இனி இம்மை மறுமைகளின் இன்பந்தரும் மக்கட் பேற்றினை இயம்பக் கேளீர்.

26. மாதரைக் காத்தல் இவ்வளவு தொல்லை நிறைந்ததாயினும், நன்மக்களை ஈன்று, நல்லின்பம் தருகிறவர் ஆதலினால், அவர்களை ஆடை அணிகளால் அழகு செய்ய வேண்டியது. இல்லத்திற்கு எழில் தரும் பெண்

ழும், லக்ஷ்மியும் ஒருவரே. செல்வமில்லாத வீட்டைப் போல, மாதரில்லாத வீடும் விளக்கம் பெறுவதில்லை.

27. ஈன்று, புரந்து, விருந்தோம்பி, இல்லம் புரிதற்கு மாதரே ஏற்றவர் என்பது காணக்கிடக்கிறது.

28. நன் மக்கள் பெறுதல், தீ வளர்த்தல் ஆகிய நற்கருமம் செய்தல், பணி புரிதல், கூடிச் சுகித்தல், தனக்கும், தென்புலத்தாருக்கும் சொர்க்க சுகம் தருதல் இவையனைத்தும் மனைவியின் மாண்புகளே.

29. மன, மொழி, மெய்களால் கணவனின் படி கடவாத பாவை, இம்மையில் மேலோரால் கொண்டாடப் பெற்று, மறுமையில் கணவனுடன் நல்லுலகம் சேர்கின்றாள்.

30. படி கடக்கும் பாவி, உலக நிந்தை பட்டுழன்று, பின்னர் நரியாய்ப் பிறந்து நலிவாள்.

31. நன் மக்கட் பேற்றினைப்பற்றி மநு முதலிய பெரியோராலும், மற்றும் பல முனிவராலும் விளக்கப்பட்டு, அனைவரும் விரும்பத் தக்கதாக இருக்கும் நற்செய்திகள் கேளீர்.

32. கணவனே பிள்ளையாகிறான் எனப் பெரியோர் கூறுவர். அக்கணவன் இருவகையாவான் : கருக்கொளச் செய்தவனே கணவன் என்றும், மணம்புரிந்தவனே கணவனென்றும், மாறுபட்ட இருவகை யுண்டு.

33. மாதர் விளை நிலமாகவும். கணவன் விதையாகவும் கூறப்படுகின்றனர். மண்ணும் விதையும் சேர்ந்து உயிர்கள் வெளிப்படுகின்றன. எனவே பிறக்கும் குழந்தை யாருக்குச் சொந்தம் என்றால்,

34. சில இடத்தில் வீரிய வேகத்தால், பிள்ளை தந்தையைப் போல்கிறான். இதற்குச் சான்றாக வியாசன், ரிஸ்யசிருங்கன் போன்றோர் விளங்குகின்றனர். வேறு சிலர் நிலத்தின் தன்மையை அடைந்திருக்கின்றனர். இவர்கள்

பிறப்பில் நிலவளம் சிறப்புடையது. இதற்குச் சான்ருக, திருதராஷ்டிரன் முதலானேர் விளங்குகின்றனர். இரண்டு தன்மைகளும் பொருந்திய இடத்துத் தோன்றும் பிள்ளைகள் போற்றப்படுகின்றனர்.

5 பீஜம், யோநி இவ்விரண்டையும் நோக்குமிடத்து, பீஜம் உயர்வு. ஏனெனில் தோன்றும் உயிர் அனைத்தும், அதன் தன்மையைச் சார்ந்திருக்கிறது.

36. சான்ருக, விதைக்கும் விதை அதே பயிரை அந்த நிலத்தில் விளைவிக்கிறதல்லவா?

37. நிலம் சிறப்பில்லை என்று அறிய, எல்லாத் தாவரங்களும் வித்தின் அடையாளமிறின் மண்ணின் அடையாளத்தைக் கொண்டிருப்பதில்லை.

38. ஒரு நிலத்தில் பல வித்துக்களைக் கலந்து விதைத்தாலும், அவ்வவையும் தத்தமது வடிவங்களையே வெளிப்படுத்துவனவே யன்றி, நிலத்தின் நிறத்தையல்ல.

39. சம்பா முதலிய நெல் வகைகள், பயறு, எள் உளுந்து, வெங்காயம், கரும்பு—எவையெனினும், தத்தமது வித்தைப் போன்றே விளைகின்றன.

40. ஒன்றை விதைத்தால் மற்ரென்று விளைவது கிடையாது. எதை நாம் விதைக்கிருமோ அந்தப் பயிர் தான் முளைக்கும்.

41. இயல்பினுலும், மேலோரிடம் பெற்ற கல்வி கேள்விகளாலும், ஓதியுணர்ந்த வேதத்தாலும், நீண்ட வாழுள் விருப்பமுடையவனும் இருக்கும் மனிதன் பிறன் மனையாகிய நிலத்தில் தனது வீர்யமாகிய விதையை ஊன்றத் தகாது.

42. பிறன்மனையிடத்தில் வீர்யம் சேர்க்கக் கூடாதென்பது பற்றி வாயுதேவன் பல பாடல்களை இசைத்திருப்பதாகப் பெரியோர் கூறியிருக்கின்றனர்.

43. ஒரு வேடன் வீழ்த்திய மிருகத்தின் மேல் மற்றொருவன் எய்யும் அம்பு வீணாவது போல், ஒருவன் மனையாளிடம் மற்றவன் விதைக்கும் வீர்யமும் வீணாகும்.

44. மண்ணை மன்னர் பலர் ஆண்டு வந்த போதிலும், முதன் முதல் இதனை ஆண்ட பிருது மன்னனின் மனைவி என்ற பொருளில்தான் மண்ணுக்குப் பிருதுவி என்ற சிறப்பு ஏற்பட்டது. அது போன்றே முதன் முதலில் ஒரு நிலத்தைக் காடுகளைந்து திருத்தியவனுக்கே அது உரிமையாகிற தென்றும், முதலில் ஒரு மிருகத்தை எய்து வீழ்த்தியவனுக்கே அது சொந்தமென்றும் கூறுகின்றனர்.

45. மனைவி, கணவன், பிள்ளை ஆகிய மூன்று தத்துவங்களும் சேர்ந்து விளங்கும் ஒரு தோற்றமே புருஷன் என்று வேதம் கூறுகிறது (மனைவி ஒருபாதி, பிள்ளை தனது வடிவமே). மேலும் வேதமறிந்தோர் கணவனும் மனைவியும் வெவ்வேறானவ ரல்லரென்று அவர்களின் ஒருமையை வலியுறுத்துகின்றனர்.

46. ஒருவன் தன் தாரத்தை நீக்கிடினும், வேற்றவர்க்கு விலைவைத்துக் கொடுத்துவிட்டாலும், அவருடைய மனைவித் தன்மை மட்டும் விலகாது. அநாதியாக இப்படி ஏற்பாடு அமைக்கப்பட்டிருப்பதால் பிறன் மனைவியிடமாகப் பிறந்த பிள்ளையும் பயன்படமாட்டான்.

47. தந்தையின் பொருளை மைந்தர் தம்மில் பங்கிட்டுக் கொள்ளலும், பெண்ணை ஒருவனுக்குக் கொடுத்தலும், கொடை கொடுத்து விடலும் ஆகியவை, ஒரு தடவை இயற்றியதுடன், பின்னர் அப்பொருளின் மீது, முன்னர் உரிமை கொண்டவனுக்கு யாதொரு அதிகாரமுமில்லை.

48. எப்படி யென்றால், ஒருவனுடைய பசு, குதிரை, ஒட்டகம், தாசி, எருமை, ஆடு முதலியவற்றை மற்றொருவன் தனது பொலி மிருகங்கள் முதலியவற்றைக் கொண்டு பொலிந்தாலும், அதனால் பிறந்தவை எப்படிப் பொலிந்தவ

னுக் குடைமையாகாதோ அது போன்றே பிறன் மனை யிடமாகப் பிறந்ததும் சொந்தமாகாது.

4 தன்னிடத்தில் விதை யிருக்கிற தென்பதனுல் பிறன் நிலத்திற் சென்று ஒருவன் விதைத்து விட்டால் அதன் விளைவு எதையும் விதைத்தவன் அடைகிருன் என்பது யாண்டுங் கிடையாது.

50. ஒருவனுடைய பசுவை மற்றவனுடைய பொலி காளையைக் கொண்டு நூறு கன்றுகளை உண்டாக்கினுலும், கன்றுகளும் பசுவின் சொந்தக்காரனுக்கன்றி, பொலிகாளை யின் எஜமானுக்குச் சேராது. அவனுக்கு வீண் வீர்ய விரயம்தான் மிச்சம்.

51, பிறன் மனையிடமாகப் பெற்ற குழந்தை அப் பெண்ணின் கணவனைச் சாருமே யல்லாது, உண்மையாகக் காரணமாக இருந்தவனுக்கு ஒரு காலமும் சொந்த மாகாது.

52. வித்து மட்டும் வைத்திருப்போன் நிலமுடையவ னிடம் ஏற்பாடு செய்து கொண்டு அதில் விதைத்து, விளைவை இருவருக்கும் பொதுவாக இருக்கச் செய்து கொள்வது போன்று, மனைவியில்லாத ஒருவன் பிறன் ஒருவனைச் சார்ந்து அவனுடன் ஏற்பாடுசெய்துகொண்ட பின், அவன் மனைவியிடமாகத் தனக்கு ஒரு பிள்ளையைப் பெற்றுக் கொள்ளலாம். அவ்வித ஏற்பாடு இல்லாத வரையில், அவள் வயிற்றிற் பிறக்கும் குழந்தைகள் அவளுடைய கணவனையே சாரும். இவ்விஷயத்தில் நில உடைமையே முதன்மையானது.

53. நிலத்தைப் போன்றே மாதர் விஷயமும். பயிரைப் பற்றிய ஏற்பாட்டில் வித்துக்குடையவனும் நிலக்காரனும் ஒத்து விளைவைப் பொதுவாகத் துய்த்தல் போன்றே, சந்ததி பற்றியும், இருவர் இப்படி ஒத்துப்போய்ப் பிறந்த பிள்ளையும் இருவர்க்கும் சொந்தமாக இருக்கின்ற சான்று களை உலகில் கண்டிருக்கிறேம்.

54. வெள்ளமோ காற்றோ அடித்துக் கொண்டு வந்த வித்தால் ஒரு நிலத்தில் காண்கின்ற விளைவு நிலமுடையா னுக்குச் சேர்வதேயன்றி, முன்னர் வித்துக்குச் சொந்தமா யிருந்தவனைச் சேர்வதில்லை.

55. மற்றும், ஒருவனுடைய பசு, குதிரை, ஒட்டகம், ஆடு, பக்ஷி, எருமை இவற்றின் கன்று முதலியவற்றின் விஷயத்திலும், கழனி விஷயத்திலும் முன் சொன்ன உதாரணப்படி யென்றறிக.

56. இதுவரையில் மகப்பேறு விஷயத்தில் ஆண், பெண்களின் ஏற்றத் தாழ்வுகளை விளக்கினேன். இனி மாதருக்குப் பிள்ளை யில்லாமல் குலமே யழிவுமென்ற நெருக்கடிகளின் போது மேற்கொள்ளத் தக்க ஒழுகுகளைக் கூறுவேன்.

57. அண்ணி, குருபத்தினிக்கு இணையானவள். தம்பி மனைவி மருகிக்குச் சமமென்றும் அற நூல்கள் துணி கின்றன.

58. அண்ணன் தம்பி இருவரும் சந்ததி நசிக்கும் என்ற நிலை யேற்படாதபோது, ஒருவன் மற்றவன் மனைவியைப் பெரியோர் அனுமதியுடன் ஆயினும் கூடுதல் பாவம்.

59. சந்ததியின்றிக் குலமே முடிவடையுமானால், அப் போது ஒரு பெண், தனது கணவன் மாமனார் முதலியோ ரின் ஒப்புதலின் மேல், தனது மைத்துனன் அல்லது கணவ னுக்கு ஏழு தலைமுறைக்குட்பட்ட பங்காளி இவர்களுடன் மேற் சொல்லவிருக்கும் விதி முறைப்படி கூடியிருந்து குலத்தின் வளர்ச்சியை முன்னிட்டுத் தக்க பிள்ளையைப் பெறலாம்.

60. பெரியோர் அனுமதியுடன் விதவையைக் கூட நேர்கிறவன், உடல் எங்கும் நெய்பூசி இரவில் இருட்டான இடத்தில், அவளைக்கூடி ஒரே பிள்ளையை மட்டும் உண்டு பண்ணலாமேயல்லாது மற்றொரு பிள்ளையை உண்டாக்க லாகாது.

61. ஒரு பிள்ளை மட்டும் இருந்தால் சந்ததியில்லாத தற்குச் சமம் என்று அறநூல்கள் கூறுவதால், இரண்டாவது பிள்ளையையும் உண்டு பண்ணலாமென்று மகப்பேறு அறநூல் உணர்ந்தோர் கூறுவர். வேறு சிலர் பிறந்த ஒரு பிள்ளையும் குலத்திற்கு ஏற்றவனுக இல்லாமற் போனுல் மட்டுமே இரண்டாவது பிள்ளை தோற்றுவிக்கலாமென்பர்.

62. அந்த விதவையினிடமாக விதிப்படி கலந்து சூல் உண்டானுல், பின்னர் அவன் குருவைப் போலவும், அவள் மருமகளைப் போலவும் கருதி மதித்து நடந்து கொள்ள வேண்டியது.

63 அண்ணன் தம்பிகள், மேற் சொன்னவிதிப் படி அடக்கத்துடன் நடந்து கொள்ளாமல், மீண்டும் காமத்தாற் கூடுவராயின், மருகியையும் குருமனைவியையும் கூடிய பாவிகள் ஆகின்றனர்.

64. பிள்ளை யில்லாத போதும் ஒரு விதவையை யாருடனும் கூடிச் சந்ததி பெறுமாறு துவிஜர்கள் அனுமதிக்கலாகாது. செய்தால் முதன்மையான கற்பறத்தைக் குலைத்து விடுவார்கள். (இது துவாபர, கலியுக தர்மம்)

65. புத்திரனில்லாமற் போனுல் மற்றொருவனிடம் பிள்ளை பெறுமாறு எந்த வேதத்தாருக்கும் விவாக மந்திரங்களில் கூறப்பட்டிருக்கவில்லை. திருமண ஏற்பாட்டுச் சூத்திரத்திலும் விதவா விவாகம் விதிக்கவில்லை.

66. ஒருவன் மனைவி மற்றவனைக் கூடுதல் அறநூல்களில் சொல்லப்பட்டாலும், அது மிருகங்களின் வழியேயன்றி மனிதர்க்கு ஏற்றதன்றென மேலோர் வெறுத்திருக்கிறுர்கள். வேனன் என்னும் அறத்தின் மாறுன மறங்களிழைத்த மன்னன் உலகாளும்போது இவ்விதியை விலங்குகளுக்கு மட்டுமின்றி மனிதர்க்கும் அவன் விதித்தான் அது முதலே இவ்வித முறை கேடான முறைமை தோன்றலாயிற்று.

67. வேனன் மன்னர்களின் மன்னனாக உலக முழுதாண்டான் என்று கூறப்படுகிறதே யன்றி, அறமறிந்து ஒழுகியவனாக இல்லை. அவன் காமத்தால் ஜாதிக்கலப்புக்களை உண்டாக்கிவிட்டான்

68. முன்பு சாஸ்திர சம்மதம் பெற்ற செயல் என்று நம்பி, கணவனிறந்த பின் மற்றொருவனுடன் கூடுவதற்கு எவனாவது ஒரு பெண்ணை அனுமதித்தல், அது முதல் அச்செயல் பெரியோர் நிந்தைக்கு உரியதாகி விட்டது (இவ்விஷயத்தில் மநு தாமே முன்னர் கட்டளையிட்ட நீதியைப் பின்னர் உலக நிந்தைக்குரியதாக நிர்ணயிப்பது, துவாபர கலியுக தருமங்கள் என்று பிரகஸ்பதி இதற்கு வியாக்யானம் செய்திருக்கிறார்).

69. ஒருவனுக்கு மணம் பேசியான பின், அவளை மணக்கவிருந்தவன் இறந்துபட்டால், அவனுடைய உடன் பிறந்தோர் யாரேனும் மேற்சொல்லும் விதிப்படி அவளை மணந்திருக்க வேண்டியது.

70. அவன் அந்தப் பெண்ணை விதிப்படி மணந்து, வெள்ளுடையுடன் மனம் மொழி மெய்கள் தூய்மையுடையவளாய் இருக்கச் செய்து, ருது ஸ்நானம் ஆனவுடன் அவளை ஒரு நாள் கூடியிருந்து மறுபடியும் விலக்காகும் வரை காத்திருந்து, அவள் சூலாகாவிடில், மீண்டும் சூல் கொள்ளும் வரையில் அன்றாடமும் அவளுடன் இணங்கியிருக்க வேண்டியது.

71. கன்யா தானத்தின் பான்மை யறிந்தவன், ஒரு பெண்ணை ஒருவனுக்கு வாக்களித்த தந்தை இறந்தாலும் அந்த வாக்கை மாற்றக் கூடாது. வேறொருவனுக்குக் கொடுத்தால் ஆயிரம் பேர் உறவினரைக் கொன்ற பாவம் அப்படிக் கொடுப்பவனைச் சாரும்.

72. வைதவம், தீராப்பிணி, கூடாவொழுக்கம் இவையுடைய பெண்ணை அவளுடைய குற்றம் மறைத்து

ஒருவனுக்கு ஒப்பவைத்துக் கொடுத்தால்—அல்லது விதிப் படி கரம் பற்றினல் அம்மி மிதிப்பதற்கு முன் அக்குறைகள் வெளிப்பட்டால் அவ்விதக் கன்யா தானத்தையோ பாணிக்கிரகணத்தையோ ஏற்க மறுத்து விடலாம்; அதனல் குற்றம் வராது.

73. மேற்சொல்லிய குற்றமுள்ள பெண்களை அக்குற்றத்தை வெளிப்படாமல் மறைத்து ஒருவனுக்குக் கொடுக்கின்ற பாவிக்கு ஏதேனும் பரியம் கொடுக்க வேண்டியதில்லை. கொடுத்திருந்தாலும் திருப்பி வாங்கிக் கொண்டு விடலாம்.

74. பொருள்வயின் பிரிந்து வேற்று நாடுகளுக்குச் செல்லும் கணவன் தான் திரும்பி வருமளவும், மனைவியினுடைய வாழ்க்கைச் செலவுக்கு வேண்டும் பொருளை வைத்துப் போக. இல்லையாயின், அவள் மேலான இயல் பினளாயினும், வயிற்றுப் பிழைப்பை முன்னிட்டு இழி செயலில் இறங்க நேரிட்டுவிடும்.

75. பிரிந்து சென்ற கணவன் திரும்புமளவும், அவன் வைத்துப் போன பொருளைக் கொண்டும், உயர்ந்த ஆடையணிகள் பூணுமலும், அண்டை அயல் இல்லங்களுக்குச் செல்லாமலும் அமைந்திருக்க வேண்டியது பிழைப்புக்கு வேண்டிய பொருள் வைக்காமற் போய் விட்டால், இழிவில்லாத கோலமிடல் நூற்றல் முதலிய தொழில்களால் கற்பு நிலை கெடாமல் பிழைத்துக் கொள்க.

76. குருவின் ஆணை முதலியவற்றை நிறைவேற்றும் பொருட்டுத் தொலை தூரங்கள் போக நேர்ந்தால், அவனை எட்டாண்டுகள் வரையிலும், கல்வி புகழ் இவற்றை நாடிச் சென்றவனை ஆறு ஆண்டுகள் வரையிலும், வேறொரு பெண்ணை நாடிச் சென்றவனை மூன்றாண்டுகள் வரையிலும், பார்த்திருந்தும் அவன் வாராதொழியின், அவனிருக்குமிடமே மனைவி செல்ல வேண்டியது.

77. மனைவி தன் கணவனைப் பகைத்து விலகியிருந்தால், அவன் ஓராண்டு முழுமையும் பார்த்துவிட்டு, அப்பொழுதும் அவள் திரும்ப வராவிடில், அவளுக்குத் தான் கொடுத்திருந்த ஆடை யணி முதலியவற்றை வாங்கிக் கொண்டு, அவளுடன் பேச்சும் கூட்டுறவும் ஒழிக்க. அவளது ஜீவனத்துக்காகக் கொடுத்ததைப் பிடுங்கிக் கொள்ளக் கூடாது.

78. கணவன் சூதாடுகிறவனாயினும், குடியனாக விருந்தாலும், பிணியாளனாயினும், மனைவி அவனுக்குச் செருக்குற்றுப் பணி புரியாதிருந்தால், அவளுக்கு அழகு செய்தல், ஆடை, படுக்கை இவை மறுத்து, மூன்று மாதம் விலக்கி வைக்கவும்.

79. பித்தன், பேடி, பாவி, போகத்தில் விருப்பற்றவன், பாவப்பிணியினன் இப்படியான கணவனை வெறுக்கும் மனைவியின் ஆடை யாபரணம் மறுத்தலும் விலக்கிவைத்தலும் இல்லை.

80. கட்குடியள், தீநடையுடையவள், கொண்டவனுக்கு இரண்டகம் செய்பவள், தீராப்பிணியள், கொடு மனமுடையவள், ஊதாரி இத்தகைய மனைவிக்கு ஜீவனும்சம் கொடுத்து விலக்கிப் பின் மறுமணம் செய்து கொள்க.

81. மலடியான மனைவியை எட்டாண்டுகளின் மேலும், தக்காமல் அடிக்கடி பிள்ளை யிறக்கும் வயிற்றினளைப் பத்தாண்டுகளின் மேலும், பெண் குழந்தையையே பெறுபவளைப் பதினோராண்டுகளின் மேலும், பொல்லாங்கு சொல்கிற பெண்ணை உடனேயும் நீக்கிவிட்டு வேறு மணம் செய்து கொள்க. இம்மனைவியர்க்கு மனமகிழ்ச்சிப் பொருள் யாதும் கொடுக்க வேண்டியதில்லை.

82. கொண்டவன் நலமே வேண்டுகிறவளாக நல்லொழுக்க முடையவளாக இருந்த மனைவி பிணியுற்றவளாயினும், வேறு மணம் வேண்டுவோன் அவள் அனுமதி பெற்றே செய்க. அவளை எஞ்ஞான்றும் அவமதிக்கலாகாது.

83. மூத்த குடி பிணக்குற்று வெளிப்பட்டால், அவளைத் தடுத்துக் காத்துக் கொள்க. அல்லது அவளுடைய பெற்றோரிடம் ஒப்புவிக்க.

84. குடிக்கக் கூடாதென்று கட்டளையிடப்பட்டும், திருமணம் போன்ற திருநாட்களில் குடிக்கும் பின் மூன்று வருண மாதருக்கும், அதுபோன்றே தம்மிச்சையாக ஒரு அவையில் சென்றிருந்து பாடல்கூத்து முதலான களியாட்டயரும் மாதருக்கும், அவர்களைப் பற்றிப் பிரியாது வருமாயின், அவர்களுக்கு மன்னன் ஆறு பொன் குன்றி அபராதம் விதிக்க.

85. துவி ஜாதியினர் தன் இனத்தும் பிறவினத்தும் பெண் எடுத்து மணம் புரிந்தால், அந்த மனைவிமாருக்கு அவ்வவர் வருண முறைப்படி வீடு, ஆடை யாபரணம் முதலிய மரியாதைகளை ஏற்படுத்த வேண்டும்.

86. இவர்களில் சொந்த ஜாதிக்காரியான மனைவியே கணவனுக்கு உடல் பணிவிடை, அன்னமிடல், ஓம காரியம், விருந்தோம்பல், பிக்ஷையிடல் ஆகியவற்றை நாள்தோறும் இயற்றுக. மற்ற ஜாதி மனைவியர் ஒருக்காலும் செய்தலாகாது.

87. தனது குல ஸ்திரீயான மனைவி யிருக்கையில், அவள் செய்யத் தக்கவற்றை வேறு குலத்தினளான மனைவியைக் கொண்டு செய்வித்துக் கொள்ளும் மூடன் பிரம்ம சண்டாளனுக்குச் சரியானவன்.

88. குலத்தாலும் ஒழுக்கத்தாலும் மிக்கவனையும், ஒத்த நலத்தினனையும், ஒத்த இனத்தினனையும் உள்ள ஒரு வரனுக்குத் தனது பெண் எட்டு வயதுக் குட்பட்டவளாயினும் விதிப்படி மணம் புரிவித்து விடலாம்.

89. பெண் பருவமடைந்து விட்டாலும், சாமளவும் தன் வீட்டிலேயே கன்னிகையா யிருந்துவிட்டாலும் கூடக்

குற்றமில்லை. குணமில்லாத ஆடவனுக்கு மாத்திரம் ஒரு பெண்ணைக் கொடுக்கக் கூடாது.

90. ஒரு பெண் தான் பருவமெய்தியது முதல் மூன்றாண்டுகள்வரை தந்தை தன்னைத் தக்க ஆடவனுக்கு மணம் செய்விப்பானென்று எதிர்பார்த்திருக்க வேண்டியது. அப்படி நடைபெறாவிடில், தனக்கேற்றவனைத் தானே தேடிக்கொள்ளவும்.

91. இவ்விதம் தானே கணவனைத் தேடிக்கொள்ளும் பெண்ணுக்கும், அவளை அடைகின்ற ஆடவனுக்கும் யாதொரு பாவமும் நேரிடாது.

92. தானே ஸ்வயம்வரம் செய்து கொள்கிறவள் முன்பு தனக்குப் பெற்றோர் முதலானவரால் வழங்கப் பட்ட அணிகளை எடுத்துக் கொள்ள உரிமையில்லை. அப்படி எடுத்துக் கொண்டால் அது திருட்டுக்குச் சமமாகும்.

93. பருவமடைந்த பெண்ணை மணம் புணர்வோன் அவளைப் பெற்றவர்க்குப் பரியம் கொடுக்க வேண்டாம். ஏனெனில் பருவ மெய்தும் காலத்தில் தன் பெண்ணை அவளது கணவன் கூடுமாறு செய்விக்கத் தவறி விடுகின்ற காரணத்தால் தந்தையின் கடமை தவறிப் போகிறதல்லவா?

94. முப்பது வயதுள்ள ஆணுக்குப் பன்னிரண்டு வயதுள்ள பெண்ணையும், இருபத்து நான்கு வயதுள்ளவன் எட்டு வயதுப் பெண்ணையும் மணக்கலாம். இதற்கு முன்பே விவாகம் புரிய அவசரப்பட்டால், வேதம் ஓதுதல் போன்ற அறச் செயல்கள் தடைப்படுதலும், அதனால் பின்னர் துயருறுதலும் நேரும்.

9 . மனிதர்கள் தெய்வ இச்சையின்படி வந்து வாய்க்கின்ற மனைவியரை அடைகின்றனரே யன்றித் தமது இச்சையின்படியே பெறுவதில்லை. ஆகையால் கற்புடைய

தன் மனைவியைக் காப்பாற்றிக் கொண்டு, தேவ ப்ரீதியான வேள்விகளில் முயன்றிருக்க வேண்டியது.

96. மாதர் சூல் கொள்ளவும், ஆடவர் உருவுண்டாக்கவும் பிரமனால் படைப்புற்றனர். ஆதலால் திருமணமான நாள் முதல் இல்லறத்தாரின் யாகாதி நல்லறக் கடமைகள் இருவருக்கும் பொதுவானவை யாகுமென்றும், கணவன் செய்யும் நல்லறத்தில் மனைவிக்கும் பங்குண்டு என்றும் வேதத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

97. பெண்ணுக்குப் பரியம் கொடுத்தவன் மணம் முடிக்காமல் இறந்து போனால், அவள் சம்மதப்பட்டால், அந்த வரனுடைய தம்பிக்கு அவளைக் கொடுத்துவிடலாம்.

98. ஒருவனுக்குப் பெண்ணை வாக்களித்து விட்டுப் பின்னர் வேறொருவனுக்குக் கொடுப்பதென்பது முற்காலத்தும் இக்காலத்தும் மேலோரால் செய்யப்படவில்லை; எதிர் காலத்திலும் செய்யமாட்டார்கள்.

99. வேத மோதாதவனும் தன் பெண்ணுக்குப் பரியம் வாங்கக் கூடாது. வேதம் ஓதியவர்கள் வாங்கக் கூடாதென்பதைச் சொல்ல வேண்டியதில்லை. அப்படி வாங்குவது மறைமுகமான ஒரு விலையேயாகும்.

100. முந்தைய கற்ப காலங்களில் கூட சுல்கமென்ற பெயருள்ள விலையை வாங்கிக் கொண்டு பெண்ணை விற்பனை செய்வதென்பதை நாம் கேட்டதில்லை.

101. கணவன் மனைவியர் சாமளவும் கற்பு நிலை பிறழாது இருக்க வேண்டும். இதுவே ஆண் பெண்களுக்குரிய நல்லற மென்றறிக.

102. மணம் புரிந்து கொண்ட கணவன் மனைவியர் கற்பு நிலை தவறிய குற்றம் சேராமல், இருவரும் இணை பிரியாமல், அறம், பொருள், இன்பம் ஆகிய பேறுகளை உளுற்றி வர வேண்டியது.

103. கணவன் மனைவியருக்கு மகிழ்வான அறங்களையும், குலமே அழியும் தருவாயில் நடந்து கொள்ள வேண்டிய தருமத்தையும் கூறினேன். இனி தாய பாகம் பற்றியவற்றைக் கேளுங்கள்.

104. தாய் தந்தையர் இறந்த பின் மைந்தர் ஒன்று கூடி, பெற்றோர் தேடி வைத்த பொருளைத் தம்மில் பிரித்துக் கொள்க. ஏனெனில் பெற்றோர் இருக்கும் வரையில் அவர்கள் பொருளில் மைந்தருக்கு அதிகாரம் இல்லை.

105. பிரிவினை செய்து கொள்ளாதபோது, மூத்த பிள்ளையே தந்தையின் ஸ்தானத்தில் குடும்பச் சொத்து முழுவதையும் தானே பொறுப்பேற்று, தம்பிமார்களைத் தகப்பனைப் போல் பரிவுடன் காப்பாற்ற வேண்டியது. தம்பிகளும் அவ்வண்ணனைத் தங்கள் தந்தை போன்று மதித்து நடக்க வேண்டும்.

106. ஏனெனில் மூத்த மகன் பிறந்ததனாலேதான் தந்தை சந்ததியுடையவனாயும் தென்புலக் கடன் தீர்த்தவனாகவும் ஆகிறான். ஆதலால் அவனே பிதுர் தனத்தையும் வைத்துப் படைக்கலாம்.

107. தனக்கு மூத்த பிள்ளை பிறக்கின்றதனாலேயே பிதுர்க்களின் கடனையும் தீர்த்து ஒருவன் தானும் சுவர்க்கம் புகுகிறான் என்று வேதம் கூறியிருப்பதால், அவனே தருமத்தினால் பிறந்த மகன் ஆகிறான். மற்றும் பின்னர் பிறக்கும் பிள்ளைகள் காமத்தாற் பிறந்தவர் ஆகின்றனர்.

108. எனவே உடன் பிறந்த தம்பிமார் தன்னுடன் இணைந்து வாழும் வரையில் அண்ணனானவன், தந்தையைப் போன்று, அவர்களை உணவு, உடை முதலியன கொடுத்துக் காக்க வேண்டியது. இளையோரும் தந்தையைப் போன்ற மரியாதையுடன் அண்ணனை மதித்து நடந்து கொள்ள வேண்டியது.

## பாகப் பிரிவினை

109. மூத்தவன் பண்பினனாக விருப்பின் குலம் விளங்கச் செய்வான்; இல்லையேல் குலத்தையே அழிப்பான். எனவே நல்லொழுக்கமுள்ளவனை மூத்தோன் மிகவும் போற்றத் தக்கவன். மேலோர் நிந்தைக்குட்படாதவன்.

110. அன்புள்ள முன்னோனைத் தாய் தந்தையரைப் போன்று மரியாதையுடனும், அன்பிலனாயின் அவனை அம்மான் முதலான உறவினரைப் போன்றும் நடத்த வேண்டும்.

111. உடன்பிறந்தார் இவ்விதம் இணைந்து வாழலாம். அல்லது நேரியமுறையில் பகிர்ந்தும் கொள்ளலாம். அப்படிப் பிரித்துக் கொண்டால் அறங்கள் வளரும். ஒன்றாக நடைபெற்ற நல்லறங்கள் இதனால் பல வீடுகளில் தனித்தனி நடக்குமல்லவா? எனவே பாகம் செய்துகொள்வது நல்லறத்தின் பாற் பட்டதென்றே கொள்க.

112. எல்லாப் பொருளிலும் மூத்தவன் இருபதில் ஒரு பங்கும், இரண்டாமவன் நாற்பதில் ஒரு பங்கும், மூன்றாமவன் எண்பதில் ஒரு பங்கும் எடுகூறாக எடுத்துக் கொண்டு மிகுதியை அனைவரும் சமமாகப் பிரிக்க.

113. மூவருக்கு அதிகமான பிள்ளைகளாயிருப்பின், மூத்தவனும் ஆக இளையோனும் முறையே இருபதில் ஒன்று, எண்பதில் ஒன்று என்ற அளவிலும், இடைப்பட்ட சகோதரர்கள் தனித்தனி நாற்பதில் ஒன்றுமாக எடுகூறு எடுத்துக் கொள்ள வேண்டியது.

114. பங்கிட வொண்ணாத உயர்ந்த பொருளையும், பசுக்களில் பத்துக்கு ஒன்றும், மூத்தவன் பண்புடையவனாயின் தனிச் சலுகையாகப் பெறுக.

115. பிள்ளைகள் அனைவரும் வேதமோதி நற்கருமங்கள் இயற்றுவோராயின இவ்வித எடுகூறு வேறுபாடுகள் இன்று. என்னும் மூத்தவனாக இருப்பவனுக்குத் தனி

மேன்மை காட்டும் பொருட்டு அவனுக்கு மட்டும் ஏதேனும் உயர்ந்த பொருள் ஒன்றைத் தருக.

116. மேற்கூறியவாறு இருபதில் ஒன்று முதலான எடுகூறுகள் எடுத்துக் கொண்டால், மிகுதியை யாவருமே சமமாகப் பிரித்துக் கொள்க. இல்லையானல் கூறிடும் விதம் இனிக் கூறப்படுவதுபோல் அமையும்.

117. மூத்தவன் இரண்டு பாகம், நேரிளையவன் ஒன்றரை, மற்றையோர் அனைவரும் ஒவ்வொரு பாகமும் என்று பிரித்துக் கொள்ளவும். இது சரியான பிரிவினை தான். ஆயினும் அந்த மூத்தவனும் நேரிளையோனும் கல்வி மான்களாயிருக்க வேண்டும்.

118. இப்படிப் பிரித்துக் கொண்டபின், உடன் பிறந்த பெண் திருமணமாகாதவளாயின், சகோதரர்கள் ஒவ்வொருவரும் தங்கள் பங்கில் நாலில் ஒன்றை அவளுடைய திருமணத்தின் பொருட்டுக் கொடுக்க வேண்டும். இல்லையேல் பாவிகள் ஆவர். ஒருவனுடைய பல தாரங்களுக்கும் சந்ததிகள் இருந்து, அவர்கள் பிரிவினை செய்து கொண்டால், அந்தந்த மனைவியினிடமாகப் பிறந்த ஆண் பிள்ளைகள் தங்களுடன் அதே தாய் வயிற்றில் பிறந்த பெண்ணுக்கு மேற் சொன்னவாறு தனித்தனியே தங்கள் பங்கில் நாலில் ஒன்று தர வேண்டும்.

119. ஆடு, மாடு, குதிரை இவை பங்கிடக்கூடாதவையாக எண்ணிக்கை யிருப்பின், மூத்தவனே அவற்றைக் கொள்க. அல்லது அதற்குக் கிரயம் கட்டி அவரவரும் பங்குத்தொகையைப் பெறலாம்.

120. மூத்தவன் சந்ததியின்றி, அவன் மனையாளிடம் நேரிளையவனல் சந்தானம் ஏற்பட்டால், அந்தப் பிள்ளைக்கு மூத்தவனுக்குரிய எடுகூறு கொடுக்காமலே அனைவரும் சமமாகப் பிரித்துக் கொள்க.

121. ஏனெனில் மூத்தவன் மனைவியிடமாக நேரிளைய தம்பிக்குப் பிறந்த பிள்ளை எடுகூறு பெறத் தகுதியில்லாத வன். தந்தை வயிற்றிற் பிறப்பதே சாலச் சிறந்ததேயன்றி பிறனுக்குப் பிறப்பது ஒருக்காலும் தந்தைக்குப் பிறந்தது போன்று ஏற்புடைத் தாகாது. ஆதலால் முன் கூற்றுப்படி சரியாகப் பகிர்ந்து கொள்க.

122, ஒருவனுக்கு இரண்டு மூன்று தாரமிருந்து, முதல் மனைவியின் பிள்ளை இளையோனுகவும், இளையாளின் பிள்ளை மூத்தோனுயு மிருப்பின் யாருக்கு எடுகூறுகொடுக்க வேண்டுமென்ற ஐயப்பாடு நேர்ந்தால்,

123. மூத்தவளின் பிள்ளை சிறியவனுயினும் மேலான காளை யொன்றை எடுகூறு பெறுக. மற்றவர்களின் வயிற்றிற் பிறந்தோரும் தாய்மாரின் வரிசை முறைப்படி உண்டாகிற மூத்த தன்மையை யொட்டி, அடுத்ததரமான காளைகளைத் தனித்தனி எடுகூருகப் பெறுக. இதில் வருண முறைப்படி தன் குல மனைவியை மூத்தவளாகவும், ஏனையோரை அவர்களின் குல மரியாதைக் கேற்றவாறு இரண்டு, மூன்றாந் தாரமாகவும் மதிக்க. வேறு ஜாதிப் பெண்ணிடமாகப் பிறந்த பிள்ளையின் சொத்துரிமையைக் கேட்க.

124. மூத்த மனைவியின் மைந்தன் வயதில் மூத்தவ னுகவு மிருப்பின்,பதினைந்து பசுக்களையும், ஒரு எருதினையும் எடுகூறு பெறுக. மற்றவர்கள் தாயின் மூத்த தன்மைக் கேற்ப ஆடு முதலியவற்றின் எடுகூறு எடுத்துக் கொண்டு மிகுதியைக் கிரமப்படி பகிர்ந்து கொள்க.

125. ஒருவனுக்குத் தன் குலப் பெண்டிரே இரண்டு மூன்று மனைவிய ரிருந்தால், அவர்களிடமாகப் பிறந்த பிள்ளைகள் மனைவியின் வயதுக் கிரமம் பாராமல் தங்கள் வயதின் முறைப்படியே மூத்த தன்மை பெறுகின்றனர்.

126. ஏனெனில் ஜோதிஷ்டோம யாகத்திற்சொல்லப் படும் சௌப்ரம்மண்ய மந்திரத்தில் இன்னுனுடைய பிதா

இந்த வேள்வியை இயற்றுகிறான் என்று, (வேள்வியியற்றுவோனே, அவனுக்குப் பிறந்த மூத்த மைந்தனின் பெயரைக் கூறி அவனுடைய தந்தை என்று குறிப்பிடல்) குறிப்பிட்டுச் சொல்ல வேண்டுமென்று முனிவரர் பணித்திருக்கின்றனர். (அதாவது, பிள்ளை யில்லாதவன் இந்த வேள்வி யியற்றும் தகுதி பெறவில்லை. இரட்டைப் பிள்ளைகள் உடையவன் அவர்களில் மூத்த பிள்ளையையே இவ் விஷயத்தில் புத்திரனாகக் கொள்ளும் உரிமையுடையனாயிருக்கிறான்.) இவ்வெடு கூறுமுறைமை கலியுகத்திற்கன்று.

127. ஆண்பிள்ளை யில்லாமற் பெண் மட்டுமிருந்தால், அந்தப் பெண்ணை மணம் செய்து கொடுக்கும்போது, "இந்தப் பெண்ணுக்கு உடன்பிறந்தா ரின்மையால், இவளிடமாக உனக்குப் பிறக்கும் பிள்ளையே என் வம்சத்திற்குச் சிரார்த்தம் செய்கிறவனாக இருக்க வேண்டும்!" என்று மணமகனிடம் பேசி ஒப்பச் செய்து கொள்ள வேண்டும். இவளுக்குப் புத்திரிகை என்று பெயர்.

128. இவ்விதம் தன் குலம் பெருகும் பொருட்டு அந்த தக்ஷப் பிரஜாபதியானவர் தமது எல்லாப் பெண்களையும் புத்திரிகைகளாகவே தானம் செய்தார்.

129. அவர் தமது பெண்கள் அனைவரையும் நன்கு அலங்கரித்து, மனமகிழ்ச்சியுடன் வரபூஜை செய்து, இயம தருமனுக்குப் பதின்மரையும், காசியபருக்குப் பதின்மூன்று பேரையும், சந்திரனுக்கு இருபத்தேழு பேரையும் தானம் செய்தார்.

130. தன் ஆன்மாவுக்கும் தான் பெற்ற பிள்ளைக்கும் வேறுபாடில்லை. அந்தப் பிள்ளையைப் போன்றேதான் பெண்ணும். எனவே தன் ஆத்மாவான பெண் இருக்கும் போது, ஒருவன் பொருளுக்கு அயலார் எப்படி உரிமை கொள்ள முடியும்?

131. திருமணத்தில் ஒரு பெண்ணுக்குத் தாய் வீட்டார் கொடுத்த சீதனப் பொருள் யாவற்றையும், அவள் இறந்த பின்னர், கல்யாணமாகாத அவள் வயிற்றுப் பெண் குழந்தைகளே அடையக் கடவர். தாய்வழிப் பாட்டன் பிள்ளை இல்லாதவனுயின், அவன் பொருளையும், பெண் வயிற்றுப் பேரனே அடைக.

132. இப்படிப் புத்திரிகையாகக் கொடுத்த பெண் வயிற்றுப் பிள்ளையானவன், தனது தந்தைக்கும் தன்னைத் தவிர வேறு பிள்ளையில்லையானுல், அந்தப் பொருள் முழுவதையும் கூடத் தானே எடுத்துக்கொண்டு, தந்தைக்கும், தாய் வழிப் பாட்டனுக்கும் தானே பிண்டம் போட்டுக் கடனிறுக்க வேண்டியது.

133. பெண் வழி, மகன்வழிப் பேரப்பிள்ளைகளிடையில் யாதும் வேறுபாடில்லை. ஏனெனில் ஒரே பாட்டன் வழியில் வந்த பெண், பிள்ளை இவர்களைத் தாயாகவும் தந்தையாகவும் முறையே பெற்றவர்கள் ஆதலினுல்.

134. தன் மகளைப் புத்திரிகையாக ஏற்பாடு செய்து ஒருவருக்கு மணம் முடித்துக் கொடுத்த பின்னர், ஒருவருக்குத் தமக்கே சொந்தமாகப் பிள்ளை பிறந்து விட்டால், முன்பு கொடுத்துவிட்ட பெண்ணுக்கும் பின்னர் பிறந்த பிள்ளைக்கும் அவனது பொருள் சமமாகப் பகிர்ந்தளிக்கத் தக்கதாகும். அப்பெண் மூத்தவளாயினும், பெண்ணுக்கு எடுகூறுச் சலுகை மட்டுமில்லை.

135. புத்திரிகையாகக் கொடுத்த பெண்ணும் சந்ததியின்றி இறந்து போனுல், அவளுடைய தாய் தந்தையருக்குப் பிற்காலத்தில், அவர்கள் பொருளனைத்தையும், அவர்களின் பெண்ணை மணந்த மாப்பிள்ளையே யாதொரு தடையுமின்றித் தான் எடுத்துக் கொள்ளவும்.

136. புத்திரிகை யென்று சொல்லிக் கொடுத்தாலும், சொல்லாமலே கொடுத்தாலும், அவளுடைய வயிற்றிற்

பிறக்கும் மைந்தன், பிள்ளையில்லாத தனது தாய்ப்பாட்டனுக்குச் சகல கருமங்களும் செய்து, அவன் பொருளையும் எடுத்துக் கொள்க.

137. மனிதரிடையே பிள்ளை பிறந்நால் சுவர்க்கலோகத்தையும், பேரன் பிறந்நால்—அங்கு நிலையான வாசத்தையும், பிள்ளைக்குப் பேரன் பிறந்து விட்டால் சூரியலோகத்தையும் ஒருவன் பெற்றுய்கிறுன். அதாவது, ஆண் சந்ததி யிருக்கையில், பெண் வழி வந்தவர்க்கு யாதொரு அதிகாரமுமில்லையென்ற கருத்து.

138. தந்தையைப் "புத்" என்னும் நரகத்திற் சேராமற் காக்கின்றபடியால் மைந்தனுக்குப் "புத்திரன்" என்ற பெயராயிற்று. இது பிரமனுலேயே கூறப்பட்டது.

139. மகன் வயிற்றுப் பிள்ளைக்கும் புத்திரிகையாகக் கொடுத்த பெண் வயிற்றுப் பிள்ளைக்கும் வேறுபாடில்லை என்பதற்கு மற்றொரு சான்று. பெண் வயிற்றுப் பேரனும், பிள்ளை வயிற்றுப் பேரனைப்போலவே ஒருவனை இம்மையில் காத்து மறுமையில் நரகம் சேராமற் காக்கிறுன்.

140. புத்திரிகையின் பிள்ளை (ஆணுடன் பிறவாத பெண்வயிற்றுப் பேரன்) சிரார்த்தம் செய்கையில், முன்னம் தன் தாய்க்கும், இரண்டாவது தாய்ப் பாட்டனுக்கும், மூன்றுவது தாய்வழி முப்பாட்டனுக்கும் முறையே பிண்டம் வைக்க வேண்டும்.

141. வேறு கோத்திரத்திலிருந்து வந்தவனேயாயினும் நற்குணமுள்ள தத்துப் பிள்ளை, தன்னைத் தத்தெடுத்தவனுக்குப் பிறந்த பிள்ளையுடன் தத்துச் சொத்தைப் பகிர்ந்து கொள்க.

142. தத்தாகச் சென்று விட்டவன் தன்னைப் பெற்றவன் கோத்திரத்தையும், அவனது சொத்தையும் அடைய முடியாது. அந்தச் சொத்தை எவன் அடைவானே அவனே கருமம் முதலானதும் செய்து கொள்ள

வேண்டியதே யல்லாமல், பெற்ற பிள்ளையாயினும் வேற்றிடத்தில் தத்தாகக் கொடுத்த பின்னர், பெற்றவன்பால் இவனுக்கு யாதொரு கடமையும் இல்லாமற் போய் விடுகிறது.

143. பெரியோர் அனுமதியின்றி மைத்துனன் முதலான மற்றோரைக் கூடியவளுக்கு அதனால் பிறந்தவனும், பெரியோர் அனுமதி பெற்றிருந்தாலும், தர்ம லட்சியமின்றி அனுமதிக்கப்பட்டவர்களைக் காம நுகர்ச்சியால் கூடியவளுக்குப் பிறந்தவனும், கூடா வொழுக்கத்தாலும், காமத்தாலும் பிறந்தவராகையால் அவர்களுக்குப் பங்குரிமை யில்லை.

144. சந்ததியின் பொருட்டுத் தக்கவரான வேற்றோரைக் கூடுவதற்கு அனுமதி பெற்ற மாதரையும், கூடத் தக்கவர் அதற்குரிய விதிப்படி கூடாமல் மாறி ஒழுகுவாராயின், அவர்கள் பாவிகளாகின்றனர். அந்தப் பாவிகளுக்குப் பிறந்த மைந்தனும் பங்குக்கு உரியவனல்லன்.

145. அந்த விதிப்படி அனுமதிக்கப்பட்டவர் கூடி ஒருத்தி யினிடமாகப் பிறந்த பிள்ளையும், அவளது கணவனுக்கே அவள் பெற்ற பிள்ளையைப் போன்று பங்குக்கு உரியவன். அவளை மணந்த கணவனுக்குத் தருமமாகப் பிறந்த புத்திரனாகவும் மதிக்கப்படுகின்றான்.

146. பாகப் பிரிவினைக்குப் பின்னர் சகோதரன் இறந்து போய், அவனுடைய உடைமைகளை வைத்துக் கொள்கிறவன், இறந்தவன் மனைவியையும் காப்பாற்றி, அவளிடமாக விதிப்படி ஒரு பிள்ளையையும் உண்டாக்கி, அவனுக்கே தனது சகோதரன் விட்டுப் போன பொருளையும் கொடுக்க வேண்டும்.

147. மைத்துனன் அல்லது சபிண்டரிடத்துச் சந்ததிக்காகக் கூடியிருக்கப் பெரியோர் அனுமதி பெற்றவளாயினும், அவள் முறையின்றிக் காமத்தால் பெற்றுக் கொண்ட பிள்ளை பங்குக்குரியவ னல்லன். வீணாய்ப் பிறந்தவனாகவே அவன் கொள்ளத்தக்கவன்.

148. இதுவரை விளக்கப்பெற்ற தாயபாக நீதியனைத்தும் ஒத்தகுலத்துப் பெண்ணிடமாக ஒருவனுக்குப் பிறந்த பிள்ளைகளுக்கு உரியவை. இனி பற்பல குலத்து மாதரிடமாகப் பிறந்தோர்க்குரிய பாகப்பிரிவினை ஏற்பாடுகளைக் கேளுங்கள்.

149. அந்தணன் நான்கு குலத்து மாதரை மணந்திருந்தால், அவர்களின் மைந்தர் தமக்குள் மேற்சொல்லுமாறு பிரித்துக்கொள்க.

150. அந்தண மனைவியின் பிள்ளைக்கு ஒரு ஏர் வேலைக்காரன், ஒரு எருது, குதிரை ஆதிய வாகனம் ஒன்று, மோதிரம் முதலிய ஒரு ஆபரணம், ஒரு வீடு மற்றும் எல்லாப் பொருளிலும் ஒவ்வொன்று வீதம் எடுகூறாகக் கொடுக்க.

151. மிகுந்துள்ள பொருள் அனைத்திலும், அந்தண மனைவி பிள்ளை மூன்று பங்கு, க்ஷத்திரிய மனைவி மகன் இரண்டு பங்கு, வைசிய மனைவியின் மகன் ஒன்றரைப் பங்கு, நாலாம் வருணப் பெண்ணிடமாகப் பிறந்த பிள்ளை ஒரு பங்குமாகப் பிரித்துக் கொள்க. நான்கு குலத்துப் பெண்டிரிடமும் சந்ததிகள் இல்லையென்றாலும், இருக்கும் பிள்ளைகள் இந்தக் கணக்குப்படி எடுத்துக்கொள்க.

152. இல்லாவிடில் பங்கிடும் நியாயமறிந்த அந்தண மனைவியின் பிள்ளை, எல்லாப் பொருளையும் பத்துக் கூறாக்கி (தனக்கு எடுகூறில்லாமல்) மேற்கூறுமாறு அனைவரும் பகுத்துக் கொள்க.

153. நான்கு, மூன்று, இரண்டு, ஒன்று என்று வருண முறைப்படி இந்தப் பத்துப் பங்குகள் பிரிக்கப்படும்.

154. முதல் மூவருண மனைவிமாருக்கும் சந்ததிகளிருப்பினும், இல்லையாயினும், நாலாம் வருணத்துச் சந்ததிக்கு ஒரு பங்குக்கு மேலாகக் கொடுத்தல் சரியன்று.

155. பிராம்மண, க்ஷத்திரிய, வைசியராகிய மூவருணத்தாருக்கும் நாலாம் வருணப் பெண்ணிடம் பிறந்த

பிள்ளைக்கு இந்த ஒரு பங்கும் கிடையாதென்பது ஒரு சாரார் கருத்து. திருமணம் செய்து கொள்ளாமல் கூடிப் பெற்ற பிள்ளைக்குத்தான் இந்தக் கொள்கையென்று சிலர் பொருள் உரைக்கின்றனர். ஆதலால் தந்தை பார்த்துத் தனது விருப்பத்தின்படி கொடுக்கும் பொருளை இந்தப் பிள்ளை வாங்கிக்கொள்ளவும்.

156. துவிஜருக்குத் தங்கள் குலத்து மனைவியிடமாகப் பிறந்த பிள்ளைகள் அனைவரும், தங்களில் மூத்தவனுக்கு உரிய எடுகூறு கொடுத்து விட்ட பிறகே, மற்றவற்றை அவனுடன் தாங்களும் சரியாகப் பகிர்ந்து கொள்ள வேண்டும்.

157. நாலாம் வருணத்தவனுக்குத் தனது குலப்பெண் மனைவி யாகலாமே யன்றி மேல் வருணம் அல்லது கீழ் வருணப் பெண்களை மனைவியாக்கிக் கொள்ளக் கூடாது. எனவே அவனுக்கு நூறு பிள்ளைகள் இருந்தாலும், மூத்தவனுக்கு எடுகூறு இல்லாமலேயே அனைவரும் சரியாகப் பகிர்ந்துகொள்ள வேண்டியது.

158. இனி பின்னால் விவரிக்கப்படவிருக்கின்ற பன்னிரு வகையான மைந்தரில் ஆறு வகையினர், சந்ததியில்லாத சபிண்டர் முதலானவரின் பொருளையும், தந்தையின் கோத்திரம், பொருளையும் சேர்த்து அடையத் தக்கவராயும், பின்னுறு வகையினரான மைந்தர் தந்தையின் கோத்திரம் பொருள் இவற்றை மட்டுமே அடையத் தக்கவராயும் உள்ளனர். இவர்களிற் சிலர் தந்தையின் கோத்திரத்தை யடையாமல் சாதாரண உறவினரைப் போன்று தந்தைக்குத் தருப்பணம் மாத்திரம் செய்ய வேண்டியவர்கள். இவர்கள், பொருளை யடையக்கூடிய முறைமையும் மேலே கூறப்படும். இவை மநுவின் கட்டளையே.

159. ஔரசன்—க்ஷேத்திரஜன்,—தத்தன்,—கிருத்திரிமன்,—கூடோற்பன்னன்,—அபவித்தன்— இவ்வாறு பிள்ளை

களும், தந்தையின் பொருளுக்கும், பிள்ளையில்லாத சபிண்டர் பொருளுக்கும் உரியவர்.

160. கானீனன்—சகோடன்—கிரீதன்—பவுனற்பவன்—ஸ்வயந்தத்தன்—சௌத்திரன் இவ்வறு வகை மைந்தரும் தந்தையின் பொருளுக்கு மட்டுமே உரிமையுடையவர்.

161. சம்பு முதலியவற்றால் ஆற்றைத் தாண்டுவோன் அடையும் நன்மையைத்தான் க்ஷேத்திரஜன் முதலான பதினொரு வகையினரான மைந்தரில் ஒருவரைத் தந்தை தனது பரலோக சாதகமாகக் கருதுவதால் பெறுகிறான்.

162. க்ஷேத்திரஜன் பிறந்தபின்னர் ஔரசன் பிறந்து, அந்த க்ஷேத்திரஜனைப் பெற்றவனுக்கு அவனுடைய சொந்த மனைவியினிடமாகப் பிள்ளை பிறக்காவிட்டால், அப்போது இவ்விரு பிள்ளைகளும் அவரவரைப் பெற்ற தந்தையின் பொருளை அவரவர் அடைய வேண்டியது.

163. ஔரசன், பிறகே பிறந்தாலும், அவனே தந்தையின் செல்வத்திற்கு எஜமானாகிறான். க்ஷேத்திரஜன் தவிர்த்த பதின்மருக்கும், தனக்குப் பாவம் நேரிடாவாறு, அவர்களுக்குச் சோற்றுக்கும் உடைக்கும் மட்டும் ஔரசன் வகை செய்க.

164. தந்தையின் சொத்தில் பகிர்ந்து கொள்ளும் ஔரசன், க்ஷேத்திரஜன் குணத்துக்குத் தக்கபடி, ஆறில் அல்லது ஐந்தில் ஒரு பங்காவது கொடுக்க வேண்டும்.

165. ஒருவனுடைய பொருளுக்கு ஔரசனும் க்ஷேத்திரஜனும் உரியவர்கள். மற்ற தத்தன் முதலான பதின்மரும முறையே கோத்திரத்திற்கும் பொருளுக்கும் உரியவர்கள்.

166. **ஔரசன்** என்பான் யாரெனில், ஒருவன் தன் குலத்துப் பெண்ணை அவள் கன்னிகையாயிருக்கும் போது விதிப்படி மணந்து அவளிடமாகப் பெறுகின்ற பிள்ளையே.

167. சந்தானமில்லாமல் இறந்து போனவன், பேடி, சந்தானம் அடைய முடியாத பிணியுள்ளவன், இவர்களின் மனைவியரிடம் மைத்துனன் முதலானவர்களால் முன்பு

விதிக்கப்பட்டபடி ஏற்படுகின்ற பிள்ளையே க்ஷேத்திரஜன் எனப்படுவான்.

168. தாய் தந்தையர் சேர்ந்தோ தனித்தோ தங்கள் வயிற்றிற் பிறந்த பிள்ளையைத் தங்கள் குலத்தவனை பிள்ளையில்லாமல் வருந்தும் ஒருவனுக்கு,"இனி இப்பிள்ளை உனக்கே உரியவன்." என்று தாரை வார்த்து ஒப்புக் கொடுத்த பிள்ளையே "தத்தன்"

169. தன் குலத்தவனாயினும், பிதுர்க் காரியங்களை இயற்றுதல்—விடுதல் இவற்றின் விளைவுகளை நன்கு அறிந்தவனையும், தாய்தந்தையரைப் பேணுகின்றவனையும் இருக்கிற நற்குணப் பிள்ளையைத் தனது பிள்ளையாக மதித்து ஏற்றுக் கொள்ளப் படுபவனே "கிருத்திருமன்."

170. கணவனுடன் வாழ்ந்திருக்கும் ஒருத்தியை, அவள் கணவனறியாமல் யாரோ பர புருஷன் சுகித்துப் பெற்ற பிள்ளை, அவள் கணவனுக்குக் "**கூடோற்பன்னன்**" ஆகிறான்.

171. தாய் தந்தையர் இருவராலுமோ ஒருவராலோ அனாதையாக எறிந்து விடப்பட்ட பிள்ளையை எடுத்து வளர்ப்பவனுக்கு அந்தப் பிள்ளை "**அபவித்தன்**" ஆகிறான்.

172. பெற்றோரின் ஆதரவில் இருந்தபோது மண மாகாத பெண் ஒருத்தி, கள்ள நட்பினால் பெற்றெடுத்த பிள்ளை, பின்னர் அவளைத் திருமணம் புரியும் கணவனுக்குக் "**கானீனன்**" ஆகிறான்.

173. சூல் கொண்டிருக்கும் பெண்ணை, அவ்வுண்மை யறிந்தோ அறியாமலோ மணம் புரிபவனுக்கு, பின்னர் அச்சூலில் பிறக்கும் பிள்ளையை "ஸகோட" புத்திரன் என்று கூறுகின்றனர்.

174. பிள்ளை யில்லாதவன் இன்னொருவருடைய பிள்ளையைப் பெற்றோரிடமிருந்து விலைக்கு வாங்கிக்

கொண்டால், அப்பிள்ளை இவனுக்குத் தக்கவனாயினும் தகானாயினும் அவனைக் **"கிரீத புத்திரன்"** என்று கூறுவர்.

175. கணவனால் விலக்கப்பட்டவள் அல்லது விதவை யொருத்தி தன் விருப்பத்தினால் ஒருவனைக் கூடிப் பெறும் பிள்ளை, அப்பிள்ளையைக் கொடுத்தவனுக்குப் **"பௌநற்பவன்"** ஆகிறான்.

176. மேற்சொன்ன பெண் கன்னி கழியாதவளாக இருந்தால், அவளை அடைபவன் மறுமண விதிப்படி மணந்து கொண்டு அவளைக் கூடலாம். (சிலர் இதற்கு வேறு விதமாகப் பொருள் சொல்லுகிறார்கள். அதாவது, தன்னை இன்புறுத்த முடியாத கணவனை விட்டகன்று, மற்றொருவனைச் சில காலம் சார்ந்திருந்து, பின் திரும்பவும் தனது மணவாளனையே அடைய வருவாளாயின், அவளை மறுமண விதிப்படி ஏற்றுக் கொள்ளலாம் என்பதே.)

177. தாய் தந்தையர் இறந்ததனாலோ, அவர்களால் கைவிடப்பட்டோ, தானாகவோ, ஒரு பிள்ளை வேறொருவனுக்குப் பிள்ளையாக வந்தடைந்தால், அவனைச் **சுயதத்தன்** என்று கூறுவர்.

178. தான் மணம் புணர்ந்த நாலாம் வருணப் பெண்ணிடமாக அந்தணன் பெற்ற பிள்ளை செய்யும் தென்புலக் கடன்கள் ஒருவனுக்குப் பரலோக சாதன மன்றாதலால், அப்பிள்ளை இருந்தும் இறந்தது போலாகும். எனவே இவ்விதப் பிள்ளையைப் **பார்சவ புத்திரன்** என்றும், **சவுத்திரன்** என்றும் கூறுவர்.

179. தனது வைப்பு அல்லது வேலைக்காரன் மனைவி இவர்களிடம் ஒரு நாலாம் வருணத்தானுக்குப் பிறந்த பிள்ளை, அவனைப் பெற்ற தந்தையின் விருப்பத்தால், அவனுடைய மற்றப் பிள்ளைகளுடன் பாகத்தை யடைதல் நீதியே. இது நடைபெற்றும் வருகிறது.

180. ஔரச புத்திரனில்லாமையால் சிரார்த்தம் முதலான கருமங்கள் அழிந்து போகும். எனவே அவ்விதம் அவை கெடாதவாறு ஏனைய பதினொரு வகையான பிள்ளைகளையும் புத்திரரென்றே பெரியோர்களான முனிவரர் கூறுகின்றனர்.

181. க்ஷேத்திரஜன் முதலிய பதினொரு வகையினரும், ஔரசன் இருக்கையில், தந்தைக்குக் கடனிறுக்கத் தகுதியற்றவர்கள். உண்மையில் தங்களைத் தோற்றுவித்த ஒருவனையே சார்ந்து கொள்ள வேண்டியவர், "பௌநற்பவன்—சவுத்திரன்"—இவ்விருவரும், அன்னியரால் உண்டு பண்ணப் படாவிடினும், வைதிகக் காரியங்களுக்குப் பயன்பட மாட்டார் என்பதனால், மொத்தமாய் இங்கு பதினொரு புத்திரர்களையும் சேர்த்தே கூறப்பட்டது.

182. ஒரு தாய் தந்தையரிடம் தோன்றிய சகோதரர் பலருக்குள் யாராவது ஒருவனுக்குப் பிள்ளையிருந்தாலும்; அவனால் அவன் தந்தையின் சகோதரர் அனைவருக்கும் புத்திர பாக்யம் இருப்பதாகவே கொள்ளப்பட வேண்டுமென்று மநு கூறியுள்ளார். எனினும் ஒருவனுக்குப் பிள்ளை, பெண்டு, மகள், தந்தை, தாய், உடன்பிறப்பு இவர்களில்லாதபோது மட்டுமே, சகோதரன் பிள்ளைக்குக் கர்மாதிகாரமும், சொத்துரிமையும் ஏற்படுமென்று சாத்திரம் கூறினாலும், சகோதரன் பிள்ளை ஒருவன் இருக்கும்போது, ஒருவனுக்கு க்ஷேத்திரஜன் முதலான பதினொரு வகையைச் சார்ந்த பிள்ளைகளை விரும்பக் கூடாதென்னும் கருத்தையே இதன் பொருளாகக் கொள்ளவேண்டும்.

183. ஒருவன் மனைவியர் பலரில் ஒருத்திக்குப் பிள்ளையிருந்தாலும், அம்மனைவியர் அனைவருமே சந்ததியுடையவர்களே ஆகின்றனர். இங்கும் மேற்கூறிய விளக்கமே கொள்க.

184. ஔரசன் ஆதிய மேலான உரிமையுடைய பிள்ளைகள் இல்லாதபோது, பின்வரிசையினரான—பிள்ளை

கள் தந்தையின் பொருளை எடுத்துக் கொள்ளலாம். பௌநற்பவன் முதலியோர் எண்ணிக்கை மிகுந்தவராயின், அனைவரும் சரியாகப் பகிர்ந்து கொள்க.

185. ஒருவனுக்கு ஔரசனில்லாமல், வேறு வகைப் பிள்ளைகளிருக்கும்போது, அவனுடைய சொத்தை அவனுடன் பிறந்தாரோ, தந்தையோ எடுத்துக் கொள்ளலாகாது. வேறு வகைப் பிள்ளைகளோ, மனைவியோ பெண்ணோகூட இல்லையாயின் மட்டுமே அவர்கள் எடுத்துக் கொள்ளலாம்.

186. மூன்று தலைமுறையினரான தந்தை, பாட்டன், முப்பாட்டன்களுக்குப் பிள்ளைகள் பிண்டம் முதலியவை தரவேண்டியவராதலால், அம்மூவரின் உடைமைகளுக்கும் க்ஷேத்திரஜன் முதலிய பிள்ளைகளே யன்றி வேற்றோர் உரிமை பெற்றிருக்கவில்லை.

187. பிள்ளையில்லாதவன் பொருளைப் பெண்வழிப் பேரனும், அவனில்லாவிடில் மனையாளும், அவள் இல்லாவிடில் மகளும், அவளில்லாவிடில் பெற்ற தந்தையும், தந்தையுமில்லாவிடில் ஈன்ற தாயும், அவளும் இன்றேல் உடன் பிறந்தாரும், அவர்களுமில்லையேல் அவர் தம் பிள்ளைகளும், சகோதர புத்திரரும் இல்லையானல் தந்தையைப் பெற்ற பாட்டியும், பின்னர் ஒன்றுவிட்ட சகோதரர் பிள்ளைகளும், மற்றும் சபிண்டரும், மேலும் சோதகரும், இவர்களுமில்லாவிடில் தாயுடன் பிறந்த அம்மான் முதலிய உறவினரும், அல்லாது ஆசார்யனும், பிறகு சீடனும், இல்லையேல் ஒருசாலை பயின்றவனும், இவர்கள் யாருமில்லாத போது நாட்டு மன்னனும் முறையே அடையக் கடவர்.

188. ஆனல் அந்தணனுக்கு மேலே கூறிய வரிசையில் ஒருசாலை மாணவர் வரையிலும் யாருமில்லாத போது, அவன் பொருளை மூன்று வேதங்கள் ஓதி உள்ளும் புறமும் தூயவராய்ப் பொறுமை மிகுந்திலங்கும் அந்தணர்

அடைவர்; இதனால் இறந்து போனவனுக்குச் சிரார்த்த முதலிய கடன்களில் குறைவிராது.

189. ஏனென்றால் பொருளுக்குடையவரான மேற்சொன்னவர் யாருமில்லாது இறந்த அந்தணன் பொருளை. மன்னன் தான் அடையாமல், மேலான அந்தணர்க்கே வழங்க வேண்டுமென்ற அறநீதி இருப்பதால், அவ்விதம் செய்து, ஏனையோர் பொருளை மட்டும் மன்னன் பெறுக.

190. புத்திரனில்லாது இறந்து போனவனின் மனைவி, கணவன் கோத்திரத்து ஒருவனைக் கூடி விதிப்படி மகனைப் பெற்றுக் கொண்டு, அவனுக்குக் கணவன் ஈட்டிய பொருளைக் கொடுக்கவும்.

191. பிள்ளை பிறந்தபின் கணவ னிறந்து போனால் பின்னர் மனைவி மற்றவனுக்கொரு பிள்ளையையும் பெறுவாளாயின், இரு பிள்ளைகளும் தனித்தனி அவரவர் தந்தையின்பொருளை அடைய வேண்டியதேயன்றி, இரண்டையும் ஒன்றாக்கிப் பகிர்ந்து கொள்ளக் கூடாது.

192. தாய் மரித்த பின் அவள் விட்டுச் சென்ற செல்வத்தை அவள் வயிற்றிற் பிறந்த ஆண்களும் மணமாகாத பெண்களும் சரியாகப் பிரித்துக் கொள்ள வேண்டியது. கல்யாணமாகிவிட்ட பெண்களுக்குக் கொஞ்சம் பொருளை மரியாதைக்குக் கொடுக்க வேண்டியது.

193. பெண் வயிற்றிற் பிறந்த திருமணமாகாத பேரத்திகளுக்கும் அன்பை முன்னிட்டுப் பாட்டியின் சொத்தில் கொஞ்சங் கொடுக்க வேண்டியது.

194. திருமணத்தில் தந்தையினால் தீயின் முன் வைத்து வழங்கியது, புக்ககம் செல்லும்போது தந்தை கொடுத்தனுப்பியது, கணவன் பிரியத்தினால் வழங்கியது. திருநாட்களில் சகோதரன் கொடுத்தது, தாய் கொடுத்தது, உறவினர் மகிழ்ச்சியுடன் பரிசளித்தது ஆகச் ஸ்தனம் அறுவகைப்படும்.

195. இவ்வகைச் சீதனங்கள் ஆறினையும், திருமணத்தின் பின்னர் பிறந்தகத்தாரும் புக்ககத்தாரும் அவ்வப்போது அன்புடன் பரிசாகக் கொடுத்தவற்றையும், கணவன் அன்பினால் அவளுக்குக் கொடுத்தவற்றையும் ஆக இவ்வாறு சேர்ந்த அவளது பொருளனைத்தையும், அவளிறந்த பின்னர், அவளது பிள்ளைகளும் மணமாகாத பெண்களும், தந்தை யிருந்த போதிலும், தம்மில் பங்கிட்டுக் கொள்ள வேண்டியது.

196. பிராமம், தைவதம், ஆருடம், காந்தருவம், பிராஜாபத்தியம் ஆகிய இவ்வைந்து வகைத் திருமணங்களினாலும் வாய்த்த மனைவியின் சீதனப் பொருளை, அவள் பிள்ளையோ பெண்ணோ இல்லாமல் இறந்து போய்விடின், கணவன் எடுத்துக் கொள்க.

197. ஆசுரம், இராக்கதம், பைசாசம் இம் மூன்றுவித மணங்களினால் வாய்த்த மனைவியரின் அறுவகைச் சீதனப் பொருளை, அவள் பிள்ளை பெண்களில்லாது இறந்த போது, அவளது தாய் தந்தையரே எடுத்துக் கொள்க.

198. அந்தணன் மணந்து கொண்டிருந்த இரண்டு மூன்று ஜாதி மனைவியரின் சீதனப் பொருளை, அவர்களில் யாருக்கேனும் பெண் பிள்ளை கணவன் யாருமில்லாத போது, பார்ப்பனச் சக்களத்தியின் பெண்கள் எடுத்துக் கொள்க. பெண்களில்லாவிட்டால், பிள்ளைகள் அதனை எடுத்துக் கொள்ளலாம்.

199. பல சகோதரர்களுக்கும் சொந்தமான அவிபக்த குடும்பப் பொருளைக் கொண்டு மாதர்கள் தங்களுக்கு யாதொரு ஆபரணம் முதலியவற்றை வாங்கிக் கொள்ளக் கூடாது. கணவன் உத்தரவின்றி அவன் பொருளையும் தாங்கள் உபயோகிக்கக் கூடாது. அப்படி எடுத்துக் கொள்பவை எதையும் அவர்களுக்குரிய சீதனமாகக் கருதுவதற்கில்லை.

200. கணவ னிருக்கும்போது மனைவி அணிந்திருந்த அணிகளை, அவள் இறந்த பின்னர், அவனுடைய சகோதரர்கள் பிரித்துக் கொள்ளக் கூடாது.

201. பேடி, பாவி, பிறவிக் குருடன், பிறவிச் செவிடன், பித்தன், மூடன், ஊமையன், நொண்டி முதலிய மற்றோரும் பங்குக் குரியரல்லர்.

202. ஆனால் மேற்கூறிய யாவருக்கும் அவர்களிறக்கும் அளவும் உணவு உடைக்குக் கொடுக்கவேண்டும். இல்லாவிடில் பாவம் வரும்.

203. ஒருக்கால் மேற்கூறியவர்கள் விரும்பி மணந்து கொண்டால், அப்பெண்களிடம் அவர்களாலோ, விதிப்படி மற்றவராலோ சந்ததி யேற்பட்டாலும், தத்தன் முதலிய பிள்ளையை அவர்கள் ஏற்படுத்திக் கொண்டாலும், அவர்களுக்குச் சரிபாகம் கொடுக்க.

204. தகப்பனுக்குப் பின் குடும்பத்தில் மூத்த பிள்ளை தனது உழைப்பால் யாதேனும் செல்வ மீட்டினால், அக்காலத்தில் கல்வி பயின்றிருக்கும் தம்பிகளுக்கு மட்டும் அப்பொருளில் பாகம் கொடுக்கவும். மற்ற சகோதரர்களுக்கு அதில் பங்கு கொடுக்க வேண்டியதில்லை.

205. பிரிவினை செய்த பின்னரோ முன்னரோ சகோதரர்கள் கூடித் தொழில் செய்து சேர்க்கும் செல்வத்தை யாதொரு எடுகூறுமில்லாமல் பிரித்துக் கொள்ளத் தடையொன்றுமில்லை.

206. கல்வியினாற் பிரசங்கம் செய்து ஈட்டிய பொருள், தோழமையினால் பெற்ற செல்வம், திருமணத்தில் மாமனார் முதலியவர்களால் வரப் பெற்ற பரிசுப் பொருள், யாரேனும் மரியாதை செய்து அர்ப்பணித்தவை, இவை அவரவர்க்குரியனவே யன்றிப் பகிர்ந்து கொள்ள வேண்டியதில்லை.

207. சகோதரர்களில் ஒருவன் உத்யோக முதலியவற்றால் பொருளீட்ட வல்லமை யுடையவனாகித் தந்தை

யின் பொருளை வேண்டாமென்று விட்டால், அவனுக்கே தேனும் சிறிது கொடுத்து அவனை வேருக்கி வைக்கவும். இல்லையென்ருல் அவனுடைய பிள்ளைகள் முதலியவர் பிற் காலத்தில் வழக்கிடுவர்.

208. தந்தையின் பொருளை அழிக்காமல் ஒருவன் தனியே செல்வமீட்டினுல், விருப்பப்பட்டு அதனையும் சகோதரர்களுடன் பகிர்ந்து கொள்ளலாம், கொள்ளா மலும் தானே வைத்துக் கொண்டு விடலாம்.

209. தந்தை பறிகொடுத்த ஒன்றை, அவனது பிள்ளை களில் திறமிக்க ஒருவன் மீட்டுக் கொண்டு வந்தாலும், அது அவனது சொந்தப் பொருட் செல்வமே யாதலால், அவன் விரும்பாவிடில் அதில் யாரும் பங்கு கேட்கக் கூடாது.

210. சகோதரர்கள் பகிர்ந்து கொண்ட பின், மீண்டும் ஒன்று கூடி, சில காலம் சென்று மறுபடியும் பிரித்துக் கொண்டால், அப்போது எடுகூறு யாதுமில்லா மல் சரியாகப் பகிர்ந்து கொள்க.

211. இவ்விதம் பகிர்ந்து கொள்ளும்போது, மூத்த வனே இளையவனே இறந்து போயினும், தேசாந்தரம் சென்று விட்டாலும்கூட, அவர்தம் பங்கு இல்லாமற் போகாது. பின் என்னவாகுமென்ருல் :

212. முறையே அவர்களின் பிள்ளை—மனைவி—தந்தை தாய் இவர்களும், இல்லாவிடில் ஏனைய சகோதரர்களும், அவர்களில்லாவிடில் சகோதரிகளும், அவர்களும் இல்லா விடில் பின்னேதர சகோதரர்களும் முறையாகப் பிரித்துக் கொள்ள வேண்டியதாகும்.

213. பொருள் ஆசையால் தம்பிகளை வஞ்சிக்கிற முன்னேன், முன்னேன் என்ற மரியாதையும் அதற்குரிய எடுகூறும் பெறத் தகாது. அவனுக்கு ராஜ தண்டனையும் கிடைக்க வேண்டும்.

214. சூதாடுவோன், வேசிலோலன், இவ்விதக் கெடு நடையுடைய சோதரர்களும் பங்குக் குரியரல்லர். மூத்தவன், தன் வசமாய்த் தந்தையின் பொருளிருக்கும்போது; அதைக் கொண்டு தனக்கு ஒரு தனி லாபத்தைச் சம்பாதித்துக் கொள்ளக்கூடாது.

215. பிரிவினைக்கு முன்னர் சகோதரர்கள் வெளியிற் சென்று பொருள் தேடிச் சேர்த்தால், எடுகூறின்றி அனைவரும் சமமாகப் பிரித்துக் கொள்ளுமாறு தந்தையானவன் கட்டளையிட வேண்டியது.

216. தந்தை தனது பிள்ளைகளுடன் பிரித்துக் கொண்டால், அதன் பிறகு தனக்குப் பிறக்கும் பிள்ளைக்குத் தனக்காக வைத்துக் கொண்ட பொருளைக் கொடுக்க. அல்லது, பிரிவினைக்குப் பின்னர் பிள்ளைகள் தந்தையுடன் சேர்ந்தே இருந்து வருவராயின், பின்னர் பிறந்த பிள்ளையையும் தங்களுடன் சேர்த்துக் கொண்டு, பின்னரே சமமாகப் பிரித்துக் கொள்க.

217. பாகப் பிரிவினை செய்து கொடுத்து விட்ட தந்தைக்குப் பின்னர் பிறக்கும் பிள்ளை சந்ததியில்லாமல் இறந்து போனால், அவனுடைய பாகத்தைத் தந்தையே வைத்துக் கொள்ளலாம். அவனில்லாவிடில் தாயோ அவளும் இல்லாவிடில் இறந்தவனுடைய தந்தையைப் பெற்ற பாட்டியோ அந்தச் சொத்தை அடைய வேண்டியது.

218. கடனையும் ஆஸ்தியையும் பிரித்துக் கொண்ட பிறகு மேலும் அவை இருப்பதாக ஒரு காலத்தில் வெளிப்பட்டால், அதனையும் எடுகூறில்லாமல் சரியாகப் பகிர்ந்து கொள்க.

219. சொற்ப விலையுள்ள ஆடை, ஊர்தி, உணவு முதலியனவும், கிணறு, வேலைக்காரி, அமைச்சன், புரோகிதன், தெருக்குறடு, வழிநடை இவைகளையும் பகிர்ந்து கொள்ளக் கூடாது. இவற்றை யாரார் வசமாக

வைத்துக் கொண்டிருக்கிறார்களோ அவர்கள் வசமே மேலும் இருந்து வர வேண்டியது.

220. இதுவரை மைந்தர்கள் செய்து கொள்ளத்தக்க தான தாய பாகத்தையும், க்ஷேத்திரஜன் முதலான புத்திரர்கள் செய்ய வேண்டிய சிரார்த்த விதிகளையும் சொன்னேன். இனிக் கவருடலைப் பற்றிக் கூறக் கேளீர்.

## கவருடல் முதலிய குற்றங்களும், தண்டனைகளும்

221. மேற்சொல்லும் விளக்கங்களின்படி யமைந்த தியூதம், சமாகுவயம் இவ்விரண்டையும் மன்னன் தன் நாட்டை விட்டு அகற்ற வேண்டும். இவ்விரண்டு குற்றங் களும் மன்னர்க்கு அழிவு தருவனவாகும்.

222. இவை யிரண்டும் பகிரங்கக் களவு ஆதலால் இவற்றை அடக்குவதில் மன்னன் முயற்சியுடன் இருக்க வேண்டும்.

223. கவறு, சதுரங்க முதலியவற்றால் ஆடல் தியூதம் என்றும், ஆடு, கோழி, கடா, மல்லன் முதலியவற்றால் பந்தயம் கட்டிப் போர் பொருதுவித்தல் சமாகுவயம் என்றும் கூறப்படும்.

224. இவ்விரண்டும் செய்பவன், செய்விப்பவன், பூணூல் முதலிய அந்தணர் அடையாளங்களைத் தரிக்கும் இதரர் ஆகியோரை அங்கச் சேதம் முதலிய தண்டனை களை மன்னன் செய்ய வேண்டும்.

225. சூதாடுவோன், கூத்தன், இசைஞன். கொடிய நடையுடையவன், வேத ஸ்மிருதிகளைப்பழிப்பவன், விரத அனுஷ்டான மில்லாதவன், உயிருக்கிறுதி நேரிடுமென்ற அவல நிலை யில்லாத போதும் குலத் தொழிலைப் புறக் கணித்து மற்றொன்றை மேற்கொள்ளுவோன், குடியன் இவர்களை மன்னன் தனது எல்லையை விட்டுப் புறம் போக்க வேண்டும்.

226. திருடரான மேற்கூறிய சூதர் முதலானோர் இருந்தால் வஞ்சம் முதலிய தீச்செயல்களால் நல்லொழுக்கமுடைய மக்களையும் இவர்கள் கெடுப்பார்கள்.

227. முன்னாளிலும் சூதினால் பகை அதிகரித்தோர் தொகை கொஞ்சமன்று. ஆனதால்அறிந்தோர் விளையாட்டுக்கும் சூதாடல் கூடாது.

228. மறைந்தோ, பலரறியவோ சூதாடுவோனை மன்னன் தன் விருப்பம் போலெல்லாம் தண்டம் விதிக்கலாம்.

229. தண்டனை பெற்ற சூதர்கள், க்ஷத்திரியன் முதலான மூவர்ணத்தவராக விருந்து, தண்டப் பொருளைக் கொடுக்க வக்கில்லாமற் போனால், அதற்கு இணையான கடும் வேலையைச் செய்தாவது அதனைக் கழிக்கலாம். அந்தணன் மாத்திரம் சிறுகச் சிறுகப் பொருளீட்டிக் கொடுக்கலாம்.

230. மாதர், இளைஞர், கிழவர், பித்தர், வறிஞர், பாவப் பிணியினன் இவர்கள் சூதாடுவராயின், சாட்டை, மரப்பட்டை, கயிறு, பிரம்பு இவற்றால் அடித்தல், கட்டி வைத்தல் ஆகிய தண்டனைகள் விதிக்க.

231. அரசாங்கப் பொறுப்புக்களில் உள்ள அதிகாரிகள் வழக்காளிகளிடம் லஞ்சம் பெற்று வழக்கின் உண்மையைக் கெடுப்பின், அவ்வதிகாரிகளின் எல்லாப் பொருளையும் மன்னன் கவர்ந்துகொள்ளவும்.

232. பொய்ச் சாசனம் தயாரித்தல், அரசன், மந்திரி நட்பு, அரண். கோசம், கோல், அரசு இவற்றைப் பழித்தல், மாதா, இளைஞன், அந்தணன் இவர்களைக் கொல்லுதல் அல்லது பகைவரிடம் காட்டிக் கொடுத்தல் இக்குற்றங்களுக்கு அரசன் மரண தண்டனை விதிக்கவும்.

233. கடன் கோடல் முதலிய வழக்குகளில் நீதிபதியினால் வழங்கப்பட்ட தீர்ப்புக்களையும், குற்றங்களுக்கு விதித்த தண்டனைகளையும், தக்க காரணமின்றி மன்னன் மாற்றுதல் கூடாது.

234. அமைச்சனோ, நீதிபதியோ ஒரு வழக்கை தாக்ஷண்யத்தினால் அநீதியாகத் தீர்ப்புச் செய்தால், அதனை உடைத்து நீதி வழங்குவதுடன், அநீதி வழங்கியவர்களுக்கு ஆயிரம் பணம் தண்டம் விதிப்பது மன்னன் கடமை.

235. பிரம்மஹத்தி செய்தவன், கள்ளுண்ட பிராம்மணன், அந்தணன் பொன்னைத் திருடியவன், குரு மனைவியைக் கூடியவன் இந்நான்கு பேரும் பெரும் பாவிகள்.

236. இவர்கள் கழுவாய் செய்து கொள்ளாவிடில், சரீர தண்டனையும், பொருள் அபராதமும் தக்கவாறு அடையக் கடவர்.

237. குரு மனைவியைக் கூடியவன் நெற்றியில் பழுக்கக் காய்ச்சிய இரும்புச் சலாகையால் பெண் குறியைப் போலவும், கள்ளுண்ட பிராம்மணன் நெற்றியில் சுராத்வஜத்தைப் போலவும், அந்தணன் பொன்னைத் திருடியவன் நெற்றியில் நாய்க்காலைப் போலவும், பிரம்மஹத்தி செய்தவன் நெற்றியில் கவந்த புருஷனைப் போலவும் அவர்கள் சாகும் வரையில் அழியாத முத்திரையிட வேண்டியது.

238. இந்தப் பாவிகளை உடன் வைத்து உண்ணக் கூடாது. இவர்களுக்கு வேள்விகள் செய்வித்தலும், வேதம் ஓதுவித்தலும், திருமண சம்பந்தம் கொள்ளலும் கூடாது. இவர்கள் எந்த நற்கருமத்திற்கும் தகாதவர். ஆகையால் தீயர்களாய்த் திரியக் கடவர்.

239. இப்படி அடையாளம் கொண்ட பாவிகளைப் பங்காளிகளும், அம்மான் முதலிய உறவினர்களும் விலக்கி விட வேண்டும். அவர்களுக்கு இரங்கவும், வணங்கவும் கூடாது. இது மநுவின் கட்டளை.

240. இப்பாவிகள் அந்தணராயினும், தக்க கழுவாய் இயற்றி விட்டாரானால், நெற்றியில் சூடு போடாமல், ஆயிரம் பணம் அபராதம் மட்டும் விதிக்க.

241. தன்னை அறியாமல் இப்பாவங்களை இயற்றி விட்டுக் கழுவாய் செய்து கொண்ட அந்தணனுக்கு, 500 பணம் தண்டமும், அறிந்து செய்தால், அவன் பொருளோடு தேச ப்ரஷ்டம் செய்தலும் வேண்டும்.

242. ஏனையோர் அறியாமற் செய்தால், அவர்களது பொருள் முழுவதையும் கவர்க. அறிந்து செய்தால், பொருள் பறிவதுடன், தேசப்ரஷ்டம் செய்க. இவர்களுக்குக் கொலைத்தண்டமும் உண்டு என்பது சிலர் கொள்கை.

243. நீதி அறிந்த மன்னன், இவர்களிடம் பெற்ற தண்டப் பொருளையும், பறிமுதல் செய்த பொருளையும். தானே எடுத்துக் கொள்ளக் கூடாது. எடுத்துக் கொண்டால், அந்தப் பாவிகளின் தீவினை மன்னனைச் சாரும்.

244. அந்தப் பொருளைத் தண்ணீரிலாவது அந்தணரிடமாவது விநியோகிக்க.

_45. நெறி பிறழ்ந்த அரசனை ஒறுப்பவன் வருணன். சகல லோகங்களுக்கும் பாவச் செயல்களின் கழுவாய் விதிக்கும் மேன்மை வேதமோதிய அந்தணர்க்குரியது. எனவே சகல அபாரதப் பொருளும் இவ்விருவர்க்கும் உரியனவாகின்றன.

246. மகாபாவிகளின் மேற்சொன்ன குற்றப் பொருளைத் தானே கவர்ந்து கொள்ளாத மன்னனுடைய நாட்டில் பிறப்பு இறப்புக்களும் உரிய காலத்தில் நடைபெறும். மக்களும் நீண்ட ஆயுளுடையவராகின்றனர்.

247. விவசாய விளைவுகளும் வைசியர்க்கு நற்பயன் தரும். சிசுமரணம் அந்த நாட்டில் ஏற்படுவதில்லை. ஊனப் பிறவிகளும் உண்டாவதில்லை.

248. அந்தணன் பொருளை அடித்துப் பிடுங்கிக் கொள்ளும் நாலாம் வருணத்தவனுடைய மதத்தை அவனைச் சித்திரவதை செய்து மன்னன் ஒடுக்கவும்.

249. நிரபராதியைக் கொன்றால் வரும் பிழை குற்ற வாளியைக் கண்டுபிடித்துக் கொல்லாமையானும் வரும். நீதிப்படி தண்டித்தால் அது அறமேயாகும்.

250. இதுவரை கடன் கோடல் முதலிய பதினெண் வகையானும் வழக்காடுவோர்க்குச் செய்ய வேண்டிய தீர்மானங்கள் விரித்துரைக்கப்பட்டன.

251. இவ்விதம் நெறி முறையிற் செங்கோல் ஓச்சும் மன்னன், தானடையாத நாடுகளைத் தன் வசப்படுத்த எப்போதும் முயன்று, அவற்றைப் பெற்று அரசாண்டு கொள்ள வேண்டும்.

252. தனது ஆட்சியில் உள்ள நாட்டை, முன் கூறிய வாறு கோட்டை முதலியவற்றை அமைத்துக் கொண்டு, தீயோரை ஒறுப்பதில் எச்சரிக்கையுடன் இருந்து வர வேண்டியது.

253. தீயோரைக் கண்டித்தலும் நல்லோரைப் பேணலும் குடிமக்களைப் புரக்கும் மன்னன் கொள்கை. அத்தகைய மன்னர் சுவர்க்கம் அடைவர்.

254. கள்வர் முதலான தீயோரை ஒழித்துக் கட்டாமல் தீர்வையை மட்டும் பெறுகின்ற மன்னனை உலகம் பகைக்கும். அவன் ஈட்டிய புண்ணியமும் அழிவுறும்.

255. அரசனுடைய தோள்வலியாலும் கோல் நெறியாலும் ஆளப்படுகின்ற நாட்டில் மக்கள் அச்சமில்லாதவராய், நீரேறிய பயிர்போல் செழித்து வளர்வார்கள்

256. கரந்து நின்றும், வெளிப்பட்டிருந்தும் அயலார் பொருளைக் கவரும் இருவகைக் கள்வரை வேவுகாரரைக் கொண்டு மன்னன் களைட்டறிக.

257. பொய்த் தராசு கொண்டு பற்பல வியாபாரங் களைச் செய்வோர் பகிரங்கத் திருடர். காட்டில் கரந்துறைந்து கொள்ளையிடும் வேடர் முதலியோர் மறைவான திருடர்கள்.

258. லஞ்சம் வாங்குவோர், ஒருவனுடைய கிரகம் போதாது என்று கூறி, அவனை மிரட்டி அவனுக்குப் பல தானங்களைக் கற்பித்து, அவனுடைய பொருளைக் கவர்வோர், பொன் முதலிய துணிகளை இரவலாக வாங்கிச் சென்று அதில் கலப்படம் செய்து ஏமாற்றுகிறவர்கள், தனக்குப் பொருள், பிள்ளை இருக்கிறதென்று அகங்கரிப்போர், நல்லவர்போல் வேடமிட்டுப் பாவ நெஞ்சினராய் இருப்போர், ரேகை ஜோதிடம் சொல்லிப் பிழைப்போர்,

259. யானையைப் பழக்கிப் பிழைப்போர், மருந்தின் குணமறியாது பிணியாளர்க்குக் கொடுக்கும் போலி மருத்துவர், ஓவியர், வேசையர்,

260. இவர்கள் பகிரங்கக் கள்வர், நல்லோரைப் போல வேடமிட்டுத் திரியும் கயவரே கரந்துறையும் கள்வர்.

261. அவர்களின் தொழிலைச் செய்வோர் போல் மாறு வேடம் பூண்டு அவர்களின் கயமையைக் கண்டறிய வல்ல ஒழுக்கமுள்ள வேவுகாரர்களால் பகிரங்கக் கள்வரைக் கண்டறிந்து மன்னன் அடக்கவேண்டும்.

262. இவ்விரு வகைக் கள்வரையும் அவர்கள் அடைந்த தண்டனையையும் பொதுமக்கள் அறியுமாறு செய்து பலர் அறியத் தண்டிக்கவேண்டும்.

263 நல்லோரைப் போல் வேடமிட்டு அஞ்சாமல் திரிகின்ற பாவிகளைத் தண்டோபாயமின்றி அடக்குதல் இயலாதாகையால், இவர்களைத் தக்கவாறு ஒறுக்கவும்.

264. ஊர் அவைகளில், தண்ணீர்ப் பந்தர், பணியாரக் கடை, வேசி வீடு, கள்ளுக் கடை, அன்ன சத்திரம், நாற்சந்தி, ஆல் முதலிய பெரு மரங்களின் அடி, பல மக்கள் நடக்குமிடம் ஆகியவற்றில்,

265. அழிந்த தோட்டம், காடு, தொழிற்சாலை, பாழ் வீடு, தோப்பு, மலர்ச் சோலை ஆகிய இடங்களில்,

266. இவற்றிலெல்லாம் மன்னன் கள்வரைத் தகைந்து பிடிக்கும் பொருட்டு நிரந்தரமான படைகளை நியமித்து, சில வீரர்களை எங்கும் திரிந்து நின்று கண்காணிக்குமாறும் செய்து, ஒற்றர்களைக் கொண்டு அனைத்தையும் சோதித்துக் கொள்ள வேண்டியது.

267. ஏனெனில் இவ்விடங்களில்தான் பெரும்பாலும் கள்வர்கள் நடமாடுவதும், குடிப்பதும், சிற்றுண்டிவாங்கி உண்ணலும், புணர்தலும், திருட்டுப் பொருளைக் கைமாற்றுதலும் ஆகிய செயல்களின் பொருட்டுக் காணப்படுவார்கள். ராஜ விச்வாசமும், கள்வரை வஞ்சித்துக் கண்டறிவதில் வல்லமையும், சூழ்ச்சித் திறனும் கொண்ட பழைய கள்வரை நியமித்துப் புதிய திருடர்களைக் கண்டு பிடித்துத் தண்டிக்க வேண்டும்.

268. பழைய திருடர்களும் மாறுவேடம் கொண்டு, புதிய திருடர்களை நட்புச் செய்து கொண்டும், தங்கள் இல்லத்திற்கு உபசரித்து அழைத்தும், தமதில்லத்தில் கொண்டு எல்லாவற்றிலும் நன்கு வருங்கால முணர்ந்துரைப்போரை அறிமுகம் செய்விப்பதாக அவர்களுக்கு ஆசையூட்டியும், மற்போர் வீரனைப் பார்த்துப் பழகிக் கொள்ள வாய்ப்புத் தருவதாக நம்ப வைத்தும், வஞ்சகமாக அவர்களைத் தம்பால் இழுத்துக் காவற்காரர் வசம் காட்டிக் கொடுத்துவிட வேண்டியது.

269. தாங்கள் அகப்பட்டுக் கொண்டுவிடக் கூடும் என்று விழிப்புற்ற திருடர் இவ்வாறு தம்மை யணுகும் பழந் திருடர்பால் இணக்கம் கொள்ளாமல் தற்காத்துக் கொள்வராயின், அவர்கள் உண்மையாகவே திருடர்களே யென்று நன்கறிந்தால், அவர்களை அவர்தம் சுற்றத்துடன் வலிந்து சிறைப்பிடித்துக் கொல்ல வேண்டியது.

270. கொள்ளை, கொலை முதலிய பயங்கரக் குற்றங்களுக்குப் போதுமான தடையம் கிடைத்தாலன்றி

வினில் ஒரு திருடனைக் கொல்லக் கூடாது. தடையம் கிடைத்து விட்டால் யோசியாமல் அவனைக் கொல்லலாம்.

271. திருடன் என்று அறிந்து ஒருவனுக்குத் தங்க இடங் கொடுத்தாலும், அவனுக்கு உணவளித்தாலும், வேறு பாத்திரம் முதலிய உதவி புரிந்தாலும், அவர்களை யும் திருடரைப் போலவே தண்டிக்க வேண்டும்.

272. ஊர்க் காவற்காரர்களும், எல்லைக் காவல் புரியும் வீரரும் திருடருக்கு உடந்தையாகவோ, உதவி புரிபவராகவோ இருப்பின், அவர்களும் தண்டிக்கப்பட வேண்டியவரே.

273. வேள்வி முதலிய நற்கடன் புரிவித்து ஜீவனம் செய்வோர், யாருக்கேனும் செய்து வைக்க மறுத்தால், அவர்களும் தண்டனைக்குள்ளாக வேண்டியவர்கள்.

274. ஊரிலும் வழியிலும் கள்வரால் துன்பம் நேரிடும் போதும், கழனிகளில் கள்ளர் கதிர் உதிர்த்துக் கொண்டு போகும் போதும், வெள்ளத்தால் அணை உடை யும் போதும், உதவிக்கு ஓடி வராதவர்களைக் கூட்டத் துடன் ஊரை விட்டுத் துரத்திவிட வேண்டும்.

275. அரசாங்கப் பொக்கிஷத்தைக் கொள்ளையிடு கிறவன், அரசன் ஆணைக்கு மாறு செய்வோன், அரசனுக்கு மற்றவருடன் பகை மூட்டி விடுவோன், இவர்களைத் தக்க படி பற்பல விதமான அங்கச்சேதங்கள் முதலியனவாவது, மரண தண்டனையாவது விதிக்கவும்.

276. இரவில் பூட்டை உடைத்து உட்புகுந்து சூறை யிடுவோன் கைகளைத் துண்டித்துக் கூரான கழுமரத்தில் ஏற்ற வேண்டும்.

277. முடிச்சவிழ்ப்பவனை முதல் தடவை சுட்டுவிரல் பெருவிரல்களை வாங்கி விடுவதும், மறுமுறை செய்யின் கை கால்களை வாங்கி விடுவதும், மூன்று முறை சித்திர வதையும் தண்டனைகளாகும்.

278. முடிச்சவிழ்ப்பவன் என்றறிந்தும், அவனுக்கு நெருப்பு, சோறு, ஆயுதம், உறையுள் கொடுத்து உறவாடு வோரையும் திருடரைப் போன்று கருதி மன்னர் ஒறுக்கவும்.

279. பொதுப் பயனுக்காக நீர்நிலைகளின் கரைகளை யுடைத்து நஷ்டம் உண்டாக்குகிறவனை, நீரில் கட்டிப் போட்டாவது, வேறு விதமாகவாவது கொலை பண்ண வேண்டும். முன்னிருந்தபடி அவன் அதனைக் கட்டிக் கொடுப்பானாயின், செய்த குற்றத்திற்கு மட்டும் ஆயிரம் பணம் தண்டம் விதிக்கவும்.

280. மன்னனுடைய பொக்கிஷம், ஆயுதசாலை, தெய் வாலயம் இவற்றை இடித்தவனுக்கும், தேர், பரி, கரி இவற்றைக் களவாடியவனுக்கும் கொலைத் தண்டம் விதிக்க.

281. குடிநீர்க் குளத்தைப் பாசனத்துக்கு உபயோகிப் பவன், வரத்தை அடைத்தவன் இவர்களுக்கு இருநூற் றைம்பது பணம் தண்டம் விதிக்க.

282. நோயாளியாக இல்லாமல், தேர் வீதியிலும் நடமாடும் பாதைகளிலும் மலபாதை செய்தவனுக்கு, இரண்டு காருடா பணம் தண்டம் விதித்து, அவனைக் கொண்டே அவ்விடத்தைச் சுத்தம் செய்விக்கவும்.

283. நோயாளி, வயோதிகன், சூலி, சிறுபிள்ளை இவர்கள் மேற்சொன்ன குற்றங்களை மேற்குறித்த இடங் களில் புரிந்தால், 'ஏன் செய்தாய்?' என்று கண்டித்து விட்டு, அந்த இடத்தையும் அவர்களையே சுத்தம் செய்யு மாறு செய்க.

284. மருத்துவர் கால்நடைக்குத் தவறான மருந்து கொடுத்து நோயைப் பெருக்கினால், இருநூற்றைம்பது பணமும், மனிதர்களுக்கு அப்படிச் செய்தால், ஐந்நூறு பணமும் தண்டம் விதிக்க.

285. மரப்பாலம், கற்பாலம், கொடிமரம், பூபஸ் தம்பம், தெய்வச்சிலை இவற்றைச் சேதப்படுத்தியவனுக்கு

ஐந்நூறு பணம் தண்டம் விதித்து, அவற்றைத் திருத்திக் கொடுக்கும் படியும் அவர்களைச் செய்விக்கவும்.

286. பொருள்களில் கலப்படம் செய்து கொடுத்தவனுக்கும், மாணிக்கம் முதலிய பிறர் பொருளை உடைத்தெறிந்தவனுக்கும், முத்து முதலியவற்றைத் தவறாகத் துளையிட்டவனுக்கும் இருநூற்றைம்பது பணம் தண்டம் விதிப்பதுடன், உடைமைக்காரனுக்குரிய பொருளையும் சேர்ப்பிக்கச் செய்யவும்.

287. ஒன்றுக்கு விலை பெற்றுக் கொண்டு வேறு தாழ்ந்த பொருளைக் கொடுப்பவன், ஆளுக்குத் தக்கபடி விலையை ஏற்றியும் இறக்கியும் விற்பவன், தொகை மோசத்திற்கு ஏற்றவாறு இருநூற்றைம்பது முதல் ஐந்நூறு பணம்வரை தண்டம் விதிக்க.

288. பலரறியத் தண்டனை பெற்றுக் குற்றவாளிகள் மனம் வருந்துமாறு தண்டனைச் சாவடிகளைப் பகிரங்க வீதிகளில் அமைக்க வேண்டும்.

289. மதிலைத் தகர்ப்பவன், அகழைத் தூர்ப்பவன், கோட்டை வாயிற்படியை இடிப்பவன் இவர்களை உடனே நாடு கடத்த வேண்டும்.

290. ஒருவன் இறந்து போகும் பொருட்டு மரண ஹோமம் செய்ய முயன்றவன், ஏவல்வைத்துக் குடும்பத்தைக் கலைக்கத் தொடங்கியவன், வசிய மருந்து செய்து கொடுப்பவன், இவர்களின் செயலால் யாதொரு தீங்கும் நேரிட்டுவிடவில்லையாயினும், இருநூறு பணம் தண்டமும், கேடு நேர்ந்து விட்டிருப்பின், இவர்களுக்கு உயிர் போகும் வரை தண்டனையும் விதிக்கவும்.

291. முளைக்க வியலாதவற்றை விதைமணி என்று கூறி விற்போனுக்கும், விதைமணியுடன் வெறும் தானியம் கலப்படம் செய்து தருவோனுக்கும், எல்லை அடையாளத்தை அகற்றி அழித்தவனுக்கும் சித்ரவதையே தண்டனை.

292. மாற்று, எடை இவற்றைக் குறைத்தும், கலப்படம் செய்தும் பொன்னை மாறுபாடாய் விற்கும் தட்டான் திருடர்களைக் காட்டிலும் பெரும் பாவி; அவன் இழைத்த குற்றத்திற்குத் தக்கவாறு, கொஞ்சங் கொஞ்சமாகவோ, முழுமையுமோ, அவனது உடலைக் கண்டம் கண்டமாக வெட்ட வேண்டும்.

293. கலப்பை, கோடரி, மண்வெட்டி, மருந்து, கத்தி போன்ற ஆயுதம் முதலியவற்றால் களவு செய்தவனுக்கு, அவை உபயோகமாகும் காலம், காரியம் இவற்றைச் சிந்தித்து ஏற்ற தண்டம் விதிக்கவும்.

## மன்னர் கடமைகள்

294. மன்னன், அமைச்சன், பட்டினம், நாடு கருவூலம், படைகள், நட்பு இவ்வேழு பிரகிருதிகளும் ஒரு அரசின் அங்கங்களாகும்.

295. இவற்றில் பின்னதைக் காட்டிலும் முன்னவற்றிற்குக் குறை வந்தால், அதிகத் துன்பம் வந்து சேரும். மித்திர விசனத்தைக் காட்டிலும் படையின் அழிவு அதிகத் துயர் தரும். அதனைக் காட்டிலும் பொக்கிஷ அழிவு. இப்படியே மற்றவையும் காண்க.

296. துறவியின் திரிதண்டத்தில் மூவிலைகளில் ஒன்றுக்கொன்று ஏற்றத் தாழ்வில்லாதது போன்று, அரசின் ஏழு அங்கங்களும் ஒன்றுக்கொன்று தாழ்வில்லை. தனித்தனியே ஒவ்வோர் அங்கமும் இன்றியாமையாதது.

297. தனது இன்றியமையாத் தன்மையினால் ஒவ்வோர் அங்கமும் மேலானதாக இருக்கிறது.

298. தனது படைகளின் மகிழ்ச்சி, தீரம், கருத்து, உலகோர் அரசாங்கத்தைப் பற்றிப் பேசிக் கொள்கிற விதம், பகைவனுடைய வலிமை இவற்றை யெல்லாம் ஒற்றரைக் கொண்டு நன்கறிந்து கொள்ள வேண்டும்.

299. பகைவனுடன் பொருது நிற்பதால் வரும் பல தொல்லைகளையும், துயரங்களையும், பரஸ்பரம் விளையக் கூடியவற்றையும்சிந்தித்து ஒருவரையொருவர் எதிர்த்தல் போன்ற செயல்களை மேற்கொள்ள வேண்டும்.

300. இடையிடையே இளைப்பாறிப் போர் செய்து கொண்டே இருப்பது மன்னர் மரபு. ஏனெனில் ஊக்க முடன் ஒன்றைத் தொடர்ந்தியற்றுவோரையே செல்வம் வந்தடைவதாகும்.

301. யுகங்கள் மாறி வருவதற்கு மன்னர் நடையே அடிப்படை. அவர் அறத்தைப் பொறுத்து யுகமும் அமைகின்றது.

302. அதாவது அறிவின்மையாலும் சோம்பராலும் நீதியை மன்னன் நிலை நிறுத்தாதபோது கலியும், நியாய மறிந்து நீதி செய்யாவிடில் துவாபர யுகமும், நீதியை நிறுத்துவதில் ஊக்கமுடையவனாயின் திரேதா யுகமும், அறநெறி நழுவாது தான் ஒழுகி, மக்களையும் ஒழுகச் செய்யின் கிருத யுகமும் தோன்றுகின்றன.

303. இந்திரன், சூரியன், வாயு, யமன், வருணன், சந்திரன், தீ, மண் இவர்களின் பண்பினை யெல்லாம் மன்னன் பெற்றிருக்க.

304. ஆவணி முதல் நான்கு மாதங்கள் இந்திரன் மழையைத் தந்து உயிர்களை மகிழ்விப்பது போன்று, தனது குடிமக்களுக்கு நிறைவாழ்வைத் தருவதே இந்திரத் தன்மை.

305. மார்கழி முதல் எட்டு மாதங்கள் தனது கதிர்க ளால் மண்ணிலிருந்து நீரை வாங்கிக் கொள்ளும் சூரிய னைப் போன்று மக்களிடமிருந்து சிறுகச் சிறுகத் தீர்வை வாங்குவது ஞாயிற்றின் பண்பு.

306. உயிர்களின் உட்புகுந்து விளையாடி இயக்கும் காற்றைப்போன்று வேவுகாரர்களால் எதிரியின் நாட்டில் புகுந்து உணர்வது வாயுவிரதம்.

307. வேண்டுதல் வேண்டாமையிலாது உயிரைக் கவரும் யமனைப் போன்று குற்றவாளிகளை ஒறுத்தல் யம விரதம்.

308. பாவிகளைத் தனது பாசத்தால் கட்டும் வருணனைப் போன்று தயையின்றித் தண்டிப்பது வருணவிரதம்.

309. முழு நிலவைப் பார்த்து மனிதர் மகிழ்வதைப் போன்று தன் முகம் கண்டு அமைச்சர் முதலான பரிசனம் மனமகிழ வீற்றிருத்தல் சந்திர விரதம்.

310. தீயைப் போல் சோம்பரின்றிச் சுடர்த்தெழுந்து துரோகிகளைத் தீய்ப்பது தீ விரதம்.

311. தாவர சங்கம மனைத்தையும் வேறுபாடின்றித் தாங்கும் மண்ணைப் போல, கற்றோர் கல்லாதவர் யாவரையும் ஒருங்கே புரக்கும் தன்மையே பிரகிருதி விரதம்.

312. இவ்வகைத் தன்மைகளுடன், தனது யுக்திக்குத் தோன்றியவாறு, தனது நாட்டுத் திருடர்களையும், பிற நாட்டாராக இருந்துகொண்டு இங்கு வந்து களவாடுகிறவரையும் தண்டித்து அடக்குக.

313. பொக்கிஷம் கொள்ளை போனாலும் அந்தணர்க்கு இடையூறு செய்யற்க. அவர்களின் வருத்தம், கோபம் இவை மன்னன் சேனையோடும் ஊர்தியோடும் அழியச் செய்வன.

314. தீயின் தகிப்பும், கடலின் உவர்ப்பும், சந்திரனின் வளர்தலும், தேய்தலும் எந்த அந்தணரின் ஆணையால் இயல்வனவோ அவர்தம் சினத்தைப் பெற்றும் அழியாதார் யார்?

315. மேலும் எவருடைய சினத்தால் வேறான சுவர்க்கம் முதலிய உலகங்களும், திசைக் காவலரும், தேவர்கள், மனிதர்களும் படைக்கப் பெறுவார்களோ,

316. யாருடைய தவத்தால் உலகங்களும் தேவர்களும் இயல்கின்றனரோ, யாருக்கு வேதம் ஒன்றே

பொருளாக விருக்கிறதோ, அத்தகைய கல்விமான்களான அந்தணரை வாழ விரும்பும் யாரே இம்சிப்பர்?

317. லௌகீக் வைதிக காரியங்கள் எவற்றிலும், மேலான தெய்வமாகச் சுடரும் தீயைப் போன்று; ஞானியோ அல்லவோ அந்தணன் மேன்மையானவனாகவே இருக்கிறான்.

318. ஒளிமிக்க தீயானது இடுகாட்டில் பிணத்தை எரித்தாலும், அதனைப் பழிக்காமல் வேள்விகளில் போற்றி வளர்ப்பது போன்று;

319. அப்படியே தீச்செயற் பட்டவராயினும் அந்தணர் நற்கருமங்கள் அனைத்திலும் போற்றற்குரியவரா கின்றனர். (இது அந்தணர் சிறப்பைக் கூற வந்ததேயல் லாது அவர்தம் ஒழுக்கக் கேடுகளைப் பற்றி முன்கூறிய விதிகளுக்கு மாற்றாகக் கருதற்க.)

320. அந்தணர்க்கு அநீதி யிழைக்கும் மன்னனைச் சாபத்தினாலோ மரண ஹோமத்தாலோ அடக்க அவ் வந்தணரே உரியர். ஏனெனில் இவன் அந்தணரிடமாகத் தோன்றியவன்.

321. நீரிலிருந்து நெருப்பும், அந்தணரிடமாக க்ஷத்திரியனும், கல்லினின்று கனிப் பொருளும் உண்டா யின. இவை தனித்தனியே இயங்குமாயினும், தத்தம் தோற்றம்கொண்ட மூலத்தில் ஒடுங்குகின்றன. அதாவது, ஒரு காலத்தில் க்ஷத்திரிய ஜாதியே நசித்துப் பின் அந்தண னால் அந்தக் குலம் மீண்டும் பெருகிற்று என்பதனால், அந்தணனே க்ஷத்திரிய ஜாதிக்குத் தோற்றமளித்தவனா கிறான்.

322. பிராம்மணனின்றி க்ஷத்திரியனுடைய சத்கருமங் களும், க்ஷத்திரியனின்றி அந்தணனின் ஜீவனமும் நடை பெறாதாகையால், ஒருவரை ஒருவர் சார்ந்து நின்றால் இம்மை மறுமைகளின் இன்பங்களை அடையக் கடவர்.

323. மூப்பெய்திய மன்னன், மிகுந்திருக்கும் தண்டப் பொருளை அந்தணர்க்கும், அரசைத் தனது புத்திரனுக்கும் ஒப்புவித்து விட்டு, வீரசுவர்க்கம் வேண்டின்போர்க்களத்தில் பொருதுநின்று இறக்கவேண்டியது.

324. நீதி மன்னன் மக்கள் நலனை முன்னிட்டுச் செயல் புரியத்தக்க ஊழியரை நியமிக்கவும்.

## வைசியர் இதரர் கடமைகள்

325. ஏழாவது அத்தியாய முதல் இதுகாறும் தொன்மையான அரச நீதி உரைத்து முடிந்தது. இனி வைசியர், நாலாம் வருணத்தர் இவர்களின் செயல் நடைகளைப் பற்றிக் கூறுவேன்.

326. வைசியன் உபநயனம் முதலிய சம்ஸ்காரங்கள் பெற்று வேதமோதின பின், மணம் புரிந்து, பசுவைக் காப்பதிலும் பயிர்த்தொழிலிலும் முயன்றிருக்கவேண்டும்,

327. பசுக்களைப் படைத்து அவற்றைக் காக்க வைசியனையும், மக்களைப் படைத்து அவர்களைக் காக்கப் பிராம்மண க்ஷத்திரியர்களையும் பிரமன் தோற்றுவித்தார்.

328. ஆவினங் காக்கத் தனக்குக் கடனில்லை யென்று வைசியனும், வைசிய னிருக்கையில் அப்பொறுப்பினை ஏனையோர் ஏற்கவும் எண்ணக் கூடாது.

329. முத்து, மணி, பவளம், உலோகம், ஆடை, கற்பூரமாதிய நறுமணப் பொருள், உப்பு முதலிய சுவைப் பொருள் இவற்றிற்கு நாடுகள்தோறும் உள்ள விலையேற்ற இறக்கங்களையும், சரக்குகளின் தராதரங்களை வைசியன் நன்கு அறிந்து கொள்ள வேண்டும்.

330. விதைமணிகளின் வகை, விதைக்கும் முறை, விதைக்கும் காலம், நிலத்தின் தன்மை, அளவைக் கருவிகள் இவைகளில் கையாளப்படும் சூது இவற்றையும் அவன் அறிய வேண்டும்.

331. ஒன்றுபோல் தோன்றும் ஒரு பொருளின் நயம் அல்லது இளப்பதையும், அவற்றிற்கு ஆங்காங்குள்ள விலையையும், வைத்திருந்து விற்ருல் இன்னின்ன காலத்தில் இம்மாதிரி லாபநஷ்டம் ஏற்படுமென்ற சாத்தியக் கூறுகளையும், இவ்விடத்தில் பைங்காலும் நீர்வளமும் உண்டாகையால் அங்கே கால்நடை பெருகுமென்றும் அறியவேண்டும்.

332. பயிர்த் தொழில் புரிவோர்க்கும், மேய்ப்பவர்களுக்கும், இடம் காலம் இவற்றிற்கேற்ற ஊதியம் கொடுப்பதைச் சிந்திக்க வேண்டும். மேலும் கௌடம் முதலிய பல நாட்டினரின் மொழிகளையும் தெரிந்து கொள்ள வேண்டும். தருணமறிந்து சரக்குக் கொள்முதல் விற்று முதல் செய்ய வேண்டும்.

333. தீவினை விட்டு, வர்த்தகம் செய்து ஈட்டும் பொருளைப் பெருக்க முயற்சிக்க வேண்டும். வேறெதனையும் விட எல்லா உயிர்க்கும் உணவளிப்பதே பேரறமாகும்.

334. வேதமோதியுணர்ந்த அந்தணர்க்கு அன்புடன் பணி செய்திருப்பதே நாலாம் வருணத்தவன் மோக்ஷமெய்தும் வழியாகும்.

335. உள்ளும் புறமும் கபடமில்லாமல், மேல் ஜாதியாரைத் தாழ்த்திச் சொல்லாமல், பிராம்மணன், க்ஷத்திரியன், வைசியன் ஆகியோருக்கு முறையே ஒருவருக்கில்லாவிடத்து அடுத்தவருக்குமாக, மேலான பணி புரிந்து அகந்தையகற்றியவனே முதன்மையான நாலாம்வருணத்தன் ஆகிருன். அதாவது பிராம்மணனைப்போல் உபசரிக்கப் படுவான் என்பது பொருள்.

336. இதுவரை உயிர்க்கிறுதி நேரிடாதபோது நான்கு வருணத்தாருக்கும் உரிய செயல் நடைகள் கூறிமுடிந்தது. ஆபத்துக் காலத்தில் இந்தக் குலத்தவர் செய்ய வேண்டிய அறத்தையும் சங்கர ஜாதிகளின் உற்பத்தியையும் இனி முறையே கேளுங்கள்.

**ஒன்பதாம் அத்தியாயம் முற்றும்.**

## பத்தாம் அத்தியாயம்

# கலப்பு ஜாதிகள்-ஆபத்து தர்மம்

### கலப்பு ஜாதிகள் தோற்றமும் சமூக அந்தஸ்தும்

1. தத்தம் ஒழுக்கத்தில் நிலைநின்ற முதல் மூவருணத்தாரும் வேதம் ஓத வேண்டும். அதில் க்ஷத்திரிய வைசியருக்கு அந்தணர் ஓதுவிக்க வேண்டும். அவ்விருவரும் ஓதுவிக்கக் கூடாது. இது அறநூல் துணிபு.

2. பிராம்மணன் எல்லாவருணத்தாருக்கும் பிழைக்கும் வழி கூறித்தானும் தனது வாழ்க்கை வழியையறிந்து அப்படி நடக்கவும்.

3. பிறப்பினால் உயர்ந்த இடத்திலிருந்து தோற்றமும் உயர்ந்த குலமும் பெற்று, கருமானுஷ்டானங்களாலும் கல்வி கேள்விகளாலும் மேலாக விளங்கும் அந்தணன், மற்றவர்க்கு ஓதுவிக்கவும், பிழைக்கும் வழி வகுத்துக் கொடுக்கவும் அதிகாரம் பெறுகிறான்.

4. நால் வருணத்தில், பிரம்ம, க்ஷத்திரிய, வைசியர் மூவரும் இரண்டு தடவை பிறக்கிறார்கள் ஆதலால், இவர்கள் மூவரும் இரு பிறப்பாளர் (துவிஜர்கள்) என்று சொல்லப்படுவர். பூணூல் தரிக்கும் மறுபிறப்பு இல்லாமையால் நாலாம் வருணத்தவன் மட்டும் ஒரு ஜாதியானாகவே இருக்கிறான். வருணத்தார் இவர் நால்வரேயன்றி ஐந்தாவது ஒன்று கிடையாது.

5. நால் வருணத்திலும் சுய ஜாதியாகவும் நெறி பிறழாத நீர்மையினராகவும் உள்ள அறமனைவியரிடம் கணவரால் உற்பத்தி செய்யப்பட்ட மைந்தர்களும் அந்தந்த வருணத்தாரே ஆகின்றனர்.

6. துவிஜர்கள் மூவரும் தத்தமக்கு அடுத்து இருக்கின்ற நேர் இளைய வருணத்துப் பெண்டிரிடமாகப்

பிறந்த பிள்ளைகள், தாயின் ஜாதியின் மேம்பட்டும் தந்தையின் ஜாதியை அடையாமலும், தந்தைக்குச் சரியானவரென்று மதிக்கத் தக்கவராயும் இருக்கின்றனர்

7. இப்போது சொன்னது துவிஜர்கள் முறையே தங்களின் தாழ்ந்த அடுத்த ஜாதிப் பெண்டிரிடமாகப் பெற்ற மைந்தர்களான **அனுலோம** ஜாதியாராவர். இனி ஒன்று விட்டும் இரண்டு விட்டும் முறையே தாழ்ந்திருக்கும் ஜாதிப் பெண்களிடமாக ஒரு துவிஜனுக்குப் பிறக்கும் பிள்ளைகளின் ஜாதியைப் பற்றிய முறைமைகளைக் கூறுகிறேன்.

8. அந்தணனுடைய வைசிய மனைவிக்குப் பிறந்த பிள்ளை **அம்பஷ்டன்** என்றும், நாலாம் வருண மனைவியின் பிள்ளை **நிஷாதன்** என்றும் கூறப்படுவன். இவனைப் **பாரசவன்** என்றும் கூறுவதுண்டு.

9. க்ஷத்திரியனுக்கு நாலாம் வருணப் பெண்டிரிடமாகப் பிறந்த பிள்ளை, கொடுமையான செயலுடையவனுயும், தாய் தகப்பன் வழி கலந்த நடையுடையோனுயுமிருப்பான். இவனுக்கு **உக்கிரன்** என்று பெயர்.

10. அந்தணனுக்குக் கீழ் மூன்று குலத்தும், க்ஷத்திரியனுக்கு அடுத்த இரு குலங்களிலும், வைசியனுக்குத் தனக்கு இளைய குலத்தும் இப்படியாக ஆறு வகையான கலப்புப் பிள்ளைகள், தத்தம் குலப் பெண்டிரிடமாகப் பிறக்கும் பிள்ளைகளைவிடத் தாழ்ந்தவராதலால், இப்பிள்ளைகள் யாவருக்கும் **அபசதர்** என்று பெயர். (இவர்கள் அனுலோமர்.)

11. க்ஷத்திரியனுக்கு அந்தண மனைவியிடம் பிறந்த குழந்தை **சூதன்**; வைசியனுடைய க்ஷத்திரிய மனைவி ஈன்ற பிள்ளை **மாகதன்**; அவனுக்குப் பிராம்மண மனைவியிடம் பிறந்த பிள்ளை **வைதேகன்**.

12. நாலாம் வருணத்தவனுக்கு வைசிய மனைவி பெற்ற பிள்ளை **அயோகவன்**, க்ஷத்திரியப் பெண் பெற்ற

பிள்ளை **க்ஷத்தா**, பார்ப்பன மனைவியிடம் பிறந்த பிள்ளை **சண்டாளன்**. (இவ்வறுவரும் பிரதி லோமர்.)

13. அனுலோமர்களில் அம்பஷ்டன், உக்கிரன் இவர்களைப் போன்றே பிரதிலோமரில் க்ஷத்தாவும் வைதேகனும் தீண்டத் தக்கவரே.

14. துவிஜருக்குத் தாழ்ந்த குலத்துப் பிறந்த அனுலோமர்கள் தாயின் குலத்தை அடைகிறபடியால், தாயின் ஜாதிக்கு விதிக்கப்பட்ட சம்ஸ்காரங்களையே இவர்களும் அடைய வேண்டும்.

15. அந்தணனுக்கு உக்ர கன்னிகையிடம் பிறந்த பிள்ளை **ஆவிரதன்**; அம்பஷ்ட கன்னிகையிடம் உதித்தவன் **அபீரன்**; அயோகவப் பெண்ணிடம் தோன்றியவன் **திக்வணன்**.

16. நாலாம் வருணத்தவர்க்கு மேற்குலத்துப் பெண்டிரிடம் பிறந்த பிரதிலோமர்களான அயோகவன், க்ஷத்தா, சண்டாளன் இம்மூவரும் ஒரு தர்ம காரியத்திற்கும் தகாதவர்.

17. வைசியனுக்கு மேற்குலத்துப் பெண்டிரிடமாகப் பிறந்த பிரதிலோமர்களான மாகதன், வைதேகன் இருவரும், க்ஷத்திரியனுக்குப் பிராம்மணப்பெண்ணிடம் பிறந்த பிரதிலோமனான சூதனும் பிதுர்க்காரியம் செய்யத் தகாதவராகையால் இம்மூவரும் அபசதராகவே கூறப்படுவர்.

18. நிஷாதனுக்கு நாலாம் வருணப் பெண்ணிடம் பிறப்பவன் **புற்கசன்**; நாலாம் வருணத்தவனுக்கு நிஷாதப் பெண்ணிடம் பிறப்பவன் **குக்குடகன்**.

19. க்ஷத்தாவுக்கு உக்கிர கன்னிகையிடம் **சுவபாகனும்**, வைதேகனுக்கு அம்பஷ்ட கன்னிகையிடம் **வேனனும்** பிறக்கின்றனர். (15, 18, 19 சுலோகங்களில் கூறப்பட்டவர் அந்தராள ஜாதியினர் ஆவர்.)

20. துவிஜருக்கு சுவஜாதி மனைவியரிடம் பிறந்த பிள்ளைகளுக்கு உபநயன முதலிய சம்ஸ்கார மில்லாமற் போனால் காயத்ரி யில்லாத "**விராத்ய**" ஜாதியாகக் கருதப்படுவர்.

21. விராத்யப் பிராம்மணனுக்கு அதே பெண்ணிடம் தோன்றுவோன் **பூர்ஜகண்டன்**. வெவ்வேறு தேசங்களில் இவனுக்கு ஆவந்தியன், வாடதானன், புஷ்பதன், சைகன் என வேறு பெயர்களும் வழங்குகின்றன.

22. விராத்தியனான க்ஷத்திரியனுக்கு அதே பெண்ணிடம் பிறப்பவன் **சல்லன்**. இவனுக்கும் தேசங்கள் தோறும் மல்லன், நிச்விநடன், கரணன், கசன், திரவிடன் என வேறு பெயர்களும் வழங்குவன.

23. விராத்ய வைசியனுக்கு அதே பெண்ணிடம் பிறப்பவன் **சுதன்வா**. அவனுக்கும் ஆசாரி, காருசன், விஜன்மா, மைத்திரன், சாத்துவதன் எனத் தேச வேறுபாடுகளின்படி வேறு பெயர்களும் உண்டு.

24. நால்வருணத்திலும், கற்பு நெறி பிறழ்வதனாலும், ஸ்வகோத்திரத்தில் மணம் புணர்வதனாலும், சாத கர்ம முதலியன செய்து கொள்ளாமையாலும் **சங்கர ஜாதிகள்** உண்டாகின்றன வென்பதற்கு இவ்விராத்யர்களே உதாரணம்.

25. பிரதிலோம அனுலோம ஜாதியினர் சம்பந்தம் செய்துகொண்டு பிறக்குங்குழந்தைகள் **பாகிய ஜாதியாரா வர்**. அதன் விபரம் கேளீர். (பாகிய ஜாதியாவது தீண்டத் தகாதவர்.)

26. சூதன், வைதேகன், மனிதரில் கடைப்பட்ட சண்டாளன், மாகதன், க்ஷத்தா, அயோகவன்

27. இவ்வறுவரும் தத்தம் வகைப் பெண்களிடமும் நால்வருணப் பெண்டிரிடமும் பெறும் பிள்ளைகள் தங்கள் தந்தையின் ஜாதியைச் சாருவர்.

28. அந்தணனுக்கு, க்ஷத்திரிய வைசியப் பெண்களிடமாகத் தோன்றிய அனுலோமர் உபநயன முதலிய சம்ஸ்காரங்களுக்கு உரிமை பெற்றவராய் உயர்ந்திருப்பது போன்றே, க்ஷத்திரியனுக்குப் பிராம்மண ஸ்திரீயிடமும், வைசியனுக்கு க்ஷத்திரிய மனைவியினிடமும் பிறந்த புத்திரர்கள்—நாலாம் வருணத்தவனுக்கு வைசிய, க்ஷத்திரிய, பிராம்மண மனைவிமாரிடமாகப் பிறந்த பிரதிலோமர்களைக் காட்டிலும் உயர்ந்தவர்களாயும் இருக்கின்றனர்.

29. மேற்சொன்ன சூதன் முதலிய அனுலோமர் அறுவரும் ஒருவர்க்கொருவர் சம்பந்தம் செய்து கொள்வதனால், தங்களை விடத் தாழ்ந்தவராயும் போற்றத் தகாதவராயுமுள்ள பலவகையான பாகிய ஜாதிப் பிள்ளைகளைப் பெறுகின்றனர்.

30. நாலாம் வருணத்தவன் அந்தணப் பெண்ணிடம் கூடிச் சண்டாளனாகிய பாகிய ஜாதியை எப்படித் தோற்றுவிக்கிறானோ, அப்படியே இந்தச் சண்டாளர்கள் நால் வருணத்துப் பெண்களிடமும் உற்பத்தி செய்யும் பிள்ளைகளும் மிகத் தாழ்ந்த பாகிய ஜாதியினர் ஆகின்றனர்.

31. நாலாம் வருணத்தானுக்கு அவனிலும் மேற்பட்ட மூவர்ணத்துப் பெண்டிரிடமாகப் பிறந்த பிரதிலோமர்களான அயோகவன், க்ஷத்தா, சண்டாளன் இவர்கள் தத்தமது குலத்தும் நான்கு குலத்துமாகப் பெண்டிரிடம் பெறுகின்ற மொத்தம் பதினொந்து வகையினரான பிள்ளைகளும் தீண்டத் தகாதவரான பாகிய ஜாதியினரே.

32. தஸ்யூவானவன் அயோகவ ஸ்திரீயிடம் சைரந்திரனைப் பெறுகிறான். எண்ணெய் தேய்த்தல், கை கால் பிடித்தல், வலைத் தொழில் இவை இவனது பிழைப்பாம்.

33. வைசியனுக்குப் பார்ப்பனத்தியிடமாகப் பிறந்த வைதேகன், நாலாம் வருணத்தவனுக்கு வைசிய மனைவியினிடமாகப் பிறந்த அயோகவப் பெண்ணுடன் கூடிப்

பெறுகின்ற பிள்ளை **மைத்திரேயன்** என்று கூறப்படுவான். இவன் அவைகளில் மணியடித்துக் கொண்டு, அனைவரையும் போற்றி செய்து கொண்டு, பிச்சை யெடுத்துப் பிழைப்பது தொழில். இவனைக் குடும்பாண்டி என்று கூறுவர்.

34. பிராம்மணனுக்கு நாலாம் வருணத்து மனைவியிடம் பிறந்த நிஷாதன் மேற்குறித்த அயோகவப் பெண்ணிடம் கூடிப் பெற்ற பிள்ளை **மார்க்கவன்**. இவன் ஓடம் விடுகிற தொழிலை மேற்கொண்டு வாழ்பவன். இவனை ஆர்யாவர்த்த நாட்டில் செம்படவன் என்று கூறுவர்.

35. மேற் சொன்ன சைரந்திரன், மைத்ரேயன், மார்க்கவன் ஆகிய ஈன ஜாதியினருள், அயோகவப் பெண்ணின் மைந்தரே யாயினும், தகப்பன் வேறுபாட்டால்வெவ்வேறு தொழிலுடையோ ராகின்றனர். பிணத்தின் ஆடையைத் தரிப்போராயும், பழிப்புக் குள்ளாவோராயும், எச்சில் உணவைப் புசிப்போராயும் இருக்கின்றனர்.

36. நிஷாதனுக்கு விதேகப் பெண்ணிடம் தோல் வேலை செய்கிற கார்வாரன் பிறக்கிறான். வைதேகன், சைரந்திரன் முதலிய வகுப்பார் ஊருக்கு வெளியில் குடியிருக்க வேண்டியவர்.

37. சண்டாளனுக்குப் **பாண்டு சோபாகன்** வைதேகப் பெண்ணிடம் தோன்றுகிறான். மூங்கில் வேலை செய்வது இவன் தொழில். வைதேக ஸ்திரீயிடமாக நிஷாதனுக்குப் பிறக்கும் பிள்ளை **ஆகிண்டிகன்**. நீதியின் முன்பு தீர்மானிக்கப்பட்ட குற்றவாளிகளை அடித்தல், கட்டுதல், மரணம் உண்டாக்கல் இவற்றைக் காவல் புரிவது தொழில்.

38. புற்க ஜாதிப் பெண்ணுடன் சண்டாளன் கூடிப் பெறும் பிள்ளைக்குச் **சோபாகன்** என்று பெயர். நீதியின் முன்னிலையில் மரண தண்டனைக் குள்ளானவன் உயிரை வாங்கும் கொலைத் தொழில் இவனுடையது. பிறவியினால் மட்டுமின்றிச் செய் தொழிலாலும் இவன் பாவியாகவும் பழிப்புக்காளாகிறவனாயு மிருக்கிறான்.

39. நிஷாதப் பெண்ணைச் சுகித்ருச் சண்டாளன் உற்பத்தி செய்யும் **அந்தியாவசாயிக்கு** இடுகாட்டைக் காத்தல் தொழிலாகிறது.

40. ஆண் பெண்களின் கூடா ஒழுக்கத்தாற் பிறக்கும் சங்கர ஜாதிகளின் தோற்ற விளக்கம் இதுகாறும் கேட்டீர்கள். இக் கலப்பு மறைவானதாயினும், பலரறியப்பட்ட தாயினும், அவரவர் தொழிலால் இவர்களை உலகோர் கண்டு கொள்வார்கள்.

41. அனுலோமர்கள் அறுவரும், தங்கள் தந்தையரான த்விஜர்களின் சுயஜாதியில் பிறந்தவர் போலவே, உபநயனம் முதலியவை பெறத் தகுந்தவர். பிரதிலோமரோ தகாதவர்.

42. சுய ஜாதியில் பிறந்தவரும், அனுலோமரும், பிறப்பின் மேன்மையினாலும், தவ ஒழுக்கத்தாலும் முதல் இரண்டு யுகங்களிலும் மேன்மையுற்று விளங்கினர். ஒழுக்கந் தவறிய பின் யுகங்களில் தாழ்வை அடைகின்றனர்.

43. பிராம்மணரிடம் வணக்கமின்மையாலும், உபநயன முதலியவற்றை விட்டொழித்ததாலும், க்ஷத்திரிய ஜாதிகள் இவ்வுலகில் நாளடைவில் நாலாம் வருணத் தன்மை அடைந்தார்கள்.

44. பௌந்த்ரம், ஔந்த்ரம், த்ரவிடம், காம்போஜம், யவனம், சாகம், பாரதம், பால்ஹீகம், ஷீனம், கிராதம், தரதம், கசம் ஆகிய நாடுகளை ஆண்ட மன்னவர் அனைவரும் மேற் குறித்தவாறு, குலந் தாழ்ந்து போனவர்களே.

45. நால் வருணத்தாரால் சங்கர ஜாதியில் பிறந்த சிலர் மிலேச்ச மொழியினராயும், சிலர் சம்ஸ்கிருதம் முதலிய மேலான மொழியினராயும் இருக்கின்றனர். ஆகிலும், இவர்கள் தஸ்யூக்கள் எனப்படுவர். (திருடர் என்பது கருத்து.)

46. அனுலோம, பிரதிலோமர்கள் துவிஜர்களின் ஏவல் தொழிலைச் செய்து பிழைக்க வேண்டியது.

47. சூதர் தேர்ப்பாகராயும், அம்பஷ்டர் இரண வைத்தியராயும், வைதேகர் அந்தப்புரக் காவலாளராயும், மாகதர் கடலிலும், கரையிலும் வர்த்தகம் செய்பவராயும், வாழ்வர்.

48. நிஷாதர் மீன்பிடித்தும், அயோகவர், தச்சு வேலையும், மேதன், ஆந்திரன், செஞ்சு இவர்கள் விற்பனைக்காகக் காட்டு மிருகங்களைக் கொன்றும் ஜீவிக்கக் கடவர்.

49. எலி, உடும்பு பிடித்தல், க்ஷத்தா, உக்ரன், புர்க்கசன் ஆகியோரின் தொழில். தோல் வியாபாரம் திக்வணனுக்கும், இசைக் கருவிகள் வாசித்தல் வேனனுக்கும் தொழில்களாம்.

50. இவர்களனைவரும் நகரத்திற்கும்; ஊருக்கும் வெளியில், மரத்தடி, தோப்பு, இடுகாட்டின் அருகு, மலை, மலர்ச் சோலை ஆகிய இடங்களில் தங்கள் தொழிலைப் பலரறிய இயற்றி வாழ்ந்திருக்கவும்.

51. ஊருக்கு வெளியில் சண்டாளனும், ஸ்வபாகனும் குடியிருக்கவும். இவர்கள் உலோகத்தாலான பாத்திரங்கள் உபயோகிக்கக் கூடாது. இவர்கள் தீண்டிய பாத்திரங்கள் துலக்கினலும் தூய்மையாகா. நாய், கழுதை இவற்றை இவர்கள் வளர்க்கலாம். மாடு முதலிய வைத்துப் பிழைக்கக் கூடாது.

52. இவர்கள் பிணத்தின் ஆடையை அணிய வேண்டும். உடைந்த சட்டியில் சோறுண்ண வேண்டும். இரும்பு, பித்தளை அணிய வேண்டும். எப்போதும் தொழிலுக்காகச் சஞ்சரிக்க வேண்டும்.

53. நற்கருமங்கள் நடைபெறுகையில், இவர்களைக் காண்பதோ, பேசுவதோ கூடாது. இவர்கள் தங்கள்

வகுப்பிலேயே பெண் எடுக்கவும், கொடுக்கவும், கடன் கோடலும் வேண்டும்.

54. இவர்களுக்கு நேரே உணவு பரிமாருமல், ஏவலாளரைக் கொண்டு, உடைந்த சட்டியில், அன்னமிட்டு வைக்க வேண்டும். இவர்கள் ஊரிலும், நகரிலும் இரவில் திரியக் கூடாது.

55. அரசன் கொடுத்த அடையாளத்துடன், தங்களிடமுள்ள பொருளை விற்கவும், ஒன்றை வாங்கவும், பகலில் ஊர்த் தெருக்களில் திரியலாம். அனுதைப் பிணத்தை அகற்றுதலும் இவர்கள் கடன்.

56. மரண தண்டனை பெற்றவரைக் கொல்லுதலும் இவர்கள் தொழில். தண்டனை நிறைவேற்றப்பட்டவரின் உடை, அணி, படுக்கைகளை இவர்கள் தங்களுக்கு எடுத்துக் கொள்ளக் கூடாது.

57. சங்கர ஜாதியிற் பிறந்தவர், நால் வருணத்தாரைப் போன்று நல்ல வேடம் தாங்கிய போதிலும், அவர்கள் இயற்றும் தொழிலைக் கொண்டு இழிஞர் என்றறிதல் வேண்டும்.

58. கொடுஞ் செயல், கெடு மொழி, வதைப்பது, இழி தொழில், நல் ஒழுக்கமின்மை இவையே ஒருவன் இழி பிறப்பாளன் என்பதை எடுத்துக்காட்டுவனவாகும்.

59. இழி பிறப்பாளன் தன்னைப் பெற்ற தந்தையின் அல்லது தாயின் அல்லது இருவரின் செய்கைகளையும் முயல்பவனுக இருப்பானே யன்றி, திறமையாகத் தன் இழி பிறப்பை மறைத்துக் கொண்டுவிட மாட்டான்.

60. உயர்ந்த குலப்பெண்ணின் களவொழுக்கத்தால் மறைவாகப் பிறந்தவனும் அவனை உண்மையில் தோற்றுவித்த தந்தையொருவனுடைய இயல்புகளை ஏறத்தாழ எப்படியேனும் இயற்றும் இயல்பினனுகவே இருக்கக் காணலாம்.

61. இப்படி இழிபிறப்பாளர் பெருகிவரும் நாடு விரைவில் குடிமக்களுடன் அழியும்.

**கீழ்ப்பிறப்பு மாறி உயர்வடைதல்**

62. அந்தணன், ஆ, பெண், பாலர் இவர்களைக் காக்கும் பொருட்டுக் கூலி பெறாமல் உயிரைத் தியாகம் செய்வதே தீண்டத் தகாத பிறப்பினர் சுவர்க்கம் புகும் நல்லாறு.

63. ஹிம்சை இயற்றாமை, உண்மை, தீவினையால் செல்வம் ஈட்டாமை, ஒழுக்கம், புலனடக்கம் இவை நால் வருணத்தாரும் மேற்கொள்ள வேண்டிய நல்லறங்களாகும் என்று சுருங்கக் கூறியுள்ளார் மநு. இவை சங்கர ஜாதியினர்க்கும் பொருந்தும் நடைகளேயாகும்.

64. அந்தணர்க்கு நாலாம் வருணப் பெண்ணிடமாகப் பிறந்த பெண் ஒருத்தி அந்தணனையே மணந்தும், அவளுக்குப் பிறக்கும் பெண்ணும், இப்படியே முறையாக ஏழு தலை முறைகள் முடிய அவ்வப்போது பெண் வயிற்றிற் பெண்ணாகப் பிறந்து, அவ்வவரும் அந்தணரையே மணந்தும் வந்தால், இறுதியில் ஏழாந் தலைமுறையில் பிறப்போர் அந்தணரேயாவர்.

65. இவ்விதம் நாலாம் வருணப் பெண்டாட்டியின் வயிற்றில் பெண்வழி ஏழு தலை முறைகள் தோற்றமுற்று, ஏழாந் தலைமுறையிலும் அந்தணனுக்குப் பிறந்த பிள்ளை பிராம்மணனாகிறான். அந்தத் தாழ்குலப் பெண்ணிடம் பிறக்கும் ஆண் மட்டும் தாயின் இழிவையே தனது குலமாகப் பெறும். இவ்வாறே க்ஷத்திரியனுக்கு நாலாம் வருண மனைவியின் பெண் வழியில் ஐந்தாவது தலைமுறையிலும், வைசியனுக்கு மூன்றாம் தலைமுறையிலும் தங்கள் தங்கள் குலத் தன்மை மீண்டும் ஒளி பெறுகிறது.

66. மணமாகாத அத்தகைய பெண்ணிடம் அந்தணனுக்குப் பிறந்த பிள்ளை, மணமாகாத அந்தணப் பெண்ணி

டம் நாலாம் வருணத்தாருக்குப் பிறந்தபிள்ளை இவர்களில் யார் சிறப்புடையவன் என்ற ஐயத்திற்கு விளக்கம் கூறுகிறோம்.

67. பிராம்மணன் பெற்ற அனுலோமப் பிள்ளை வேள்வித் தவங்களால் மேன்மை யடைவான். நாலாம் வருணத்தன் பெற்ற பிரதிலோமன் தந்தைக்கும் இழிந்த குலமே யாவான் என்பது துணிபு.

68. ஆகிலும் இவ்விருவரில், முன்னோன் மணமாகாத பெண்ணிடம் பிறந்ததனாலும், பின்னோன் பிரதிலோமன் ஆதலினாலும், இருவருக்குமே உபநயன முதலிய நற்கருமங்கள் இல்லை. இது அறநூல் துணிபு.

69 வளமுடைய மண்ணில் ஊன்றிய முற்றிய விதை பலிப்பதுபோன்று தம் குலத்திற் பிறந்தவனே சத்புத்திரன். இவனுக்கே உபநயன முதலிய சம்ஸ்காரங்கள் விதிக்கப் பட்டிருக்கின்றன.

70. நிலத்தைச் சிலரும், விதையைச் சிலரும் மேன்மை யென்பர். இவ்விஷயத்தில் கடைப்பிடிக்கத்தக்க சரியான கொள்கையாவது :

71. களர் நிலத்திட்ட விதை பலிக்காமற் போகும். பயிரேற்ற நிலமும் கரம்பாகிவிடும். எனவே இரண்டும் சரியா யிருந்த போதிலும்,

72. மான் முதலானவற்றின் வயிற்றில் பிறந்த ருசிய சிங்கர் போன்ற மேலோர், அவர்கள் தோன்றக் காரணமான விதையின் மேன்மையால் சிறப்பெய்தியதைக் காணுமிடத்து, வித்தே சிறப்பென்று கொள்ளலாம்.

73. அந்தணனுடைய தொழிலைச் செய்வதனால் தாழ்ந்த குலத்தோன் அந்தணனாகான். ஏனெனில் அந்தணர் ஒழுகுகள் இவர்க்கில்லை. இழிதொழில் இயற்றிய போதிலும் அந்தணன் இழிகுலத்தோனாகான். ஏனெனில் செயல் தாழ்வு எனினும், பிறவி மேன்மையுடைத்தன்றோ! இவ்விதமே பிரமன் கட்டளையிட்டிருக்கிறார்.

## ஆபத்து வேளையில் விதி விலக்குகள்

74. இறையுணர்வில் சிந்தையை ஊன்ற நிறுத்திய வனும், பிராம்மணத் தாய் வயிற்றிற் பிறவியெடுத்தவனு யும், தனக்கேற்பட்ட கருமத்தில் பிறழாதவனுயுமுள்ள அந்தணன் பின்வரும் ஆறு தொழில்களாலும் வாழ்வை நடத்திக் கொள்ள வேண்டியது.

75. ஓதுதல், ஓதுவித்தல், வேள்வி செய்தல், செய் வித்தல், தானம் கொடுத்தல், தானம் பெறுதல் இவை ஆறும் அந்தணர் செய்தொழிலாம்.

76. இவற்றில் ஓதுவிப்பதாலும், வேள்வி செய்விப்ப தாலும், தானம் பெறுவதாலும் அந்தணர் தங்கள் வாழ்க் கையை நடத்திக்கொள்ள வேண்டியது.

77. பிராம்மணனுக்குரிய ஆறு செய்தொழில்களில் அவனுடைய ஜீவனோபாயமென்று குறித்த மூன்று நீங்க லாக, மற்ற மூன்றும் க்ஷத்திரியர் இயற்ற வேண்டியது.

78. வைசியனுக்கும் அவ்வாறே: ஏனெனில் ஜீவனோ பாயமாக அந்தணர்க்கு வகுத்த மூன்றையும் க்ஷத்திரிய வைசியருக்கு மநு அனுமதிக்கவில்லை.

79. படைக்கலம் ஏந்தல், உலகாளல் இவை க்ஷத்திரி யனுக்கும், வாணிபம், விவசாயம் இவை வைசியருக்கும் வாழ்க்கை வழியாக அமைக்கப் பட்டிருக்கிறது. மேற் சொல்லிய வேள்வி செய்தல், தானம் கொடுத்தல், வேதம் ஓதுதல் ஆகியவை ஆன்மீக முயற்சிகளாம்.

80. அந்தணர்க்கு ஓதி வைத்தல், க்ஷத்திரியனுக்கு உலகாளல், வைசியருக்கு வாணிபம் புரிதல் ஆகியவை குலத் தொழில்களாம்.

81. அந்தணன் தனக்குரிய தொழிலால் வாழ்க்கை நடத்த இயலாதபோது, கிராமாதிகாரம், தேசாதிகாரம் முதலிய க்ஷத்திரியன் தொழிலை மேற்கொண்டு, அதனல்

பிழைத்துக் கொள்ள வேண்டியது. ஏனெனில் அவனுக்கு அடுத்த குலத்தொழில் அதுதானே!

82. தன் குலத் தொழில், க்ஷத்திரியத் தொழில் இவற்றாலும் ஜீவிக்க முடியாத காலத்தில், வைசியனுடைய தொழிலான வாணிபத்தால் ஜீவிக்கலாம்.

83. பிராம்மண க்ஷத்திரியர்கள் வாணிபம் செய்து பிழைத்தபோதும், உடல் முயற்சியும் பிறர் தயவை நாடத்தக்கதாயுமுள்ள விவசாயத் தொழிலை மேற்கொள்ளக் கூடாது. அதைத் தான் நேரில் இயற்றுவிடினும், தனது ஜீவனத்தை முன்னிட்டு, தக்க ஆட்களைக் கொண்டு தனக்காக விவசாயமும் செய்விக்கலாம்.

84. பயிரிடுதலை மேலான தொழில் என்று சிலர் கருதுகின்றனர். ஆயினும் பெரியோர் அதைப்பாராட்டவில்லை. ஏனெனில் இரும்புக் கொழு நுதியுடைய கலப்பை, மண்வெட்டி இவற்றைக் கொண்டு பூமியையும், பூமியில் வாழும் சிறிய உயிரினங்களையும் வெட்ட நேரிடுகிறதன்றோ!

85. வேறு பிழைக்கும் வழியின்றி, வைசிய குலத் தொழிலான வாணிபத்தில் காலம் தள்ள நேரும் பிராம்மண, க்ஷத்திரியர்கள், விற்பனை செய்யக்கூடிய பொருள்களில் பின்வருவன விலக்கத் தக்கவையாம்.

86. பல்விதமான ரஸப் பொருள்கள், சமைத்த சோறு, எள், இரத்தினம் முதலிய மணிகள், உப்பு, மனிதர், பசுக்கள் இவற்றை விற்கலாகாது.

87. சிவப்புத் துணி, சணப்புப் பட்டு, கம்பளம், கனி கிழங்கு, மருந்து.

88. தண்ணீர், ஆயுதம், நஞ்சு, புலால், ஆட்டாங் கொடி, கற்பூரம் முதலிய நறுமணப் பொருள், பால் தேன், தயிர், எண்ணெய், மது, வெல்லம், தருப்பை,

89. யானை முதலான காட்டு மிருகங்கள், சிங்கம் பறவை, சாராயம், அவுரி, அரக்கு, குதிரை முதலிய ஊர்திகள் இவற்றையும் விற்பனை செய்யலாகாது.

90. ஆயினும் பயிரிடச் செய்வித்துக் கொள்ளும் அந்தணனுக்கு எள் விளைந்தால், அதனை வேறு தானியங்களுக்குப் பண்டமாற்றியாவது, அல்லது நேராகவாவது, உடனே விற்று, நற்கருமங்களுக்குப் பயன்படுத்திவிட வேண்டும்.

91. உண்ணவும், தைலமாடவும், தானம் செய்யவும் அல்லாத வேறு காரியங்களுக்கு எள்ளைப் பயன்படுத்திக் கொள்ளும் அந்தணன் தன் பிதுர்க்களுடன் நாய் மலத்தில் புழுவாய்ப் பிறக்கிறான்.

92. அரக்கு, புலால், உப்பு இவைகளை விற்றால் உடனே அந்தணன் பாவியாகிறான். பால் விற்றால் மூன்றே நாளில் தாழ்ந்த குலத்தவனாவான்.

93. பழிக்கப்பட்ட ஏனைய பொருள்களை லாபம் கருதி விற்கும் அந்தணன் ஏழு நாட்களில் வைசியத் தன்மையடைகிறான்.

94. தன்னிடமுள்ள வெல்லம் முதலான ரஸப் பொருள்களை நெய் முதலியவற்றிற்குப் பண்டமாற்றம் கொள்க. உப்பை மட்டும் பண்ட மாற்றிக் கொள்ளக் கூடாது. சமைத்த சோற்றுக்கு அரிசியையும், எள்ளுக்கு அரிசி முதலான தானியங்களாலும் பண்ட மாற்றிக் கொள்ளலாம்.

95. க்ஷத்திரியன், குலத் தொழிலாலும், வாணிபத்தாலும் ஜீவிக்க இயலாதபோது, ரஸம் முதலான வியாபாரம் செய்யலாம். எவ்வித நெருக்கடியிலும் மேற்குலத்தானுடைய பிழைப்புத் தொழிலை க்ஷத்திரியன் தான் மேற்கொள்ளலாமென்று எண்ணக் கூடாது.

96. பொருளாசையால் மேற்குலத்தான் தொழிலை ஒருவன் மேற்கொண்டு விட்டால், அவன் செல்வத்தை யாவும் கவர்ந்து நாடு கடத்த வேண்டியது அரசன் கடமை.

97. சற்று முன் பின்னாக இயற்றப் பெற்றாலும் குலத் தொழிலே மேலாகும். பிறர் தொழிலை நன்கு செய்தாலும் அது தாழ்வே. வேறு குலத் தொழிலைச் செய்பவன் தன் குலத்திலிருந்து நீங்கிப் பாவியாகிறான்.

98. வைசியனும், தனது குலத் தொழிலால் வாழ வியலாதபோது, தனக்கு அடுத்த குலத் தொழிலால் பிழைக்கலாம். ஆயினும் செய்யத்தகாத மிச்சில் மிசைதல் போன்றவற்றைக் கூடுமானவரை விலக்கவேண்டும். சற்று வசதி பிறந்ததும் குலத் தொழிலையே மேற்கொண்டுவிட வேண்டும்.

99. அந்தணர்க்குப் பணி புரிவதனால் தனது பெண்டு பிள்ளைகளைக் காப்பாற்ற முடியாதபோது, நாலாம் வருணத்தவன் பலகாரம் முதலியன செய்து விற்றுப் பிழைக்கலாம்.

100 அல்லது துவிஜர்களுக்குப் பயன்படுவதான சிற்ப வேலை, தச்சு வேலைகளையும் மேற்கொள்ளலாம்.

101. பிழைப்பில்லாமல் வருந்தும் அந்தணன், க்ஷத்திரிய வைசியத் தொழில்களை மேற்கொள்ளாமல், தனது குலத் தொழிலையே புரிய எண்ணினால், அதற்குரிய முறைகள் கூறப்படுகின்றன.

102. ஓங்காமல் குன்றிப் போன அந்தணன் சங்கர ஜாதியர் முதலிய தகாதாரிடத்தும் தானம் பெறலாம்; அதனால் குற்றமில்லை. ஓடு நீர்க் கங்கையில் ஓடி வந்து விழும் தெருத் தண்ணீர் முதலியவற்றால் கங்கை கலங்குவதுண்டா?

103. குன்றிப் போன அந்தணன் தகாதவனுக்கு ஓது வித்தல், வேள்வி புரிவித்தல், பழிப்பு மிக்க தானங்கள் பெறுதல் ஆகியவற்றாலும் குற்றம் வருவதில்லை. ஏனெனில் தீயைப் போலவும் நீரைப் போலவும் இயல்பாகவே தூய்மையுடையவன் அந்தணன்.

104. உயிர் போகும்படியான ஆபத்து வேளையில் பிரதி லோமர் முதலான எவருடைய உணவை வாங்கி யுண்ட

போதிலும், ஆகாசத்தில் விட்டெறிந்த சேறு போல, பாவங்கள் அவனை அணுகாமற் சிதறிப் போகின்றன.

105. பசியால் வாடியிருந்த போது அஜீகர்த்தர் என்ற முனிவர், சுனச்சேபன் என்ற தனது பிள்ளையை நூறு பசுவுக்கு ஈடாகக் கொடுத்து, யாகப் பசுவாக அவனைப் பலியிடவும் சம்மதித்து, அவனை விற்று விட்டார். பசியின் கொடுமையைத் தணிப்பதற்காக அவ்விதம் செய்த காரணத்தால் அம்முனிவரைப் பாவம் அணுகவில்லை.

106. அறம், அல்லாதது இவற்றை நன்கறிந்த வாமதேவர் பசிப் பிணியால் வருந்தித் தன் உயிரைக் காத்துக் கொள்ளும் பொருட்டு நாய் மாமிசத்தைச் சாப்பிடவும் முயன்றார். அதனால் அவருக்குப் பாவம் வரவில்லை.

107. தவ முனிவரான பாரத்துவாஜர் தனது புத்திரனுடன் ஜன நடமாட்டமே யில்லாத பெருங் காட்டினிடையே பசியால் களைப்புற்று விருது என்னும் தச்சனிடத்தில் அநேகம் பசுக்களைத் தானம் வாங்கினார்.

108. தருமா தருமம் அறிந்த விசுவாமித்திரர் ஒரு சமயம் பசியால் வாட்டமுற்று, சண்டாளன் கையிலிருந்து நாயின் முழங்கால் மாமிசம் வாங்கிச் சாப்பிட முயன்றார். அதனால் அவருக்குப் பாவம் வந்து சேரவில்லை.

109. கேடுடையவனிடம் தானம் வாங்குதல், ஒழுக்கமற்றவனுக்கு வேள்வி செய்து வைத்தல், வேதம் ஓதுவித்தல் இம்மூன்றில் முற்கூறியது ஆகத் தாழ்வு. அது அந்தணனுக்கு நரகுய்க்கும் வழியாகும். எனினும் வேறெதனாலும் ஜீவிக்க வியலாத போது அதனையும் செய்யலாம்.

110. ஏனென்றால் யாகம் புரிவித்தல், ஓதுவித்தல் ஆகியவை உபநயன முதலிய உரிமைகள் உள்ளவனுக்கே செய்விக்கப்படும். தானம் வாங்குதல் சம்ஸ்காரமில்லாத யாரிடத்தும் வாங்கக் கூடியதாகையால் அது மிகவும் தாழ்ந்ததாகும்.

111. தகாதவனுக்குச் செய்விக்கும் வேள்வி, ஓது வித்தல் முதலானவற்றால் விளையும் பாவம் ஜப ஹோமங் களால் போக்கத் தக்கது. தகாதவனிடம் பெற்ற தானத் தால் விளையும் பாவமோ, பெற்ற பொருளைத் தானம் செய்தால் மட்டுமே தீரும்.

112. எத்தாலும் அந்தணன் ஜீவிக்க முடியாத போது, (சிலம்) வயலில் சிந்திய நெற் கதிர்களைப் பொறுக்கியோ, அல்லது சிந்திக் கிடக்கும் நெல் மணிகளைச் சேகரித்தோ (உஞ்சம்) பிழைக்கலாம். கெட்ட தானம் வாங்குவதை விட சிலம், அதனைவிட உஞ்சமும் முறையே மேலானவை யாகும்.

113. ஒழுக்க முடையவனும் ஓங்க முடியாதவனு மான அந்தணன், தன் குடும்ப வாழ்க்கைக்காக ஆடை, தானியம் இவற்றையும், வேள்விக்காகப் பொருளையும், நெறி நில்லா மன்னனிடத்தும் வாங்கலாம். ஆயின் அரசன் கருமித்தனத்தால் கொடாது கரத்தல் செய்தால், அவனிடம் இரத்தல் தகாது.

114. பயிர் ஏறிய நிலத்தைவிட பயிர் இல்லாத நிலத்தைத் தானம் வாங்குவது குற்றமற்றது. இவ்வாறே பசு, வெள்ளாடு, பொன், தானியம், சோறு இவைகளில் முன்னவற்றைவிட பிற்பகுதியிற் கூறப்பட்டவற்றைத் தானம் வாங்குதல் பெருங்குற்றமுடையது.

115. இனிக் கூறப்படும் எழு வகையாலும் ஈட்டும் பொருள் குற்றமற்றது. அதில் தந்தை வைத்துப் போன செல்வம், விலைப்பொருள், புதையல் இம்மூன்றும் எல்லா வருணத்தாருக்கும் அடையத்தக்கவையாகும். வெற்றிப் பொருள் க்ஷத்திரியனுக்கும், வட்டி வாங்குதல், வாணிபம் அல்லது பயிரிடுதல் ஆகியவை வைசியனுக்கும், நல்லவ னிடத்தில் தானம் வாங்குதல் அந்தணனுக்கும் மேன்மை தருவன.

116. மருத்துவம்,வாதம் முதலிய கல்வி, சிற்ப வேலை, மன்னனுடைய சேவகம் புரிதல், யாரிடத்தும் ஏவல் புரிதல், ஆநிரை காத்தல், வாணிபம், விவசாயம், துணிவு, யாரிடமும் பிச்சையெடுப்பது, வட்டி வாங்குவது இந்தப் பத்தும் ஆபத்துக் காலத்தில் மேற்கொள்ளத்தக்க உபாயங்களாம்.

117. குறிப்பாக, அந்தணரும் அரசரும் வட்டி வாங்கக் கூடாது; ஆயினும் வட்டிப் பொருளை நல்லறங்களுக்குப் பயன்படுத்துவராயின் கால், அரை வட்டி வாங்கலாம்.

118. குடிமக்கள் உயிர் வாழ முடியாத பேரபாயத்தின் போதும் அவர்களைக் காப்பாற்றுகின்றவன் ஆதலால் நாலில் ஒன்று தானியத் தீர்வை வாங்கிய போதும், மன்னன் தோஷத்தை யடைவதில்லை.

119. பகைவரைப் பொருது வெல்லல் க்ஷத்திரியனுடைய நல்லறம். அஞ்சிப் புறமுதுகிடக் கூடாது. ஆயுதம் கொண்டு, வைசியரைத் திருடர்களிடமிருந்து காத்து, நியாயப்படி அவர்களிடமிருந்து கப்பம் பெறுக; (பெரும்பாலும் வைசியரே செல்வராகவும் வாணிபராகவும் இருப்பராதலால், இங்கு அவர்களைக் குறிப்பாகக் கூறப்படுகிறது.)

120. தானிய வாணிபம் செய்வோரிடம் லாபத்தில் இருபதுக்கு எட்டு வீதமும், ஐம்பதில் ஒன்று லாபம் வருகின்ற ரொக்க வாணிபத்தில் இருபதில் ஒன்று வீதமும் தீர்வை பெறுக. எப்போதும் தொழில் உஞற்றும் நாலாம் வருணத்தாரிடமும், கருமான் முதலிய தொழிலாளரிடத்தும், தீர்வை வாங்காமல், அவர்களிடம் அரசாங்கத்துக்கு வேண்டிய வேலைகளை மட்டும் தீர்வைக்குப் பதிலாக வாங்கிக் கொள்ளவும்.

121. அந்தணர்க்குப் பணி புரிவதனுல் மட்டும் தனது வாழ்க்கைக்கு வேண்டிய ஊதியம் பெற வியலாத போது மன்னனையும் வணிகனையும் சார்ந்து உழைத்து வாழலாம்.

122. பிழைப்புக்காகவும், மறுமை நலத்திற்காகவும் அந்தணர்தம் பணியேற்று நடத்தல் நாலாம் வருணத்தார் கடனும்; இனி யாருடைய ஏவலன் என்ற புகழே அவர்களுடைய மேன்மை.

123. எனவே அந்தணர்ப் பேணலே அவர்க்கு எத்தொழிலைக் காட்டினும் மேலான அறமென்றும், மற்றவை பயனற்றவை யென்றும் கரும காண்டத்தில் கூறியிருக்கிறது. இது அந்தணர்க்காற்றும் பணியைச் சிறப்பிக்கச் சொன்னதே யல்லாமல் ஏனையஉழைப்புக்களைத்தாழ்த்திச் சொன்னதல்ல.

124. அந்தணனும், தனக்குப் பணி புரிவோனுடைய திறமை, உழைப்பு, அவனைச் சார்ந்துள்ள குடும்பம் இவற்றையெல்லாம் நன்கு சிந்தித்து, அவனுடைய வாழ்க்கைத் தேவைக்கு வேண்டிய ஊதியம் கொடுக்கவேண்டும்.

125. எஞ்சிய உணவு, உடை, நொய் முதலிய சலித்த மணிகள், பழைய பாத்திரங்கள் இவற்றையும் அவனுக்குக் கொடுக்கவும்.

126 முள்ளங்கி முதலானவற்றை அவன் உண்டாலும் குற்றமில்லை. ஏனெனில் உபநயனாதி சம்ஸ்காரங்கள் அவனுக்கு விதிக்கப்படவில்லையன்றோ! ஆனால் யாக யக்ஞங்கள் மட்டும் அவனுக்கு விலக்கப்படவில்லை.

127. தன் குலக் கடமைகள் உணர்ந்த நாலாம் வருணத்தன், துவிஜர்களின் தருமமான யாக யக்ஞங்களைத் தானும் மேற்கொள்கையில், வேத மந்திரத்தைப் பயன்படுத்தாமல் ஸ்தோத்திர மந்திரங்களால் ஐம்பெரு வேள்விகளைக் குல வழக்கப்படி மேற்கொள்வதனால் உலக நிந்தைப்பட்டு உழலாமல் நற்புகழும் வந்தெய்தும்.

128. பிறரை நிந்திக்காமல் துவிஜரைப் போன்றே நல்லாற்றில் ஒழுகுவோன், இம்மையில் புகழும், மறுமையில் நற்கதியும் பெறுவான்.

129. பொருள் ஈட்டத் தக்கவனே யாகினும், குடும்பத் தேவைக்கு மேல் சேர்க்கக் கூடாது. அப்படிச் சேர்த்தால் தன்னால் பேணத் தக்க அந்தணனையும் அதற்காகத் துன்புறுத்த நேரிடலாம்.

130. இதுவரை நால் வருணத்தாருக்கும் ஆபத் தருமம் கூறியாயிற்று. இவற்றைச் சரிவர நடத்துவோர் நற்கதியடைவர்.

131. நால் வருணத்தாரின் ஒழுக்குகளையும் இதுகாறும் முழுமையும் கூறினேன். இனி நேரிட்ட பாவத்திற்கு ஏற்ற கழுவாய்களைப்பற்றிக் கூறப்போகிறேன்.

**பத்தாவது அத்தியாயம் முற்றும்**

## பதிமூன்றாவது அத்தியாயம்

# குற்றங்களின் கழுவாய்

### பிராயச்சித்த விதிகள்

1. சந்ததிக்காக மணம் செய்து கொள்ள வேண்டி இரப்பவன் பெறும் தானத்தையும் கழுவாயாக மேற் சொல்லப் போகிறபடியால், தானம் பெற அருகதை யுடையவர்களைப்பற்றி முன்னர் கூறுகிறார். இன்றியமை யாத ஜோதிஷ்டோமம் ஆகிய வேள்விகள், புனித நதிகள், புரங்கள் சென்று வரல், விஸ்வஜித் யாகம் செய்தல், குரு தக்ஷிணை, தந்தை தாயைக்காப்பாற்றல் ஆகிய கடமைகள், வேதமோதுதல், நோய் போக்கிக் கொள்ளல் இவற்றிற் காக இரப்பவர்கள்.

2. இந்த ஒன்பதின்மரையும் ஸ்நாதகப் பிராம்மணர் என்றும், அறத்தின் பொருட்டு இரப்பவர் என்றும் அறிந்து, அவர்களின் கல்வி மேன்மைக்கு ஏற்றவாறு பொருளும், போருளில்லாவிடில் பசு, பொன் முதலியனவும் வழங்க வேண்டும்.

3. அந்தண மேலோரான இவ்வொன்பதின்மருக்கு மட்டும் வேள்விச் சாலையில் தீக்குண்டத்துக்கருகில் தட் சிணையுடன் அன்னமிடலாம், ஏனையோருக்கு வெளியில் அன்னமிட வேண்டும். இது சாஸ்திர மரியாதை.

4. வேள்வி இயற்றும்போது, மணி, முத்து ஆகிய கற் களையும், தட்சிணைக்குப் போதுமான பொருளையும் தன் னிடம் வாங்கிக் கொள்ளுமாறு வேதமோதிய அந்தணரை மன்னன் கேட்டுக்கொள்ள வேண்டியது.

5. மணம் புரிந்து கொண்டு, சந்ததியும் அடைந்த பின்னர், மீண்டும் இரந்து காமத்தால் மற்றொரு மணம் கொண்டவனுக்குப் பெண்ணின்பம் துய்த்ததுதான்

கண்ட பலன்; அந்த மணத்திற்காகப் பொருள் உதவி செய்தவனுக்கே அத் திருமணத்தினால் பிறந்த பிள்ளைகள் இயற்றும் தருப்பணம் முதலிய கடன் இறுத்தலின் பலன் போய்ச் சேருமேயன்றி, தந்தைக்கு யாதும் பயனில்லை. அதாவது, காமத்தால் மணம் செய்து கொள்ளல்கூடாது என்பதைக் குறிக்க வந்ததேயன்றி, சந்ததிகளைப் பற்றிய தாக இந்தக் குறிப்பை எடுத்துக் கொள்ளக்கூடாது.

6. வேதம் ஓதியுணர்ந்து, குடும்பப்பாசம் அற்றவராய் விளங்கும் மேலோரான அந்தணர்க்கே பசு, பொன், பூமி இவற்றைத் தானம் செய்வோன் சுவர்க்கத்தையடைகின்றான்.

7 மூன்று ஆண்டுகள் அல்லது மேற்பட்ட காலத்திற்கு வேண்டிய குடும்பத் தேவைகளுக்கு உரிய செல்வம் படைத்தவன் எப்போதாவது ஆசைக்காகச் சோமபானம் செய்யலாம். நித்ய சோமபானத்திற்கு இந்த ஏற்பாடு இல்லை. (சோமபானம் என்பது வேள்வியில் ஒரு வகைக் குடி. இது நித்ய மென்றும், காம்ய மென்றும் இருவகை. சந்தியாவந்தனம் போன்றவற்றை ஒத்து அன்றாடம் பருகத்தக்கது நித்ய சோமபானம். ஒரு குறிப்பிட்ட பலனைக் குறிக் கொண்டு இயற்றிய வேள்வியில் பருகுதல் காம்யம்.)

8. மேற்சொன்ன அளவு வசதி யில்லாதவன் இம் மாதிரிக் காம்ய சோமபானம் செய்தால், அதுவரை அவன் பருகிவந்த நித்ய சோமபானத்தின் நற்பலனையும் அவன் அடைய மாட்டான்.

9. தாய் தந்தையர் தவித்திருக்க விட்டு, பேருக்காக மற்றவர்க்குத் தானம் செய்கின்ற செல்வன் பாவமே செய்கிறான். அப்படிப் பெறுகின்ற புகழ், முதலில் தேன் போல் இனிக்குமாயினும், பின்னர் நஞ்சைப் போல நலிவுறுத்தும்.

10. தன்னால் காக்கப்பட வேண்டிய பெண்டு பிள்ளைகளைப் புறக்கணித்துவிட்டு, மறுமை யின்பத்தை மட்டும்

நாடித் தானம் செய்பவனுடைய கொடை இம்மை மறுமை யிரண்டிலுமே நலிவைத் தருவதாகும்.

11. பிராம்மண க்ஷத்திரியர்கள் வேள்வி முயல்கையில், அதற்குத் தேவையான அங்கங்கள் யாவிலும் ஒன்று மட்டும் குறைவு பட்டுப்போய், அரசனும் அறமறிந்த மேலோனாக விருந்தால்,

12. நிறையப் பசுக்களும் செல்வமும் உடையவனாக வும், வேள்வி முயலாதவனாகவும், சோமபானம் செய்யாத வனாகவும் உள்ள வைசிய லோபியின் பொருளைக் கேட்டு வாங்கியோ, கொடாவிடில் வலிந்து அவனிடமிருந்து கவர்ந்தோ, வேள்வியின் குறையாக இருக்கும் செல்வத்தை வேள்வி செய்வோன் கொண்டு வரலாம்.

13. அவ்வித வாணிபர் இல்லாவிடில், வேள்வியின் அங்கங்களில் இரண்டு மூன்று குறைந்தாலும், செல்வம் படைத்த நான்காம் வருணத்தன் வீட்டிலிருந்து, யோசனை யில்லாமலும், கேளாமலும், வலிந்தும் கொண்டுவரலாம். ஏனெனில் அவன் யாதொரு வேள்வியும் இயற்றப் போவ தில்லையே!

14. அத்தகையவனும் இல்லையெனில், தீ வளர்த்தல் தவிர்த்தும், நூறு பசுக்களையும் செல்வமாகவுடைய அந் தணன் வீட்டிலிருந்தும் அவனைக் கேளாமலே வேண்டிய அனைத்தையும் கொண்டுவரலாம்.

15. எப்போதும் தானம் பெறுவதன்றிக் கொடுத்தறி யாதவனை வேள்விக்கு வேண்டிய பொருளைக் கேட்டுக் கொடாமலிருந்து விட்டால், அவனிடமிருந்து வலிந்து பறித்துக் கொண்டோ, களவிட்டோ கொண்டு போக லாம். எப்படியும் பயன்படும் பொருள் அதை உடையவ னுக்கும் பயன் தருமாதலால் அவ்விதம் செய்தலும் அறச் செயலே எனல் கருத்து.

16. மூன்று நாட்கள் பட்டினி கிடந்து, மறுநாளும் தனக்கு யாதொன்றும் கிடைக்காவிடில், தான தருமம் செய்தறியான் பொருளைக் களவாடியும் பெறலாம். இது ஒரு நாளைக்கு மட்டும் போதுமான அளவினதாக இருக்க வேண்டும்.

17. வேள்வி புரியாதவனுடைய தானியத்தை, அவனது கழனி, வீடு, களம் இவற்றில் எங்கு கிடைத்தாலும் எடுத்துக் கொள்ளலாம். களவாடிய காரணத்தை உடையவன் கேட்டால், திருடியவன் தான் மேற்கொண்டநற்கருமம் இதுவென்று விளக்கம் கூறவேண்டும்.

18. க்ஷத்திரியனுக்கு இவ்வித நெருக்கடிகள் வரினும், ஒரு போதும் பிராம்மணனிடம் பறிக்கக் கூடாது. வேறு வழியே இல்லாத நிலை வருமாயின், கர்மானுஷ்டானம் தவறிப் போய்க் களவு முதலான இழிசெயல்களையுடைய அந்தணன், க்ஷத்திரியன் இவர்கள் பொருளைக் கவர்ந்து கொள்ளலாம்.

19. தானே வேள்வி புரியானாயினும், புரிவார்க்கு இவ்வாறு அபகரித்தேனும் பொருளைச் சேர்ப்பிக்கிறவன், தான் ஓடமாக இருந்து, பொருளாளனையும், அதனைக் கொண்டு வேள்வி முயன்றவனையும் கரை சேர்ப்பவனாகிறான்.

20. வேள்வி முயல்வோன் பொருள், தேவதைகளின் பொருள். முயலாதவன் உடைமை அரக்கர் உடைமை. எனவே அரக்கர் உடைமையைத் தேவர்க்காக்குதல் தகும்.

21. இவ்விதம் பறித்து வந்து வேள்வி முயலும் அந்தணனை அறமறிந்த அரசன் தண்டிக்கக் கூடாது. ஏனெனில் மன்னனின் நெறியின்மையால்தானே அந்தணன் வறியனாய்ப் பசித்திருக்கிறான்!

22. எனவே அந்தணனின் குடும்பம், தரும நடை, அவனது வேத ஞானம், ஒழுக்கம் இவற்றை மதித்து, அவ

னுக்குப் போதுமான வாழ்க்கைத் தேவைகளைத் தனது அரண்மனையிலிருந்து கிடைக்கச் செய்யவேண்டும்.

23. அந்தணனை வாழச் செய்து அவனைக் காத்தால் அவனியற்றும் அறத்தில் ஆறில் ஒரு பங்கு அரசனையும் அடையும்.

24. வேள்விக்காக வெனினும் நாலாம் வருணத்தனிடம் அந்தணன் இரத்தலாகாது. இரந்து பெற்று இயற்றிடின், சண்டாளனாகப் பிறப்பான். கேளாமல் வலியக் கொடுத்தாற் பெறலாம். மேலே யாசிக்கும் விஷயமாகச் சொல்லும்போது, இடையில் இவன் பொருளையும் உபயோகப் படுத்தலாமென்று கூறப்பட்ட போதிலும், இங்கு முக்கியமாய் அவனிடம் எப்பொருளும் வாங்கக் கூடாதென்று விதிக்கப்படுகிறது.

25. வேள்விக்கென்று கேட்டுப் பெற்ற பொருள் முழுதையும் அவ்வாறே பயன்படுத்தாத அந்தணன், பாசபக்ஷியாகவாவது, காகமாகவாவது பிறந்து, நூறாண்டுகள் உழல்வான்.

26. தேவ, பிராம்மண சொத்தை விரும்பிப் பறித்தவன் பாவியாகி, மறுபிறப்பில் கழுகு தின்று எஞ்சிய மிச்சில் புலால் உண்டு பிழைப்பவனாவான்.

27. நித்ய சோமயாகம் செய்யக் கூடாவிடில், அதற்குக் கழுவாயாக, ஆண்டுக்கொரு முறை சித்திரையில் ஒரு முறை வைசுவானர இஷ்டியேனும் செய்க.

28. ஆபத்தில்லாத காலத்தில் ஆபத்துத் தருமங்களைக் கடைப்பிடிக்கும் அந்தணன் பரலோகத்தில் நற்பலனடையான் என்பது ஆன்றோர் துணிபு.

29. விஸ்வேதேவர், சாத்யர், அந்தணர், மாமுனிவோர் அனைவரும் கூடி, முக்கிய தர்மத்தையே ஆபத்துக் காலத்தும் கடைப்பிடித்தால் உயிருக்கு ஊறு வராமலிருக்கும்

பொருட்டே, விசேஷமாகச் சில தருமங்களைக் கற்பித்தார்கள். ஆதலால் தீராப் பொறியாகச் செய்வனவற்றிற்குக் குற்றமில்லை. இதற்குக் கௌண தருமம் என்று பெயர்.

30. விதிப்படி நன்கியற்றும் வாய்ப்புடையவன் இந்தக் கௌண தருமத்தைக் கடைப்பிடித்தால், அந்த மூடன் மறுமையில் நற்பலன் அடைவதில்லை.

31. அறமறிந்த அந்தணன் மன்னனிடம் எவ்வித வழக்கும் கொண்டு செல்ல வேண்டியதில்லை. தனக்குத் தொல்லை செய்தோரை ஆபிசார மந்திர வலிமையினால் தானே தண்டிக்கலாம். இதனால் அரசனிடம் முறையிடுவது கூடாதென்பதல்ல.

32. தனது சக்தி, மன்னன் வலிமை இவ்விரண்டினும், தன் வலிமையையே முன்னிட்டு அந்தணன் பகை வெல்க. அத்தகைய சக்திகளைப் பின் காண்க.

33. அதர்வண வேதத்து ஆங்கீரஸ முதலிய ஆபிசார மந்திரப் பிரயோகம் அந்தணர்க் காயுத மாதலால், அதைக் கொண்டே பகை வெல்லலாம்.

34. க்ஷத்திரியன் தன் தோள் வலியால் தனது அபாயத்தைத் தவிர்க்க, வைசியரும் மற்றோரும் தங்கள் பொருளைக் கொண்டு தீர்த்துக் கொள்ள வேண்டும். அந்தணன் மேற் கூறியவாறு ஆபிசார மந்திர ஜெப ஹோமங்களால் தற்காத்துக் கொள்க.

35. அற நூல்கள் விதித்த கடமைகளைத் தவறாது ஒழுகுபவனும், துஷ்டர்களைத் தண்டிப்பவனும், கழுவாய்களை விதிக்கிறவனும், எல்லா உயிர்க்கும் நண்பினனுமுள்ள அந்தணன் **மைத்ரப் பிராம்மணன்** என்று சொல்லப்படுகிறான். எனவே அவனுக்கு விருப்பம் தராத வார்த்தைகளைச் சொல்லுதலும், அவனை எடுத்தெறிந்து பேசுதலும், பழித்தலும் தகாது.

## வேள்விகள் பற்றியது

36. மணமாகாத கன்னிப் பெண், கொஞ்சம் படித்தவன், மூடன் அல்லது சிறுபிள்ளை, துயருற்றவன், நோயாளி, உபநயன முதலியன இல்லாதவன் இவர்கள் ஒருவனுடைய வைதிகாக்னியில் அவனுக்காகத் தாங்கள் ஏற்று ஹோமம் செய்யலாகாது.

37. அப்படி யாரேனும் ஓமம் செய்யின், தீயின் உரிமையாளன் நரகுய்வான். எனவே தீ வளர்த்தல் முறைகளையும் வேதங்களையும் நன்கறிந்த ஒருவனே ஹோமம் செய்யவேண்டும். எனவே அசந்தர்ப்பம் நேரிட்டபோது, தக்காரைக் கொண்டே ஹோமம் செய்வித்துக் கொள்ள வேண்டும்.

38. பிராம்மணன் செல்வனாக விருந்து, தீயை ஆதானம் செய்து கொள்ளும்போது, பிரஜாபதியைத் தேவதையாகப் பெற்ற குதிரையைத் தட்சிணையாகக் கொடுக்காவிடில், ஆஹிதாக்னி யாக மாட்டான். எனவே ஆதான காலத்தில் அசுவதானம் செய்தாக வேண்டும்.

39. புண்ணிய காலத்தில் நாட்ட முள்ளவன், புலன்களை யடக்கிக் கொண்டு, தீர்த்த யாத்திரை முதலான நற்பலன்களைச் சிரத்தையுடன் சேர்க்க வேண்டும் கொஞ்சத் தட்சிணையிற் செய்துவிடக் கூடிய வேள்வியைச் செய்வதுடன் அமையக் கூடாது.

40. இப்படி எளிய யாகங்கள் இயற்றுவதனால், கண் முதலிய பொறிகள், புகழ், மக்கள், பசுக்கள், வாழ்நாள், மறுமையிற் புகழ், பேரின்பம் யாவும் அழிவுறும். ஆதலால் சொற்பச் செல்வமுடையவன் யாகம் செய்யக் கூடாது.

41. மமதையால் இருவேளை ஹோமம் செய்யாமலிருப்பது புத்திர ஹத்திக்குச் சமமாகும். இதற்குக் கழுவாய் ஒரு மாதம் சாந்திராயன விரதமிருத்தல்.

42. நாலாம் வருணத்தானிடம் பொருள் யாசித்துப் பெற்று அதனைக் கொண்டு தீ வளர்த்தல் முதலியன

செய்யும் அந்தணனுக்கு அவற்றால் ஒரு பலனுமின்றிப் போவதுடன், பொருளைக் கொடுத்தவனுக்கு இவன் ரித்விக்காக இருந்து யாகம் செய்வித்தது போலவே ஆகும். எனவே இவ்வந்தணன் பிரம்மவாதிகளின் பழிப்புக்கும் பாத்திரமாகிறான்.

43. இத்தகைய அந்தணன் தலையில் தனது கால்களை வைத்தேறி, அவனுக்குப் பொருள் கொடுத்தவன் பரலோகத்தில் தனது தடைகளைத் தாண்டி மேலோங்குகிறான்.

44. தனது அன்றாடப் புனிதக் கடன்களைத் தவிர்த்தவன், ஜீவஹிம்சை முதலிய தீச்செயல் புரிந்தோர், மனம் போனபடி யெல்லாம் புலனின்பங்களை நாடினோர் இவர்கள் கழுவாய் இயற்றியாக வேண்டியவர்கள்.

45. அறியாமற் செய்த பாவத்திற்கே கழுவாய் உண்டென்று சிலரும், தெரிந்து வேண்டுமென்றே பிழை செய்தவர்க்கும் உண்டென்று வேறு சிலர் வேதச்சான்றுகளைக் கொண்டும் கூறுகின்றனர். இந்திரன் அறிந்து செய்த பாவங்களுக்குக் கழுவாய் இயற்றிக் கொண்டான் என்று வேதத்தில் கூறப்பட்டிருக்கிறது.

46. பாவத்தின் கொடுமை யறியாமற் செய்த பிழை வேதம் ஓதுவதாற் போகும். அறிந்தியற்றிய பாவம் போகத் தானம், தவ முயற்சி போன்ற பற்பல கழுவாய்கள் உண்டு.

17. முன்வினைப் பயனாலாவது, இந்தப் பிறவியில் தெய்வச் செயலாகவாவது கழுவாய் இயற்றியாக வேண்டிய பாவம் ஒரு அந்தணனுக்கு வந்துற்றால், அதை இயற்றும் வரையில் மேலோருடன் நற்கருமங்களில் கலந்து கொள்ளத் தகுதியில்லாமற் போகிறான்.

48. இந்தப் பிறவியில் செய்த வினைப் பயனாலும், முன் வினைப் பயனாலும் அவரவர்க்குத் தீமை வடிவங்கள் உண்டாகின்றன.

## பாவங்களின் விளைவு

49. முற்பிறவியில் பொன்னைத் திருடியவன் கோணல் நகத்தையும், கள்ளுண்டவன் சொத்தைப் பல்லையும், பிரம்ம ஹத்தி செய்தவன் க்ஷயரோகத்தையும், குரு பத்னியைப் புணர்ந்தவன் பீஜமில்லாமையையும்,

50. பிறர் குறையைத் தூற்றியவன் நாற்ற மூக்கையும், இல்லாத சிறுமையைக் கற்பித்துப் பழித்தவன் நாற்ற வாயையும், தானியம் களவாடியவன் அங்கக் குறைவையும், தானியத்தில் கலப்படம் செய்து விற்றவன் கூடுதலான உறுப்புக்களையும்,

51. சோறு திருடினவன் அஜீர்ணத்தையும், குருவறியாமல் அவரிடமிருந்து வித்தையைக் கிரகித்தவன் ஊமையாகவும், ஆடை திருடியவன் வெண் குட்டத்தையும், குதிரை திருடியவன் கால் இல்லாமையையும், மறுபிறப்பில் பெறுகிறார்கள்.

52. இவ்விதத் தீச்செயல்களின் விளைவாக மறுபிறப்பில் உணர்ச்சி யற்றவராய், ஊமையராய், குருடராய், செவிடராய் உயிர்கள் பிறந்து உலகத்தாரால் அவமதிக்கப்பட்டு, அனுபவித்த துயரம் தவிர, மேலும் இந்தப் பிறவியில் தொல்லைப் பட்டுழல்வர்.

53. எனவே செய்த பிழைகளுக்கு அவ்வப்போது கழுவாய் இயற்ற வேண்டும். இல்லையேல் மறுமையில் நரகும், மறுபிறப்பில் ஊனமும் அடைவர்.

54. அந்தணர்க் கோறல், கள்ளுண்டல், பொன்களவு, குரு மனைவியைக் கூடல் இவை தனித்தனியாகவும், ஒன்று சேர்ந்தும் ஐந்து பெரும் பாவங்கள் உண்டாகின்றன.

55. மேலோரிடம் பொய்மை பேசல், ஒரு உயிருக்கு ஊறு நேரும் வண்ணம் அவனைப்பற்றி மன்னனிடம் கோள் சொல்லுதல், குருவுக்கு இல்லாத பழிப்பைக் கற்பித்தல் இவை பிரம்மஹத்திக்குச் சமமானவையே.

56. ஓதிய வேதத்தை மறந்து விடுதல், பகுத்தறிவைக் கொண்டு வேதம் பழித்தல், பொய்ச்சான்று கூறல், நண்பரைக் கொல்லல், பழிக்கப்பட்ட மலமாதியவற்றை உட்கொள்ளல் இந்த ஆறும் கள்ளுண்டமைக்குச் சமம்.

57. சேமித்த தனம், மானிடன், வெள்ளி, குதிரை, பூமி, வைரம், மணி முதலியன திருடுதல் பொன் களவாடியதற்குச் சமம்.

58. உடன்பிறந்தாள், பருவமடையாத பெண், சண்டாளி, நண்பன், மகன் இவர்தம் மனைவியர் ஆகியோரைக் கூடிச்சுகித்தல் குருமனைவியைக் கலந்ததற்கு இணையாகும்.

## சிறு பிழைகள்

59. பசுவதை, ஈனனுக்கு வேள்வி நடத்துவித்தல், பிறன்மனை கூடல், தன்னையே விலைக்குவிற்றல், குரு, தாய், தந்தை, வேதம், அக்னி, பிள்ளை இவர்களைப் பாராட்டாமல் விலக்குதல், பிரம்மயக்ஞம் செய்யாமை—

60. பரிவித்தி, பரிவேத்தா இப்படியாக விருப்பது, அவர்களுக்குப் பெண் கொடுப்பது, மணம் செய்விப்பது—

61. பருவமடையாத பெண்ணின் அபாய ஸ்தானத்தில் விரலால் குடைதல், அதிக வட்டி வாங்கிப் பிழைத்தல், பிரம்மசாரியா யிருந்தும் பெண்ணைச் சுகித்தல், தடாகம், மலர்ச் சோலை, மனைவி, பிள்ளை இவர்களை விற்றல்—

62. உரிய காலத்தில் சம்ஸ்காரங்கள் செய்து கொள்ளாமை, சிற்றப்பன் முதலிய பந்துக்களை நீக்குதல், கூலிக்கு வேத மோதுவித்தல், கூலிகொடுத்தோதல், எள் முதலியவற்றை விற்றல்—

63. தங்கசாலை முதலியவற்றில் அதிகாரம் செய்தல், வெள்ளத்திற்கு அணை கோலுதல், பூஞ்செடிகளை அழித்தல், மனைவியையேனும், வேசியையேனும் கூட்டிக்

கொடுத்துப் பிழைத்தல், சியேனயாகம் செய்தல், ஒருவனை மாய மந்திரத்தால் வசம் செய்தல்—

64. விறகுக்காகப் பச்சை மரத்தை வெட்டுதல், தெய்வத்தைக் குறிக்காமல் தனக்காக மட்டும் சமைத்தல், பழிக்கப்பட்ட சோறு பதார்த்தம் இவற்றைப் புசித்தல்—

65. இயன்ற போதும் அக்னி ஹோத்திரம் செய்யாமை, பொன் நீங்குதலாக மற்றவைகளைத் திருடுதல், வாங்கிய கடன் தீர்க்காமை, நீக்குறளைச் சென்றோதல், கூத்தாடுதல், பாடுதல்—

66. தானியம், உலோகம், பசு இவற்றைத் திருடுதல், குடிகார மனைவியைக்கூடுதல், ஸ்திரீ, நாலாம் வருணத்தன் வைசியன், க்ஷத்திரியன் இவர்களைக் கொல்லுதல் இவையெல்லாம் தனித்தனியே உபபாதகம் என்று அறிக.

## குற்ற வகைகள்

67. அந்தணனுக்கு நோயுண்டாக்குதல், கள், வெங்காயம், மலம் இவற்றை முகருதல், ஆண்பிள்ளையின் வாயில் மைதுனம் செய்தல் இவை ஒவ்வொன்றும் ஜாதிப் பிரம்சகரம்.

68. கழுதை, குதிரை, ஒட்டகம், மிருகம், யானை, வெள்ளாடு, செம்மறியாடு, மீன், பாம்பு, எருமைக்கடா இவற்றைக் கொல்லுதல் தனித்தனியே சங்கரிகரணம்.

69. பழிக்கப்பட்டவனிடம் யாசித்துப் பொருள் வாங்குதல், வாணிபம் செய்தல், தாழ்ந்தவனுக்குப் பணி புரிதல், பொய்மை யுரைத்தல் இவை தனித்தனியே அபாத்ரீ கரணம்.

70. புழு, பூச்சி, பறவைகளைக் கொல்லுதல், கள்ளுக் கடையில் காய் முதலியவற்றை வாங்கியுண்ணல், விறகு மலர் இவற்றைத் திருடுதல், அற்ப விஷயத்திற்குப் பெரிதும் துயரப்படுதல் இவையெல்லாம் தனித்தனியே மலிநீகரணம்.

71. இப்போது விவரிக்கப்பட்டு வந்த சகல பாவங்களுக்கும் உரியதாக விதிக்கப்பட்ட கழுவாய்களை நன்ருகத் தெரிந்து கொள்ளுங்கள்.

## அந்தணர்க் கோறல்

72. அந்தணன் ஒருவனைக் கொன்ற மற்ருரு அந்தணன், கொலையுண்டவனுடைய மண்டை யோட்டையோ, மற்ருென்றையோ கரத்தில் ஏந்தி, நாள்தோறும் ஏழு வீட்டில் பிச்சை வாங்கித் தின்று பன்னிரண்டு ஆண்டுகள் காட்டில் குடிசை கட்டி வாழ வேண்டும்.

73. க்ஷத்திரியன் அந்தணனைக் கொன்று விட்டால் வில்லாளி ஒருவனுல் எய்யப்பட்டு உயிரை விடவும். அம்பால் எய்யப்பட்டு உயிரிழந்தாலும், பிழைத்தாலும், பிழை நீங்கும். அல்லது எரியில் தலைகீழாக மும்முறை வீழ்க.

74. மூன்று வருணத்தாரும் அறிவீனத்தால் இத்தகைய குற்றமிழைந்து விட்டால், அஸ்வமேதம், சுவர்ஜித், கோமேதகம், அபிஜித், விஸ்வுஜித், திரிவிருந்து, அகனிஷ்டித்து ஆகிய வேள்விகளில் யாதாமொன்றை இயற்ற வேண்டும்.

75. ஒழுக்கமும் அனுஷ்டானமும் உள்ள துவிஜர்கள் மூவருக்கும், ஒழுக்கமில்லாத அந்தணனைக் கொன்ற பழி வந்துற்ருல், புலன் வென்றவர்களாய்ச் சிறிதே புசித்துக் கொண்டு, யாதாமொரு வேதத்தை முழுவதும் சொல்லிக் கொண்டு, நூறு யோசனை தூரம் புண்ணிய யாத்திரை மேற்கொள்க.

76. செல்வச் செருக்குடைய அந்தணன் ஒருவனுக்கு பிரம்மஹத்தி தோஷம் ஏற்பட்டால், தனது பொருளனைத்தும் வேதபாரங்கதனுன ஒரு அந்தணனுக்குக் கொடுத்து விடவேண்டும்; அல்லது அவனது ஜீவனத்துக்குப் போதுமான பிழைப்பை ஏற்படுத்திக் கொடுத்து, பாத்திர முதலிய வசதிகளுடைய வீடும் கொடுக்கவும்.

77. பெயருக்கு மட்டும் அந்தணனா யிருப்பவனை, குண முடைய மற்றோர் அந்தணன் கொன்றால், காட்டு நெல்லைப் பொறுக்கித் தின்றுகொண்டு, சரஸ்வதி நதி தென்படும் இடத்திலிருந்து அதன் தோற்றுவாய் வரை வெள்ளத்தில் எதிரேறிச்செல்க; அல்லது விரதத்துடன் உணவுகொண்டு மூன்று வேதங்களையும் மும்முறை ஓதவேண்டும்.

78. மேற் கூறிய பன்னிரண்டாண்டுகள் வரை முறைப் படி க்ஷவரம் செய்து கொண்டு ஊரையடுத்த மாட்டுத் தொழுவம் அல்லது பர்ணகசாலை, மரத்தடி, இவ்விடங் களில் வசித்துக் கொண்டு பசு, பிராம்மணர் இவர்களுக்கு உதவியா யிருக்க வேண்டியது.

79. இப்பன்னிராண்டுகளில், அந்தணனை அல்லது பசுவை, நீர் நெருப்பு இவற்றிலிருந்து காப்பதற்காகப் பிராணனை விட்டாலும், அல்லது தன்னுயிரைக் கொடுத்து வேறு விதமாகக் காத்தாலும், தோஷம் நீங்கும்.

80. அந்தணனைக் களவாடிச் செல்பவனை மறித்துப் பிடித்தாலும், பிடிக்காமலே அந்தப் பொருளை மீட்டுக் கொடுத்தாலும், களவு போன பொருள் நஷ்டம் தாங்கா மல் உயிர் விட எண்ணும் அவ்வந்தணனுக்குத் தனது பொருளைக் கொடுத்துக் காத்தாலும் பிரம்மஹத்தி தோஷம் நீங்கும்.

81. இவ்விதம் சிறந்த லட்சியத்துடன் உறுதியுடன் மனதை யடக்கியிருந்து, பன்னிரண்டாண்டுகளும் பெண்ணின்பம் துய்க்காமல், பிச்சை யெடுத்து வாழ்ந்தால் தோஷம் நீங்கும்.

82. நற்குணமுள்ள அந்தணன், வேத மோதாத பிராம்மணனைக் கொன்று விட்டால், வேள்விச் சாலையில், மன்னன் ரித்விக்குகள் முன்னிலையில் தனது பிழையை வெளிப் படக் கூறி, அவர்கள் அனுமதியுடன் வேள்வி யிறுதியில் அவபிருத ஸ்நானம் செய்து பாவம் நீங்கப் பெறலாம்.

83. அறமுணர்த்தும் அந்தணன் அறத்திற்கு அடிப்படையாயும், அறங்காக்கும் மன்னன் அதன் கொழுந்தாயும் அமைகிறார்கள். ஆகவே அவ்விருவர் மூலம் நிலையில் இயற்றும் கழுவாய் தூய்மை யுண்டாக்குவதாகும்.

84. பிறவி மேன்மையினால் அந்தணன் தேவராலும் போற்றத் தக்கவனாகிறான். எனவே மனிதரில் அவன் சிறப்பென்பதைக் கூற வேண்டியதில்லை. உலகத்தார் அவனையே நம்புகின்றனர். அவனால் உபதேசிக்கப் பெறும் வேத மந்திரமே அவனது சிறப்புக்களின் காரணம்.

85. மூன்று வேதம் முறையாய் ஓதிய அந்தணர்முன் தன் குறையைக் கூறி, அவர்கள் விதிக்கும் கழுவாய் இயற்றிக் கொண்டால், பாவம் போகும். ஏனெனில் அவர்கள் வாக்கே தூய்மையானதாகும்.

86. தூயனாய்க் கவனத்துடன் இக்கழுவாய்களில் யாதொன்றையேனும் இயற்றும் அந்தணன் தனது பிரம்மஹத்தி தோஷம் நீங்கப் பெறுவான்.

87. பிராம்மணக் கருவைக் கலைத்தல், வேள்விக்கு முயன்றிருக்கும் க்ஷத்திரியர், வைசியர், ருது ஸ்நானம் செய்திருக்கும் பார்ப்பனப் பெண் இவர்களைக் கொன்றாலும், மேற்கூறிய கழுவாய்களே இவற்றிற்கும் பொருந்துவன.

88. பூமி, பொன் இவை பற்றிப் பொய்ச் சான்றுகளுரைத்தவன், குருவுக்கு இழிவைக் கற்பித்தவன், நண்பனைக் கொன்றவன், அந்தணன் மனைவியைக் கொன்றவன் ஆகியோரும் மேற்சொன்ன கழுவாய் இயற்றுக.

89. இக்கழுவாய் அனைத்தும் அறியாமையாற் செய்த பிரம்ம ஹத்திக்கேயன்றி, அடமாக விரும்பிச் செய்த பிழைக்குக் கழுவாயே கிடையாது.

90. துவிஜர்கள் வெறியினால் சாராயம் குடித்து விட்டால், அந்தச் சாராயத்தையே நெருப்பு நிறமாகக் காய்ச்சிக் குடித்து உடல் வெந்து போவதே தக்க கழுவாய்.

91. அல்லது அவ்விதம் காய்ச்சிய கோமூத்திரம், தண்ணீர், பசு நெய், பால், சாணத் தண்ணீர் இவற்றில் ஒன்றை ஒரிரு தடவை பருகலாம்.

92. அறியாமல் அரிசிக் கள்ளுண்டவன், கந்தல் உடுத்துச் சடை தரித்து, சாராயச் சட்டியை ஏந்தி, ஒரு வருடம் வரையில் நொய் அல்லது பிண்ணாக்கை மட்டும் இரவில் தின்றிருக்க வேண்டும்.

93. அரிசியிலிருந்து வடிக்கும் சாராயமானது சோற்றின் மலமாகும். அதற்குப் பாவம் என்றே பெயராதலால் மூவர்ணத்தாரும் அதைக் குடிக்கலாகாது.

94. சாராயம் கௌடி (வெல்லத் தயாரிப்பு), பைஷ்டி (அரிசி மாவில் வடித்தது), மாத்வி என மூவகையாகும். இவை தம்மில் தரவேற்றுமை யில்லாதவை. இவற்றில் ஒன்றையும் துவிஜர் பருகலாகாது.

95. புலால், பழங்கள், சாராயங்கள், புதிதாக இறக்கிய கள் (ஆசவம்) இவை இராக்கதர், யட்சர், பைசாசர், அசுரர் ஆகியோரின் உணவு. ஆகையால் தேவர் பலியாகிய அவியை உண்ணும் அந்தணர் இவ்வரக்கர்தம் உணவைக் கொள்ளலாகாது. (இது பிராம்மணப் பெண்டிருக்கும் பொருந்தும்.)

96. அந்தணன் சாராய மயக்கமுற்றால், மலத்தில் விழுவான், அல்லது தகாத இடத்தில் வேத மந்திரம் கூறுவான், அல்லது பிரம்ம ஹத்தியாவது இயற்றுவான். இது அனைவருக்கும் பொருந்துமாயினும், குறிப்பாக அந்தணனுக்குக் கூறியது.

97. சாராயத்தால் மாசு படுகின்ற அந்தணனுடைய ஆன்மா தாழ்ந்த தன்மையை உடனே அடைகிறதால் ஒரு போதும் குடிக்கக் கூடாது.

98. கள்ளுண்ணலுக்குக் கழுவாய் கூறப்பட்டது. இனிப் பொன் களவுக்குக் கழுவாய் கூறுவேன்.

## பொன் களவு முதலியன

99. பொன்னைத் திருடிய அந்தணன், தன் தோளில் தாங்கிய உலக்கையுடன் மன்னனிடம் சென்று குற்றத்தை ஒப்புக் கொண்டு, தன்னைத் தண்டிக்குமாறும் கேட்டுக் கொள்ள வேண்டும்.

100. மன்னன் அவ்வுலக்கையைத் தான் வாங்கி, குற்றவாளியை ஒரு தடவை அடிக்க வேண்டும். அந்த அடியால் திருடன் இறந்தாலும் பிழைத்தாலும் தூய்மை யடைவான். அவன் வேதமோதிய அந்தணனாகவிருந்து, அவனை அடிக்க மன்னன் ஒருப்படாவிடில் அவனே தவத்தால் தூய்மை யடைக.

101. தவத்தால் பொன் களவிட்ட பிழையைப் போக்க எண்ணும் அந்தணன் மரவுரி யுடுத்திக் காட்டில் பன்னிரண்டாண்டுகள் விரதம் இருக்கவும்.

102. அந்தணனுடைய பொன் களவுப் பாவத்தை இவ்விதக் கழுவாய்களால் முயன்று போக்குக. இனி குரு மனை புணர்ந்த பாவம் போக்கத்தக்க வழிகளைக் கேளீர்.

103. தாய், குரு மனைவி இவர்களைக் கலந்தவன் மேலோர் முன் தனது பாவத்தைக் கூறிப் பழுக்கக் காய்ச்சிய இருப்புப் பலகையில் படுக்கவும், அல்லது பெண் வடிவமுள்ள காய்ச்சிய இரும்புத் தூணைத் தழுவி உயிர் விடுக.

104. இல்லையேல் தனது குறி, விதைகள் இவற்றை அறுத்துக் கையிலேந்தியவாறு இறக்கும்வரையில் நிருதி மூலையை நோக்கி ஓட வேண்டும்.

105. குரு பத்தினியைத் தவறாகத் தனது மனைவியென்று மயங்கி அறியாமற் கலந்தவன் மண்டையோட்டைக் கலந்துகொண்டு, மரவுரி தரித்து, சடாதாரியாகி மனத்தை யடக்கி ஒரு ஆண்டு முழுமையும் பிரஜாபத்ய கிருச்ர விரதம் இருக்கவும்.

106. கற்பில்லாத குருபத்தினியையாவது, க்ஷத்திரிய ஜாதி முதலான குரு பத்தினிகளையாவது கூடியவன் மனத்தை அடக்கி, காட்டு நெல் அரிசியைக் கஞ்சியாக்கிப் பருகியோ, கந்த மூலகங்களைக் கொண்டோ, மூன்று மாதம் வரையில் சாந்திராயன விரதம் இருக்கவும்.

107. மகா பாவங்கள் புரிந்தவர்களுக்குரிய கழுவாய் கூறப்பட்டது. சிறிய பாவங்களுக்கு உரிய கழுவாய்களை இனி விவரிக்கக் கேளீர்.

## சிறு பிழைகளின் கழுவாய்

108. பசுவதை புரிந்தவன். அதன் தோலைப் போர்த்த வாறு நொய்யரிசி யுண்டு, ஒரு மாதம் பசுத் தொழுவில் குடியிருக்கவும்.

10 . பின்னர் ஒன்றுவிட்டு ஒரு நாள் மட்டும், உப்புக் காரமில்லாமல் கொஞ்சமாக உணவுண்டு, இரண்டு மாத காலம் அதே தொழுவில் இருக்கவும். அக்காலத்தில் இரு வேளையும் ஜிதேந்திரியனுய்க் கோமூத்ர ஸ்நானம் செய்க.

110. மேய்ச்சல் தரைக்குப் பசுக்களுடன் சென்று, குளம்படிக் காற்றைச் சுவாசித்தும், அவற்றிற்குச் சொரிந்தும் தடவியும் கொடுத்து உபசரித்தும், இரவில் சுவரில் சார்ந்து வீராசனமாக அமர்ந்து பொழுதைப் போக்கவும் வேண்டும்.

111. பசுக்கள் நிற்கையில் தான் நின்றும், நடக்கும் போது உடன் நடந்தும், அவை படுக்கும்போது தான் உட்கார்ந்தும் இருக்க வேண்டும்.

112. பசுக்கள் நோயுறினும், திருடர், புலி இவர்களால் வெருட்டப் பட்டாலும், மேடு பள்ளமான தரையில் விழுந்து விட்டாலும், சேற்றில் மாட்டிக் கொண்டாலும் இயன்றவரை அவற்றைக் காப்பாற்ற வேண்டும்.

113. வெய்யில் கொடுமையாய்க் காய்ந்தாலும், பெரு மழையிலும், கூதலடித்தாலும், வாடைக் காற்றிலும், பசுக்களைக் காக்காமல் தன்னுடல் காத்தலாகாது.

114. தன்னுடைய அல்லது பிறனுடைய வீடு, களம், கழனிகளில் பசு மேய்ந்தாலும், அவற்றை யாருடனும் சொல்லாமலும் ஒட்டாமலும் இருக்கவும்.

115. பசுவதை புரிந்தவன் இவ்வாறு மூன்று திங்கள் விரதம் இருந்து பாவம் போக்குக.

116. பின்னர் வேத மோதி நல்ல அந்தணனுக்குப் பத்துப் பசுவும் ஒரு எருதும் தானம் செய்க. இயலவில்லை யானல், தன் பொருள் முழுவதையும் கொடுக்க.

117. அவகீர்ணி தவிர்த்த ஏனைய பாவங்களுக்குப் பசு வதைக்குரிய கழுவாயேனும், பாவத்திற்கேற்றபடி சாந்தி ராயன விரதமேனும் முடிக்கவும்.

118. அவகீர்ணியானவன், ஒற்றைக் கண்ணுள்ள கழுதையின் வபையினல் விதிப்படி நள்ளிரவில் நாற்சந்தியில் நின்றவாறே நிருதி தேவதையைக் குறித்து ஹோமம் செய்ய வேண்டும்.

119. அக்னியில் இப்படி ஓமம் செய்த பின்பு, வாயு, பிரகஸ்பதி, இந்திரன், அக்னி இவர்களுக்கு வேதருக்கினல் ஆஜ்ய ஹோமம் செய்க.

120. பிரம்மசாரியானவன் ஒரு பெண் குறியில் தனது வீர்யத்தைச் சொரிவதனல் அவன் விரதம் அழிவுறுவதனல், அவனை அவகீர்ணி என்று கூறுவர்.

121. இவனுடைய பிரம்ம தேஜஸ் இவனைப் பிரிந்து சென்று, வாயு, பிரகஸ்பதி, இந்திரன், அக்னி ஆகியோரைச் சார்ந்து விடுகிறது.

122. இவ்விதம் கர்த்தப வேள்வியால் கழுவாய் செய்து கொண்டால், பின்னர் அதன் தோலைப்போர்த்துப் பலரறியத் தன் பிழையை அறிக்கையிட்டவாறே ஏழு வீடுகளில் பிச்சை ஏற்று உண்ணவும்.

123. அப்படிப் பெற்ற பிச்சையை ஒருவேளை புசித்துக் கொண்டு, மூவேளைகளிலும் நீராடி வர, ஓராண்டில் பாவம் நீங்கும்.

124. ஜாதி பிரம்சகர பாபங்களில் ஒன்றை மனதாரச் செய்தால், சாந்தபன கிருச்ரத்தையும், அறியாதியற்றினுல், பிராஜாபத்ய கிருச்ரத்தையும் அனுஷ்டிக்கவும்.

125. சங்கரீகரணம், அபாத்ரீகரணம் இவற்றில் யாதாவதொன்றைச் செய்து விட்டால், ஒருமாத சாந்திராயன விரதமும், மரிநீகரண பாவத்துக்கு மூன்று நாட்கள் கொதி அரிசிக் கஞ்சி நீரைப் பருகியிருத்தலும் கழுவாய்களாம்.

126. குணமுள்ள க்ஷத்திரியனைக் கொன்ருல், பிரம்மஹத்திக்குச் சொன்ன பன்னிரண்டு வருட விரதத்தில் நாலில் ஒரு பங்கும், வைசியனைக் கொன்ருல் எட்டில் ஒரு பங்கும், நாலாம் வருணத்தவனைக் கொன்ருல் பதினுறில் ஒரு பங்கும் கழுவாய்களாம்.

127. அறியாமற் க்ஷத்திரியனைக் கொன்றவன் அந்தணுயின், ஒரு எருதுடன் ஆயிரம் பசுக்களைத் தானம் செய்க.

128. அல்லது சடாதாரியாக மூன்ருண்டுகள் ஊருக்கு வெளியில் மரத்தடியில் வசிக்க.

129. ஒழுக்க மிக்க வைசியனை அந்தணன் அறியாமற் கொன்ருல், மேற்சொன்னவாறு ஓராண்டு விரதமோ ஒரு எருதும் நூறு பசுக்களும் தானமோ செய்க.

130. நாலாம் வருணத்தனைக் கொன்ருல், ஆறுமாதம் விரதமோ, ஒரு எருதுடன் பத்துப் பசுக்களைத் தானமோ செய்க.

131. பூனை, அணில், காக்கை, காடை, தவளை, நாய், உடும்பு, கோட்டான் இவற்றைக் கொன்ருல், வேண்டுமென்றே நாலாம் வருணத்தவனைக் கொன்றதற்கான, கழுவாய் இயற்றுக.

132. மேற் சொன்னவற்றைத் தெரியாமற் கொன்ருல், மூன்று நாள் பால் மட்டும் உண்டு உண்ணுவிரதம் இருக்க இயலாதேல், மூன்று நாளும் அன்றுடம் ஒரு யோசனை தூரம் நடந்து செல்க. அதுவும் இயலாதேல், மூன்று நாளும் நன்னதியில் நீராடுக. அதுவும் இயலாதாயின், மூன்று நாளும் வருணஜபமாவது செய்க.

133. அந்தணன் நல்ல பாம்பை அடித்தால், கூரான இரும்புத் தடி, மற்ற பாம்பை அடித்தால் மைக்கோல் சுமையையும், சொற்ப விலையுள்ள ஈயப் பாத்திரமும் தானம் செய்க.

134. பிராம்மணன் பன்றியைக் கொன்ருல், ஒரு குடம் நெய்யையும், ஊர்க் குருவியைக் கொன்ருல், நான்கு ஆடம் எள்ளையும், கிளியைக் கொன்ருல், இரண்டு வயதுப் பசுக் கன்றையும், கிரவுஞ்சப் பக்ஷியைக் கொன்ருல், மூன்று வயதுக் கன்றையும் பிராம்மணர்க்குக் கொடுக்க.

135. அன்னம், கொக்கு, நாரை, மயில், குரங்கு, பருந்து, பாசபக்ஷிகளைக் கொன்ருல், அந்தணனுக்கு ஒரு பசுவைக் கொடுக்க.

136. குதிரையைக் கொன்ருல், புத்தாடையும், யானையைக் கொன்ருல், ஐம்பது கருப்பு எருதுகளையும், ஆடுகளைக் கொன்ருல், ஒரு எருதையும், கழுதையைக் கொன்ருல், இரண்டு வயதுப் பசுவின் கன்றையும் தானம் செய்க.

137. மாமிச பக்ஷிணிகளான மிருகங்களை அடித்தால், ஒரு பால் பசுவும், மான் முதலிய சாந்த மிருகங்களை வதைத்தால், ஈனுத ஒரு கிடாரியையும், ஒட்டகத்தைக் கொன்ருல், ஒரு குன்றியிடைப் பொன்னையும் தானம் கொடுக்க.

138. கற்பிழந்த பார்ப்பனத்தியைக் கொன்ருல், ஒரு சேணத்தையும், அவ்வித க்ஷத்ரியப் பெண்ணைக் கொன்ருல், ஒரு வில்லையும், வைசியப் பெண்ணைக் கொன்ருல்

ஒரு வரையாட்டையும், மற்றவளைக் கொன்றால், ஒரு செம்மறியாட்டையும் தானம் கொடுக்க.

139. பாம்பு முதலியவற்றைக் கொன்றதற்காகப் பொருள் கொடுக்க வியலாத அந்தணன் ஒரு பிராஜாபத்ய கிருச்ரத்தைச் செய்யவும்.

140. எலும்புள்ள ஓணான் முதலிய பிராணிகள் ஆயிரம் வரை கொன்றாலும், ஈ, எறும்பு, கொசு முதலியவற்றை ஒரு வண்டிச் சுமைவரை கொன்றாலும், நாலாம் வருணத்தவனைக் கொன்றதற்குரிய கழுவாய் இயற்றுக.

141. ஓணான் முதலியவற்றில் ஒன்றைக் கொன்றால், பிராம்மணனுக்கு ஒரு பணம் தானம் கொடுக்க. கொசு முதலியவற்றைக் கொன்றால், பிராணாயாமம் செய்தால் பாவம் தீரும்.

142. பழமரம், செடி, புதர், படர்கொடி, பூத்திருக்கும் பூசணி முதலியவை—இவற்றை யறியாமற் கொன்றால், நூறு காயத்ரி ஜெபம் செய்க.

143. அன்ன முதலியன, வெல்ல முதலிய ரசப் பொருள், இலுப்பை முதலிய பன்மலர், அத்தி முதலிய பழங்கள் இவற்றிலுண்டான உயிர்களை அறியாமற் தின்றுவிட்டால், நெய்யுண்ணத் தூய்மையுண்டாகும்.

144. உழுநிலத்தும், காட்டிலும் முளைத்த செடிகளைக் காரணமின்றி வெட்டினால், ஒரு நாள் பால் மட்டும் பருகியிருந்து, பசுவின் பின்சென்று உபசரித்திருக்கவும்.

145. அறிந்தும் அறியாமலும் இயற்றிய கொலைக்குரிய கழுவாய்கள் கூறிமுடிந்தது. இனி உண்ணத்தகாதனவற்றை உட்கொண்ட பிழைக்குரிய மாற்றுக் கூறுவேன்.

### தகாதவை உண்ணலுக்கு

146. அறியாமல் அந்தணன் கட்குடித்தால், அப்த கிருச்ரம் செய்து, மறுபடியும் பூணூல் புதுப்பித்துக்கொள்ள

வும். தெரிந்து குடித்தால், உயிரை வைத்துக் கொள்ளக் கூடிய கழுவாய் யாதொன்றுமில்லை என்பது சாத்திர விதி.

147. சாராயம், கள் மொந்தைகளில் ஊற்றிய நீரைக் குடித்தால், சங்க மலரைப் போட்டுக் காய்ச்சிய பாலை மட்டும் குடித்துக் கொண்டு, ஐந்து நாள் உண்ணுமை நன்று.

148. சாராயம், கள் இவற்றைத் தொட்டாலும், கொடுத்தாலும், பெற்றாலும், தாழ்ந்தவன் குடித்து மிகுந்த தண்ணீரைப் பருகிடினும், தருப்பை போட்டுக் காய்ச்சிய நீரை மூன்று நாட்கள் பருகி, உபவாசமிருக்க வேண்டும்,

149. சோமபானம் செய்த பிராம்மணன், சாராயம் குடித்தவன் வாய் நாற்றத்தை முகர்ந்தால், நீரில் மூழ்கிய வாறு மூன்று பிராணாயாமம் செய்து நெய்யுண்ணத் தூய்து.

150. துவிஜாதிகள் அறியாமையால் மலம், மூத்திரம், கள் சம்பந்தப்பட்ட பொருள்களைத் தின்று விட்டால், பூணூல் புதுப்பித்துக் கொள்ள வேண்டும்.

## பல்வகைக் கழுவாய்

151. புதுப் பூணூல் தரிக்கும்போது, சவரம், மிஞ்சி தண்டம், பிக்ஷையேற்றல் ஆகிய விரதங்கள் கிடையா.

152. உண்ணத் தகாத பண்டம், பெண், தாழ்ந்தோர் உண்டு மிகுந்தது, தகாத புலால் இவற்றை உண்டால், நாள் தோறும் கோதுமைக் கஞ்சி மட்டும் உண்டு, ஏழு நாட்கள் வரை கழிக்க வேண்டும்.

153. சுத்தமாக விருப்பினும், புளித்த பதார்த்தம், பிழிந்து இறக்கிய சாறு வகைகள், திரிந்து போன பால், இவற்றில் ஒன்றைப் பிராம்மணன் சாப்பிட்டால் அது ஜீரணமாகும் தூய்மைக் குறைவாகும்.

154. ஊர்ப்பன்றி, கழுதை, ஒட்டை, குள்ள நரி, குரங்கு, காகம் இவற்றின் மலமூத்திரங்களைப் பிராம்மணன்

தெரியாமல் சாப்பிட நேர்ந்து விட்டால், சாந்திராயன விரதமிருக்கவும்.

155. உலர்ந்த புலை, காளான், இன்னதென் றறியக் கூடாத மாமிசம், கசாப்புக் கடையில் விற்கும் பொருள் இவற்றிற்கும் சாந்திராயன விரதமே கழுவாயாகும்.

156. அரிசி, மாமிசம் இவை தின்னும் ஊர்ப்பன்றி, ஒட்டகம், ஊர்க்கோழி, மனிதன், காகம், கழுதை இவற்றின் மாமிசத்தைத் தெரிந்து புசித்தால், தப்த கிருச்ரம் அனுஷ்டிக்கவும்.

157. சமாவர்த்தனம் ஆகாத பிரம்மசாரி சபண்டீகரணத்துக்கு முன்பு, மாசிக சிரார்த்தத்தில் பிராம்மணார்த்த மிருந்தால், மூன்று நாள் உண்ணாதிருந்து, இடையில் ஒரு நாள் நீரில் அமிழ்ந்திருக்க வேண்டும்.

158. மேற்சொன்ன பிரம்மசாரி அறியாமலோ, ஆபத்து வேளையிலோ, மது, மாமிசம் புசித்தால், பிராஜாபத்ய கிருச்ரம் செய்து சமாவர்த்தனம் முடிக்கவும்.

159. பூனை, எலி, காக்கை, நாய், அணில் இவை தீண்டிய மிகுதியையும், மயிர், புழு இவை கலந்துவிட்டவற்றையும், மண் தூய்மை செய்யா துண்டால், தர்ப்பை போட்டுக் கொதிக்கக் கொதிக்கக் காய்ச்சின நீரைப் பருகுக.

160. தூய்மை விரும்புவோன் மாசுற்ற பொருளை உண்ணலாகாது. அறியாமற் கொண்டால், வாந்தி செய்க. விதிப்படி கழுவாயாவது செய்துகொள்க. வாந்தியெடுத்து விட்டால், கழுவாய் எளிதாக இருந்தாற் போதும்.

161. தகாதவற்றை உண்டதற்கு இதுகாறும் கழுவாய் கூறி முடிந்தது. இனிப்பலவித திருட்டுகளுக்கு ஏற்ற கழுவாய்களைக் கூறுகிறேன்.

162. தன்னினத்தான் வீட்டில், தானியம், சோறு, செல்வம் இவற்றைப் பெரும் அளவில் திருடுகின்ற அந்தணன் ஒரு ஆண்டுவரை பிராஜாபத்யகிருச்ரம் அனுஷ்டிக்கவும்.

163. ஆண், பெண், புனித ஸ்தலம், வீடுகளையும் கிணறு, தூரவு இவற்றின் நீரையும் திருடினால், சாந்திராயன விரதம் அனுஷ்டிக்கவும்.

164. அற்ப மதிப்புள்ள தகரம், துராய் ஆகியவற்றைக் களவிட்டால், உடையவனிடமே திரும்பச் சேர்த்துவிட்டு, சாந்தபன விரதம் இருக்க வேண்டும். எல்லாக் களவுகளிலுமே, பொருளை உடையவனுக்குச் சேர்த்த பின்பே கழுவாய் இயற்றுக.

165. பலகாரம், பாயசம், ஊர்தி, படுக்கை, ஆதனம், மலர், கனி, கிழங்கு இவற்றைத் திருடினால், பஞ்சகவ்யம் சாப்பிடவும்.

166. இலேசான புல், வைக்கோல், விறகு, மரம், அரிசி, வெல்லம், ஆடை, தோல், புலால் இவற்றைத் திருடினால், மூன்றுநாள் உண்ணாமை வேண்டும்.

167. மணி, முத்து, பவளம், செம்பு, வெள்ளி, இரும்பு, வெண்கலம், கல் இவற்றைக் களவிட்டால், நொய்யரிசியைப் பன்னிரண்டு நாள் புசித்திருக்க. இக்கழுவாயெல்லாம் ஏதோ ஒரு தடவை நிகழ்ந்த குற்றத்திற்கும், பொருள் உடையவனைவிட, திருடினவன் மேன்மையானவனாக இருக்கும் போதும்.

168. பஞ்சு, பட்டு நூல், ஆட்டு ரோமம், இரண்டு குளம்புள்ள மாடு முதலியன, ஒற்றைக் குளம்புள்ள குதிரையினம், பக்ஷி, சந்தனம் முதலிய மூலிகை, கயிறு இவற்றைத் திருடினால், மூன்று நாள் பால் மட்டும் கொண்டு உபவாசம் இருக்கவும்.

169. திருட்டுக் குற்றத்தால் வந்த பாவத்தைத் துவிஜர் இவ்வாறு போக்கவும். தகாத பெண்களுடன் கூடினாலும், இவ்விதமே கழுவாயியற்றுக.

170. சகோதரி, நண்பன் மனைவி, மருகி, துறவினன், சண்டாளி இவர்களுடன் இடையறாத கூட்டுறவு கொண்டு

சுகித்தால், குரு மனைவியைக் கூடியவனுக்கு விதித்த பிராயச்சித்தமே பொருந்தும்.

171. அத்தையின் மகள், ஒன்றுவிட்ட சகோதரி, சிறிய தாயின் மகள், அம்மான் மகள் இவர்களைக் கூடினால் சாந்திராயன விரதம் இருக்கவும்.

172. அத்தை, அம்மான், சிற்றம்மை, பெரியம்மா இவர்களின் பெண்களை அறிவாளி மணம் செய்யக்கூடாது. செய்தால், இம்மையில் பாவியாகவும், மறுமையில் நரகும் அடைவான். ஏனெனில் இவர்கள் பங்காளிகளின் பெண்களுக்குச் சமதையானவர். ஆகையால், மணத்திற்குத் தகாதவர்.

173. மனிதன் பசு நீங்கலாக ஏனைய மிருகங்களுடனும், விலக்கானவள், உறவினளல்லாதவள் இவர்களுடனும் கலந்து சுகித்தால் சாந்தபன கிருச்ரம் செய்க. பசவுடன் கலந்தால், அவகீர்ணிக்கு விதித்த கழுவாய் இயற்றுக.

174. மாடுகள் பூட்டிய வண்டி முதலிய ஊர்திகளிலும், நீரிலும், பகலிலும் மனைவியுடன் சேர்ந்தால், கட்டிய உடையுடன் தலை முழுகவேண்டும். ஆணுடன் ஆண் கட்டியணைத்து ஒழுக்கு ஏற்பட்டாலும் இதேபோல்தான்.

175. அறிவின்மையால் சண்டாளி முதலிய ஈன ஜாதிப் பெண்ணுடன் அந்தணன் கூடினால் — அல்லது அவர்களிடம் வாங்கியுண்டால், பாவியாகிறான் தெரிந்து செய்தால், அதே ஜாதியே ஆகிவிடுகிறான்.

176. மிகவும் கள்ளியாகி விட்ட மனைவியை வீட்டிலடைத்து வைத்துப் பிறன்மனை கலந்தவனுக்குரிய கழுவாய் செய்விக்கவேண்டியது. ஏதோ ஒரு தடவை அவள் தவறிப் போயிருந்தால், பாதிப் பிராயச்சித்தம் செய்க.

177. மறுபடியும் தன்குலத்து ஆண் ஒருவனால் அழைக்கப்பட்டு இவள் ஒப்பி அவனைக் கூடினால், அவளுக்குப்

பிராஜாபத்ய கிருச்ரமும், சாந்திராயனமும் பிராயச்சித்தமாக மநு முதலியவர்களால் விதிக்கப் பெற்றிருக்கிறது.

178. சண்டாளி அல்லது கன்னிகையான நாலாம் வருணப் பெண்ணுடன் கூடும் துவிஜன், மூன்றாண்டுகள் பிக்ஷை வாங்கிப் பிழைத்தும், எப்போதும் காயத்ரி ஜெபித்தும் வருக.

179. இதுகாறும் பலவிதமான கொலைகள்—தகாதவற்றை உண்ணல்—பலவிதத் திருட்டு, கூடாவொழுக்கம் ஆகியவை புரியும் பெரும் பாவிகளுக்கு நாலு வகுப்பாருக்கும் உரிய கழுவாய்கள் கூறப்பட்டன இனிப் பாவிகளுடன் சேர்வது பற்றிக் கூறுகிறேன்.

180. பாவியுடன் ஒரே ஊர்தியில் ஏறுதல், ஒரு ஆசனத்தில் இருத்தல், ஒரே படுக்கையில் படுத்தல் இவற்றால் இவனும் ஓராண்டில் பாவியாவான். அவனுக்கு ஓதுவித்தல், வேள்வி புரிவித்தல், விவாக சம்பந்தம் கொள்ளல் ஆகியவற்றாலும் பாவியாவான்.

181. எவனெவன் எந்தெந்தப் பாவியுடன் சேர்வானோ அவனவன் அந்தந்தப் பாவிக்குச் சொல்லிய கழுவாய்களால் தங்கள் பாவத்தைப் போக்கிக் கொள்ள வேண்டியது.

182. பாவியானவன் கழுவாய் புரிந்து கொள்ளாவிடில், அவனுடைய சபிண்டன், சோதகன் இவர்கள், அவனுடைய பாவச் செயலைக் கேள்வியுற்றதும், நவமி திதியில், சாயுங்காலம், அவனுடைய எல்லாப் பங்காளிகள், புரோகிதன், குரு இவர்கள் முன்பாக, ஊருக்கு வெளியில் தர்ப்பணம் செய்ய வேண்டும்.

183. அப்போது அந்தப் பங்காளிகள் தங்கள் வேலைக்காரியினால் நீர் நிறைந்த குடத்தைக் கொண்டு வரச் செய்து, அதில் அந்தப் பாவியை ஆவாகனம் செய்து, அந்தப் பிணத்தைப் போல் தென்புறமாக உதைத்துத் தள்ளிவிட்டு, உறவினருடன் ஒரு நாள் தீட்டிருக்க வேண்டியது.

184. பின்னர் அந்தப் பாவியுடன் அமரவும் பேசவும் கூடாது. அவனுக்குத் தந்தையின் பொருளிற் பங்கு கிடையாது. அவனுடன் எவ்வித நற்கருமங்களியற்றலும் தீது. கடன் கொடுக்கவும், அவன் இயற்றும் சிரார்த்தத்தில் பிராம்மணார்த்தம் செய்யவும் கூடாது.

185. அவன் குடும்ப முதல்வன் என்ற மரியாதைக்கு உரியவனல்ல. அவனுக்கு எடுகூறும் கிடையாது. அடுத்த இளையவன் குணவானாயின், அவனுக்கு எடுகூறு உண்டு.

186. பாவியானவன் முறைப்படி கழுவாய் இயற்றிக் கொண்ட பின்னர், புண்ணிய நதியில் பங்காளிகளுடன் ஸ்நாநம் செய்து, நீர் நிறைந்த புதுக் குடத்தை ஆற்றில் போடவேண்டும்.

187. குடத்தை நீரில் போட்டதும், கழுவாய் செய்து கொண்டவன் தனதில்லம் புகுந்து, தான் கழுவாய் செய்து கொள்ளாமுன் இறந்து போன பங்காளிகளுக்குத் தர்ப்பணாதி கடன்களியற்றுக.

188. பாவிகளான பெண்களுக்கும் இவ்வாறே பெண்கள் இப்படி இயற்றுவிட்டாலும், வீட்டுக்கு வெளியில் தனிக் குடிசையில் அவர்களை வைத்து, உடையும், சோறும், தண்ணீரும் மட்டும் கொடுத்துவர வேண்டியது.

189. கழுவாய் செய்து கொள்ளாத பாவிகளுடன் கொடுக்கல், வாங்கல் முதலான எதுவும் கூடாது. கழுவாய் செய்து கொண்டவரை முன் செய்த பாவத்திற்காகப் பழிக்கவும் கூடாது.

190. ஆனால், குழந்தை, பெண் இவற்றைக் கொன்றவன், நன்றி கொன்றவன், அண்டியவனை அழித்தவன், இவர்கள் கழுவாய் செய்து கொண்டாலும், அவர்களோடு உறவாடக் கூடாது.

191. துவிஜர்களுக்கு உரிய காலத்தில் உபநயனம் செய்து காயத்ரி உபதேசிக்கப்படா விட்டால், மூன்று

பிராஜாபத்ய கிருச்ரம் செய்து பின் உபநயனம் செய்விக்க வேண்டியது.

192. உபநயனமாகியும் வேதமோதாமல், நித்ய கர்மம் செய்யாமல் இருக்கும் துவிஜன், கழுவாய் செய்து கொள்ள விருப்புற்றால், அவனுக்கு மேற்சொன்ன பிராஜாபத்ய கிருச்ரத்தையே விதிக்க.

193. பிராம்மணன் அவ்வழியில் தானம் பெற்றால், அதைத் திரும்பத் தானம் செய்து விட்டாலும், ஜெபதபங்கள் செய்தாலும் தூயனாவான். தடாகம் முதலியன விற்றாலும் அவ்வாறே.

194. அவ்வழி தானம் பெற்றவன் அதனை வற்றோர்க்குத் தானம் செய்யாதிருந்துவிடில், ஒரு மாதம் வரை வெறும் பால் மட்டும் பருகி, பசுவின் தொழுவத்தில் மனம் வேறிடம் செல்லாமல் வசிக்க வேண்டும்; அல்லது நாள்தோறும் மூவாயிரம் காயத்ரி ஜெபித்திருக்க வேண்டும்.

195. மேற்சொல்லிய விரதத்தால் இளைத்தலைப் பார்த்து, 'இனி இவ்விதம் செய்யாமல் மேலோர்க்குச் சமமாக வாழ்வாயாக!' என்று மேலோர் கூறுக.

196. அவனும், 'இனி அப்படிச் செய்வதில்லை' யென்று சத்தியம் சொல்லிப் பின்னர் பசுக்களுக்குத் தீனி போட வேண்டியது. அவ்விடத்தில் மேலோர் அவனைத் தங்களுடன் சேர்த்துக் கொள்ள வேண்டியது.

197. விராத்தியனுக்குப் புரோகிதம் செய்வித்தல், தாய், தந்தை, குரு தவிர்த்த மற்றவர்களுக்குக் கருமம் செய்தல், அஹீனமென்னும் ஆபிசார யாகம் செய்தல் இவை மூன்றுக்கும் பிராஜாபத்ய கிருச்ரம் செய்க.

198. தஞ்சமடைந்தவனைத் தன்னால் இயன்றபோதும் காக்கத் தவறுதல், தகாதவனுக்கு வேதம் கற்பித்தல், இவைகளுக்கு ஒரு வருஷம் கோதுமைச் சோற்றை மட்டும் உண்டிருக்க வேண்டும்.

199. நாய், நரி, பூனை, கழுதை, மனிதன், குதிரை, ஒட்டகம், பன்றி இவற்றால் தீண்டப் பெற்ற துவிஜர்கள் பிராணாயாமம் செய்க.

200. மேலோருடன் ஒருங்கே அமர்ந்துண்ணத் தகாத திருட்டு முதலிய பாவங்கள் செய்தவர்கள் ஒரு மாதம் வரையில் இரண்டு நாள் உபவாசமிருந்து மூன்றாம் நாள் மாலை புசித்தல் விதமும், அன்றாடம் வேத சம்ஹிதா ஜெபமும் பிராயச்சித்த ஹோமமும் செய்க.

201. விருப்புற்று ஒட்டகம், கழுதை இவை பூட்டிய வண்டியில் ஏறும் துவிஜன் நிர்வாணமாய் ஸ்நானம் செய்து பிராணாயாமம் புரிக.

202. தண்ணீர் கிடைக்காத விடத்திலோ, தண்ணீரில் இருக்கும்போதோ தாங்க முடியாமல் சிறுநீர் மலம் கழித்துவிட்டால், ஊருக்கு வெளியில் ஓடும் நீரில் கட்டின ஆடையுடன் தலைமுழுகிப் பசுவைத் தினவு தீரத் தடவிக் கொடுக்கவும்.

203. வேத விதிப்படிக்கு அன்றாட நற்கருமங்கள் சரியாயியற்றாவிடினும், ஸ்நாதக விரதம் தப்பினாலும், ஒரு நாள் முழுமையும் உண்ணாமை வேண்டும்.

204. அந்தணரை மிரட்டினாலும், கல்வி கேள்விகளால் சிறந்தவனை 'அடா'வென்றழைத்தாலும், பின்னர், அவர் தம் கால்களில் வீழ்ந்து வணங்கி அவர் தம் சினம் தணித்து, மறுநாள் விடியும் வரை உண்ணாதிருத்தல் வேண்டும்.

205. பின்னும் அவரைக் கோலால் அடித்தாலும், கழுத்தில் துணியைப் போட்டு இழுத்தாலும், மேடையில் அவர்களை வசை மொழிந்தாலும், பின்னர் அவர்களை வணங்கிச் சமாதானம் செய்ய வேண்டியது.

206. கொல்லும் கருத்துடன் தடி முதலிய ஆயுதம் ஓங்கினால், நூறாண்டுகளும், அடித்தே விட்டால், ஆயிரம் ஆண்டுகளும் நரக வாசம் உண்டு.

207. அந்தணன் சிந்திய உதிரத் துளி மண்ணில் நனைக்கும் பரமாணுக்களின் எண்ணிக்கை எத்தனையோ, அத்தனை ஆயிரம் ஆண்டுகள் சிந்தியவனுக்கு நரக வாசம்.

208. ஆகையால் ஓங்கியவன் ஒரு பிராஜாபத்ய கிருச்ரமும், அடித்தால் அதிகிருச்ரமும், இரத்தம் வரச் செய்தால் இரண்டையும் இயற்றுக.

209. தனியாகக் கழுவாய் கூறப்படாத அனுலோம ஜாதி வதை முதலிய பாவங்களுக்கு, பாவியின் சக்தி வருகின்ற பாவம், முதல் இரண்டாம் தடவை என்பது—இவற்றைக் கொண்டு தக்க கழுவாய் விதிக்கவும்.

210. பாவங்களை மனிதர் எவ்விதம் போக்குவார்களோ அதைக் கூறப் போகிறேன். இவை தேவ ருஷி பிதுர்க்களாலும் மேற்கொள்ளத் தக்கவையே.

211. உப்பில்லாத சோற்றை இருபத்தோரு கவளம் வீதம், மூன்று நாட் பகலும், அவ்வாறே முப்பத்திரண்டு கவளங்கள் அடுத்த மூன்று நாள் இரவும், மறு மூன்று நாட்களும் தானே கேளாமல் பிறர் வலிந்து கொடுக்கும் உணவை இருபத்து நான்கு கவளமும் புசித்து, மேலும் மூன்று நாட்கள் முழுப் பட்டினியிருத்தலே **பிராஜாபத்ய** கிருச்ரம். (கவளம் என்பது கோழி முட்டை அளவு அல்லது அவனவன் வாயளவு கொண்டது.)

212. பசுவின் மூத்திரம், சாணம், பால், தயிர், நெய், தருப்பை, நீர் இவ்வாறையும் விதிப்படி கலப்பதே பஞ்ச கவ்யம். இதை மட்டும் ஒரு நாள் சாப்பிட்டு மறு நாள் முழுப் பட்டினி யிருப்பது சாந்தபன கிருச்ரம். மேற் சொன்னவற்றைத் தனித்தனியே ஒவ்வொரு நாளாக உட்கொண்டு, ஏழாம் நாள் பட்டினி யிருத்தல் **மகாசாந்தபனம்.**

213. மூன்று பகல்கள் ஒவ்வொன்றிலும் ஒரேயொரு கவளமும், மறு மூன்றிரவுகள் ஒவ்வொரு கவளமும்,

மேலும் மூன்று நாட்கள் கேட்காமல் வலிய வந்ததில் ஒவ்வொரு கவளமும், மறு மூன்று நாட்கள் முழுப் பட்டினியுமாக இருத்தல் **அதிகிருச்ரம்.**

214. மூன்று நாட்கள், ஒவ்வொரு நாளும் ஆறு பலம் வெந்நீர் மட்டும் ஒரே வேளை வீதமும், மறு மூன்று நாட்களிலும் மூன்று பலம் காய்ச்சின பால் அன்றாடமும், பின் மூன்று நாட்களில் அன்றாடம் ஒரு பலம் காய்ச்சிய நெய்யும், மற்றும் மூன்று நாள் உஷ்ணக் காற்றையும் உட்கொண்டு, நியமத்துடன் ஓரிடத்தில் இருந்து, அன்றாடம் ஒரே வேளை ஸ்நானமும் செய்து வருதலே **தப்த கிருச்ரம்.**

215. புலன்கள் அடக்கி, கவனமாகப் பன்னிரண்டு நாள் முழுப் பட்டினி கிடத்தல் எல்லாப் பாவமும் போக்கும் **பராக் கிருச்ரம்.**

216. பகல் மூன்று வேளை தலை முழுகி, பூர்ணிமையில் உப்பில்லாமல் பதினைந்து கவளச் சோறுண்டு, மறு நாள் முதல் ஒவ்வொரு கவளமாகக் குறைத்து, அமாவாசை பட்டினி கிடந்து, மறுநாள் முதல் ஒவ்வொரு கவளமாகக் கூட்டிக் கொண்டே மறு பூர்ணிமையில் பதினைந்து கவளமாக்கிப் புசித்தல் **பிபீலிகா சாந்திராயனம்.**

217. வளர்பிறைப் பிரதமை முதல் ஒவ்வொரு கவளம் கூட்டிப் பூர்ணிமையில் பதினைந்து கவளமாக்கி, மீண்டும் குறைத்து வந்து, அமாவாசையில் முழுப் பட்டினி இருப்பது **யவசாந்திராயனம்.** இரண்டும் சமமானதே.

218. ஏதாவதொரு பிரதமை தொடங்கி முப்பது நாட்கள் வரை அன்றாடம் எட்டுக் கவளம் வீதம் புசித்திருப்பது **யதி சாந்திராயனம்.**

219. நியமத்துடன் இந்த முப்பது நாட்களும், உதயத்தில் நான்கும், மாலையின் பின்னர் நான்குமாகக் கவளங்கள் உண்டிருத்தல் **சிசு சாந்திராயனம்.**

220. மொத்தம் இருநூற்று நாற்பது கவளங்களை உப்பில்லாமல் முப்பது நாட்களில் உட்கொண்டு பாவத்தைப் போக்குவோன் சந்திரலோகம் அடைகிறான்.

221. ஏகாதச ருத்திரர், பன்னிரண்டு ஆதித்தர்கள், அஷ்ட வசுக்கள், சப்த மருத்துக்கள், மற்றும் பல முனிவரரும் பாவங்கள் அனைத்தும் நீங்கும் பொருட்டாகவே இந்தச் சாந்திராயண விரதமிருந்தார்கள்.

222. மஹா வியாக்ருதிகளால் ஆஜ்ய ஹோமம் செய்ய வேண்டியது சாந்திராயன கால அனுஷ்டானம் அஹிம்சை, சினமின்மை, வஞ்சமின்மை, பொய் கூறாமை இவை எக்காலத்துக்கும் இன்றியமையாதவை யாயினும், விரத காலத்திற்குக் குறிப்பாக விதிக்கப்பட்டது.

223. மேலும் விரதம் முடியும் வரையில், ஸ்திரீ, தாழ் குலத்தான், பாவி இவர்களுடன் பேசக் கூடாது. பலிகம், யவம்ஆகியவை தவிர்த்த ஏனைய சாந்திராயண விரதங்கள் இருப்போன் மூன்று வேளையும் தலை முழுக வேண்டியது.

224. அல்லும் பகலும் நின்றும் அமர்ந்தும் இருக்க வேண்டுமன்றிப் படுக்கக் கூடாது. மிகவும் முடியாத போது தரையில் கிடக்கலாம் அன்றிப் படுக்கை கட்டில் இவை கூடாது. பெண் இன்பம் துய்க்காமல், பலாச தண்டம், மிஞ்சி இவை தரித்து, குரு, தெய்வம், பிராம்மணர் இவர்களைப் பூசித்தும் இருக்க வேண்டியது.

225. விரத கால முழுமையும் அன்றாடம் காயத்ரி ஜபம் செய்தும், புனிதமான வேத ருக்குகளை இயன்றவரை ஜெபித்துப் வர வேண்டும். இவை சாந்திராயணத்திற்கு மட்டுமின்றி கிருஹவிரதங்களுக்கும் பொருந்துவன.

226. பெரும் பாவிகளைக் கழுவாய் இயற்றுமாறு மேலோர் அறிவுறுத்தவும். யாருமறியாமல் பாவம் செய்தவர்கள் மந்திர ஜபங்களாலும் பிராயச்சித்த ஹோமங்களாலும் கழுவாய் இயற்ற வேண்டியது.

227. பலரறியத்தக்க பாவிகள் தங்கள் பிழையைப் பகிரங்கப்படுத்தியும், கழிவிரக்கப்பட்டும், கடும் தவமியற்றியும், காயத்ரி ஜெபிப்பதாலும், இயலாதபோது தானம் செய்வதாலும் தூய்மை அடைகின்றனர்.

228. ஒருவன் தனது பிழையை எவ்வாறு பலரிடமும் தெரிவிக்கிறானோ அவ்வாறே, பாம்பு சட்டையுரிப்பது போல், பாவத்தையும் உரித்து விடுகிறான்.

229. கழிவிரக்கப் படுகிறவனுடைய பாவமும் ஒருவனுடைய ஆன்மாவை விட்டகலும்.

230. கழிவிரக்கப் படுகையில் இனி அஃதியற்றுவாறு மனத்தில் உறுதி பூணவும். அதை நிறைவேற்றினால்தான் அவன் தூயவனாவான்.

2 1. இவ்வாறு மறுமையில் இன்ப துன்பங்களைப் பயப்பதான நற்செயல் தீச்செயல்களை நன்குணர்ந்து, அன்றாடம் மனம் மொழி மெய்களால் நன்றே முயன்றிருக்க.

232. அறிந்தோ அறியாமலோ தீவினையாற்றுவோன், தனது பாவத்தைப் போக்கவிரும்பினால், மீண்டும் அவ்வினையாற்றா தமைய வேண்டும்.

233. ஒரு கழுவாய் இயற்றியும் பாவம் நீங்கியதாக மனவமைதி யேற்படுவதில்லையாயின், மீண்டும் அதே கழுவாயை மனச்சாந்தி அடையும் வரையில் இயற்றுக.

234. தேவ மனிதர்க்கு உண்டாகிற இன்ப துன்பங்களுக்குத் தவமே முதல், நடு, கடையாக இருக்கிறதென்று வேதமுணர்ந்த மாமுனிவோர் கூறுகின்றனர்.

235. அந்தணர்க்கு வேதப் பொருள் உண்மைகளையுணரும் ஞானமும், க்ஷத்திரியருக்கு மக்களைக் காக்கும் கடமையும், வைசியருக்கு வாணிப விவசாயங்களும் நாலாம் வருணத்தவர்க்கு அந்தணப் பணியும் தவங்களாகும்.

236. மனம், மொழி, மெய்த் தூய்மையுடன், கந்த மூலங்களை உண்டிருப்பவராயும் உள்ள முனிவரர் தங்கள் தவ மேன்மையினால், பிருதுவி, அந்தரிட்சம், சுவர்க்கம் ஆகிய மூவுலகக் காட்சிகளையும் இருந்த இடத்திலிருந்தே ஞானக் கண்ணால் பார்க்கிறார்கள்.

237. மருந்து, பிணியின்மை, பிரம்ம வித்தை, நல்லொழுக்கம, நல்லுலக வாழ்க்கை இவை யனைத்தும் தவத்தாலேயே கிடைக்கப் பெறுகின்றன.

238. கோள் வினையும், ஏனையோர் இகத்திலேயே மீண்டும் பெறற்கரியதான உயர்பிறப்பு, பிற செல்வங்கள் ஆகியவையும்கூடத் தவத்தால் எய்தப் பெறும். ஏனெனில் தவ வலிமை எதனாலும் அழிவுறாததாகும்.

239. பஞ்சமா பாதகர், சிறு பாவங்களியற்றியோர் செவ்விதின் முயலும் தவத்தினால் பாவ நீக்கம் பெற்றுய்கின்றனர்.

240. உலண்டுப் பூச்சி, பாம்பு, விளக்கணைப் பூச்சி, பசுக்கள், பறவைகள், மரங்கள் முதலிய தாவரங்களும் தபோ வலிமையினால் மேன்மையுற்றன வென்ற உண்மை புராணப் புகழுடையது.

241. செல்வத்தைப் போன்றே தவமும் முயன்று சேமிக்கப் படுவதனால்தான், தவப்பெற்றியுடையோரைத் "தபோதனர்" என்று கூறுவர் இவர்கள் மனம், மொழி, மெய்களால் தமக்கு வந்துற்ற தீமையனைத்தையும் தங்கள் தவக்கனலில் தீய்த்து விடுகின்றனர்.

242. தவத்தால் தூய்மையுற்ற அந்தணனுடைய நற்கருமங்களில், அவன் படைக்கும் அவியைத் தேவர் உவந்து ஏற்றுக் கொண்டு, வேண்டும் நலம் அனைத்தும் வழங்குவர்.

243. படைப்புக்கு வல்லமையுடைய பிரம்மாவும் தமது தவ மேன்மையைக் கொண்டே பிரபஞ்சத்தைப்

படைத்தார். வசிஷ்டர் முதலிய முனிவரரும் தங்கள் தவ வலிமையினால்தான் வேதப் பொருளை உணர்ந்து கொண்டனர்.

244. இவ்விதம் தவ மேன்மையைக் கண்டறிந்த காரணத்தினால்தான் தவமே எதற்கும் காரணமாயிருக்கிறதென்று தேவர்கள் கொண்டாடுகின்றனர்.

245. இயன்ற வகை வேதம் படிப்பது, ஐம்பெரு வேள்வி முயன்றிருத்தல், பிறர் இழைக்கும் தீங்கையும் பொறுத்தல், இவை எவ்விதப் பெரும் பாவத்தையும் வெல்லுவன வென்றால், இவற்றின் வல்லமையைக் கூற வேண்டியதில்லை.

246. பற்றிய விறகை நொடிப் போதில் எரித்துவிடும் தீயைப் போன்றே, வேத நுட்பங்களை யுணர்ந்தவன், தனது ஞானமென்னும் தீயினால் எல்லாப் பாவங்களையும் பொசுக்கி விடுகிறான்.

247. பிரம்மஹத்தி முதலிய மாபெரும் பாவங்களுக்கும் கழுவாய் கூறியாயிற்று. இனிப் பிறர் அறியாமல் மறைவில் இயற்றுகின்ற பாவங்களின் கழுவாய் இவையென்று கூறக் கேளீர்.

248. வியாக்ருதி, பிரணவத்துடன் பதினாறு பிராணாயாமங்கள் வீதம் ஒருமாதம் செய்தால் பிரம்மஹத்தியோ, அல்லது அபவாதமோ தீர்ந்து போகும்.

249. கௌசிகர், வசிஷ்டர், மாஹித்தர் இவர்களுக்கு உரிய மூன்று ருக்குகளையும் நாடோறும் பதினாறு தடவை வீதம் ஒரு மாதம் ஜெபித்து வந்தால், சுராபானம் செய்தவனும், அதனால் பழிப்பேற்றவனும் தூய்மையடைவர்.

250. இம்முறைப்படி ஆசியவாமியம், சிவசங்கற்பம் நாடோறும் ஒரு முறை செய்து வந்தால், பிராம்மணன் பொன்னைத் திருடியவன் புனிதமடைவான்.

251. நாடோறும் பதினாறு தடவை வீதம் ஒரு மாதம் புருஷசூக்தம் ஜெபித்தால் குரு மனைவியைக் கூடிய பாவம் போகும்.

252. மாபெரும் பாவங்கள், சிறு பாவங்கள் அனைத்தையும் போக்க விரும்புவோன் 'அவ, யத்கிஞ்சத்' என்று தொடங்கும் ருக்குகளையும், 'இதிமே' என்னும் சூக்தத்தையும் நாள்தோறும் தூயனாய் இருந்து, ஒரு வருடம் வரையில் ஜெபித்தால் பரிசுத்த மடைவான்.

253. மாபாவிகள் முதலான தகாதாரிடம் தானம் வாங்கினாலும், சாப்பிடத் தகாதவற்றை உண்டாலும் "தரது" என்னும் ருக்கை மூன்று நாள் ஜெபிக்கவும்.

254. மிகுந்த பாவமுடையவனாயினும், சோம ரௌத்ரம், அர்யமணம் ஆகிய ருக்குகளைச் சொல்லி, ஓடு நதியில் ஒரு மாதம் வரை அன்றாடம் முழுகவும்.

255. மிகப் பெரும் பாவியானவன் இந்திரம் என்னும் துவக்கமுடைய ஏழு ருக்குகளையும் நாடோறும் ஆறு மாதம் வரை ஜெபிக்கவும். தண்ணீரில் மலஜலம் கழித்தவன் ஒரு மாதம் பிச்சையேற்றுப் புசிக்கவும்.

256. பெரும் பாவங்களிலிருந்து விடுபட விரும்பும் துவிஜன், சாகல ஹோம மந்திரங்களால் நெய் வார்த்துத் தீ வளர்த்தாலும், 'நம' எனும் ருக்கை அந்த ஓராண்டு முழுமையும் ஜெபித்தாலும் பாவம் நீங்கப் பெறுவான்.

257. மாபாதகனான துவிஜன் ஆநிரை பின் சென்று உபசரித்து, ஓராண்டு விரதமிருந்தும், ருக்குகளைக் கூறிக் கொண்டு பிச்சையேற்றுப் புசித்தும் வர வேண்டும்.

258. மூன்று பராக்ருச்ரத்தைச் செய்து தூயனான பின், தபோவனத்தில் மூன்று தடவை வேத சம்ஹிதை கூறினால் எல்லாப் பாவமும் அகலும்.

259. மூன்று நாட்கள் முழுப் பட்டினி இருந்தும், தூயனாய், மூன்று வேளையும் அகமர்ஷண ருக்கை ஜெபித்து ஸ்நானம் செய்தும் வர எல்லாப் பாவமும் போகும் பாவங்களின் அளவையும், பாவியின் சக்தியையும் கணக்கிட்டு இவ்விதக் கழுவாய்களில் ஏற்றது விதிக்க.

260. வேள்விகளிற் சிறந்ததாயும், எல்லாப் பாவங்களுக்கும் கழுவாயாகவும் அசுவமேத வேள்வி இருப்பது போன்று, ருக்குகளில் அகமர்ஷணம் சிறப்புடைத்தாயிருக்கிறது.

261. மூவுலகங்களை அழித்தாலும், மாபாதகர் போன்ற தகாதவரின் உணவை அருந்தினாலும், பொருளுடன் ருக்வேத பாராயணம் செய்பவனைப் பாவங்கள் தீண்டா.

262. ருக், யஜுஸ், சாமவேத உபநிஷத் சம்ஹிதைகளில் ஒன்றைப் பொருளுணர்ந்து மூன்று தரம் ஜெபித்தால் எல்லாப் பாவமும் போகும்.

263. மடுவின் நடுவில் போட்ட மண்கட்டி கரைவது போல், 'வேதத் திரிவிருத்' அறிந்தவனைப் போய் அடையும் பாவங்களும் கரைந்து மறைந்து விடுகின்றன.

264. மூன்று வேத மந்திரங்கள், மற்றும் பற்பல மந்திரங்கள் அனைத்தும் கூடியதற்கே 'வேதத் திரிவிருத்' என்று பெயர். இதை அறிந்தவன் வேதமனைத்தும் அறிந்தவன்.

265. வேதங்கள் அனைத்துக்கும் முதலில் உச்சரிக்கப்படும் மூவெழுத்துள்ள பிரணவமே ஒரு வேதத் திரிவிருத் ஆகும். இவ்விதம் மூன்று வேதங்களையும் தன்னில் அடக்கியதாய், தனிமையில் மட்டும் உச்சரிக்கத் தக்கதாயுள்ள இதைப் பொருளுடனும் சுருதியுடனும் உணர்ந்தவன் எல்லா வேதமும் அறிந்தவன்.

பதினோராம் அத்தியாயம் முற்றும்.

## பன்னிரண்டாம் அத்தியாயம்

# வினைப் பயன்

### தீவினை நல்வினை விளைவுகள்

1. தூயவரான பிருகு மகாமுனிவரே, நால் வருணத்தாருடைய அறங்களையும் சங்கர ஜாதிகளின் தோற்றம் தொழில் யாவும் தேவரீரால் உணர்த்தப் பெற்றோம். வினைப் பயனைப்பற்றி இனி எங்களுக்கு விளக்க வேண்டும்.

2. இவ்விதம் வினவிய தேவ ரிஷிகளைப் பார்த்து, அறத்தையே மேற்கொண்டவரான பிருகு முனிவர், "வினைப் பயன்களைப்பற்றி விளக்குவேன், கேளீர்!" என்று கூறத் தொடங்கினார்.

3. மனம், மொழி, மெய்களால் வினைகள் நிகழ்வன. நல்லன தீயன என்ற இருவகைப்பட்ட இவ்வினைகளுக்கு முறையே நன்றும் தீதும் பயனாக விளைகின்றன. இவ்விளைவுகளாலேயே தேவ, மானிட, திரியக், தாவரப் பிறவிகள் ஆகிய மேல், இடை, கடை நிலைகள் பொருந்துகின்றன.

4. மேலிடை கடை நிலைகளின் காரணமாயும், உயிர்கள் மூவழியானு மியற்றும் பத்து விதப் பாகுபாடுடைத்தாயும் விளங்குகின்ற நல்வினை தீவினைகளுக்கு மனமே செயற்படு பொருளாயிருப்பதை அறியுங்கள்.

5. இவை பத்தும் பின்வருமாறு:—பிறன் பொருளைக் கவரச் சூழ்தல், பிரம்மஹத்தி முதலான தகாத செயலில் நாட்டமுறல், உடலே ஆன்மாவென்று மயங்கி அதனிடம் பற்றுக் கொள்ளல், இம்மூன்றும் மனத்தின் தீச்செயல்களாம். இவற்றிற் பிறிதாகு மனைத்தும் நற்செயல்களாம்.

6. கொடுஞ்சொல் கூறல், பொய் மொழிதல், கோள் உரைத்தல், வம்பளத்தல், இவை நான்கும் மொழியின்

தீவினைகளென்றும், தவிர்ந்த ஏனையவை நல்வினை யென்றும் கொள்க.

7. பிறன் பொருளைக் கவர்ந்து கொள்ளல், வேள்விக்கன்றி வீணே உயிர்வதை புரிதல், பிறன்மனை நயத்தல், இம்மூன்றும் மெய்யின் தீ இயக்கங்களென்றும், ஏனைய நல்லியக்க மென்றும் அறிக. ஆக மனம், மொழி, மெய்களால் வரும் வினைத் தொகை பத்து.

8. மனம், மொழி, மெய்களால் இயற்றிய தீவினை நல்வினைப் பயன்களை இம்மையிலேனும் மறுமையிலேனும் முறையே அவ்வக் கருவிகளினாலேயே அனுபவிக்க நேரிடுகிறது.

9. மெய்யால் தீவினை புரிவோன் தாவரப் பிறவியும், மொழியால் தீதியற்றுவோன் விலங்கு அல்லது பறவையாகவும், மனத்தால் பொல்லாங்கியற்றுவோன் சண்டாளன் முதலிய தாழ்ந்த பிறவியும் எய்துகிறான்.

10. மனம், மொழி, மெய்கள் தீவினை புரியாமல் அவற்றைக் கட்டுப்படுத்தி அடக்கியாள்பவனே உண்மையான திரிதண்டியேயல்லாது, கையில் திரிதண்டமென்னும் துறவு வேடக் கருவியைத் தரிப்பதனால் மட்டுமே ஒருவன் திரிதண்டி ஆகிவிட மாட்டான்.

11. இவ்விதம் திரிகரணங்களையும் தண்டித்துத்தானும் உயிரெதனிடத்தும் காமக் குரோதம் கொள்ளாதவனே மோக்ஷ சித்தியடைவான்.

12. ஐம்பெரு பூதங்களின் நுண் அணுக் கலப்பால் தோன்றியிருக்கின்ற காரணத்தால் சரீரம் பூதாத்மா வென்றும், அதனைக் கொண்டு வினைகளியற்றுவிப்போனை ஜீவாத்மா வென்றும் கூறுவர்.

13. எல்லா உயிர்களிடத்தும், பிறப்பில் உடன் இருப்பதும் மகத் தத்துவமென்ற பெயருடையதுமான ஒரு

அந்தராத்மா கரந்துறைகிறான். தன்முனைப்பு, பொறி புலன்களின் வடிவில் அந்தராத்மாவே ஜீவாத்மாவாக நின்றெழுந்து இன்பதுன்பம் நுகர்கிறான்.

14. அந்தராத்மா ஜீவாத்மா விரண்டும் பஞ்ச பூதிக சரீரத்துடன் கூடியிருந்தும் சகல ஜீவன்களிடமாகவும் உள்ளுறைந்து இயக்கும் பரமாத்மனின் இச்சைப்படியே இயங்குகின்றனர்.

15. பரமாத்ம ஸ்வரூபத்தினிடமிருந்து உருவமுள்ளதான ஆன்மகோடிகள் தீப்பொறிகளைப்போல் தெறித்தெழுந்து, தேவ, மானிட மற்றும் பல் வடிவங்களையுடையனவாய்த் தோற்றமுற்றும், மனம் மொழி மெய்களால் செயல்படுவனவாயும் அமைகின்றன.

16. உயிர்கள் இயற்றிய பாவங்களின் பயனை அவை துய்க்கும்பொருட்டு, மரணத்திற்குப் பின் யாதனா சரீரமொன்றை அவை பெறுகின்றன. அந்தச் சரீரமானது துன்பங்களை அனுபவிப்பதற்கு ஏற்ற உறுதியுடையது.

17. இந்த யாதனா சரீரத்தால் தீவினைகளுக்குரிய துயரங்களை நுகர்ந்த பின்னர், இப்புதிய சரீரத்திற்கு ஆதாரமாக இருந்த பஞ்ச பூத தன்மாத்திரைகளின் சேர்க்கையும் கலைந்து, தங்கள் மூலஸ்தானத்தில் கலந்து விடுகின்றன.

18. தகாத புலன் இன்ப நாட்டங்களால் விளைந்தவையும், துயரம் தருபவையுமான யம வாதனைகளை ஜீவன் துய்த்த பின்னர், பாவமகன்று, மிகுந்த ஒளியுடைய அந்தராத்மா பரமாத்மா நிலைகளை அடைந்து விடுகிறான்.

19. ஜீவன் அனுபவிக்கும் வினைப்பயன்களை அந்தராத்மாவும் பரமாத்மாவும் சான்றாக நின்று பார்க்கிறார்கள்.

20. வினைப்பயனால் இம்மை மறுமைகளில் இன்ப துன்பங்களை அடைகின்ற ஜீவன் மானிடப் பிறவி எடுத்திருந்தபோது புரிந்தவற்றில், நல்வினை மிகுந்தும், தீவினை குறைந்

தும் இருப்பின், உடற் பிறவியின் காரணமாயிருந்த ஐந்து
பூதிகக் கலவைகளின் நுட்ப அளவைகளிற் கொண்டே,
மறுமையிலும் மற்றொரு பருவுடலான போக சரீரத்துடன்
சுவர்க்க சுகம் அனுபவிப்பான்.

21. தீவினை புரிந்ததே மிகுதியாக இருப்பின், மறுமை
யிற் பருவுடல் பெறாமல், முன் கூறியவாறு துக்கபயனைத்
துய்க்க வல்ல யாதனா சரீர மெடுத்து, யமவாதனைகள்
பெறுவர்.

22. அப்படித் துயரங்களை முழுவதும் நுய்த்த பின்னர்
பாவ மகன்று, ஐம்பூதச் சேர்க்கையாலான மானிடப்
பிறவியே மீண்டும் எய்துகிறான்.

23. இவ்வாறு வினைப்பயன்களாக வந்து பொருந்து
கின்ற சொர்க்க நரக வாசங்களாகிற இன்ப துன்பங்
களைத் தனது உள்ளுணர்வில் மானிடன் ஓர்ந்து எப்பொழு
தும் நல்வினையாற்றி யிருக்க வேண்டியது.

## முக்குண நலன்கள்

24. சத்வ, ரஜோ, தமோ குணங்கள் மூன்றும் ஆத்ம
குணங்களாகும். இவற்றின் பயனாகவே ஆத்மாவுக்கு
ஸ்தாவர ஜங்கம வடிவங்கள் உண்டாகின்றன.

25. ஒரு சரீரத்தில் மேலோங்கி நிற்கும் குணமானது
அந்தச் சரீரத்தை முழுவதும் தன் வயப்படுத்திக் கொள்
கிறது.

26. ஒரு பொருளின் உண்மையை உள்ளவாறு
அறிதல் சத்வ குணத்தின் இயல்பு. மாறுபடக் காணல்
தமோ குணச் செயல். விருப்பு வெறுப்புக்கள் ரஜோ
குணத் தன்மை. நம்பிக்கை—ஐயம்—கவலை இவை
முறையே இவற்றின் சொரூபங்கள் இந்தக் குணங்கள்,
அவற்றின் பான்மைகள், சொரூபங்களுடனேயே சகல
உயிர்களும் ஐம்பூத உடல் பெற்று விளங்குகின்றன.

27. உலகப்பற்றால் கலக்கமுறாத தெளிவை ஒரு ஆன்மாவுக்கு உண்டாக்குவது எதுவோ, அதுவே சத்வகுண சொரூபமென்று அறிக.

28. உலக விஷயங்களில் துயரமும், மனக்குறையும், புலன் இச்சையும் ஆன்மாவுக்கு உண்டாக்குவது எதுவோ, அதுவே ரஜோ குணமாகும்.

29. நன்று தீதெனப் பகுத்தறியக் கூடாமல், தகாதவற்றின்பால் எஞ்ஞான்றும் பித்துக் கொண்டும், எதனைப் பற்றியும் தெளிவாய் அறிந்து கொள்ளக் கூடாமலும் செய்கின்ற குணமே தமோ குணமென்று அறிக.

30. இந்த முக்குணங்களினாலும் தலை, கடை, இடையாகிய செயற்பாடுகள் நிகழும் விதம் முழுமையும் விளக்குவேன்.

31. வேதம் ஓதியிருத்தல், தவமுயற்சி, நூல் அறிவு, ஞானம், தூய்மை, புலனடக்கம், தானம் முதலிய நற்செயல், ஆன்ம தியானம் இவை சத்வகுணச் செயல்கள்.

32. ஒரு பலனைக் கோரி வேள்வி முதலியன முயலல், அற்ப விஷயத்திலும் மனம் தளர்தல், தகாத செயல் புரிதல், எப்போதும் புலனின்ப நாட்டம் இவை ரஜோ குணச் செயல்களாம்.

33. பேராசை, எப்போதும் உறங்கல், பகைமை, கோள், தெய்வ அவநம்பிக்கை, ஒழுக்கமின்மை, பிச்சை ஏற்றல், கவனக் குறைவு இவை தமோ குணப் பாங்குகளாம்.

34. இக்குணங்கள் மூன்றனுக்கும் முக்கால வேறுபாடுகளைக் கூறுகிறேன்.

35. ஒன்றைச் செய்த பினனும், செய்யும் போதும், செய்ய எண்ணும்போதும் அதுபற்றி உள்ளம் நாணுறத் தக்கதாக விருக்கின்ற செயலனைத்தும் தமோ குணச் செயல்களாம்.

36. உலக வாழ்வில் மேலான செல்வங்களை நாடிப் புரிகின்ற ஆர்வம் மிக்க செயல்கள் அனைத்தும் ரஜோ குணச் செயல்கள்.

37. தனது முழு முயற்சியாலும் மெய்ம்மையை நாடி உணர்கின்ற முனைப்பும், ஒன்றைச் செய்வதனால் உள்ளம் நாணுறாமல் நிறைவைப் பெறுகின்ற பான்மையும் தருவது சத்வ குணத்தின் இயல்பாம்.

38. பெரும்பாலும் உடலியக்கத்தால் விளையும் வினைகள் யாவும் தமோ குணத்தால் நிகழ்பவையே. பொருளாசை தூண்டப் பெறுவது ரஜோ குணத்தால். நன்னெறி ஒழுகுதல் என்பது சத்வ குணத்தால். இவை முறையே ஒன்றுக்கு ஒன்று மேலானது.

39. இக்குணங்களால் மானிடன் அடையும் நலன்கள் யாவை என்பதை உங்களுக்குக் குறிப்பாய்ச் சொல்லுகிறேன்.

40. சத்வ குணத்தர் தேவத் தன்மையையும், ரஜோ குணத்தர் மானிடத் தன்மையையும், தமோ குணத்தர் பசு, பக்ஷி இயல்புகளையும் அடைவதால், குண நலன்கள் மூன்று வகைப்படுகின்றன.

41. இம்மூன்று நலன்களும், இடம், காலம், வினை இவற்றின் வேறுபாடுகளால் தலை, இடை, கடை என்ற தகுதிகள் பெறுகின்றன.

42. தாவரம், புழு, பூச்சி, மீன், பாம்பு, ஆமை, பசு, மிருகம் ஆகிய பிறவிகள் தமோ குணத்தின் கடைநிலையாகும்.

43. யானை, குதிரை, மிலேச்சர், சிங்கம், புலி, பன்றி ஆகிய பிறவிகள் தமோ குணத்தின் இடைநிலையாகும்.

44. சாரணர், சுபர்ணர், டாம்பிகர், இராக்கதர், பைசாசர் ஆகியோர் தமோ குணத்தின் தலைநிலையாளர்,

45. கோலெடுத்துப் போரிடுவோர், மல்லர், நட்டுவர், கத்தி வீசுவோர், சூதர், குடியர் ஆகிய பிறவிகள் ரஜோ குணத்தின் கடைநிலை.

46. மன்னர், க்ஷத்திரியர், ராஜ்ய புரோகிதர், வாதத் திறமையுடையவர் ஆகியோர் ரஜோ குணத்தின் இடை நிலைப் பிறப்பினர் ஆவர்.

47. காந்தர்ப்பர், குஹ்யர், யட்சர், வித்யாதரர், பற்பல வகை அப்சரஸ்கள் ஆகிய பிறப்புகள் ரஜோ குணத் தலைநிலைத் தன்மையால் அமைவனவாகும்.

48. வானப்பிரஸ்தர், துறவிகள், அந்தணர், விமானிகள், உடுக்கள், அசுரர் இவ்விதப் பிறவிகள் சத்வகுணக் கடைநிலை விளைவாம்.

49. வேள்வி முயல்வோர், ருஷிகள், தேவர், வேத விருப்பினர், தேவதை, கோள்கள், வருஷ தேவதைகள், பிதுர்க்கள், சாத்தியர் ஆகிய பிறப்புகள் சத்வகுண இடை நிலையால் வருவன.

50. நான்முகன், மரீசி முதலான பிரஜாபதிகள், தரும தேவதை, மகத் தத்துவம், சாங்கிய சாத்திரத்தில் ஒளிரும் அவ்யக்தம் ஆகிய தோற்றங்கள் அனைத்தும் சத்வ குணத்தின் தலையாய நிலை.

51. சகல பிராணிகளுடைய மனம், மொழி, மெய் களால் இயற்றப்படும் செயல்கள் எத்தகைய குண நலன் களையுடைய பிறவிகளைத் தோற்றுவிக்கின்றன வென்பது பற்றி விளங்கச் சொன்னேன்.

52. புறப் பொறிகள் தகாதவற்றில் தொடர்பு கொள்வதாலும், தீச் செயல் புரிவதனாலும், கழுவாய் முதலிய கடன்களை ஆற்றாது ஒழிவதனாலும், மூட மனிதர் அடைகின்ற பிறவிப் பிணி பற்றிக் கூறுவேன்.

## தீவினைப் பயன்கள்

53. ஜீவர்கள் எந்தெந்தப் பாவங்களால் எத்தகைய பிறப்புக்களை எய்துகின்றனர் என்பதைக் கேளுங்கள்.

54. பிரம்மஹத்தி முதலிய பெரும் பாவங்கள் செய்தோர், பல்லாயிரம் ஆண்டுகள் கொடிய நரகங்களில் உழன்று, பின்னர் இனிக்கூறப்படுகின்ற பிறவிகளிற்புகுவர்.

55. நாய், பன்றி, கழுதை, ஒட்டகம், பசு, ஆடு, சிங்கம் முதலிய விலங்கினமாகவும், பறவை, சண்டாளன், புற்கசன் ஆகிய தாழ்ந்த மானிடப் பிறவிகளாகவும் தோற்றமுறுவர்.

56. புழு, உலண்டு, விளக்கணை, மலப்பூச்சி, பறவை, —புலி முதலிய கொடிய மிருகங்கள் ஆகிய பிறவிகளைக் கள்ளுண்ட அந்தணன் அடைகின்றான்.

57. சிலந்திப் பூச்சி, பாம்பு, கரட்டோணான், நீர்வாழ் பிறவிகள், கொலை விருப்புள்ள பிசாசர் ஆகிய பிறவிகளைப் பல்கால், பொன் களவாடியவன் அடைகின்றான்.

58. புல், புதர், கொடி, மாமிசம் தின்னிக் கழுகு, கொல் புலி ஆகிய பிறவிகள் குரு மனைவியைப் பல்கால் கூடிய பாவி பெறுகிறான்.

59. பிராம்மண ஹிம்சை செய்வோர் பூனையாகப் பிறக்கின்றனர். தகாதவற்றை உண்போர் புழுவாகின்றனர். பொன் அல்லாத ஏனையவற்றைக் களவாடியவர் ஒன்றை ஒன்று தம்மினத்தையே உண்டு உயிர் வாழும் பிராணிகளாகத் தோற்றமுறுகின்றனர். சண்டாளியைக் குலவி மகிழ்ந்தோர் பிணந் தின்போராகின்றனர்.

60. பிரம்மஹத்தி முதலியன புரிந்த பெரும் பாவிகளுடன் கூட்டுறவாடினாலும், பிறன்மனை கூடினாலும், அந்தணன் பொருளை அபகரித்தாலும் இவற்றினால் பிரம்ம ராக்ஷஸனாகப் பிறப்பான்.

61. மாணிக்கம், முத்து, பவளம், வைடூரியம் முதலிய கற்கள் இவற்றில் ஒன்றை விருப்பிக் களவாடினால், பொற்கொல்லனாகவோ, நட்டாரப் பூச்சியாகவோ பிறப்பான்.

62. தானியம் திருடியவன் பெருச்சாளியாகவும், வெண்கலத் திருடன் அன்னப் பறவையாகவும், தண்ணீர் களவிட்டவன் நீர்க்காக்கையாகவும், தேன் திருடன் வால் கொசுவாகவும், பால் திருடியவன் காகமாகவும், இலை வகை திருடியவன் நாயாகவும், நெய் திருடியவன் கீரியாகவும் பிறக்கிறான்.

63. மாமிசம் களவாடியவன் கழுகாகவும், வபையைத் திருடிக் கொண்டவன் விச்சுளியாகவும், எண்ணெய் திருடியவன் வௌவாலாகவும், உப்புத் திருடியவன் சுவர்க்கோழியாகவும், தயிர் திருடியவன் கொக்காகவும் பிறப்பர்.

64. வெண்பட்டுத் திருடியவன் ஊர்க்குருவியாகவும், பட்டுச் சால்வை திருடியவன் தவளையாகவும், நூலாடை திருடியவன் கிரௌஞ்சமாகவும், பசுவைத் திருடியவன் உடும்பாகவும், வெல்லத்திருடன் வாக்குதம் என்ற பறவையாகவும் பிறக்கின்றனர்.

65. கஸ்தூரி முதலிய நறுமணப் பொருள்களை அபகரித்தவன் மூஞ்சூறாகவும், இலை, காய் இவை திருடியவன் மயிலாகவும், சோறு மாவு முதலிய உணவுப் பொருளைத் திருடித் தின்றவன் முள்ளம் பன்றியாகவும், கோதுமை அரிசி முதலான சமைக்காதவற்றைத் திருடியவன் சல்லிய மிருகமாகவும் பிறக்கின்றனர்.

66. நெருப்பைத் திருடியவன் நாரையாகவும், முறம் துடைப்பம் முதலிய வீட்டுக் கருவிகள் திருடியவன் குளவியாகவும், செஞ்சாய வேட்டி திருடியவன் சகோரப் பட்சியாயும் பிறப்பான்.

67. யானை முதலிய விலங்கினங்களைத் திருடியவன் செந்நாயாகவும், குதிரையைத் திருடியவன் புலியாகவும்—

கனி,கிழங்குகொள்ளையிட்டவன் குரங்காகவும், பெண்ணைச் சிறை யெடுத்தவன் கரடியாகவும், குடிநீர் திருடியவன் சாதகப் பக்ஷியாகவும், வண்டி முதலிய ஊர்திகள் திருடியவன் ஒட்டகையாகவும், ஏனைய பசு ஜாதிகளைக் களவாடியவன் வெள்ளாடாகவும் பிறப்பான்.

68. அன்னியர் பொருளைச் சிறிதே களவாடிய போதிலும், பயனற்றதேயாயினும்,ஹோமத்திற்கான அவியைத் திருடிய போதிலும்,கட்டாயம் பறவையாகப் பிறப்பான்.

69. இவ்விதமான பாவங்களை இயற்றிய பெண்களும் முறையே அவ்வப்பிறவிகளிற் பெண்ணினமாகப் பிறந்து ஆண் இனங்களின் பேடைகளாவர்.

70. நால் வருணத்தரும், தங்களுக்கு விதிக்கப்பட்ட நற்கருமங்களை அபாயமில்லாத காலத்திலும்விட்டொழிப்போர், மேற்சொல்லப் புகுவதான கோரப் பிறவிகள் பெற்று, தங்கள் முற்பிறவிப் பகைவருக்கு ஏவல் புரிபவராவர்.

71. தனது அறங்களை இயற்றாத அந்தணன் கொள்ளிவாய்ப் பிசாசாகப் பிறந்து, வாந்தி செய்த பிச்சில் பிழைவான். அத்தகைய க்ஷத்திரியன் மலம் பிணம் இவற்றை உண்ணும் கடபூதமாகப் பிறப்பான்.

72. அத்தகைய வைசியன் சவர் நீரைக் குடிக்கின்றதும், வாலில் ஒளிரும் கண்ணுடையதுமான பிணத்தில் புழுத்த புழுவாகிறான். இவ்வித நாலாம் வருணத்தவன் பேனைத் தின்னும் அத்தகைய புழுவாகிறான்.

73. புலன் இன்ப நாட்டமுடையோர் தங்கள் மனம் பற்றும் அவற்றில் லயித்துத் தம்மை மறந்துவிடுகின்றனர்.

74. அற்பபுத்தியுடைய இவர்கள், தாங்கள் இயற்றும் தீவினைகளின் அளவுக்கேற்ப, பக்ஷி, மிருகம் ஆகிய கீழ்ப் பிறப்புகளைப் பெற்று, மிகுந்த துயரம் அடைவர்.

75. மேலும் தாமிசிர முதலிய கொடிய நரகுகளில் உய்த்தும், அசிபத்திரவனம் என்கிற முட்காட்டில்

திரிந்தும், யம பாசங்களால் கட்டுண்டும், யம படர்களால் வெட்டுண்டும்,

76. காக்கை, கோட்டான் முதலியவற்ருல் கொத்தித் தின்னப்படுதலையும், கொதிக்கும் மணலில் புரட்டப் படுதலையும், பாண்டத்தில் வேக வைக்கப்படுதலையும் இவை போன்ற கொடுந் துன்பங்கள் அடைவர். மேலும்,

77. நலிவே தருவதான பறவை, மிருகமாகிய பிறப்புக்களில் பிறந்து, குளிர், காலல், பசித் துன்பங்களை அடைந்தும்,

78. அடிக்கடி கருவில் தோற்றமுற்றும், யோனி வாசல் வழியே நெருக்குண்டு ஜனிக்கிறதான துன்பமுற்றும், சிறை, தளையிடல் ஆகிய தண்டனைக்காட்பட்டும், பிறர்க் கடிமைப் படுகிற வாதனைப்பட்டும்,

79. உறவினர், நண்பினர் இவர்களை யகன்று தீயோருடன் கூடி வாழ்தலும், பொருள் தேட வேண்டிய தொல்லையையும், பொருள் இழப்பால் துயரத்தையும், நல்லவனுகச் சிலருக்கும், பொல்லாதவனுகச் சிலருக்கும் காணப்படுவதையும்,

80. மீளாத மூப்பையும், பிணியையும், பசி தாக மாதிய நலிவுகளையும், நிச்சயமான மரணத்தையும் இவர்கள் அடைகின்றனர்.

81. முக்குணங்களில் எதன் வழி தான் செயல்பட்டு வினைகள் புரியலாகின்ருனே, அக்குண நலன்களுக்கேற்றதான உடற் பிறவி எடுத்து, அதற்குண்டான பலனை அடைகின்ருன்.

82. நன்று தீது எனும் செயல் வேறுபாடுகளின் விளைவு முழுவதும் இதுகாறும் உரைத்தேன். இனி அந்தணர்க்கு ஏற்ற முத்தி நெறி இதுவென் றியம்புவேன்.

## முக்திக்கு வழி

83. உபநிஷத் முதலான நன்னூல்களைப் பொருளுணர்ந்து பயிலல், தூய்மையின் பொருட்டுப் பல்வித மான கழுவாய் விரதங்களை மேற்கொண்டு ஒழுகுதல், மெய்ப் பொருள் உண்மையை உணர்ந்து, புலனடக்கி, அஹிம்சையுடன், குரு பணிவிடை புரிந்திருத்தல் இவை யனைத்தும் முக்தி நெறிகளாம்.

84. மேற்சொல்லப்பட்டவற்றில் மிக்குயர்ந்தது பற்றி ஐயம் எழுங்கால், அதற்குரிய விளக்கம் இனிக் கூறப்படு கிறது.

85. எல்லா நற்செயல்களிலும் ஆன்ம ஞானம் பெறுதலே மிக்குயர்வு. அது எல்லாக் கல்விக்கும் சிறந்த தாகலின் அதுவே முத்தி தருவதாகவும் ஆகிறது.

86. எனவே விதிக்கப்பட்ட ஆறு செயல் ஒழுகுகளிலும் வேதப் பொருள் அறிந்து, உடல் உயிர் உண்மைகளை யுணர்ந்து, மெய்ப் பொருள் உணர்வைப் பெறுதலே இம்மை மறுமைகளிலும் இன்பம் பயப்பதாகுமென்று அறியவும்.

87. இந்த ஆன்ம ஞானத்திலேயே எல்லா வினைகளும் முறையே அடக்கம்.

88. வேதம் விதித்த வினைகள் பிரவிருத்தி, நிவிருத்தி என இரு வகையாகும். மறுமை இன்பை நாடி வேள்வி முதலிய நற்கருமம் புரிதல் பிரவிருத்தி. உலகப் பற்றறுத்து உண்மை யொளியிற் கூடியிருத்தல் நிவிருத்தி மார்க்கம்.

89. பிரவிருத்தி (இயக்கம்) வினைகள், இம்மையில் மழை முதலிய இன்பங்களின் பொருட்டும், மறுமையில் தெய்வப் பிறவியை அடையும் பொருட்டும் இயல்வன. நிவிருத்தி (அமைதி) வழியானது தத்துவ அறிவுள்ள வனுக்கு மட்டுமே பொருந்தும்.

90. பிரவிருத்தியில் இறங்கினால், தேவர்களுக்கு இணையான பதமும், எண்ணிய எண்ணியாங் கெய்தப் பெறுதலும் உண்டாகின்றன. நிவிருத்தி வழியானது பிறவிப் பிணியறுத்து முத்தியில் சென்றுய்க்கும்.

91. எல்லாப் பொருளிலும் இறைவனையும், இறைவனில் எல்லாப் பொருளையும் தனது தத்துவ ஞானத்தால் கண்டறிந்து, தனது செயல்களனைத்தையும் இறைவனுக்கே ஒப்புவித்து விட்டுத் தான் கருவியாக மட்டும் நின்றியங்குவோன் தன்னில் தானே ஒளிர்கின்றதான மோட்சம் எய்துகிறான்.

92. அந்தணன், தனக்கு விதிக்கப்பட்ட அன்றாடக் கடமைகளை விட்டுவிட்டாவது, மெய்ப்பொருள் நாட்டம் கொண்டு, புலனடக்கி வேதாந்த விசாரம் செய்க.

93. மேற் சொல்லிய மூன்றுமே பிறவியின் பயனைத் தர வல்லன. அதிலும் அந்தணர்க்கு விசேஷமாகும். இவ்விதம் ஒழுகும் துவிஜரே தங்கள் கடமைகள் செய்தவராவரன்றி வேறு சடங்குகளால் மட்டும் மேனிலை பெறார்.

## வேதத்தின் வாய்மை

94. தேவ, பித்ரு, மானிடரை வழிபடுவதற்கு வேதமே விளக்கொளியாகும். ஏனெனில் இவை நல்லன வென்பதை வேதமே நம்பச் செய்கிறது. மேலும் அவ் வேதம் தானே தோற்றமுற்றதன்றி யாரொருவராலும் கற்பிக்கப்பட்டதன்று. மீமாம்ச ஞானமில்லாதவனால் பொருளுணர வியலாததுமாகும். இதுவே அறுதியான ஏற்பாடு.

95. மேலோர் இயற்றிய அற நூல்கள் (ஸ்மிருதிகள்) வேத முடிபுகளுக்கு மாறுபடக் காணுமாயின்—சார்வாக முதலிய சாதாரணச் சித்தாந்தங்களால் வாக்களிக்கப் படுமாயினும்—இவை யெல்லாம் மறுமையில் தீமையும் நரகுமே விளைவிக்கும் என்று மநுப்பிரஜாபதி உறுதியாகக் கூறியுள்ளார்.

96. வேதத்திற்கு மாறுகக் கற்பிக்கப்படும் சாத்திரங்கள் விரைவில் அழிவன. மேலும் புதிதாகக் கற்பிக்கப்படுபவற்றைக் கடைப்பிடிப்பதால் யாதொரு பலனுமின்று. ஏனெனில் வேதத்தின் பிரமாண மில்லாத அவை வெறும் பொய்களேயாகும்.

97. நால் வருணத்தாரும், பூமி முதலிய மூவுலகங்களும், பிரம்மசர்ய முதலிய நான்கு ஆசிரமங்களும் வேதத்தால் விதிக்கப்பட்டனவே. பலபடக் கூறுவதென்னெ? நடந்ததும், நடப்பதும், நடக்கப் போவதனைத்தும் வேதத்தில் கூறப்பட்டிருக்கின்றன.

98. ஒலி, தீண்டுதல், உருவம், சுவை, மணம் ஆகிய புலன் நுகர்ச்சிகள் வேத விதிப்படி நல்லறங்கள் இயற்றுவோர்க்கே முற்றும் வந்தமைவன; இம்மை மறுமைகளில் இவ்வாறடையும் நுகர்ச்சிகளுக்கான முக்குண நலன்களும் வேதத்தில் விளக்கமுற்றவையே.

99. அநாதியான வேதமே தாவர ஜங்கம வடிவமான உயிர்த்தொகை யனைத்தையும் காக்கிறது. வேத மந்திரத்தால் தீயில் இயற்றிய வேள்வி சூரியனை யடைந்து மீண்டும் மழையாகி மண்ணுக்கு வருகிறது. அதனால், உணவும், உணவால் உயிர்களின் வாழ்வும் அமைவதால், கடமை தவறுதவர்கள் பெறத்தக்க நற்கதிகளைத் தப்பாமல் வழங்குகின்ற வேதமே தக்க துணையாகுமென்று அறிக.

100. தானைத் தலைமை, மன்னரசாட்சி, நீதி மன்றத் தலைமை, உலகரசாட்சி இவை யனைத்துக்கும் உரியவன் வேதமறிந்த நன்மகனே யாவான்.

101. மண்டியெழுகின்ற தீ, பெருமரங்களையெல்லாம் எவ்வாறு எரிக்கிறதோ, அவ்விதம் வேதப் பொருளுணர்ந்தவன் தீவினைப் பயன்களை யெல்லாம் சுட்டெரிக்கிறான்.

102. எவன் இசையுடன் பொருளுணர்ந்து வேதத்தை அதன் கருத்தாகப் பயின்றிருக்கிறானோ, அவன் எந்த

ஆசிரமம் பயின்றிருப்பவனுயினும், இவ்வுடற் பிறப்பிலேயே மேலான மறுமை யின்பமாகிய பரம்பொருள் உணர்வு நிலைவரப் பெறுகின்றுன்.

103. குருட்டுப் பாடமாக வேதம் ஓதியவனைவிட பார்த்துப் படிக்கத் தெரிந்தவனும், அவனைவிட ஓதியதை மனப்பாடமாக உரைக்கத் தெரிந்தவனும், அவனைவிட, வேதப்பொருள் உணர்ந்தவனும், இவர்களைவிட, அதன்படி ஒழுகுவோனும் முறையே உயர்ந்து விளங்குகின்றனர்.

104. அந்தணனுக்கு விதிக்கப்பட்ட நற்கருமங்களும், பிரம்ம ஞானமும் மோட்ச சாதனங்களாம். நற்கருமங்களால் பாவம் நீங்கியும் பிரம்ம ஞானத்தால் மோட்சமும் கிடைக்கப் பெறுகிறுன்.

105. செல்வம், பண்பு, பிறப்புக் குலம் இவற்றுல் வந்து பொருந்தத் தக்க கடமைகளை அறிந்தொழுக விரும்புவோன் காண்பதையும், யூகிப்பதையும், நூல்கள் நவின்றதையும் (பிரத்யட்ச, அனுமான, ஆகமப் பிரமாணங்கள்) வைத்தே பொருளுணர்ந்து செய்யக் கடவன்.

106. முனிவர் கண்ட வேத விளக்கம், அற நூல், இவ்விரண்டினையும், வேதத்திற்கு மாறு சொல்லாத தர்க்க நியாயத்தைக் கொண்டு ஆய்ந்துணர்பவன் மட்டுமே நல்லறம் இதுவென்று துணிய முடியுமேயல்லாது மற்றவரால் ஆகாது.

107. இதுவரையில் முக்தியைத் தருவதான வினைகளைப்பற்றி விதிப்படி கூறியாயிற்று. இனி இந்த மநுதர்ம சாத்திரத்தின் அடிப்படைக் கருத்தை விளக்குவேன்.

## இந்நூலின் வழக்கு

108. இந்த நீதி நூலில் எல்லா விதமான அறங்கள் முழுமையும் கூறப்பட்டு விடவில்லை யாதலினுலும், கூறப்பட்டவற்றிலும், காலத்தாலும், இடத்தாலும் மாறுபட்ட

பொருள் கொள்ளப்படலா மாகையாலும், இனி இங்கே விவரிக்கப் படுவதான மேன்மைகளையுடைய அந்தணர் இவற்றில் ஆய்ந்து கூறும் துணிபுகளே இறுதியான நல்லற மாக இயங்கும்.

109. முன்பு விதிக்கப்பட்டபடி, ஸ்மிருதி, புராண முதலியவற்றுடன் குருவிடம் வேதத்தை முற்றக் கற்றிருக்கும் அந்தணாளர் தூயவராயும் வேதப் பொருளை நேரில் கண்டறிய வல்லவராயும் விளங்குகின்றனர்.

110. பத்திலணக்கம் அல்லது மூவிலக்கணம் கொண்ட பரிஷத்கள் எதனை அறமென்று துணியுமோ அவற்றை மறுக்காமல் ஏற்க வேண்டும்.

111. மூன்று வேதங்களிலும் கூறப்பட்ட சாகையை அத்யயனம் செய்தோர், சுருதி ஸ்மிருதிகளுக்கு மாறு படாத நீதிகள் உணர்ந்தோர், தர்க்க நீதியறிந்தோர், மறையங்க முணர்ந்தோர், மநு நீதி போன்ற அறநூல்கள் வல்லோர், பிரம்மசாரி, இல்லறத்தான், வானப்பிரஸ்தன் இவர்கள் கூடிய அவைக்குத்தான் பத்திலணக்கமுள்ள பரிஷத் என்று பெயர்.

112. தனித் தனியே மூன்று வேதங்களைப் பொரு ளுடன் உணர்ந்த மூவர் கூடிய சபைக்கு மூவிலக்கண முள்ள பரிஷத் என்று பெயர்.

113. இவ்வித அவையினர் கூடாத இடங்களில், வேதப் பொருள் அறங்களைக் குருவிடமாக உணர்ந்த அந்தணன் முடிவு செய்வதே நல்லறமென்று கொள்க. அஃதறியாத பதினாயிரவர் சேர்ந்து கூறுவதும் ஏற்புடைத் தன்று.

114. பிரம்மசர்ய முதலிய ஒழுகுகள், காயத்ரி முதலிய ஜபதபங்கள், வேதம் ஓதுதல், இவையேதுமில்லா தவராய், அந்தணன் வயிற்றில் வந்து பிறந்தவர்களாக மட்டுமிருப்போர் பற்பலர் ஓரிடத்தில் குழுமியிருப்பினும் அதனைப் பரிஷத் (சபை) என்று கூற முடியாது.

115. தமோ குணத்தராயும், வேதப் பொருளுணராத வராயும் பாவங்களுக்குரிய கழுவாய்களை அறியாத வராயும் இருக்கும் அறிவிலிகள் விதிக்கும் கழுவாய்கள், அந்தப் பாவத்தை மேலும் நூறு மடங்கு பெருக்குவ துடன், அப்படித் தவருக விதித்தவர்களையே அப்பாவம் அடையும்.

116. முத்திக்கு ஏற்ற வழிகளை உங்களுக்கு இது காறும் கூறினேன். இவற்றைப் பிறழாது ஒழுகும் எவரும சுவர்க்கம் மோக்ஷம் ஆகிய நற்கதி பெறுவர்.

117. ஆறு குணங்களின் முழுமையுடையவராயும், ஒளி வடிவினராயுமுள்ள மநுப் பிரஜாபதியானவர், நல்லறம் உணர விரும்பும் மாணவர் யாவருக்கும் அதனை உணர்த்தும் பொருட்டாகவே மிகவும் ரஹஸ்யமான தர்ம நுட்பங் களை எனக்கு உபதேசித்தருளினர்.

## ஆத்ம ஞானம்

118. கட்புலனுக் கெட்டியும் எட்டாமலும் உள்ள எப்பொருளும் இறைவனிடமே உறைவதால், யோகத் தியானத்தால் மட்டுமே கண்டு, மனம் கலைந்து செல் லாமல் இறைவொளியைக் கண்டு கொள்பவன் தீச்செயல் களுதான். ஏனெனில் யாவும் இறைவன் விளையாடல் என்றறிவதனுல், வேண்டுவார் வேண்டாதார் என்ற விருப்பு வெறுப்புக்கள் அவனைப் பற்றுவதில்லையன்றே!

119. இந்திராதி தேவரும் இறைவடிவினரே. எல்லா உலகும் இறைவனிடமேநிலைபெற்றன. பின்னும் அவ்விறை வனே உயிர்களுக்கு வினைத் தொடர்பையும் கட்டளையிடு கிருர்

120. தனது உடலில் கலந்துள்ள ஆகாய நுண்மை வையைப் பெரு வெளியிலும், வாயு நுட்ப அளவையைப் பெருங் காற்றிலும், நல்லொளியை அக்னி சூரியரிடத்தி லும், உதிரமாகிய நீர்த் தன்மையைப் பெரு நீரிலும், மண் தன்மையை மஹா பிருதுவியிடமும்.



121. மனத்தைச் சந்திரனிடமும், சுரோத்திரத்தைத் திசைகளிடமும், பாதத்தை விஷ்ணுவிடத்தும், பலத்தைச் சிவனிடமும், வாக்கை அக்னியிடமும், ஆசன பாகத்தைச் சூரியனிடத்தும், பால் குறியைப் பிரம்மாவிடமும் அர்ப்பணித்து விட்டு,

122. பிரம்மா முதல் சாதாரணக் குச்சி வரையில் பற்பல உயிர், உயிரல்லாத் தொகைகள் அனைத்தையும் தோற்றுவித்தும், அணுவிற்குள் நுண்ணணுவாகவும், தூய தங்க நிறமுள்ளவராயும், புலன்கள் வேலை செய்யாமலிருந்தும், கனவியக்கங்களில் சலிப்பது போன்று, மனத்தினால் மட்டுமே நுகர்ச்சிகளைத் தெளிவுற நுகரப் பெறுகிறவராயும், புருஷோத்தமனாயும் இருக்கிற பரம் பொருளையே எண்ணமுற்று இருக்கவும்.

123. வேள்வியில் தீ வடிவமாகவும், பிரஜாபதி ஸ்வரூபமாகச் சிலரும், சிலர் இந்திர வடிவமாகவும், பிராண சக்தியாகச் சிலரும், பிறப் பிறப்பற்ற வெறும் ஆனந்த நிலயமென்று சில மேலோரும் இப்பரம்பொருளை உணர்ந்து வழிபடுகின்றனர்.

124. பரம்பொருள் எல்லாப் பொருள்களையும் ஐவினைகளில் இயங்கச் செய்து, முன்பு செய்த வினைகளுக்கேற்ற மறு பிறப்புக்களை அவற்றிற்கு விதித்து, அவ்விதமே பிறந்து வளர்ந்து மாய்ந்தும், பின்னர் முத்தி நிலை பெறும் வரை வண்டிச் சக்கரம் போல் நில்லாது சுழன்று வரச் செய்கிறார்.

125. இவ்விதமே எதிலும் கரந்துறையும் பரமாத்மாவை எஞ்ஞான்றும் எண்ணி வாழ்வோன் எப்பொருளுடனும் தானும் இரண்டற நின்று பரமபதம் பெறுவான்.

126. இவ்விதம் பிருகு முனிவரால் கூறப்பட்ட மநு நீதியைப் பக்தியுடன் படித்து வரும் துவிஜன், எப்போதும் நல்லொழுக்க முடையவனாய் வாழ்ந்து, மறுமையில் தான் விரும்பியவாறே சுவர்க்க மோட்சங்களை எய்துகின்றான்.

முற்றும்



